# எமது மக்களின் விடுதலைக்காக..



## தலைவர் பிரபாகரனின் கருத்துத் தொகுப்பு

## முக்கிய அறிவித்தல்

உடனுதவும் பகுதி

## பொதுசன நூலகம் யாழ்ப்பாணம்

நீங்கள் எடுத்து வாசிக்கும் புத்தகத்தில் கீறுதல், கிறுக்குதல், அழித்தல் வெட்டுதல் மற்றும் ஊறுபாடுகளைச் செய்யவேண்டாமெனக் கேட்டுக்கொள்கிறோம். புத்தகங்களை எடுக்கும்பொழுது இப்படியான குறைபாடுகளைக்கண்டால் நூலகப்பொறுப்பாளருக்கு உடன் தெரிவிக்கவும். இல்லாவிடில் இவ் ஊறுபாடுகள் தங்களாலேயே செய்யப்பட்டதென்று கருதப்படுவதுடன் நூலகத்தில் விதிக்கப்படும் தண்டனையையும் ஏற்க நேரிடும்.

# எனது மக்களின் விடுதலைக்காக..

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.

பொதுசன நூலகம்
மாநகராட்சி மன்றம்
11-11-1993
யாழ்ப்பாணம்

99097

வெளியீடு:
தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.

13980

99097 C

320.512/2

நூலின் பெயர்: எனது மக்களின் விடுதலைக்காக...

முதற்பதிப்பு: செப்டெம்பர் 1993

வெளியீடு: தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள், தமிழீழம்.

அச்சகம்: தாசன் அச்சகம், மகேந்திரா வீதி, யாழ்ப்பாணம்.

# முன்னுரை

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தை ஆரம்பித்து, அதன் போராட்ட வடிவமாக புரட்சிகர ஆயுதப் போராட்டத்தை அறிமுகப்படுத்தி, அந்த ஆயுதப் போரை ஒரு தேசிய விடுதலைப் போராட்டமாக விரிவுபடுத்தி, அந்த விடுதலைப்போரைச் சிறப்பான முறையில் திட்டமிட்டு வழிநடத்தி, அந்தப் போராட்டத்தில் ஒப்பற்ற சாதனைகளை நிலைநாட்டி, அந்த சாதனைகள் மூலம் தமிழீழ மக்களின் தன்னாட்சி உரிமைப் போராட்டத்தை சர்வதேச அரங்கில் முதன்மைப்படுத்தி, இன்று உலகம் வியக்கும் ஒரு பெரும் தலைவனாகவும், சுதந்திர வீரனாகவும் புகழடைந்துள்ள எமது தேசத்தின் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களது சிந்தனைத் தொகுப்பாக இந்த நூலை வெளியிடுவதில் பெருமையடைகிறோம்.

விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஒரு தசாப்த போராட்ட வரலாறு இந்நூலில் பொதிந்துகிடக்கிறது. இந்தக் காலகட்டத்தில் ஏற்பட்ட வரலாற்று நிகழ்வுகள், திருப்புமுனைகள், அரசியல் நெருக்கடிகள், யுத்த நடவடிக்கைகள், அரச பயங்கரவாதக் கொடுமைகள், என்பனவற்றிற்கு அவ்வப்போது தலைவர் அளித்த விளக்கங்களும் மதிப்பாய்வுகளும் இத்தொகுப்பில் உள்ளடங்கியுள்ளன. நீண்டதும், வீரம்செறிந்ததுமான போராட்ட வரலாற்றில் தனது சொந்த அனுபவங்களையும், வாழ்க்கைப் பின்னணியையும், தான் வரித்துக் கொண்ட இலட்சியங்களையும், தனது உலகப் பார்வையையும் மிகவும் தெளிவாகவும், துல்லியமாகவும் உல

13980

கப் பத்திரிகையாளருக்கு வழங்கிய பேட்டிகளில் தலைவர் விளக்கியிருக்கிறார். அரசியல் நிலவரங்கள், போராட்ட சூழ்நிலைகள் மட்டுமல்லாது கல்வி, பொருளாதாரம், கலை இலக்கியம், பெண் விடுதலை, நீதி நிர்வாகம் போன்ற பல்வேறு விடயங்களுக்கும் தலைவர் வழங்கியுள்ள கொள்கை விளக்கங்களும் இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. தலைவர் பிரபாகரனின் அரசியல் சிந்தனையையும் சமூகப் பார்வையையும் ஆழமாக அறிந்துகொள்ள விரும்புபவர்களுக்கு இந்த நூல் ஒரு அரிய விருந்தாக அமையும்.

தமிழீழத்தில் தலைமறைவாக வாழ்ந்து ஆயுதப் போராட்டத்தை வழிநடத்திக்கொண்டிருந்த தலைவர் அவர்கள், 1983இன் கடைசிப்பகுதியில் இந்திய மத்திய அரசின் அழைப்பை ஏற்று தமிழ்நாடு சென்று அங்கு தங்கியிருந்தபோதே சர்வதேசப்பத்திரிகையாளரைச் சந்திக்கும் வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. 1984-ம் ஆண்டு மார்ச் மாதம் இந்தியாவிலிருந்து வெளிவரும் 'சண்டே' என்ற பிரபல ஆங்கில வார ஏட்டின் செய்தியாளர் ஒருவரே முதன்முதலில் தலைவரைச் சந்தித்து அவருடன் ஒரு நேர்காணலைச் செய்திருந்தார். தலைவரின் இந்த முதலாவது பேட்டி இந்திய அரசியல் உலகில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியதுடன் விடுதலைப் புலிகள் இயக்கத்தைச் சர்வதேச அரங்கில் பிரபலப்படுத்தவும் ஏதுவாக அமைந்தது. தமிழ் நாட்டில் தங்கியிருந்த காலத்தில் இந்திய, உலகப் பத்திரிகைகளுக்கும், சஞ்சிகைகளுக்கும் தலைவர் வழங்கிய செவ்விகள் இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக 1986-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ம், 5ந் திகதிகளில் இந்திய ஆங்கில தினசரியான 'இந்து'வில் வெளியான தலைவரின் பேட்டி மிகவும் பிரசித்தமானது. விடுதலைப் புலிகளின் போர்முனைத் திட்டம், அரசியல் கொள்கைத் திட்டம், சித்தாந்தம் பற்றியும் தனது வாழ்க்கைப் பின்னணி, ஆரம்பகால சிந்தனை வளர்ச்சி ஆகியன போன்ற பல சுவாரஸ்யமான தகவல்களையும் தலை

வர் இப்பேட்டியில் வெளியிட்டுள்ளார். இப்பேட்டி பல இந்தியப் பத்திரிகைகளிலும், உலக அரசியல் ஏடுகளிலும் மறுபிரசுரம் செய்யப்பட்டு புலிகள் இயக்கத்தை சர்வதேசமயப்படுத்த பெரிதும் உதவியது எனலாம்.

சிங்களப் பேரினவாதம் தமிழீழ மக்களுக்கு நீதி வழங்கப்போவதில்லை; சமாதான வழியில் பேச்சுவார்த்தைகள்மூலம் தமிழரின் தேசியப்பிரச்சினைக்கு நியாயமான தீர்வு வழங்கப்போவதில்லை; இராணுவ அடக்குமுறைமூலம் தமிழரின் உரிமைப் போராட்டத்தை நசுக்கி தமிழினத்தை இனவாரியாக ஒழித்துக்கட்டவே சிங்கள ஆளும்வர்க்கம் முயற்சிக்கும் என்று அன்று தொட்டே தீர்க்கதரிசனப் பார்வையுடன் தலைவர் வலியுறுத்திவந்த கருத்துக்கள் இன்றும் பொருத்தமுடையதாக இன்றைய அரசியல் - இராணுவ எதார்த்த நிலையைப் பிரதிபலிப்பதாக அமைந்திருப்பதைக் கண்டு கொள்ளலாம். தமிழீழத் தனியரசே தமிழரின் தேசிய இனப்பிரச்சினைக்கு இறுதியான தீர்வு என்பதைத் தலைவர் தெளிவாகவும், ஆணித்தரமாகவும் திரும்பத் திரும்ப, அன்றுதொட்டு இன்றுவரை எடுத்துரைத்து வந்துள்ளதை அவரது பேட்டிகளிலிருந்தும் கொள்கைப் பிரகடனங்களிலிருந்தும் அறிந்து கொள்ளலாம்.

கொண்ட கொள்கையில் தெளிவும், தளராத இலட்சிய உறுதியும், தீர்க்கதரிசனப் பார்வையும், முற்போக்கான சமூகவியல் கண்ணோட்டமும், ஆழமான மக்கள் நேயமும் தலைவரின் ஆளுமையை ஆட்கொண்டுநிற்கும் கருத்துலகமாக அமைந்திருப்பதை இந்தக் கருத்துத் தொகுப்பை படிப்பவர்கள் உணர்ந்து கொள்வார்கள்.

இதனை ஒரு வரலாற்று ஆவணமாகவும் கொள்ளலாம். தமிழீழ விடுதலைப் போராட்டத்தை வழிநடத்

தும் தலைவனின் வாயிலாக இந்த வரலாறு சொல்லப் படுகிறது. புயலின் மையமாக நின்று தமிழரின் சுதந் திர இயக்கத்தை முன்னெடுத்துச் செல்லும் ஒரு வர லாற்று மனிதனின் சுய தரிசனப் பார்வையில் இந்தச் சரித்திரம் எழுதப்படுகிறது. தமிழீழ தேசிய விடுத லைப் போராட்டத்தில் ஆர்வமும், அக்கறையும் கொண்ட அனைவருக்கும் இது ஒரு ஒப்பற்ற வரலாற் றுக் களஞ்சியமாக விளங்கும்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
ஆகஸ்ட், 1993

# பொருளடக்கம்



99097

□□□

# 'வரலாறு எனது வழிகாட்டி'

குறிப்பு:

தலைவர் பிரபாகரன் தமிழ் நாட்டில் தங்கியிருந்த போது முதன்முதலாக பத்திரிகைக்கு அளித்த பேட்டி இது. இந்தியாவின் பிரசித்திபெற்ற 'சண்டே'(SUNDAY) எனப்படும் ஆங்கில வார ஏடு (11 - 17, மார்ச், 1984) தலைவரின் இந்தப் பேட்டியை பிரசுரித்தது. தலைவர் பிரபாகரனின் படத்தை அட்டையில் தாங்கி, மிக முக்கியத்துவம் கொடுத்து வெளியிடப்பட்ட இப்பேட்டி விடுதலைப் புலிகள் இயக்கத்தை சர்வதேச அரங்கில் பிரபலயப்படுத்த பெரிதும் உதவியது. விடுதலைப் புலிகள் இயக்கத்தின் உருவாக்கம், கொள்கைத் திட்டம், ஆயுதப் போராட்ட வடிவம், மற்றும் அன்றைய காலத்து அரசியல் சூழ்நிலை, ஆகிய விடயங்கள் பற்றி தலைவர் பிரபாகரன் இப்பேட்டியில் மிகவும் தெளிவாகவும் ஆணித்தரமாகவும் தனது கருத்துக்களை எடுத்துக் கூறுகிறார். பிரபல இந்திய பெண் பத்திரிகையாளரான அனிதா பிரதாப் .பேட்டியின் முன்னுரையில் தலைவரைப் பற்றி குறிப்பிடுகையில், "இவர் அன்பானவர்; பண்பானவர். மிகவும் பலம்வாய்ந்த விடுதலை இயக்கத்திற்கு தலைமை தாங்கி வழிநடத்துபவர் என்ற முறையில் அவர் சிங்கள ஒடுக்கு முறையிலிருந்து தமிழ் மக்களை விடுதலை செய்யும் இலட்சியத்தில் தீவிரமும் உறுதிப்பாடும் மிக்கவராக விளங்குகிறார்" என கூறியிருந்தார். ஆங்கிலத்தில் வெளியான இப்பேட்டியின் தமிழாக்கத்தை இங்கு தருகிறோம்.

# வரலாறு எனது வழிகாட்டி

கேள்வி:

வழக்கமான அரசியல் அமைப்பில் இருந்து விலகவும், ஒரு விடுதலை இயக்கத்தை உருவாக்கவும் உங்களைத் தூண்டியது எது? அத்தகைய ஒரு விடுதலை இயக்கம் சட்ட விரோதமாக்கப்படும் என்பது உங்களுக்குத் தெரியும் தானே?

பதில்:

இலங்கையின் சனநாயகப் பாராளுமன்ற அமைப்பு அல்லது நீங்கள் சொல்வதைப்போல இலங்கையின் வழக்கில் உள்ள அரசியல் அமைப்பு எப்போதுமே பெரும்பான்மையினரின் ஆதிக்கத்தையே சிறுபான்மையினர் மீது திணித்து வந்திருக்கிறது. இந்த அரச அமைப்பானது எங்கள் மக்களின் அடிப்படைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணத் தவறிவிட்டது என்பதுடன், எமது நிலையை மேலும் மோசமாக்கிவிட்டது. காலம் காலமாக அரசின் ஒடுக்குமுறை ஆட்சியானது எம் மக்களின் வாழ்வு நிலையைச் சகிக்க முடியாததாகவும் துன்பகரமானதாகவும் மாற்றிவிட்டது. எம்மக்கள் நடத்திய சாத்வீக சனநாயகப் போராட்டங்கள் இராணுவத்தால் நசுக்கப்பட்டன. எமது நியாயமான கோரிக்கைகள் முற்று முழுவதாகப் புறக்கணிக்கப்பட்டதுடன் இந்த அடக்குமுறையானது தமிழ் மக்களின் உயிர் வாழ்வுக்கே ஆபத்தாக அமைந்தது. இத்தகைய சூழ்நிலைகளே ஒரு விடுதலை இயக்கத்தை உருவாக்க என்னைத் தூண்டின. தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்கு மட்டுமல்ல, சிங்கள அடக்குமுறையிலிருந்து இறுதியாகத் தங்களை விடுவித்துக்கொள்ளவும் எம் மக்களுக்கு ஆயுதப் போராட்டமே நடைமுறைச் சாத்தியமான ஒரே வழியென்று நான் உணர்ந்தேன். எங்கள் இயக்கம் தடை செய்யப்படும் என்பது எனக்கு முன்கூட்டியே தெரியும். அதனால்தான் எங்கள் இயக்கத்தை அதன் ஆரம்ப காலத்திலிருந்தே ஒரு தலைமறைவு இயக்கமாக உருவாக்கினோம்.



கேள்வி:

இலங்கைத் தமிழர்களுக்கு ஆயுதப் போராட்டமே ஒரே வழியென்று நீங்கள் தீர்க்கமான முடிவுக்கு வர நிர்ப்பந்தித்த உங்களின் தனிப்பட்ட அனுபவங்களைச் சற்றுக் கூறுவீர்களா? கல்வி, வேலை வாய்ப்பு ஆகியவற்றில் இலங்கை அரசுகாட்டிய பாரபட்சமான கொள்கையால் நீங்களோ உங்கள் குடும்பத்தவரோ அல்லது உங்கள் நண்பர்களோ நேரடியாகப் பாதிக்கப்பட்டுள்ளனரா?

பதில்:

நான் பள்ளிச் சிறுவனாக இருந்த போது 1958ஆம் ஆண்டின் இனக் கலவரங்களில் நிகழ்ந்த பயங்கரச் சம்பவங்கள் என் மனதில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தின. சிங்கள இனவெறியர்களால் எம்மக்கள் ஈவிரக்கமில்லாது குரூரமாகக் கொல்லப்பட்ட நெஞ்சை உலுக்கும் சம்பவங்களை நான் கேள்விப்பட்டேன். எங்கள் குடும்பத்திற்குத் தெரிந்த ஒரு விதவைத் தாயை நான் ஒருமுறை சந்தித்தபோது அவர் இந்த இனவெறியாட்டத்தால் தனக்கு நேர்ந்த துயரமான அனுபவத்தை என்னிடம் சொன்னார். இனக்கலவரத்தின் போது சிங்களக் காடையர்கள் கொழும்பிலிருந்த அவர் வீட்டைத் தாக்கினார்கள். அவரது வீட்டுக்குத் தீ வைத்து, அவருடைய கணவரையும் குரூரமாகக் கொலை செய்தனர். அவரும் அவரது பிள்ளைகளும் பலத்த எரிகாயங்களுடன் தப்பினார்கள். அவரது உடலில் காணப்பட்ட எரிகாயத் தழும்புகளைப் பார்த்தபோது நான் மிகவும் அதிர்ச்சியடைந்தேன். சிறு குழந்தைகளைக் கொதிக்கும் தாருக்குள் உயிருடன் வீசிக்கொன்ற கோரச் சம்பவங்களை நான் கேள்விப்பட்டேன். அநாதரவான அப்பாவித் தமிழர்கள் எவ்வாறெல்லாம் கொடூரமான தாக்குதலுக்கு இலக்காகினர் என்பதையெல்லாம் கேட்கும்போது என் மக்கள் மீது ஆழ்ந்த அனுதாபமும், அன்பும் ஏற்பட்டன. இந்த இனவெறி அமைப்பின் பிடிக்குள்ளிருந்து எம் மக்களை மீட்டெடுக்க வேண்டுமென்ற பெரும் உந்துதல் என்னிடம் தோன்றியது. நிராயுதபாணிகளான அப்பாவித் தமிழர்களுக்கெதிராக ஆயுத வலிமையைப் பிரயோகிக்கும் இந்த அமைப்பினை ஆயுதப் போராட்டத்தின் மூலமே எதிர்கொள்ள முடியும் என்று நான் ஆழமாக உணர்ந்தேன்.

கேள்வி:

எந்தக் கட்டத்தில் நீங்கள் பாராளுமன்ற அமைப்பில் நம்பிக்கை இழந்தீர்கள்? உங்கள் நம்பிக்கையைச் சிதைத்தது எது?

பதில்:

எழுபதுகளின் ஆரம்பத்தில், இளம் தலைமுறையினர் பாராளுமன்ற அரசியலில் நம்பிக்கையிழந்திருந்த காலகட்டத்தில்தான் நான் அரசியலில் நுழைந்தேன். ஆயுதம் தாங்கிய புரட்சிவாதியாகவே நான் அரசியலில் புகுந்தேன். அடுத்தடுத்து பதவிக்கு வந்த சிங்கள அரசுகள் எமது மக்களின் துன்ப,துயரங்களை ஈவிரக்கமின்றி முற்றிலும் புறக்கணித்து வந்த காரணத்தினால் பாராளுமன்ற அரசியலில் எனக்கு அவநம்பிக்கை ஏற்பட்டது.

கேள்வி:

நீங்கள் விடுதலைப்புலிகள் இயக்கத்தை எவ்வாறு ஆரம்பித்தீர்கள்?

பதில்:

எம் மக்களின் விடுதலைக்கு ஆயுதப் போராட்டம்தான் ஒரே வழி என்பதில் முழுமையான நம்பிக்கையுடைய புரட்சிகர இளைஞர்களின் துணையுடன் தான் நான் விடுதலைப்புலிகள் இயக்கத்தை ஆரம்பித்தேன்.

கேள்வி:

உங்களைப் ''புலிகள்'' என்று ஏன் அழைத்துக்கொள்கிறீர்கள்?

பதில்:

தமிழர்களின் அரசியல் வரலாற்றில் புலிச் சின்னமானது ஆழ்ந்து வேரோடி இருப்பதால்தான் எமது இயக்கத்திற்கு ''விடுதலைப் புலிகள்'' என்று

பெயரிட்டேன். புலிச் சின்னமானது தமிழ்த் தேசியத்தின் புத்தெழுச்சியை உருவகப் படுத்துகிறது. அத்துடன் கெரில்லா யுத்த முறையையும் புலிச்சின்னம் குறித்து நிற்கிறது.

கேள்வி:

நீங்கள் ''விடுதலைப் புலிகள்'' இயக்கத்தை ஆரம்பித்த போது உங்கள் குடும்பத்தாரும் நண்பர்களும் அதனை எவ்வாறு வரவேற்றனர்?

பதில்:

விடுதலைப் புலிகள் இயக்கத்தை ஆரம்பித்ததுமே நான் தலைமறைவாக இயங்கி வந்தேன். அத்துடன் எனக்கும் குடும்பத்தாருக்கும் இருந்த தொடர்பு அறுந்து விட்டது.

கேள்வி:

உங்கள் குடும்பத்தாரைக் கடைசியாக எப்போது சந்தித்தீர்கள்? உங்கள்தலைமறைவு வாழ்க்கையை அவர்கள் ஏற்றுக்கொண்டு விட்டார்களா?

பதில்:

என் குடும்பத்தாரை நான் சந்தித்துப் பதினொரு வருடங்கள் ஆகிவிட்டன. சாதாரண வாழ்க்கை நடத்தும் சாமான்யனாக அவர்கள் என்னைக் கருதுகிறார்கள் என்று நான் நினைக்கவில்லை. என்னுடைய தலைமறைவுக் கெரிலாப் போராளி வாழ்க்கையை அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

கேள்வி:

12 வருடகாலப் போராட்டத்தின் பின், உங்கள் இலக்கை நெருங்கிக் கொண்டிருக்கும் கட்டத்தில் இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில்:

இந்த நீண்ட போராட்டத்தின் பின் எமது இலட்சியத்தை நோக்கி நாங்கள் வேகமாக விரைந்து கொண்டிருப்பதாகவே நான் உணர்கிறேன். ஜூலை 1983 பேரழிவுகள் தமிழ் மக்களின் சகல பிரிவினரையும் ஒரே இலட்சியத்தின் கீழ் ஒன்றிணைத்துவிட்டன. எமது இயக்கத்தின் ஆயுதப்போராட்டத் திட்டத்திற்கு மக்களின் பேராதரவு பெருகி வருகிறது.

கேள்வி:

கடந்த 12 வருடகால அனுபவங்கள் உங்களைத் தனிநபர் என்ற முறையில் எவ்வாறுபாதித்து இருக்கின்றன?

பதில்:

இந்தப் போராட்ட அனுபவங்கள் எனது இலட்சியத்தை ஆழமாக வலுப்படுத்தியிருக்கின்றன. எனது பார்வையை மேலும் கூர்மைப்படுத்தியிருக்கின்றன.

கேள்வி

இதுவரை உங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களில் மகத்தான அனுபவம் என்று எதைக்கூறுவீர்கள்?

பதில்:

ஒரு குறிப்பிட்ட அனுபவத்தை மகத்தானது என்று தனிமைப்படுத்திக் கூறுவது எனக்குக் கடினமானது. ஒரு கெரில்லாப் போராளியின் வாழ்க்கையானது துயரமும் மகிழ்ச்சியும் விரக்தியும் கலந்த பல்வேறுபட்ட அனுபவங்களின் கலவையாகும். இவற்றுள் ஒவ்வொன்றுமே ஒவ்வொரு வகையில் மகத்தானதுதான்.

கேள்வி:

விடுதலைப் போராட்டத்தில் உங்களது நீண்டகால அனுபவமானது, வாழ்க்கை பற்றிய உங்களது நோக்கில் மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கும். இந்த அனுபவங்களின் மூலம் உங்கள் பார்வையில் ஏற்பட்ட தாக்கங்கள் பற்றியும், உங்கள் இலட்சியத்தில் எழுந்த உறுதிப்பாடுகள் பற்றியும் கூறுவீர்களா? அத்துடன் உங்கள் அனுபவங்கள், நீங்கள் ஏற்கனவே வரித்துக் கொண்ட சில கொள்கைகள், கோட்பாடுகள், நடைமுறையில் எத்துணை பொருத்தமற்றது என்பதனை உணர்த்தும் அதே வேளையில் வேறு சில

சரியானவைதாம், என்ற கருத்திணை யும் ஏற்படுத்தியிருக்கலாம் அல்லவா? அவற்றில் சிலவற்றைக் கூறுவீர்களா?

பதில்:

நாங்கள் வரித்துக்கொண்ட ஆயுதப் புரட்சிப் பாதை மிகவும் சரியானது என்பதைக் கடந்த 12 வருடகால அனுபவங்கள் சந்தேகத்திற்கு இடமில்லாமல் எனக்கு உணர்த்தியிருக்கின்றன. எமது ஆயுத ரீதியிலான போராட்ட வடிவத்தை ''பயங்கரவாதம்'' என்று விமர்சித்த மற்ற விடுதலைக் குழுக்கள் ஒடுக்கப்பட்ட எமது மக்களின் விடுதலைக்கான ஒரேவழி ஆயுதப் போராட்டம்தான் என்பதை இப்போது ஏற்றுக்கொண்டு விட்டன. நாங்கள் கைக்கொண்ட கெரில்லா யுத்த முறையானது விடுதலைப் போராட்டத்தின் வலிமைமிக்க வடிவமாக அமைந்திருக்கிறது. எமது வெற்றிகரமான கெரில்லாத் தாக்குதல்கள், சிங்கள ஆயுதப் படைகளைத் தோற்கடித்து, சுதந்திரத்தை வென்றெடுக்க எம்மால் முடியுமென்ற நம்பிக்கையை எமது மக்களுக்கு ஊட்டியிருக்கின்றன.

கேள்வி:

உங்கள் நண்பன், தத்துவாசிரியன், வழிகாட்டி யார்?

பதில்:

இயற்கை எனது நண்பன்; வாழ்க்கை எனது தத்துவாசிரியன்; வரலாறு எனது வழிகாட்டி.

கேள்வி:

இலங்கை அரசாங்கத்தால் தேடப்படுபவர்களில் முதன்மையானவராகஇருப்பது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

பதில்:

பிரிட்டிஷ் அரசாங்கம் யாரைப் 'பயங்கரவாதி' என்று சொல்கிறதோ அவனே உண்மையான ஐரீஸ் தேசியப் போராளி'' என்று ஐரிஸ் தலைவர் ஒருவர் குறிப்பிட்டார். அதுபோல, இலங்கை அரசு என்னைத் தேடப்படுபவர்களில் முதன்மையானவராகக் கருதினால், அது நான் உண்மையான தமிழ்த்தேசியப் போராளியென்பதையே உணர்த்துகிறது. அவ்வாறு தேடப்படும் நபராக இருப்பதில் பெருமைப்படுகிறேன்.

கேள்வி:

உங்கள் வாழ்க்கையில் மிகுந்த விரக்தியைத் தந்த கணம் என்று எதையாவது கூறுவீர்களா?

பதில்:

என் வாழ்க்கையில் அப்படி விரக்தி ஏற்பட்ட கணம் என்று எந்த ஒன்றையும் குறித்துச் சொல்ல முடியாது. இலட்சிய நோக்குக் கொண்டவர்கள் என்று நான் நினைத்து நம்பிய சில நண்பர்கள், சுயநலச் சந்தர்ப்பவாதிகளாக மாறியபோது, நான் மிகுந்த விரக்திக்குள்ளானதுண்டு.

கேள்வி:

உங்களுக்கும் உமாமகேஸ்வரனுக்கும் இடையிலான பிளவு எப்படிஏற்பட்டது?

பதில்:

இந்தக் கேள்வியை நீங்கள் கேட்டிருக்கும் விதம் தவறானது. இப்பிரச்சினையை எனக்கும் உமாமகேஸ்வரனுக்கும் இடையிலான தனிப்பட்ட விரோதமாக அல்லது பிளவாக நோக்குவது தவறானது. விடுதலைப் புலிகள் இயக்கத்துக்கும் ஒரு தனி நபருக்கும் இடையிலான பிரச்சினையே அது. இப்பிரச்சினைக்கு நான் தனிப்பட்ட முறையில் எந்த விதத்திலும் பொறுப்பாளியல்ல. அந்தப் பிரச்சினை உமாமகேஸ்வரனாலேயே உருவானது. ஒரு புரட்சி இயக்கத்தின் முக்கியஸ்தர், அந்த இயக்கத்தின் கட்டுப்பாட்டுக்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் இயக்கத்தில் ஒழுங்கும் கட்டுப்பாடும் நிலவும். அடிப்படை விதிகளை அம் முக்கியஸ்தரே மீறி நடப்பாரேயானால் ஒழுங்கு குலைந்து, குழப்பம் மலிந்து, இயக்கம் சிதைந்து போகும். உமாமகேஸ்வரன் எமது இயக்கத்தின் விதிகளை மீறி நடந்தமையால் ஒழுங்கு நடவடிக்கையாக அவர் மத்திய குழுவால் இயக்கத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். இந்த இயக்கத்தை ஸ்தா

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.

பித்தவன் என்ற முறையிலும், உமாமகேஸ்வரனை இயக்கத்தின் ஒரு உறுப்பினராக நியமித்தவன் என்ற முறையிலும் மத்திய குழுவின் தீர்மானத்தை உறுதியாகக்கடைப் பிடிப்பதைத் தவிர வேறு எந்த வழியும் எனக்கு இருக்கவில்லை.

கேள்வி:

**இன்று பல்வேறு ஈழ விடுதலைக்குழுக்கள் தமக்குள் போட்டியிட்டுக் கொண்டிருக்கின்றன. எல்லாரது இலட்சியமும் ஒன்றேயாதலால், இவற்றை ஒருங்கிணைக்கும் முயற்சி அவசியமல்லவா? பொது எதிரிக்கு எதிராக உங்களின் ஒருங்கிணைக்கப்பட்ட சக்தியால் நீங்கள் அதிகளவு பயனடையலாமே! இக்குழுக்கள் ஒருங்கிணைவதை நீங்கள் கொள்கையளவில் எதிர்க்கிறீர்களா?**

பதில்:

இத்தகைய ஒருங்கிணைப்பு முயற்சிகளுக்கு நான் ஆதரவுடையவன் என்பதை மிகத் தெளிவாகவும் வெளிப்படையாகவும் தெரிவித்திருக்கிறேன். இத்தகைய திட்டத்தை நான் வரவேற்கிறேன் என்பதையும், மற்ற விடுதலைக் குழுக்கள் தமக்கிடையிலான வேறுபாடுகளைக் களைந்து, பொது வேலைத் திட்டமொன்றினை ஏற்கும்பட்சத்தில் அத்தகைய கூட்டு முன்னணியில் இணைந்துகொள்ள நாங்கள் தயாராக இருக்கிறோம் என்பதையும், இந்த விடுதலை அணிகளுக்கு 2- 9- 82இல் நான் கடிதம் மூலம் தெரிவித்திருக்கிறேன். ஆனால், துரதிர்ஷ்டவசமாக இக்குழுக்கள் ஒரு பொதுப்படையான வேலைத்திட்டத்தை உருவாக்குவதில் தோல்வி கண்டன. மாறாக, ஒவ்வொரு ஒருங்கிணைப்புக் கூட்டத்திலும் ஒருவருக்கொருவர் பிணக்குப்பட்டு, மேலும்பிளவுற்றனர். இதில் வருந்தத்தக்க உண்மை என்னவென்றால், ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும் என்ற உண்மையான நோக்கம் இந்தக் குழுக்களிடையே இல்லை என்பதுதான். அவர்களது சொல்லுக்கும் செயலுக்குமிடையே பெரும் இடைவெளி காணப்படுகிறது. தங்களுக்கிடையிலான ஒற்றுமையின்மைக்குப் புலிகளைக் குற்றம் சாட்டுவதைக் கைவிடுத்து இக்குழுக்கள் தங்களுக்கிடையிலே ஒற்றுமையை ஏற்படுத்தி முன்னுதாரணமாகத் திகழவேண்டும். ஒரு பொதுத் திட்டத்தில் அவர்கள் ஒருங்கிணையும்போது அவர்களுடன் கைகோர்த்துச் செல்ல நாம் தயாராக இருக்கிறோம்.

கேள்வி:

**உங்களைத் தவிர மற்ற அனைவரும் ஒருங்கிணையும் கருத்திற்கு ஆதரவு தருவதாக ஏனைய விடுதலைக் குழுக்களின் அமைப்பாளர்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள். இது உண்மையா?**

பதில்:

இது முற்றிலும் பொய்யானது; எங்கள் இயக்கத்திற்கு இழிவுதேட ஏனைய குழுக்கள் மேற்கொண்டிருக்கும் பொய்ப் பிரச்சாரத் தந்திரம் இது.

கேள்வி:

**விடுதலைப் போராட்டத்தில் நீங்கள் தனித்து நிற்கிறீர்களா?**

பதில்:

இல்லை. நான் பலம்மிக்க தேசியப் போராட்ட இயக்கமொன்றினை தலைமைதாங்கி நடத்துபவன். பரந்துபட்ட தமிழ் மக்கள் எனக்கு ஆதரவாக இருக்கிறார்கள்.

கேள்வி:

**தனிமை உங்களை வாட்டும் கணங்கள் உண்டா? அதை எவ்வாறு எதிர்கொள்கிறீர்கள்?**

பதில்:

இத்தகைய தனிமையுணர்வுகள் என்னைப் பீடித்ததில்லை. தங்களின் தனிப்பட்ட மனக் குகைக்குள் தங்களை அமிழ்த்திக்கொள்பவர்களுக்கு இந்தத் தனிமையுணர்வு ஒரு பிரச்சினைதான். ஒரு உண்மையான புரட்சியாளன் இத்தனி நபர் பிரச்சினைகளை மேவி, ஒரு கூட்டு பிரக்ஞையை, சமூகப் பிரக்ஞையை உருவாக்குகிறான். நான் ஒரு பொதுவான சமூக இலட்சியத்திற்காக வாழ்பவன்; அதற்காகப் போராடுபவன்.

கேள்வி:

ஒரு சாதாரண இளைஞனின் வாழ்க்கையை வாழவில்லையே என்று நீங்கள் வருந்தியதுண்டா?

பதில்:

நீங்கள் சொல்லுகிறமாதிரி சாதாரண வாழ்க்கை நடத்துகின்ற இலட்சக் கணக்கான இளைஞர்கள் உள்ளனர். ஆனால், நாங்களோ ஒரு உன்னத இலட்சியத்துக்காகப் போராடி வருகிறோம். அந்த இலட்சியத்திற்காக உழைப்பதும், வாழ்வதும் எங்களுக்குப் பூரண ஆத்ம நிறைவைத் தருகிறது.

கேள்வி:

இலங்கையில் பெரும்பாலான தமிழ் இளைஞர்கள் இருள்மயமான எதிர்காலத்தை எதிர்நோக்கியிருக்கின்றனர் என்று நீங்கள் கவலைகொள்வதுண்டா?

பதில்:

இல்லை. இன்றைய இளம் சமூகத்தினர் சுதந்திரத்திற்கான போராட்டக் களத்தில் குதித்துள்ளனர். இவர்களின் எதிர்காலம் ஒளிமயமானது என்றே எனக்குத் தெரிகிறது.

கேள்வி:

விடுதலைப் போராட்டத்தில் மேன்மேலும் இளைஞர்கள் பங்கு கொண்டு வருகிறார்கள் என்பது உண்மைதானா?

பதில்:

ஆம். மேன்மேலும் இளைஞர்கள் புரட்சிப் போரில் குதித்து வருகின்றனர், தங்களுக்கும் தங்கள் சமூகத்துக்கும் ஆயுதப் போராட்டத்தின் மூலமே விமோசனம் உண்டு என்பதை உணர ஆரம்பித்துள்ள இளைய தலைமுறையினர் எங்கள் இயக்கத்தின் தலைமையின்கீழ் அணிதிரண்டு வருகின்றனர்.

கேள்வி:

'பிரிவினைவாதிகள்' என்றும் 'சுதந்திரப் போராளிகள்' அல்லது 'பயங்கரவாதிகள்' என்றும் உங்கள் இயக்கத்தைப் பற்றிக் கூறப்படுகிறதே, அதற்கு உங்கள் பதில் என்ன?

பதில்:

'பிரிவினைவாதிகள்' என்று எமது இயக்கத்தைக் குறிப்பிடுவது மிகத் தவறானது. 'பிரிவினைவாதம்' என்பது தவறான சித்தாந்தம். இதனை எங்கள்போராட்டத்திற்குப் பிரயோகிக்க முடியாது. எங்கள் இனத்தின் தேசிய சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் தேசிய விடுதலைக்காக நாங்கள் போராடி வருகிறோம். சுயநிர்ணய உரிமைக்காக நாங்கள் போராடுகிறோம். எங்கள் தாயகத்தின் இறைமையை மீட்டெடுக்க நாங்கள் போராடுகிறோம். பிரிவினைக்காகவோ, நாட்டை கூறுபடுத்துவதற்காகவோ நாங்கள் போராடவில்லை. எங்கள் மக்கள் சுதந்திரத்தோடும், சுய கௌரவத்தோடும் வாழுகின்ற புனித உரிமையைப் பாதுகாப்பதற்காக நாங்கள் போராடுகிறோம். இந்த அர்த்தத்தில் நாங்கள் பயங்கரவாதிகள் அல்லர்; சுதந்திரப் போராட்ட வீரர்களே.

கேள்வி:

சிங்கள இராணுவத்தின் கரங்களில் பிடிபடுவதைவிட மரணமடைவதுமேலானது என்று கருதுகிறீர்களா?

பதில்:

உயிரோடு எதிரிகள் கைகளில் பிடிபடுவதைவிட கௌரவமாகச் சாவதையே விரும்புகிறேன்.

கேள்வி:

உங்கள் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் ஜூலை 23ஆம் தேதி நடத்திய தாக்குதலில் 13 சிங்கள இராணுவ வீரர்கள் கொல்லப்பட்டனர். அப்பாவித் தமிழர்களுக்கு எதிராகச் சிங்களவர்கள் தாக்குதல் நடத்தியமைக்கு உங்களின் கெரில்லாத் தாக்குதலே காரணம் என்று கூறப்படுகிறது. இத்தகைய பாரிய பதில் தாக்குதலை நீங்கள் எதிர்பார்க்கவில்லையா?

பதில்:

ஜூலைக் கலவரத்தை விடுதலைப் புலிகளின் கெரில்லாத் தாக்குதலுக்கு எதிரான சிங்களவர்களின் பதில் தாக்குதல் என்று வெறுமனே மதிப்பிட்டு விட முடியாது. இவ்வாறு கூறுவது அந்தச் சம்பவத்தை மிகவும் எளிமைப்படுத்துகிறது. இலங்கையில் காலம் காலமாக, திட்டமிட்ட முறையிலே தமிழர்களுக்கெதிரான தாக்குதல் தொடர்ச்சியாக நடந்து கொண்டிருக்கிறது. எங்களின் இயக்கம் தோன்றுவதற்கு முன்பே இனவெறிப் பேரழிவுகள் நடந்திருக்கின்றன. நாங்கள் இராணுவத் தாக்குதலை நடத்துவதற்குச் சில கிழமைகளுக்கு முன்பே திருக்கோணமலையில் மோசமான இனத் தாக்குதல்கள் நடந்து கொண்டிருந்தன. ஆகவே, தமிழர்களுக்கெதிரான இனத் தாக்குதலைத் தனித்த ஒரு சம்பவத்தின் அடிப்படையில் விமர்சிக்க முடியாது. நாங்கள் நீண்ட ஒரு கெரில்லா யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறோம். பல கெரில்லாத் தாக்குதல்களை நடத்தியிருக்கிறோம். பல சிங்கள இராணுவ வீரர்களையும் பொலிஸ்காரர்களையும் அழித்திருக்கிறோம். ஜூலையில் நாங்கள் நடத்திய கெரில்லாத் தாக்குதல் நாங்கள் நடத்திவரும் தொடர்ச்சியானபோராட்டத்தின் ஒரு அங்கம்தான்.குறிப்பிட்ட ஒரு இராணுவ நடவடிக்கைதான் முழுக் கலவரத்திற்கும் காரணம் என்று கருதுவது தவறானதாகும். ஜூலைக் கலவரமானது எம் மக்களைக் கொன்று குவிக்கும் நோக்கம் மட்டும் கொண்டதல்ல, கொழும்பில் வாழுகின்ற தமிழர்களின் பொருளாதாரத் தளத்தையே அழித்து விடுவதையும் நோக்கமாகக் கொண்டிருந்ததை நீங்கள் நிச்சயமாக அவதானித்திருப்பீர்கள். எங்களுடைய கண்ணோட்டத்தில், ஜூலைப் பேரழிவானது ஆளும் கட்சியின் இனவெறிச் சக்திகளால் தமிழர்களுக்கெதிராக நன்கு திட்டமிடப்பட்டு, செயற்படுத்தப்பட்ட இனப் படுகொலைத் திட்டமாகும். ஆரம்பத்தில் இந்த வெறிக் கும்பல் முழுக் குற்றச்சாட்டையும் புலிகள் மேல் சுமத்த முனைந்தது. பிறகு திடீரென்று தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டு இனக்கலவரங்களுக்கு இடதுசாரிகளே காரணம் என்று குற்றம் சாட்டியது. உண்மையில் எமது மக்களின் பாரிய உயிரிழப்பிற்கும், அவர்களின் உடைமை நாசத்திற்கும் இன்றைய அரசாங்கத்தின் இனவெறிபிடித்த தலைவர்களே பொறுப்பேற்க வேண்டும்.

கேள்வி:

என் நீங்கள் இந்தத் தாக்குதலை நடத்தினீர்கள்? இதற்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. நான்கு தமிழ்ப் பெண்மணிகள் கற்பழிக்கப்பட்டதற்கு எதிரான ஒரு பழி வாங்கல் நடவடிக்கைதான் இது என்று சிலர் கூறுகிறார்கள். நான் விசாரித்தவரையில், உங்களின் இராணுவப் பிரிவுத் தலைவரும் நெருங்கிய நண்பருமான சார்ல்ஸ் அன்ரனியின் மரணத்தில் வெற்றிப் பெருமிதம் கொண்டிருந்த சிங்கள இராணுவத்திற்குப் பாடம் படிப்பிப்பதற்காகத்தான் இத்தாக்குதல் நடந்தது என்று தோன்றுகிறது. அதாவது விடுதலைப் புலிகள் இயக்கம் அதன் ஆற்றல் மிகுந்த தலைவர்களில் ஒருவரை இழந்துவிட்ட பிறகும்கூட சிங்கள இராணுவத்தை எதிர்கொள்ளக்கூடிய வலிமை கொண்டிருக்கிறது என்பதை நீங்கள் நிரூபிக்க முயன்றிருக்கிறீர்கள் என்று நான் கருதுகிறேன், இந்தக் கருத்து சரியா? அல்லது இதை விடவும் கூடுதல் காரணங்கள் உண்டா?

பதில்:

சார்ல்ஸ் அன்ரனி பற்றியும் இத்தாக்குதல் பற்றியும் நீங்கள் சொல்வதில் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது. இத்தாக்குதல் ஓரளவிற்குப் பதிலடிதான்; சிங்கள இராணுவத்திற்குத் தண்டனைதான். இருப்பினும் எங்களைப் பொறுத்தவரை சார்ல்ஸ் போன்ற உன்னத புரட்சிவாதியின், விடுதலை வீரனின் உயிருக்குப் பதின்மூன்று இராணுவத்தினரின் உயிர்கள் ஒருபோதும் ஈடாகாது. வேறொரு வகையில், எதிரியை நோக்கித் தொடுக்கப்பட்டிருக்கும் எமது கெரில்லாப் போர்முறையின் ஒரு பகுதிதான் இத்தாக்குதலாகும்.

PUBLIC LIBRARY JAFFNA
CHUNDIKULI BRANCH LIBRARY
பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.



கேள்வி:

வட்டமேசை மாநாடு எந்தவித நிரந்தரமான தீர்வையாவது உருவாக்கும் என்று நீங்கள் நம்புகிறீர்களா?

பதில்:

தமிழர்களின் பிரச்சினைகளுக்கு வட்டமேசை மாநாடு எந்தவித நிரந்தரத் தீர்வையும் தராது என்பது என் கருத்து. கடந்தகால அரசியல் அனுபவத்தின் அடிப்படையிலேயே இம்முடிவிற்கு வந்திருக்கிறோம். சிங்களத் தலைவர்கள் ஒருபோதும் தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண எந்தவித நேர்மையான முயற்சியும் மேற்கொண்டதில்லை. இப்போதைய பேச்சு வார்த்தைகளுக்கும் இந்தக்கதிதான் நேரும். முக்கியமான சகல சிங்களக் கட்சிகளும் பௌத்த அமைப்புகளும் தமிழர்களுக்குப் பிரதேச சுயாட்சியை எந்த வடிவத்திலும் எந்த அளவிலும் தரத் தயாராக இல்லை. சிறு சலுகைகள் வழங்கப்படுவதைக்கூட அவர்கள் எதிர்க்கிறார்கள். இம்மாநாட்டிலிருந்து உருப்படியாக எதுவும் கிடைக்காது.

கேள்வி:

தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்கள் விடுதலைப் போராட்டத்தைப் பின்னுக்குத் தள்ளுகிறார்கள் என்று நீங்கள் கருதுகிறீர்களா? ஏன்? அவர்களைத் துரோகிகள் என நினைக்கிறீர்களா?

பதில்:

தமிழர் விடுதலைக் கூட்டணியின் சந்தர்ப்பவாத அரசியலானது விடுதலைப் போராட்டத்தை நிச்சயமாகப் பின்னுக்குத் தள்ளத்தான் செய்கிறது. இப்போராட்டத்தை முன்னெடுத்துச் செல்ல திட்டவட்டமான நடவடிக்கைகள் எதனையும் அவர்கள் ஒருபோதும் எடுத்ததில்லை. மாறாக, அவர்கள் பொய்யான நம்பிக்கைகளைத் தருகிறார்கள்; பிரமைகளை ஏற்படுத்துகிறார்கள்; எமது மக்களைத் தொடர்ந்து அடிமைத்தனத்திலேயே வைத்திருக்க முனைகிறார்கள். அவர்கள் தங்களது சுயநல அபிலாசைகளை அடையவே அரசியலில் நுழைந்தார்கள். ஒடுக்கப்பட்ட மக்களை விடுதலை செய்வதற்கான உண்மையான நோக்கம் எதனையும் அவர்கள் ஒருபோதும் கொண்டிருக்கவில்லை. அத்தோடு, எந்தவிதமான உருப்படியான அரசியல் வேலைத் திட்டத்தையும் அவர்கள் முன்வைக்கவில்லை. இந்த விடுதலைப் போராட்டச் சூறாவளியில் மாட்டிக்கொள்வார்கள் என்று, அவர்கள் ஒருபோதும் எதிர்பார்க்கவில்லை. புரட்சியின் ஜுவாலை தமிழீழம் முழுவதும் வேகமாகப் பரவிக்கொண்டிருக்கிறது. இதை அணைக்க அவர்கள் தங்களால் ஆனமட்டும் முயன்று பார்க்கிறார்கள். இந்த அர்த்தத்தில் அவர்களைத் துரோகிகள் என வர்ணிக்கலாம்.

கேள்வி:

தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்கள் தமது சொந்த வீடுகளுக்குத் திரும்பப் பயப்படுகிறார்கள் என்பதற்குக் காரணம் சிங்களவர்கள் அல்ல, புலிகள்தான் என்கிறார்களே! இது உண்மையா?

பதில்:

அவர்கள் பயப்படுவது புலிகளுக்கல்ல. சுதந்திரத் தமிழீழம் பெற்றுத் தருவார்கள் என்ற நம்பிக்கையில் அவர்களுக்கு வாக்களித்த மக்களின் கோபாவேசத்துக்குத்தான் அவர்கள் பயப்படுகிறார்கள்.

கேள்வி:

இந்தியாவின் நல்லெண்ண முயற்சிகள் உருப்படியான தீர்வு எதையும் தருமா?

பதில்:

இந்தியாவின் நல்லெண்ண முயற்சிகள் எம் மக்களுக்கும் ஆக்கபூர்வமான நம்பிக்கையைத் தந்திருக்கின்றன. ஆனால், சிங்கள இனவெறி அரசு தமிழர்களின் பிரச்சினையைத் தீர்க்க இந்த உதவியைப் பயன்படுத்திக்கொள்ளும் என, நான் நினைக்கவில்லை.

கேள்வி:

இந்தமாதிரி நிலைமையில், தமிழர்களுக்கு உதவ இந்தியா செய்யக்கூடிய மிகச் சரியான காரியம் எதுவாக இருக்க வேண்டும்?

பதில்:

எம் மக்களின் நியாயமான, நேரிய கோரிக்கைகளை இந்திய அரசு அங்கீகரித்து, சுயநிர்ணயத்திற்கான எங்கள் உரிமையினை ஏற்க வேண்டும்.

கேள்வி;

இந்தியாவின் இராணுவம் இதில் தலையிட வேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில்:

எமது சுதந்திரத்தை நாமே போராடி வென்றெடுக்கும் மனோதிடமும், நம்பிக்கையும், உறுதிப்பாடும் எங்களிடம் உண்டு. நாமே போராடி எம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும். எனினும் எங்களுக்கு இந்தியாவின் தார்மீக ஆதரவும் அனுதாபமும் அவசியமாகின்றது.

கேள்வி;

ஜனாதிபதி ஜெயவர்த்தனா பற்றிய உங்களின் தனிப்பட்ட மதிப்பீடு என்ன?

பதில்:

ஜெயவர்த்தனா ஓர் உண்மையான பௌத்தராக இருப்பாராயின், நான் ஆயுதம் ஏந்தியிருக்க நேர்ந்திராது.

கேள்வி:

இந்தப் பேச்சுவார்த்தைகளை ஜெயவர்த்தனா நடத்துவதன் நோக்கம் என்னவென்று நினைக்கிறீர்கள்? காலங்கடத்தப் பார்க்கிறாரா? அப்படியானால் எதற்கு?

பதில்:

இந்தச் சமாதானப் பேச்சுவார்த்தைகளை ஜெயவர்த்தனா நடத்துவதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலில், இந்தியர்களின் கோபத்தைத் தணிப்பது. இரண்டாவது, இனக் கலவரங்கள் இலங்கையின் பெயருக்கு ஏற்படுத்திய பெரும் களங்கத்தை நீக்குவது. மூன்றாவதாக, நிதியுதவி தரும் மேற்கத்தைய ஸ்தாபனங்களிலிருந்து உதவி பெறுவது; கால அவகாசம் பெற்று சிங்கள இராணுவ இயந்திரத்தைப் பலப்படுத்துவது.

கேள்வி:

தன்னுடைய அமைச்சரவையில் இருக்கும் தீவிரவாதிகளின் பிடிக்குள், ஜனாதிபதி ஜெயவர்த்தனா சிக்கிக்கொண்டிருக்கிறாரா? அல்லது அவர் தன்னிச்சையாகவே இயங்குகிறாரா? அல்லது பௌத்த குருமார்களால் நெருக்கப்படுகிறாரா?

பதில்:

ஜெயவர்த்தனா சுயமாகத்தான் இயங்குகிறார். அவருக்கு சர்வ அதிகாரங்களுமுண்டு. அமைச்சரவையின் தீவிரவாதிகளும் பௌத்த குருமார்களும் அவருக்கு உறுதுணையாக இருக்கிறார்கள்.

கேள்வி;

சிறீலங்காவில் பௌத்த குருமார்கள் என்ன பங்கு வகிக்கிறார்கள்?

பதில்:

சிறீலங்காவின் அரசியற் போக்குகளை நிர்ணயிப்பதில் பௌத்த குருமார்களுக்கு மிக முக்கியமான பங்குண்டு. சிங்கள மக்கள் மத்தியில் தமிழருக்கு எதிரான இனவெறியைத் தூண்டிவிட்டதில் அவர்கள் மிக முக்கிய பங்கு வகித்திருக்கிறார்கள்.

கேள்வி:

சிறீலங்காவை தனிச்சிங்கள பௌத்த நாடாக மாற்றும் முயற்சியில், பௌத்த குருமார்கள் கணிசமான வெற்றி பெற்றிருக்கிறார்கள் என்று நினைக்கிறீர்களா?

பதில்:

சிறீலங்கா ஏற்கெனவே ஒரு தனிச் சிங்கள பௌத்த நாடுதான். இதில்

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.



பௌத்த பிக்குகளுக்குப் பெரும் பங்குண்டு.

கேள்வி:

இது பௌத்த குருமார்களின் இன வெறியின் விளைவா? அல்லது கிறிஸ்தவ குருமார்கள் தமிழர்களுடன் ஒன்றுபட்டதன் விளைவா?

பதில்:

இந்த இனவெறி அரசை ஸ்திரப்படுத்துவதில் பௌத்த குருமார்களுக்கு முக்கியமான பங்கு உண்டு. தமிழ் கிறிஸ்தவ பாதிரிமார்கள் தமிழர் பிரச்சினைக்கு அனுதாபம் காட்டுகின்றனர். ஆனால், சிங்கள கிறிஸ்தவப் பாதிரிமார்கள் சிங்களப் பேரினவாத வெறுப்புணர்வை வெளிப்படுத்தித் தமிழர்களின் கோரிக்கைகளை எதிர்க்கின்றனர்.

கேள்வி:

உலக விடுதலை இயக்கங்களுடன் உங்களுக்குத் தொடர்புகள் உண்டா? எந்த அமைப்புகள் உங்களுக்குப் பயிற்சியும், ஆயுத உபகரணங்களும் தந்து உதவுகின்றன?

பதில்:

உலகின் ஏனைய விடுதலை இயக்கங்களுடன் எங்களுக்குத் தொடர்புகள் உண்டு. உங்களின் இரண்டாவது கேள்விக்குப் பதிலளிக்க நான் விரும்பவில்லை.

கேள்வி:

உங்களின் இந்தப் போராட்டத்திற்கு எந்த நாடு மிகவும் அனுசரணையாக இருக்கிறது?

பதில்:

இதுபற்றி ஒன்றும் நான் சொல்ல விரும்பவில்லை.

கேள்வி:

உங்களின் சித்தாந்தக் கோட்பாடு என்ன?

பதில்:

சனநாயக சோசலிசம்.

கேள்வி:

எதிர்காலத்தில் தமிழர்கள்மீது தாக்குதல்களை எதிர்பார்க்கிறீர்களா? எந்தக் காரணத்தை முன்னிட்டு?

பதில்:

ஆம், நான் எதிர்பார்க்கிறேன். திருக்கோணமலையிலும் வவுனியாவிலும் பெரும் எண்ணிக்கையில் தமிழர்களைக் கொல்லுவதற்கான ஒரு நாசகாரத் திட்டத்தை, இனவெறி பிடித்த பாசிச சக்திகள் உருவாக்கி வருகின்றன. தங்களுடைய உயிர்களையும் உடைமைகளையும் பாதுகாக்கும் சக்திவாய்ந்த தேசிய இராணுவத்தின் உதவியுடன், சுதந்திரமான தமிழீழ நாடு நிறுவப்பட்டால் ஒழிய, ஒருபோதும் தமிழர்கள் பாதுகாப்பாக இருக்கப்போவதில்லை.

கேள்வி:

கெரில்லாக்களுக்கு எதிரான போர் முறைகளில் சிங்கள இராணுவத்திற்கு, இஸ்ரேலியர்கள் பயிற்சி தருகின்றனர் என்பது உண்மையா?

பதில்:

இதுவரை இலங்கையில் இஸ்ரேலிய இராணுவ நிபுணர்கள் இருப்பதைப் பற்றி, நம்பத்தகுந்த செய்திகள் எதுவும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட செய்திகள் உண்மையாக இருந்தாலும் நான் ஆச்சரியப்படமாட்டேன். சிறீலங்கா, அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கும் அதன் கூலிகளுக்குமான ஒரு தளமாக விரைவாக மாறிக்கொண்டு வருகிறது. பயிற்சி தருபவர்கள் யாராக இருந்தாலும், அவர்களின் நிபுணத்துவம் எத்தகையதாக இருந்தாலும், விடுதலைப் புலிகளின் மனோதிடத்தையும் உறுதியையும் அழித்துவிட சிங்கள இராணுவத்தால் முடியாது. மகத்தான தார்மீக வலிமையும், தியாக உணர்வும், உன்னத இலட்சியப் பற்றும் எங்களுக்கு உண்டு.

கேள்வி:

அமெரிக்காவிலிருந்து சிறீலங்காவிற்குப் பெருமளவில் ஆயுதங்களும், உப

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்

கரணங்களும் வந்து குவிவது பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்:

இந்த ஆயுதக் குவிப்பு தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கு மட்டுமல்ல, இந்தியாவின் பாதுகாப்பிற்கும் ஆபத்து விளைவிக்கக்கூடியது. சிறீலங்கா இராணுவத்திற்கு உதவிசெய்து தமிழீழ சுதந்திரப் போராட்டத்தை நசுக்குவது மட்டும் அமெரிக்காவின் நோக்கமல்ல என்பது, உங்களுக்குத் தெரிந்ததே. திருக்கோணமலையில் ஒரு கடற்படைத் தளத்தை அமைத்துக்கொள்வது, அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கபட நோக்கம். இது இந்து சமுத்திரப் பகுதியை யுத்தப் பிராந்தியமாக மாற்றுவதுடன், இப்பிரதேசத்தில் யுத்த நெருக்கடியையும் உண்டுபண்ணும்.

கேள்வி:

எப்படியோ ஒருகாலம் தமிழீழம் கைகூடிவிட்டால், அது எவ்வகையான நாடாக அமையுமென நீங்கள் நினைக்கிறீர்கள்?

பதில்:

தமிழீழம் ஒரு சோசலிச அரசாக அமையப்பெறும். சோசலிசம் என்பதன்மூலம் சமத்துவமான சமூக அமைப்பை, நான் கருதுகிறேன். இதில் மனித சுதந்திரத்திற்கும், தனிநபர் உரிமைகளுக்கும் உத்தரவாதமுண்டு. எல்லாவித ஒடுக்குமுறையும் சுரண்டலும் ஒழிக்கப்பட்ட மக்களின் உண்மையான ஜனநாயகமாக, அது திகழும். தமிழ் மக்கள் தங்களுடைய பொருளாதாரத்தைப் பேணி வளர்த்து, தமது கலாசாரத்தை மேம்பாடு செய்யும் வகையில், அவர்களுக்கு அதிகபட்ச வாய்ப்புகள் கிடைக்கின்ற ஒரு சுதந்திரச் சமூகமாகத் தமிழீழம் அமையும். இந்தச் சுதந்திரத் தமிழீழம் நடுநிலை நாடாக இருப்பதுடன், அணிசேராக் கொள்கையைக் கடைப்பிடிக்கும். அத்தோடு இந்தியாவோடு நேச உறவு கொண்டு அதன் பிராந்தியக் கொள்கைகளை, குறிப்பாக இந்து மகா சமுத்திரத்தை ஒரு சமாதானப் பிராந்தியமாக்கும் வெளிநாட்டுக் கொள்கையைக், கௌரவிக்கும்.

கேள்வி:

உங்கள் கணிப்பில் தமிழீழத்தை எப்போது அடைவீர்கள்?

பதில்:

விடுதலைப் போராட்டத்திற்கு காலவரையறையோ அல்லது ஒரு பூர்வாங்கத் திட்டமோ இருக்க முடியாது. தமிழீழத்திலும் உலக அரங்கிலும் உருவாகும் நிலைமைகளைப் பொறுத்து, இது அமையும்.

□□□

# அரச ஒடுக்குமுறையும் ஆயுத எதிர்ப்புமுறையும்

குறிப்பு:

1984 ஆம் ஆண்டு மே மாதம், தலைவர் பிரபாகரன் தமிழீழ மக்களுக்கு விடுத்த அறிக்கை. சிங்கள இனவாத அரசின் ஒடுக்குமுறைபற்றியும், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் வரித்துள்ள ஆயுத எதிர்ப்புமுறைபற்றியும், இந்த அறிக்கையில் தலைவர் தெளிவான விளக்கங்களை அளிக்கிறார். ஒன்றுபட்ட போராட்டத்தை வலியுறுத்தி, ஏனைய தமிழ் அமைப்புகளுக்கு அவர் விடுத்துள்ள செய்தியும், இதில் அடங்குகிறது. ஒட்டுமொத்தத்தில் இந்த அறிக்கை அன்றைய போர்ச் சூழ்நிலைபற்றியும், இயக்கத்தின் போராட்ட குறிக்கோள்கள்பற்றியும் விரிவான விளக்கத்தைக் கொடுக்கிறது.

எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய தமிழீழ மக்களே!

எமது அரசியல் வரலாற்றிலேயே மிகவும் இக்கட்டான, மிகவும் நெருக்கடியான, மிகவும் வேதனையான காலகட்டத்தில் நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். இன வெறி பிடித்த இராணுவ ஓநாய்கள் தமிழீழ மண்ணை ஆக்கிரமித்து, முற்றுகையிட்டு, எம்மீது தாங்கொணாக் கொடுமைகளை விளைவித்து வருகின்றன. மிகவும் கொடுங்கோன்மையான இராணுவ சர்வாதிகார ஆட்சி எம்மீது திணிக்கப்பட்டிருக்கிறது. எமது சொந்தமண்ணில், நாம் பிறந்து வாழ்ந்து சுதந்திரமாக உலாவிய மண்ணில், எமது புனித மண்ணில், நாம் சிறைக்கைதிகளாக, அடிமைகளாக அல்லல்படுகிறோம். உயிரழிவும் பொருளழிவுமாக, இரத்தமும் கண்ணீருமாக, பசியும் பட்டினியுமாக, பயமும் பதட்டமுமாக எமது நாளாந்த வாழ்க்கை நரகமாக மாற்றப்பட்டிருக்கிறது. இந்தச் சிங்கள அரச பயங்கரவாத வெறியாட்டத்தின் நோக்கம்தான் என்ன?

இனவாரியாக எமது கழுத்தைத் திருகி எம்மைத் துன்பத்தின் எல்லைக்குத் தள்ளி, எமது உறுதிப்பாட்டை உடைத்து, எமது சுதந்திர வேட்கையைக் கொன்று, எம்மை மண்டியிடச்செய்வதுதான் எதிரியின் பிரதான நோக்கம். தமிழ் இனத்தின் தேசிய ஆன்மாவை ஆயுத பலாத்காரத்தின்மூலம் அடிமைகொள்வதே எதிரியின் திட்டம். ஒடுக்குமுறையாளன் தனது ஆற்றாத்தன்மையால், தனது கையாலாகாத்தனத்தால், தனது பலவீனத்தால் வெகுசனத்திற்கு எதி

ராகத் தனது அடக்குமுறையை முடுக்கி விடுகிறான். இது உலகளாவிய வரலாற்று உண்மை. முதிர்ச்சி பெற்று முன்னேற்றம் கண்டு வரும் எந்தவொரு விடுதலைப் போராட்டத்திலும், எதிரியானவன் தனது இயலாத் தன்மையால் வெகுசனம்மீது மூர்க்கமாகப் பழிதீர்த்துக்கொள்ளத் தயங்குவதில்லை. விடுதலைப் போராட்டத்திற்கு வெகுசன ஆதரவும் பங்களிப்பும் பெருகும் போது, வெகுசனத்திலிருந்து விடுதலைப் போராளிகளை இனங்காண முடியாத போது, ஒடுக்குமுறையாளன் வெகுசனத்திற்கு எதிராகத் திரும்புகின்றான். சிங்கள இனவாத அரசும் இந்த இறுதிக்கட்டத்திற்குத் தள்ளப்பட்டதால்தான், அப்பாவிகளாகிய உங்கள்மீது அதர்ம யுத்தம் ஒன்றைக் கட்டவிழ்த்துவிட்டிருக்கிறது. சிங்கள அரசின் இராணுவ பயங்கரவாத அட்டூழியத்திற்கு நேரடி இலக்காகி நசுக்கப்பட்டு வருவது, தமிழ் இளம் சமூகத்தினரே. இவர்கள் உங்களது இளவல்கள். நீங்கள் பெற்றெடுத்த பிள்ளைகள். இவர்கள்தான் இன்று ஆயுதப் போர்ாளிகளாக, விடுதலை மறவர்களாக மாறியிருக்கிறார்கள்.

## புனித இலட்சியம்

குடும்பத்தைத் துறந்து, கல்வியைத் துறந்து, இளமையின் இன்பங்களைத் துறந்து, சுதந்திரம் என்ற இலட்சியத்திற்காக தமது உயிரையும் துச்சமாக மதித்து, போராட்ட களத்தில் குதித்திருக்கிறார்கள். இவர்களை ஆயுதப் போராட்டப்பாதைக்குத் தள்ளியது சிங்கள அரச பயங்கரவாதமேயன்றி, வேறொன்றுமல்ல. அநீதியான-அதர்மமான கொடுங்கோன்மை ஆட்சியை இவர்களால் சகித்துக்கொள்ள முடியவில்லை. சிறை, சித்திரவதை, உயிர்வதையாகத் தம்மீது திணிக்கப்பட்ட கொடூரமான வாழ்வை இவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. ஆகவேதான் அடிமைகளாக வாழ்வதைவிட சுதந்திரத்திற்காகச் சாவதே மேல் என்ற புனித இலட்சியத்தை, இவர்கள் வரித்துக்கொண்டார்கள். இந்தப் புனித இலட்சியத்திற்காக இரத்தம் சிந்துகிறார்கள்; கண்ணீர் வடிக்கிறார்கள்; உயிரையும் அர்ப்பணித்துத் தியாக வீரர்களாக வீர வரலாறுகளைப் படைக்கிறார்கள். ஆனால் இன வெறி பிடித்த சிங்கள அரசின் குருட்டுத்தனமான பார்வையில் இவர்கள் பயங்கரவாதிகள், வன்முறைவாதிகள், அராஜகவாதிகள்; இவர்களது உன்னதமான இலட்சியப் போராட்டம் பயங்கரவாதம். பொதுமக்களாகிய உங்களுக்கு உண்மை நிலைமை நன்கு தெரியும். உங்கள் குழந்தைகள்மீது குத்துப்படும் அரசியல் முத்திரைகள் அர்த்தமற்றது, அநியாயமானது என்பதும், உங்களுக்குத் தெரியும்.

நாம் தர்மத்திற்காக, தன்மானத்திற்காக, சுதந்திரத்திற்காக ஆயுதம் ஏந்தியிருக்கிறோம். எமது இலட்சியப் பயணமும் அதற்காக நாம் புரிந்துவரும் உன்னத தியாகங்களும் உங்களுக்குப் புரியும். ஆதலால்தான் நீங்கள் எம்மை அரவணைத்துக்கொள்கிறீர்கள். ஆதரவு அளிக்கிறீர்கள். எமக்குப் புகலிடம் தருகிறீர்கள். நாம் மக்கள் சமுத்திரத்தில் சங்கமமாகியுள்ளோம். இதனால் பொதுமக்களாகிய உங்களிடமிருந்து எம்மைப் பிரித்துவைக்கும், தந்திரோபாயங்கள் எதுவும் பயனளிக்கவில்லை. இதனால் விரக்தியுற்று ஆத்திரங்கொண்ட சிங்கள இனவாத அரசு, வெகுசனம்மீது போர்தொடுத்திருக்கிறது. ஆயுத பலாத்கார அட்டூழியங்களைக் கட்டவிழ்த்துவிட்டிருக்கிறது. உங்களது பிள்ளைகளை நீங்கள் காட்டிக்கொடுக்கவில்லை என்பதற்காக, உங்களைத் தாங்கொணாத் துன்பத்தின் எல்லைக்குத்தள்ளி, உங்கள்மீது பழிதீர்த்துக்கொள்ள முனைகிறது. எமது சுதந்திரப் போராட்டம் நீண்ட துன்பகரமான வரலாற்றைக் கொண்டது.

## பழைய தலைமை

கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாக படிப்படியாக எமது உரிமைகள் பறிக்கப்பட்டு, எமது உடைமைகள் அழிக்கப்பட்டு, எமது உயிர்கள் இழக்கப்பட்டு, இன்று நாம் எமது சொந்தமண்ணில் சிறைக்கைதிகளாக-அடிமைகளாக வாழும் அபாக்கிய நிலைக்குத் தள்ளப்பட்டு இருக்கின்றோம். எமது எதிரியோ நாகரீகமற்றவன், மனிதாபிமானமற்

றவன்,மிருகத்தனமானவன்.அவனுக்குத் தர்மம் என்பதோ தார்மீகம் என்பதோ மனிதம் என்பதோ கிடையாது. இனவாதப் பித்துப் பிடித்து தமிழனின் இரத்தம் குடிக்கும் வெறிகொண்ட மிருகமாகிய ஒரு எதிரியிடம், நாம் நீதி கேட்க முடியாது; நியாயம் கேட்க முடியாது. பழைய பாராளுமன்றத் தலைமை, எதிரியைப் புரிந்து கொள்ளும் ஆற்றலும் அரசியல் ஞானமும் அற்றதாக இருந்ததால்தான், எமக்கு இந்தத் துர்க்கதி ஏற்பட்டது. சப்பாணி கட்டி, மண்டியிருந்து, சலுகைகளுக்காகத் தவமிருந்து, நம்பி நம்பி ஏமாந்து, ஒரு பரம்பரையின் காலத்தை இவர்கள் வீணடித்தனர். இவர்களது விவேகமற்ற அரசியல் போக்கால் எமது விடுதலைப் போராட்டம் பல்லாண்டு காலம் பின்தள்ளப்பட்டது. கடந்த முப்பது ஆண்டு காலத்திற்கு மேலாக, படிப்படியாகத் தமிழ்பேசும் மக்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விடப்பட்ட ஒடுக்குமுறையானது, இன ஒழிப்பை இலக்காகக்கொண்ட ஒரு நாசகாரத் திட்டமென்பதைத் தமிழ்ப் பாராளுமன்ற அரசியல்வாதிகள் தீர்க்கதரிசனத்துடன் புரிந்து கொள்ளவில்லை. அரச பயங்கரவாதம் கூர்மையடைந்து சிங்கள இனவாதப் பூதம் தமிழ் இனத்தைப் பூண்டோடு அழிக்கக் கிளம்பியபோதும்கூட இவர்கள், பாராளுமன்ற ஆசனங்களையும் பதவிகளையும் கட்டிப்பிடித்தபடி சிங்களத் தலைவர்களுக்குத் துதி பாடிக்கொண்டிருந்தார்கள். கூட்டணித் தலைவர்கள் புரிந்த மாபெரும் தவறு என்னவென்றால், தமிழ்ப் புரட்சிவாத இளைஞர் பரம்பரையை அந்நியப்படுத்தி வந்தமையாகும்.

## நாமே போராடி விடுதலை பெறவேண்டும்

தேசிய சுதந்திரத்திற்காக நாம் வரித்துக்கொண்ட புரட்சிகர ஆயுதப் போராட்டத்தின் வரலாற்றுக் கட்டாயத்தையும் அதன் அரசியல் முக்கியத்துவத்தையும் புரிந்துகொள்ளாமல். எமது போருபாய வடிவத்தினைக் கண்டித்து வந்தனர். எம்மைப் பயங்கரவாதிகள், தீவிரவாதிகள் என வர்ணித்தனர். ஆனால் நாம் பயங்கரவாதிகளுமல்லர்,பலாத்காரத்தில் பற்றுடையவர்களுமல்லர். எம்மீது திணிக்கப்பட்டுள்ள பலாத்காரத்திலிருந்து விடுபடவே நாம் பலாத்காரப் பாதையில் இறங்கினோம். வன்முறையை மென்முறையால் வென்று கொள்ளமுடியாதென்பதை உணர்ந்து கொண்டதால்தான், நாம் வன்முறைப் போராட்டத்தைத் தழுவிக்கொண்டோம். நாம் ஆயுதத்தை ஏந்தியது எமது அரசியல் விடுதலைக்காகவேயன்றி வேறொன்றிற்காகவுமல்ல. நாம் போராட்ட காலத்தில் இரத்தம் சிந்தியபோது, எமது இளம் வீரர்கள் உயிர்த்தியாகங்கள் புரிந்து வந்த போது, தமிழ் இளம் சமூகம் தாங்கொணா ஒடுக்குமுறைக்கு இலக்காகியபோது, போராட்டத்தை முன்னெடுத்துச் செல்வதற்கு கூட்டணித்தலைவர்கள் எதனையும் உருப்படியாகச் செய்யவில்லை. இவர்கள் செய்ததெல்லாம் எமது ஆயுதப் போராட்டத்தை ஒரு அரசியல் அழுத்தமாகப் பிரயோகித்து, சலுகைகள் வேண்டி சிங்கள அரசுடன் சமரசப்பேச்சுக்களை நடாத்தி வந்ததுதான்.இன்று .சிங்கள அரசால் தூக்கியெறியப்பட்டு அரசியல் அரங்கில் இருந்து அந்நியமாக்கப்பட்டிருக்கும் இந்த வேளையில்தான், புரட்சிகர விடுதலை அமைப்புக்களை நாடவேண்டிய ஞானோதயம் இவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சூழ்நிலையிலும்கூட நாமே போராடி எமது மக்களின் விடுதலையை நாமே பெற்றெடுக்க வேண்டும் என்ற தன்னம்பிக்கை, இவர்களிடம் இல்லை. இதனால்தான் இந்திய இராணுவப் படையெடுப்பிற்கு இவர்கள் அழைப்புகளை விடுகிறார்கள்.

## மிகப்பெரிய தவறு

எமக்கு இந்தியாவின் உதவி அவசியம். இந்தியாவின் ஆதரவு அவசியம். இந்தியாவின் நல்லெண்ணம் அவசியம். நாம் முதலில் இந்தியாவிடம் எமது தனிநாட்டுக் கோரிக்கைக்கு ஆதரவு பெற்றுக் கொள்ள முயற்சிக்கவேண்டும்; எமது மக்களின் தேசிய சுயநிர்ணய உரிமையை அங்கீகரிக்குமாறு வலியுறுத்தவேண்டும்;

தமிழீழத் தனியரசே எமது பிரச்சினைக்கு இறுதியான தீர்வு என்பதைத் திட்டவட்ட மாக எடுத்துரைக்கவேண்டும். எமது கோரிக்கையைத் தெட்டத் தெளிவாக எடுத்துக்கூறி இந்தியாவின் நல்லாதரவைப் பெறுவதை விட்டு, எமது பிரச்சினையைத் தீர்த்துவைக்குமாறு இந்தியாவிடம் கைநீட்டி நிற்பது, அரசியல் சாமர்த்திய மாகாது. கூட்டணித் தலைமை புரிந்த மிகப் பெரிய இராஜதந்திர அரசியல் தவறு இதுவாகும். ஆரம்பத்திலிருந்தே தமிழீழத் தனியரசுக் கோரிக்கையில் ஒரு தெளிவான, உறுதியான, தீவிரமான நிலைப்பாட்டை மேற்கொண்டு இந்திய அரசுக்கு அதை இடித்துரைத்திருந்தால், எமது பிரச்சினை இந்த மோசமான கட்டத்தை அடைந் திராது.

காலங்கடந்த ஞானோதயத்தில் இன்று தமிழீழம் பற்றி இவர்கள் சூளுரை விடுவ தெல்லாம், மக்கள் மத்தியில் தாம் இழந்த செல்வாக்கை மீண்டும் நிலை நாட்டி புரட் சிகர இளைஞர்களைக் கவர்ந்திழுப்பதற் கேயன்றி, வேறொன்றிற்குமல்ல. இவர் களின் சந்தர்ப்பவாத அரசியல்மீதும் இவர் களது வர்க்க நலன்கள்மீதும், புரட்சி கர இளைஞர் சமுதாயம் விழிப்பாக இருக்கவேண்டும். இன அழிவில் இருந்து எமது மக்களைப் பாதுகாத்து தேசிய சுதந் திரத்தை முன்னெடுப்பதாயின், எமது தாய்ப்பூமியை ஆக்கிரமித்திருக்கும் எதிரிப் படைகளை விரட்டியடிக்கவேண்டும். இந்தக் கைங்கரியமானது தீர்க்கமான, திட்டமிடப் பட்ட ஆயுதப் போராட்டத்திலும் எமது மக்களின் ஏகோபித்த பங்களிப்பிலும் தங்கி யிருக்கிறது என்பதை, யாரும் மறுக்கப் போவதில்லை. இந்த இலக்கின் அடிப்படை யிலேயே எமது விடுதலை இயக்கம் ஆயு தப் போரை முன்னெடுத்து வந்திருக்கிறது. தமிழீழ மண்ணில் ஆயுதப் புரட்சி இயக் கத்திற்கு அத்திவாரமிட்டவர்கள் நாம். தமிழனின் வீரமரபைச் சித்திரிக்கும் சின்ன மாக உதித்த எமது இயக்கம், வீர வர லாறு படைக்கும் புரட்சிகர விடுதலைச்சக்தி யாக விரிவடைந்து வளர்ந்திருக்கிறது.

## ஒற்றுமையை ஏற்படுத்துவது எப்படி?

கடந்த பத்து ஆண்டு காலமாக நாம் தொடர்ச்சியாக, தீர்க்கமாக, மூர்க்கமாக எதிரியோடு போராடி வருகிறோம். சமீப காலமாக எமது போராட்டத்தைத் தீவிரப்படுத்தி எதிரிக்குப் பலத்த உயிர்ச் சேதத்தை ஏற்படுத்தி வருகிறோம். தொடர்ந்தும் ஆயுதப் போராட்டத்தை விஸ்தரித்து தீவிரப்படுத்த எமது படை யணிகள் தயாராகி வருகின்றன. தனித்து நின்று போராடி தமிழீழம் காணவேண் டும் என்ற இறுமாப்போடு நாம் இயங்க வில்லை. ஆயுதப் போராட்டப்பாதையை வரித்துக்கொண்ட சகல விடுதலை அமைப் புக்களும் எமது பொது எதிரியை எதிர் கொண்டு போராட வேண்டும் என்பதே எமது ஆவல். ஒன்றுபட்டுப் போராடுவதே எமது பலத்தைப் பன்மடங்கு பெருக்கும். ஆகவே நாம் ஒற்றுமையை வரவேற்கவே செய்கிறோம். ஒற்றுமையின் தேவையை உணர்கிறோம். ஆனால் இந்த ஒற்றுமை யானது தமிழீழப் புரட்சி இயக்கத்திற்கு அப்பாற்பட்ட அந்நிய சக்திகளின் அழுத் தங்கள் காரணமாகவோ அன்றிப் பிற் போக்குச் சந்தர்ப்பவாத அரசியல்வாதி களின் நெருக்குதல் காரணமாகவோ அவ சரப்பட்டுச் சமைத்த சாம்பாறு ஒற்றுமை யாக அமைவதை, நாம் விரும்பவில்லை அப்படியான தளர்ந்த, உறுதியற்ற, சந் தர்ப்பவாத இணைப்புக்கள் நிரந்தரமான ஒற்றுமையை, உண்மையான ஒற்றுமையை, உருப்படியான ஒற்றுமையை உருவாக்கப் போவதில்லை என்பதே, எமது கருத்து. இப்படிச் சொல்வதால் நாம் ஒற்றுமையை விரும்பவில்லை என்று எவரும் தவறாகக் கருதிவிடக்கூடாது. நாம் விரும்புவது உண் மையான, நிரந்தரமான, ஒருமைப்பாட் டையே. இந்த ஒற்றுமையானது பாட்டாளி வர்க்கத் தலைமையைக் கட்டியெழுப்பும் இலக்கில், வரலாற்றுப்போக்கினைஉணர்ந்து கொண்ட தெளிவில், புரட்சிகர இலட்சியங் களில் இருந்து வழுவாத உறுதிப்பாட்டில், ஆழமான சகோதரத்துவப் புரிந்துணர்வில், புரட்சிகர சக்திகளின் மத்தியில் ஏற்பட வேண்டிய ஒன்றாகும்.

## ஒன்றிணைந்து போராடுவோம்

இந்த ஒற்றுமையானது எந்தவொரு கட்டாயத்தின் பேரிலேயோ, அழுத்தத்தின் பேரிலேயோ, பலவந்தமாகத் திணிக்கப்படுவதல்ல. நாம் இந்த வரலாற்றில் மிகவும் நெருக்கடியான காலகட்டத்தில் நிற்கிறோம். தமிழீழத்தில் கோரத்தாண்டவமாடிவரும் அரசபயங்கரவாத அட்டூழியங்களால் எமது மக்கள் மிகவும் இக்கட்டான ஆபத்தான நிலையை எதிர்நோக்கியுள்ளனர். எமது மக்கள் சிங்கள இனவாத அரக்கர்களால் கொன்று குவிக்கப்படும் போது முழு உலகமுமே கவலை கொள்ளலாம். கண்டனங்கள் தெரிவிக்கலாம். கண்ணீர் வடிக்கலாம். ஆயினும் எமது மக்களைப் பாதுகாத்து அவர்களது சுதந்திரத்தை வென்றெடுக்கும் மாபெரும் பொறுப்பு விடுதலைப்போராளிகளாகிய எம்முடையது என்பதை நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். இந்த மாபெரும் வரலாற்றைச் சுமந்து கொண்டிருக்கும் நாம் எம் மத்தியிலுள்ள வேற்றுமைகளை, வெறுப்புக்களைக் களைந்து எமது மக்களின் விடிவுக்காக ஒன்றிணைந்து போராடும் காலம் அண்மித்து விட்டதென்றே கருதுகிறேன். இந்த நெருக்கடியான காலகட்டத்தில் இதனையே எமது மக்களும் எதிர்பார்க்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாததல்ல. ஒற்றுமைக்கு முதற்படியாக ஒற்றுமைக்கான நல்லெண்ணச் சூழ்நிலையை நாம் உருவாக்கிக் கொள்வது அவசியம். இதற்கு வழியாக ஒருவரையொருவர் விசமத்தனமாக தாக்கி விமர்சிப்பதை நாம் நிறுத்திக் கொள்ளவேண்டும். துரதிர்ஷ்டவசமாக எமது மத்தியில் வேரூன்றிய வேறுபாடுகள், வெறுப்புணர்வுகளைக் களைந்துவிட வேண்டும். சொல்லளவில் ஒற்றுமை வேதாந்தம் பேசிக் கொண்டு செயலளவில் சகோதரத்துவ யுத்தம் நடத்தும் விடுதலை அமைப்புகளும் இருக்கத்தான் செய்கின்றன. இந்தச் சகோதர விரோத செயற்பாடுகள் நிறுத்தப்படாமல், ஒற்றுமைக்கான நல்லெண்ணச் சூழ்நிலையை எப்படி உருவாக்குவது? ஒற்றுமை என்ற உயரிய நோக்கினை மக்களை ஏமாற்றும் வெறும் பிரச்சார சாதனமாக கையாள்வது மிகவும் கீழ்த்தரமான அரசியல் சந்தர்ப்பவாதமாகும். ஒற்றுமைக்கு அழைப்புக்கள் விடுத்துக்கொண்டு, புரிந்துணர்வுகளுக்குக் கோரிக்கைகள் விடுத்துக் கொண்டு, எமது விடுதலை இயக்கம் மீது விசமத்தனமான பிரச்சாரங்கள் கட்டவிழ்த்து விடப்படுகின்றன.

## கெரில்லாப் போர்முறை

முதலாவதாக, நாம் தேர்ந்தெடுத்துள்ள ஆயுதப்போராட்ட வடிவமான கெரில்லாப்போர் முறையைச் சில அமைப்புக்கள் கண்டித்து விமர்சனம் செய்கின்றன. கெரில்லாப்போர்முறை வேறு, மக்கள் யுத்தம் வேறு என்றும், மக்களைத் தயார்ப்படுத்தி தகுந்த காலம் கனிந்து வரும் போது வெகுசன யுத்தம் நடாத்த வேண்டும் என்ற ரீதியில் வாதங்கள் முன்வைக்கப்படுகின்றன. இந்த நிலைப்பாட்டை நாங்கள் ஆக்கபூர்வமான, ஆரோக்கியமான விமர்சனமாகக் கொள்ளவில்லை. கெரில்லாப்போர் முறையானது ஒரு வெகுசனப் போராட்டவடிவம் என்பது உலகானுபவம் பகரும் உண்மை. கெரில்லாப் போராட்டத்தை மக்கள் மத்தியில் படிப்படியாக நிலைப்படுத்தி மக்களின் பங்களிப்போடு விரிவுபடுத்தி வெகுசனயுத்தமாக பரிணாமம் பெறச்செய்யும் கொள்கைத் திட்டத்தின் அடிப்படையிலேயே நாம் இந்தப்போராட்ட வடிவத்தை முன்னெடுத்து வருகிறோம். இன்னொரு வகையில் சொல்லப் போனால் எமது இலக்கு வெகுசன ஆயுதப் போராட்டமே. அடுத்ததாக கெரில்லா வடிவ ஆயுதப் போராட்டமே, எமது பிரத்தியேகச் சூழ்நிலைக்குப் பொருத்தமானது என்பதை எவராலும் மறுக்க முடியாது. பலம் வாய்ந்த ஒரு எதிரியைப் படிப்படியாகப் பலவீனப்படுத்தி அவனது மனோ உறுதியை உடைத்தெறிந்து அவனது ஆயுத பலத்தை அழிப்பதற்குக் கெரில்லாப்பாணியிலான போர் முறையே தலைசிறந்த யுத்த தந்திரோபாயமாகும். இப்போராட்ட முறைக்கு வெகுசன ஆதரவு இருந்து வருவதால் எதிரியானவன் எத்தனையோ நாசகார யுக்திகளைக் கையாண்டும் எம்மை நசுக்கிவிட முடியவில்லை. பதிலாக எமதுஇயக்கம்பரந்த அளவில் வளர்ந்து

இருக்கிறது. எமக்கு வியப்பைக் கொடுக்கும் விடயம் என்னவென்றால் கெரில்லா யுத்தத்தைக் கண்டிக்கும் அமைப்புக்கள் இதே யுத்த தந்திரோபாயங்களையே அன்றும் இன்றும் கையாண்டுவருவது தான். சித்தாந்தத்திற்கும் செயற்பாட்டிற்கும் இவ்வித முரண்பாடுகள் இருப்பதால் சில போர் நடவடிக்கைகள் உரிமை கோரப்படாமலேயே விட்டுவிடப்படுகின்றன என்பதும் எமக்குத் தெரியாததல்ல. ஆகவே எமது போராட்ட முறைக்கு எதிராக வைக்கப்படும் விமர்சனங்கள் விசமத்தனமானதென்றே நாம் கருதுகிறோம்.

## இராணுவ பயங்கரவாதம்

இரண்டாவதாக தமிழீழத்தில் தலைவிரித்தாடும் இராணுவ பயங்கரவாதத்திற்கு எமது போர் நடவடிக்கைகளே காரணம் என்ற வகையில் கண்டனங்கள் முன்வைக்கப்படுகின்றன. திட்டமிடப்படாத போராட்டம், தாக்கிவிட்டுத் தலைமறைவாகும் தந்திரம், என்றெல்லாம் வீம்புத்தனமான விமர்சனங்கள் செய்யப்படுகின்றன. அப்பாவி மக்களைப் பயமுறுத்தி எமது எதிரியானவன் எமக்கு எதிராக எதை எமது மக்களுக்கு எடுத்துரைக்க விழைகிறானோ; அதே பிரச்சாரத்தை சில அமைப்புக்கள் முன்வைத்து விடுகின்றன. இதனால் இயக்கங்கள் மத்தியில் முரண்பாட்டையும், மக்கள் மத்தியில் கோழைத்தனத்தையும் ஏற்படுத்திவிடும் எதிரியின் யுத்த தந்திரத்திற்கு நாமே இடமளித்துக்கொள்வதாக முடிந்து விடுகிறது. ஈழத்தமிழர்களுக்கு எதிராகச் செய்த இனக்கொலைத்திட்டமும், அதன் வெளிப்பாடான அரச பயங்கரவாத அட்டூழியங்களும் எமது விடுதலை இயக்கம் தோற்றம் கொள்வதற்கு எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னதாகவே தலைதூக்கியது என்பதனை யாவரும் அறிவார்கள். மென்முறை தழுவிய சமாதான, சாத்விகப்போராட்டங்களை எமது மக்கள் நடத்திய போதும் அவர்கள் மீது இராணுவ பயங்கரவாதம் கட்டவிழ்த்துவிடப்படவில்லையா? எத்தனையோ இனப்பூகம்பங்கள் வெடித்து எமது மக்கள் ஆயிரக்கணக்கில் ஈவிரக்கமின்றி கொன்று குவிக்கப்படவில்லையா? எவ்வித மான ஆக்கிரமிப்புச்செயலும் நடைபெறாத போதும் அப்பாவி மக்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டும் அவர்களது உடைமைகள் அழிக்கப்பட்டும், கொடுமைகள் நடக்கத்தானே செய்தன. அரச அடக்கு முறையானது அன்றும் இருந்திருக்கின்றது. இன்றும் இருந்து வருகிறது. ஆனால் இன்று அரச பயங்கரவாத ஒடுக்குமுறை கூர்மை அடைந்திருக்கிறது. அதன் வலிமை மிகவும் மோசமான மக்கள் ஒழிப்பு வன்முறையாக மாற்றம் பெற்றிருக்கிறது. சிங்கள இனவாத இராணுவமானது தனது கையாலாகாத்தனத்தால், கோழைத்தனத்தால் அப்பாவி மக்கள் மீது துப்பாக்கி நீட்டுகிறது. போராளிகளை எதிர்கொள்ள திராணியற்றுப் பொதுமக்களை வஞ்சம் தீர்த்துக்கொள்கிறது. அப்பாவி இளைஞர்களை வேட்டையாடி வதை செய்கிறது. இவ்விதம் நாகரீக உலகமே வெறுக்கத்தக்க மனித விரோத யுக்திகளைக் கையாளுகிறது சிங்கள இராணுவம். இன்னொரு விதத்தில் சொல்லப் போனால் சிங்கள அரசானது பயங்கரவாத ஒழிப்பு என்ற போர்வையில் எமது மக்கள் மீது ஒரு யுத்தத்தை ஆரம்பித்திருக்கிறது. இந்த நெருக்கடியான சூழ்நிலையில் நாம் எதைத்தான் செய்வது? அப்பாவி மக்கள் அநியாயமாகக் கொல்லப்படுகிறார்கள் என்பதற்காக நாம் ஆயுதப்போராட்டத்தைக் கைவிட்டு அரசியலில் இருந்து ஒதுங்கிவிடுவதா? எதிரியானவன் ஒடுக்குமுறையைத் தீவிரப்படுத்தி வெறியாட்டம் ஆடும்போது நாம் கைகட்டிப்பார்த்துக்கொண்டிருப்பதா? எமது இனம் படிப்படியாக அழிந்து கொண்டிக்கும் அபாயநிலையைக்கண்டும் தக்க தருணம் வரட்டும் மக்களைத் தயார்ப்படுத்திப் போராடுவோம் என்று சும்மா இருந்து விடுவதா? அல்லது அயல் நாட்டுப்படைகள் வந்து எமக்குச் சுதந்திரத்தைப் பெற்றுத் தரும் என்ற கற்பனையில் நாம் காலத்தைக் கழிப்பதா?

## போராட்டத்தை தீவிரமாக்குவோம்

நாம் ஒன்றை மட்டும் தெட்டத்தெளிவாக கூற விரும்புகிறோம். எந்தச்சூழ்நிலையிலும் நாம் போராட்டத்தை ஒத்திப்

போட முடியாது. போராட்டத்திலிருந்து ஒதுங்கி, காலம் கனியும் என்று காத்திருக்கவும் முடியாது, நாம் தொடர்ந்து போராடியே தீருவோம். போராட்டத்தைத் தொடர்ந்து தீவிரமாக்குவோம். எதிரி இராணுவத்திற்குத் தகுந்த பதில் அடி கொடுத்து அதன் முதுகெலும்பை முறித்துவிடுவதைத் தவிர இந்தச் சூழ்நிலையில் எமக்கு வேறெந்த வழியுமில்லை. எதிரியை எமது மண்ணிலிருந்து விரட்டியடித்து எமது மக்களின் சுதந்திரத்தை வென்றெடுப்பதாயின் நாம் போராடியே தீரவேண்டும். ஆகவே இந்தச் சந்தர்ப்பத்தில் சகல புரட்சிகர விடுதலை அமைப்புகளுக்கும் நாம் விடுக்கும் வேண்டுகோள் இதுதான்.

போர்க்களத்தில் குதியுங்கள். எமது பொது எதிரிக்கு எதிராக ஒன்றிணைந்து போராடுவோம். களத்தில் எதிரியை சந்திக்கும்போது எம்மத்தியில் பரஸ்பர ஒத்துழைப்பும் நல்லெண்ணமும் பிறக்கும் என்பது திண்ணம். அதே சமயம் உண்மையான ஒருமைப்பாட்டிற்காக ஆக்கபூர்வமான முயற்சிகளையும் மேற்கொள்வோம். நாம் தோளோடு தோள் நின்று போராடும் போது எமது மக்களும் எம்மோடு அணி திரள்வார்கள். முழுத்தேசமுமே எமக்குப் பக்கபலமாக நிற்கும். எமது ஒன்று திரண்ட பலத்தைக்கண்டு எதிரி நடுக்கம் கொள்வான். நாம் களத்தில் ஒன்றிணைந்து போராடினால் எதிரியை எமது தாய் நாட்டிலிருந்து விரட்டியடித்து சுதந்திரத்தமிழீழம் காண்பது வெகுதூரத்தில் இராது.

எமது அன்பான தமிழ் மக்களே! விடுதலைப் போராட்டம் என்பது இரத்தம் சிந்தும் புரட்சிகர அரசியல் பாதை. கல்லும் முள்ளும் நிறைந்த கடினமான பாதை. வியர்வை சிந்தி கண்ணீர் சிந்தி இரத்தம் சிந்தி தாங்கொணாத்துன்பத்தின் பரிசாகப் பெறுவது தான் சுதந்திரம். சுதந்திரம் இல்லாமல் மனித வாழ்வில் அர்த்தமே இல்லை. நாகரீகம் தோன்றிய காலம் தொட்டு இன்று வரை சுதந்திரம் என்ற உன்னத இலட்சியத்திற்காக ஒடுக்கப்பட்ட மனித சமூகங்கள் போராட்டங்களை நடாத்தி வருகிறது; யுத்தங்கள் புரிந்து இருக்கிறது. புரட்சிகள் செய்து இருக்கிறது. சுதந்திரப் போராட்டங்களாகவே மனித வரலாறு அசைகிறது. இந்த சுதந்திரத்தை வென்றெடுக்காதுபோனால் நாம் நிம்மதியாக வாழ முடியாது. சமாதானமாக வாழ முடியாது. சந்தோசமாக வாழ முடியாது. சுதந்திரத்தை வென்றெடுக்காது போனால் நாம் அடிமைகளாக வாழ வேண்டும். தன்மானம் இழந்து தலை குனிந்து வாழ வேண்டும். பயந்து பயந்து பதற்றத்துடன் வாழ வேண்டும். படிப்படியாக அழிந்து போகவேண்டும். ஆகவே சுதந்திரத்திற்காகப் போராடுவதைத் தவிர எமக்கு வேறு வழி எதுவும் இல்லை.

## மக்களின் பங்களிப்பு

இளைஞர்கள் இருக்கிறார்கள், அவர்கள் போராடித் தமிழீழம் பெறுவார்கள், அல்லாவிடில் இந்தியா இருக்கிறது, எமக்கு சுதந்திர தனியரசு பெற்றுத்தரும் என்ற வகையில் நாம் சும்மா இருந்து விட்டால் எமக்குச் சுதந்திரம் கிடைக்கப்போவதில்லை. பொதுமக்களாகிய உங்களின் நேரடிப்பங்களிப்பின்றி எமது தேசியசுதந்திரப்போராட்டம் வெற்றியளிக்கப் போவதில்லை. சுதந்திரப் போராட்டம் என்பதே மக்கள் போராட்டம். பரந்துபட்ட வெகுசனங்கள் ஒன்று திரண்டு ஒரு ஐக்கிய தேசமாக எழுச்சி கொண்டு போராட்டத்தில் பங்களித்தால்தான் எமக்கு வெற்றி நிச்சயம். எமது எதிரியோ தனது ஆயுதப் படைகளை எமக்கு எதிராக ஏவிவிட்டது மன்றி சிங்கள வெகுசனத்தையும் தமிழருக்கு எதிராக அணிதிரட்டுகிறான். சிங்கள மக்களுக்கு இனவெறியூட்டி, போர் வெறியூட்டி ஆயுதம் தரித்த ஒரு இன யுத்தத்திற்கு தயார்ப்படுத்துகின்றான். இந்த அதர்ம யுத்தத்திற்கு சிங்கள மக்களிடம் இருந்து நிதி திரட்டுகிறான். சிங்கள மக்களும் கோடிக்கணக்கில் பாதுகாப்பு நிதியென்று வாரி வழங்குகிறார்கள். முழுச் சிங்கள தேசமுமே ஒரு இன யுத்தத்திற்கு தயார் நிலையில் வைக்கப்பட்டு வருகிறது. ஆனால், தமிழராகிய எமது நிலைதான் என்ன?

## அடிமையாக வீழாமல் போராடி வாழ்வோம்.

இன ஒழிப்பின் விளிம்பில் நாம் தள்ளப்பட்டும் எமக்கு இன்னும் விடுதலைக்கான விழிப்புணர்ச்சியோ, வீராவேச உணர்ச்சியோ தோன்றவில்லை. பசியும் பஞ்சமுமாக தாங்கொணாத் துன்பங்கள் ஏற்பட்டும் நாம் இன்னும் போராடத் தயாராகவில்லை. இனியும் நாம் பயந்து பயந்து, ஒழிந்து ஒழிந்து, செத்துக்கொண்டிருப்பதில் அர்த்தமே இல்லை. ஏதோ எங்கிருந்தோ எமக்குப் புறம்பான சக்திகள் கைகொடுத்து உதவும் என்று காத்துக் கொண்டிருப்பது அசட்டுத்தனம். நாம் போருக்குத் தயாராக வேண்டும். அடிமைகளாக வீழ்வதை விடப் போராடி வாழ்வதே மேன்மையானது என்ற இலட்சிய உணர்வோடு நாம் ஆயுதம் ஏந்தத் தயாராக வேண்டும். ஈழத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் விடுதலை வேங்கைகளாக, வீரப்புலிகளாக மாறவேண்டும். தாழ்ந்து போன தமிழ் இனம் வீரப்புலி இனமாக மாற வேண்டும். விடுதலை என்பது ஒரு தேசியக் கடமை. இதில் ஒவ்வொருவருக்கும் பங்களிப்புண்டு. இந்த நெருக்கடியான காலகட்டத்தில், முழுச்சமுதாயமுமே பேரழிவை எதிர்நோக்கிய இச் சூழ்நிலையில், எம்மத்தியில் சுயநல உணர்வுகள் களையப் பெற்று சமூக உணர்வும் பிறக்க வேண்டும். பணத்தை முடக்காமல், உணவுப்பண்டங்களைப் பதுக்காமல், தான் வாழ்ந்தால் போதும் என்ற தன்னலங்கருதாமல் வசதி படைத்தோர் வசதியற்றோருக்கு உதவவேண்டும். பணம் படைத்தோர் பட்டினி கிடப்பவர்களுக்கு உதவ வேண்டும். இது ஒரு தேசிய நெருக்கடி. இந்நெருக்கடியால் பிறக்கும் துன்பத்தை முழுத்தேசிய இனமுமே பகிர்ந்து கொள்ள வேண்டும்.

## தேசிய பாதுகாப்பு நிதி

இந்தத் தேசிய சுமையைச் சமூகத்தின் அடிமட்டத்திலுள்ள ஏழைகள் மட்டும் தாங்கிக்கொள்ள அனுமதிப்பது நாம் எமது தேசத்துக்குப் புரியும் துரோகம் என்றே சொல்ல வேண்டும். நாம் ஒரு தேசிய விடுதலை இராணுவத்தைக் கட்டியெழுப்பி வருகிறோம். ஆயிரக்கணக்கில் இளைஞர்களுக்குப் பயிற்சி அளித்தல், ஆயுதம் தரித்தல், கெரில்லாப் படையணிகளைப் பராமரித்தல் போன்ற எமதுபாரிய போர்த்திட்டத்திற்குப் பெருமளவில் நிதி அவசியம் என்பதை நான் விளக்கத் தேவையில்லை. இந்த நோக்கில் தான் தேசிய பாதுகாப்பு நிதித்திட்டம் ஒன்றை நாம் உருவாக்கினோம். இந்நிதி தமிழீழத்திலும், வெளிநாடுகளிலும் திரட்டப்படும். இந்நிதிக்கு குறிப்பாக வெளிநாடுகளில் வதியும் தமிழ் ஈழத்தேசாபிமானிகள் தம்மாலான உதவியினைச் செய்யுமாறு அன்புடன் வேண்டிக் கொள்கிறேன். உறுதியாக ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன், தமிழீழம் என்றோ ஒரு நாள் உதயமாவது திண்ணம். எமது மக்களாகிய நீங்கள் விடிவு பெறுவது திண்ணம். சமதர்ம சமூகமாக எமது நாடு வளங்கொளிப்பது திண்ணம். இந் நம்பிக்கையில் ஆன்ம உறுதி தளராது விடுதலைப் பாதையை நோக்கி வீறுநடை போடுவோமாக.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

# தமிழீழ தேசியப்படை தலைவர் பிரபாவின் கடிதம்

குறிப்பு:

1984-ம் ஆண்டு, ஜூன் மாதம் நியூயோர்க் நகரில் நடைபெறவிருந்த 'உலகத் தமிழீழ மாநாடு' சம்பந்த மாக மாநாட்டின் அமைப்பாளர் டாக்டர் பஞ்சாட்சரம் அவர்களுக்கு தலைவர் பிரபாகரன் எழுதிய கடிதம் இது. தமிழீழ தேசியப்படை அமைப்பு ஒன்றை கட்டி எழுப்பி, விடுதலைப் போராட்டத்தை முன்னெடுக்கும் பணிக்கு வெளிநாடுகளில் வதியும் தமிழீழ தேசாபி மானிகள் நிதியுதவி வழங்கும் அவசியத்தை வலி யுறுத்தி தலைவரால் இக்கடிதம் எழுதப்பட்டது.

19-05-84
தமிழீழம்

அன்பின் டாக்டர் பஞ்சாட்சரம் அவர்களுக்கு,

உங்களது அன்பான கடிதம் கிடைக்கப் பெற்றேன். மிகவும் நன்றி. பதில் எழுதத் தாமதமாகியதற்கு மன்னிக்கவும். வேலைப்பளு காரணம். தமிழீழம் என்ற இலட்சியத்திற்காக தாங்கள் ஆற்றி வரும் தன்னலமற்ற சேவையை நான் நன்கு அறிவேன். அமெரிக்காவில் வதியும் தமிழர்கள் அந்நிய கலாசாரத்தால் ஆக்கிரமிக்கப்படுவதைத் தடுத்து, தமிழ்த் தேசா பிமான உணர்வைத் தட்டியெழுப்பி, ஈழத் தமிழினத்திற்குத் தனியரசே இறுதியான தீர்வு என்பதில் உறுதியாக நின்று நீங்கள் செய்து வரும் தொண்டை நான் பாராட்டுகிறேன்.

இரண்டாவது உலகத் தமிழீழ மாநாட்டை கூட்டுவதற்கு நீங்கள் இப்பொழுது முயற்சி செய்து வருகிறீர்கள். எமது விடுதலை இயக்கத் தையும் இம் மாநாட்டில் பங்குபற்றுமாறு அழைப்பு விடுத்திருக்கிறீர்கள். இவ்விசயத்தில் எமது இயக்க நிலைப்பாட்டையும், தமிழினத்தின் தற்

போதைய நிலவரத்தையும், எமது விடுதலையை முன்னெடுப்பதற்கான இன்றைய தேவைகளையும் நான் உங்களுக்கு எடுத்து விளக்குவது அவசியமாகிறது.

தமிழீழத்தில் இன்று இராணுவ அராஜகம் தலைவிரித்தாடுகிறது. தமிழீழப் பகுதிகளில் சிங்கள ஆயுதப்படைகள் சதா குவிக்கப்படுகின் றன. நவீன ரகமான ஆயுததளபாடங்களும் புகுத்தப்படுகின்றன. கட லாலும், நிலத்தாலும் தமிழீழம் முற்றுகையிடப்பட்டிருக்கிறது. பாதுகாப் பற்ற சூழ்நிலையில் தமிழ் மக்கள் பயந்து வாழ்கிறார்கள். இராணுவ அட்டூழியங்கள் நாளுக்கு நாள் அதிகரித்தவண்ணம் இருக்கிறது. இது தான் இன்றைய நிலை. இந்நிலையில் மக்களின் பாதுகாப்பை உறுதிப் படுத்தி, விடுதலைப் போராட்டத்தை முன்னெடுப்பதாயின் ஒரு பலம் வாய்ந்த தேசியப்படை அமைப்பை நாம் கட்டி எழுப்பவேண்டும். தமிழீழ விடுதலைக்கு இன்று அத்தியாவசியமான தேவை இதுவாகும். இந்த இலக்கில்தான் எமது முழு முயற்சியும் இன்று பிரயோகிக்கப்படுகிறது. இந்த இலக்கை நாம் அடைவதற்கு வெளி நாடுகளில் வதியும் தமிழீழ தேசபக்தர்களின் உதவியும் ஒத்தாசையும் இன்றியமையாதது. இந்த வகையில் நீங்களும் எமக்கு உதவி செய்ய முன்வரவேண்டும்.

தமிழீழத்தில் எமது கெரில்லா அணிகளை விஸ்தரித்து, பலப் படுத்தும் முக்கிய வேலைகளில் நான் ஈடுபட்டிருக்கிறேன். நான் தளத்தை விட்டு எக்காரணத்தைக் கொண்டும் வெளிநாடுகளுக்கு பயணம் செல்ல முடியாது. இயக்கத்தின் ஏனைய முக்கிய உறுப்பினர்களின் நிலையும் அதுவே. ஆகையால், இயக்கத்தின் அதிகாரபூர்வமான பிரதிநிதி எவ ரையும் உங்களது மாநாட்டிற்கு அனுப்ப முடியாத நிலையில் இருக்கி றேன். இதனை நீங்கள் புரிந்து கொள்வீர்களென நினைக்கிறேன்.

விடுதலை இயக்கங்களை ஒன்றிணைத்து ஒரு தேசிய அரசியல்-இராணுவத் தலைமையை உருவாக்குவது மாநாட்டின் நோக்கங்களில் ஒன்று என்பதாகத் தெரிகிறது. இவ்வித ஒற்றுமை முயற்சிகளை நான் வரவேற்கிறேன். எனினும் இந்த முயற்சிகள் தமிழீழத்தில் மேற்கொள் ளப்படுவதையே நான் விரும்புகிறேன். தமிழ் நாட்டில் நிரந்தரமாக நிலைகொண்டுள்ள விடுதலைக் குழுக்களும் அதன் தலைமைகளும் தமிழீழம் வந்தாக வேண்டும். தமிழீழப் போராட்டக் களத்திலிருந்து ஒற்றுமை பற்றி பேசுவதற்கு நாம் தயார். ஆனால் அந்நிய நாடு ஒன் றில், அதுவும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் தலைநகரில், சி. ஐ. ஏ. உளவு ஸ்தாபனத்தின் சிலந்தி வலைக்குள் இருந்து, எமது போர் முறைத் திட்டங்கள் பற்றி பேசுவதற்கு நாம் தயாரில்லை. விடுதலை இயக்கங்கள் மத்தியில் சோசலிசத் தமிழீழம் என்ற இலட்சியத்தில் ஒருமைப்பாடு உண்டு என்பது நீங்கள் அறியாததல்ல. எனினும் இந்த இலட்சியத்தை அடைவதற்கான போருபாயங்களிலும். பொதுவான போர்முறைத் திட்டத்திலும் கருத்து வேறுபாடுகள் உண்டு. இது மிகவும் சிக்கலான விவகாரம். போர் நுட்பமும், போர் அனுபவமும் சார்ந்த விசயம், இயக்கத் தலைமைகள் மிகவும் இரகசியமாக, பரஸ்பர நம்பிக்கையுடன் பரிமாறிக்கொள்ள வேண்டியது. இவற்றை எல்லாம் சர்வதேச மாநாடுகளில், அதுவும் அமெரிக்காவில், திறந்த அரங்கு களில் விவாதிக்க முடியாது.

தமிழீழ விடுதலைப் போராட்டம் வெற்றி பெறுவதாயின் மிகவும் கட்டுப்பாடுடைய தேசிய இராணுவ அமைப்பு ஒன்றை முதலில் கட்டி எழுப்பவேண்டும். இதனையே நாம் இன்று செயற்படுத்தி வருகிறோம். ஏனைய விடுதலை அணிகளும் எம்மோடு இணைந்து செயற்படும் காலம் வெகுதூரத்திலில்லை, போராட்ட சூழ்நிலைகள் இந்த ஒற்றுமையை பிறப்பிக்கும். விடுதலை அமைப்புக்கள் மட்டுமன்றி வெகுசனங்களுமே போராட்டத்தில் நேரடியாக குதிக்கவேண்டி நேரிடும்.

எமது விடுதலை இயக்கம் ஒரு தேசிய பாதுகாப்பு நிதியை ஆரம்பித்திருக்கின்றது. இது பற்றிய எனது விபரமான அறிக்கை எமது இயக்கப் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. அதனை உங்களுக்கு அனுப்பி வைக்கிறேன். இந்நிதிக்கு அமெரிக்காவிலுள்ள தமிழீழ விடுதலை விரும்பிகள் தம்மாலான நிதி உதவியைச் செய்யுமாறு அன்புடன் வேண்டுகிறேன். யுத்த காலத்தில் மக்களின் பாதுகாப்புத் திட்டமொன்றை செயற்படுத்தவே இந்நிதி தேவையாகிறது. இன்று நாம் ஒரு தேசிய விடுதலை யுத்தத்திற்கு தயாராகி வருகிறோம். இந்த யுத்தத்திற்கு வெளிநாட்டுத் தமிழரின் நிதி உதவி அத்தியாவசியம். தமிழீழ விடுதலைப் போராட்டத்திற்கு அவர்கள் செய்யக்கூடிய அளப்பரிய சேவையும் அதுவே. இதை விடுத்து, ஆடம்பரமான மாநாடுகளை நடாத்தி அநியாயமாகப் பணம் செலவு செய்யப்படுவதை இந்நெருக்கடியான காலகட்டத்தில் நாம் தவிர்த்துக் கொள்ள வேண்டும். அதுவே எமது வெற்றியை ஊர்ஜிதப்படுத்தும்.

அன்பு வணக்கம் கூறி முடிக்கிறேன்.

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்

இங்ஙனம்

வே. பிரபாகரன்

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

# போர்நிறுத்தமும் பேச்சுவார்த்தையும்



குறிப்பு:

**1985 ஆம்** ஆண்டு, ஜுலை மாதம் திம்பு பேச்சுவார்த்தைகள் ஆரம்பமாவதற்கு முன்னர் சிறீலங்கா ஆயுதப் படைகளுக்கும், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் ஒரு போர்நிறுத்த உடன்பாடு ஏற்பட்டது. இந்திய மத்திய அரசின் சமரச முயற்சியின் பலாபலனாக ஏற்பட்ட இப் போர்நிறுத்தம் பற்றியும், இப்போர் நிறுத்தத்திற்கு விதிக்கப்பட்ட நிபந்தனைகள் பற்றியும் தலைவர் பிரபாகரன் தமிழீழ மக்களுக்கு விடுத்த இந்த அறிக்கையில் எடுத்து விளக்குகிறார். 24-6-1985 இல் விடுக்கப்பட்ட இந்த அறிக்கையில், தமிழ் மக்களை ஏமாற்றும் ஒரு தந்திரோபாயமாகவே சிங்கள அரசு பேச்சுவார்த்தை என்ற அரசியல் நாடகத்தை மேடையேற்ற முயற்சிப்பதாகவும் தலைவர் அன்று தீர்க்கதரிசனத்துடன் சுட்டிக்காட்டினார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

''இந்திய மத்திய அரசின் நல்லெண்ண முயற்சிகள் காரணமாக, இன்று எமது விடுதலைப் போராட்டத்தில் புதிய திருப்பங்கள் ஏற்பட்டுவருவதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். இந்திய நல்லெண்ண முயற்சியின் காரணமாக தமிழீழத்தில் ஒரு தற்காலிக போர் நிறுத்தத்திற்கான சூழ்நிலை உருவாக்கப்பட்டுள்ளது. ஆயினும் இந்தத் தற்காலிக போர்நிறுத்தம்பற்றி சிங்கள அரசானது மிகவும் தவறான, உண்மைக்கு மாறான, விசமத்தனமான பொய்ப் பிரச்சாரத்தை கட்டவிழ்த்துவருகிறது. அரச பயங்கரவாத அமைச்சரான அத்துலத்முதலி தனது வழமையான பாணியில் அபாண்டமான பொய்களைத் திரித்து, எமது விடுதலை இயக்கத்தை இழிவுபடுத்த முயற்சிசெய்து வருகிறார். எமது விடுதலை இயக்கம்மீது மக்களுக்கு இருக்கும் பற்றையும் நம்பிக்கையையும் தகர்த்துவிடும் கபடமான நோக்கத்தோடு இந்தப் பொய்ப் பிரச்சாரம் மேற்கொள்ளப்படுகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். எனினும் இந்தப் போர்நிறுத்த திட்டம்பற்றிய உண்மையான பின்னணியையும், அரசியல் தீர்வு குறித்து எமது இயக்கத்தின் நிலைப்பாட்டையும் மக்களுக்கு எடுத்து விளக்குவது அவசியமெனக் கருதுகிறேன்.

போர்நிறுத்தத்தை சிங்கள அரசாங்கமே விரும்பியது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. முதலாவதாக, விடுதலைப் புலி வீரர்களின் விடாப்பிடியான, வீராவேசமான தாக்குதல்களுக்கு ஈடுகொடுக்கமுடியாது சிங்கள இராணுவம் தோல்வியின் விளிம்பில் நின்று திணறிக்கொண்டிருக்கிறது. கட்டுப்பாடு சீர்குலைந்த ஒரு காடையர் கூட்டத்தினால்; கட்டுப்பாடும் ஒழுங்கும், இலட்சிய வேட்கையும்கொண்ட எமது விடுதலை வீரர்களுடன் போராடி வெற்றிபெறுவது முடியாத காரியம் என்பதை சிங்கள ஆட்சியாளர்கள் உணரத் தொடங்கினர்.

இராணுவப் பாதை தோல்வியை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறது என்ற உண்மையை சிங்கள மக்களும் மெல்ல மெல்ல புரியத் தொடங்கினர். இராணுவத் தரப்பில் பெருமளவு உயிரிழப்பு ஏற்பட்டு வருவதை அத்துலத்முதலி எவ்வளவு காலத்திற்குத்தான் மூடிமறைக்க முடியும். பாரிய அளவில் பணத்தைக்கொட்டி வெளிநாட்டு நிபுணர்களைக்கொண்டு பயிற்சி அளித்து, நவீனரக ஆயுதங்களை தரித்தும்கூட சிங்களக் கூலிப் படைகளால் புலிகளை வென்றுவிட முடியாது என்பதை அனுபவ ரீதியாக அரசாங்கம் உணர்ந்துகொண்டது.

இரண்டாவதாக, இந்த யுத்தத்தால் சிங்கள அரசு பெரும் பொருளாதார நெருக்கடியை எதிர்நோக்கி உள்ளது. தமிழருக்கு எதிராக ஏவிவிடப்பட்ட இந்த அதர்ம யுத்தம், தேசிய வருமானத்தின் பெரும் பகுதியை விழுங்கி, நாட்டைக் குட்டிச்சுவராக்கி வருகிறது. யுத்த சூழ்நிலை காரணமாக வெளிநாட்டு அரசுகள் சிறீலங்காவில் முதலீடுகள் செய்யத் தயங்குகின்றன. உல்லாசப் பயணிகள் வருகையும் பாதிப்படைந்து வருகிறது. இவற்றின் விளைவாக, நாட்டில் பணவீக்கம், வாழ்க்கைச் செலவு உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் போன்ற சமூக பொருளாதாரச் சீர்கேடுகள் மலிந்துவருகின்றன.

மூன்றாவதாக, விடுதலைப் போராட்டத்தை நசுக்க கையாளப்பட்ட போர் முறைத் திட்டங்களிலும் சிங்கள அரசு தோல்வி கண்டுவருகிறது. பயங்கரவாதத்தை மக்கள்மீது ஏவிவிட்டு மக்களைக் கொன்று குவித்து, மக்களுக்கு தாங்கொணாத் துன்பங்களை இழைத்து, பொது மக்களிடமிருந்து போராளிகளை அந்நியப்படுத்திவிட கையாளப்பட்ட சூழ்ச்சிகள் எதுவும் பலனளிக்கவில்லை. எத்தனையோ துன்பங்கள் மத்தியிலும் மக்கள் மனவுறுதி தளராது விடுதலைப் புலிகளுக்கு பேராதரவு கொடுத்து வருகின்றனர்.

இறுதியில், அரச பயங்கரவாதத்தின் எதிர்விளைவு சிங்கள மக்களையும் தீண்டத் தொடங்கியுள்ளது. இதனால் சிங்கள

பௌத்த சக்திகள் அரசாங்கம்மீது தமது ஆவேசத்தை திருப்பியுள்ளன. எதிர்க்கட்சிகள் அரசாங்கத்தை பதவி துறக்குமாறு கோசமிடுகின்றன.

ஒட்டுமொத்தத்தில் ஜெயவர்த்தனா அரசு ஆட்டம் காணத் தொடங்கியுள்ளது.

இந்த நெருக்கடியான சூழ்நிலைக்கு சிங்கள அரசு தள்ளப்பட்டதற்குத் தமிழீழப் போராளிகளின் தொடர்ச்சியான உக்கிரமான போராட்டமே காரணம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. சிங்கள அரசும் இதை நன்கு உணர்ந்துகொண்டது. இதனால்தான் தமிழீழப் போராளிகளுடன் யுத்த நிறுத்த உடன்பாடு செய்யவேண்டிய நிர்ப்பந்தம் அரசாங்கத்திற்கு ஏற்பட்டுள்ளது. இந்தியாவின் மத்தியஸ்தம் மூலமே இது சாத்தியமாகும் என்பதை நன்குஅறிந்த சிங்களத் தலைவர்கள் போர் நிறுத்த உடன்பாடு ஒன்றை செய்துதருமாறு இந்திய அரசின் காலடியில் விழுந்தனர். பயங்கரவாதிகள், அராஜகவாதிகள், தேசத்துரோகிகள் என்று எம்மை இழிமைப்படுத்திவந்த சிங்கள இனவாத அரசு இறுதியில் எம்மைப் பலம்பொருந்திய அரசியல் - இராணுவ சக்தியாக அங்கீகரித்து எம்மோடு ஒரு உடன்பாடு செய்துகொள்ள முன்வந்தமை எமக்கு ஒரு அரசியல் வெற்றியாகும் என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

தமிழீழ விடுதலைப் போராளிகள் மீது செல்வாக்கைப் பிரயோகித்து, போர் நிறுத்த உடன்பாடு ஒன்று செய்யும் பட்சத்தில் நிரந்தரமான அரசியல் தீர்வுகாண நடவடிக்கை எடுப்போமென சிங்கள அரசு இந்தியாவிடம் மன்றாடிக்கேட்டது. ஜூன் மாத ஆரம்பத்தில் டில்லியில் நடைபெற்ற உச்சி மாநாட்டின் போது இந்தக் கோரிக்கை முன்வைக்கப்பட்டது.

இதனையடுத்து இந்திய அரசு எம்மை அணுகியது. முதலில் நான் போர் நிறுத்தத்திற்கு மறுத்துவிட்டேன். சிங்களத்தலைவர்களை நம்பமுடியாது என்பதைச் சுட்டிக்காட்டி, பழைய வரலாற்றில் நிகழ்ந்த நம்பிக்கைத் துரோகங்களை உதாரணம் காட்டி, களைத்துப்போன இராணுவத்திற்கும், சரிந்துபோன பொருளாதாரத்திற்கும், புத்துயிரூட்ட சிங்கள அரசு கால அவகாசம் கேட்கிறது என்பதை இந்திய அரசுக்கு இடித்துரைத்தேன். எமது நிலைப்பாட்டை இந்திய அரசு புரிந்ததாக காட்டிக்கொண்டு தனது நல்லெண்ண முயற்சிக்கு எம்மை ஒத்துழைக்குமாறு வேண்டியது.

போர் நிறுத்தம் சம்பந்தமாக நாம் தனித்த முடிவை எடுக்கவில்லை. தமிழீழ விடுதலை இயக்கம், ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி, ஈழப்புரட்சிகர அமைப்பு ஆகிய அமைப்புகளுடன் கலந்தாலோசித்து கூட்டாக இந்த முடிவை எடுத்தோம். போர் நிறுத்தத்தை கொள்கை அளவில் ஏற்றுக்கொண்ட நாம், சிறீலங்கா அரசுக்கு சில நிபந்தனைகளை விதித்தோம். இந்த நிபந்தனைகளை சிறீலங்கா நிறைவேற்றும்பட்சத்தில் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு போர் நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்வதென நாம் கூட்டாக முடிவெடுத்தோம். விடுதலைப் புலிகள் இயக்கமும் ஏனைய அமைப்புகளும் விதித்த நிபந்தனைகள் வருமாறு:

(1) எமது மக்களின் சமூக, பொருளாதார வாழ்வைப் பாதிக்கும் சகல முட்டுக்கட்டைகளும் நீக்கப்பட்டு தமிழீழத்தில் வழமை நிலை உருவாக்கப்படவேண்டும்.

(2) சிங்கள இராணுவம் முகாம்களுக்கு வாபஸ் பெறப்பட்டு சகல இராணுவ கெடுபிடிகளும் நிறுத்தப்படவேண்டும்.

(3) அவசரகால, ஊரடங்குச் சட்டங்கள் தளர்த்தப்பட்டு மக்கள் சுதந்திரமாக நடமாட அனுமதிக்கப்பட வேண்டும்.

(4) கடற் கண்காணிப்பு வலயம் மற்றும் தடைப்பிரதேசங்கள் நீக்கப்பெற்று, மீனவ மக்கள் கடற்தொழில் புரிய அனுமதிக்கப்பட வேண்டும்.

(5) தமிழ்ப் பிரதேசங்களில் சிங்கள ஆக்கிரமிப்புக் குடியேற்றத் திட்டங்கள் கைவிடப்பட வேண்டும்.

(6) கைது செய்து, காவலில் வைக்கப்பட்டிருக்கும் அப்பாவித் தமிழ் இளைஞர்கள் அனைவரும் விடுவிக்கப்படவேண்டும்.

இந்த நிபந்தனைகள் அனைத்தும் நிறைவேற்றப்படும் பட்சத்தில் 12 வாரங்களுக்கு நாம் யுத்த நிறுத்தம் மேற்கொள்வதென முடிவுசெய்திருக்கிறோம். இந்தப் 12 வாரங்களுக்குள் சிறீலங்கா அரசு நிரந்தர அரசியல் தீர்வுக்கான உருப்படியான திட்டம் ஒன்றை எமது பரிசீலனைக்கு முன்வைக்கவேண்டும். அரசியல் தீர்வுக்கான இத்திட்டம் எமக்கு திருப்தியளிக்காது போனால் நாம் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொள்ளப்போவதில்லை. இந்நிலையில் போர்நிறுத்தம் கைவிடப்பட்டு போராட்டம் மீண்டும் ஆரம்பிக்கப்படும். ஆகவே, சிறீலங்கா அரசு எவ்விதமான தீர்வுத்திட்டத்தை முன்வைக்கிறது என்பதில்தான் எல்லாமே தங்கியிருக்கிறது.

எனது அன்புக்குரிய மக்களே!

இந்த தற்காலிக போர்நிறுத்த நடவடிக்கையின் பயனாக எமது பிரச்சினைக்கு ஒரு இறுதியான அரசியற் தீர்வு ஏற்படும் என்பதில் எமக்கு நம்பிக்கை இல்லை. இனவெறி கொண்ட சிங்கள-பௌத்த தலைமைக்கு அப்படி திடீரென மனமாற்றம் ஏற்படுமென நாம் எதிர்பார்க்கவில்லை. தமிழருக்கு நீதி வழங்கவேண்டும் என்ற தார்மீக சிந்தனைக்குப் பதிலாக, தமிழர்களை மீண்டும் ஏமாற்றி ஆயுதப் புரட்சிப் போராளிகளை அடிபணியச் செய்யவேண்டும் என்பதே அரசின் அந்தரங்கத் திட்டமாகும். 35 வருட அரசியல் வரலாற்றில் மீண்டும் மீண்டும் ஏமாந்துபோன கசப்பான அரசியல் வரலாற்றுப் பாடங்களில் நாம் நிறையக் கற்றுத் தெளிந்திருக்கிறோம். ஆகவே பேச்சுக்கள் என்ற இந்த ராஜதந்திரப் பொறிக்கிடங்கில் நாம் சிக்குப்படப் போவதில்லை என்பதை நான் உறுதியாக திட்டவட்டமாக உங்களுக்கு எடுத்துரைக்க விரும்புகிறேன்.

முதலாவதாக, இந்திய அரசு எதிர்பார்ப்பதுபோல சமஷ்டி அமைப்பு ஒன்றை உருவாக்கி வட-கிழக்கு மாகாணங்களுக்கு பிரதேச சுய ஆட்சியை வழங்க சிங்கள அரசு தயாராக இல்லை.

இரண்டாவதாக, அப்படியொரு பிரதேச சுயாட்சித் திட்டத்தை பௌத்த-சிங்கள இனவாத சக்திகள் எதிர்த்தே தீரும். சமஷ்டியாட்சி தனியரசுக்கு ஒத்தது என்பதே பெரும்பான்மைச் சிங்களவரது கருத்தாகும். வடக்கும் கிழக்கும் இணைந்த ஒரு தமிழ்ப் பிரதேச ஆட்சியமைப்பு உருவாக்கப்படுவதை சிங்கள இனவெறியர்கள் விட்டுக்கொடுக்கப் போவதில்லை. ஆகவே, மீண்டும் மாவட்ட சபையென்றும், அதிலிருந்து மாகாண சபையென்றும் பழைய புளித்துப்போன திட்டங்களே முன்வைக்கப்படலாம். இந்தக் குறைந்தபட்சத் திட்டங்கள் எதையும் நாம் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை.

எமது விடுதலைப் போராட்டத்தில் நாம் அளப்பரிய தியாகங்களைச் செய்திருக்கிறோம். தாங்கமுடியாத துன்ப, துயரங்களை அனுபவித்திருக்கிறோம். ஆயிரமாயிரம் அப்பாவி மக்களின் உயிர்களைப் பறிகொடுத்திருக்கிறோம். எமது வீடுகள், சொத்துக்கள், செல்வங்களை இழந்திருக்கிறோம். பெருந்தொகையான இளம் போராளிகளை களத்தில் பலி கொடுத்திருக்கிறோம். சகிக்க முடியாத அளவிற்கு நாம் அவமானப்படுத்தப்பட்டிருக்கிறோம், இழிமைப்படுத்தப்பட்டிருக்கிறோம். சிங்களப் பயங்கரவாதமானது எமது தேசிய ஆன்மாவில் விழுத்திய வடுக்கள் என்றுமே மாறப்போவதில்லை.

இத்தனை கொடுமைகளுக்குப் பின்னர் இத்தனை உயிரழிவுகள், பொருளழிவுகளுக்குப் பின்னர், இத்தனை மகத்தான தியாகங்களுக்குப் பின்னர், இத்தனை வீர சாதனைகளுக்குப் பின்னர், நாம் சிங்கள அரசிடம் மண்டியிட்டு சலுகைகளுக்காக

கைநீட்டப் போவதில்லை. நாம் ஆயுதங் களை கைவிட்டு மண்டியிடப் போவ தில்லை.

எமது மக்களின் சுதந்திரத்தையும், கௌரவத்தையும் நிலைநாட்டவே நாம் ஆயுதங்களை ஏந்தினோம். அந்த சுதந்திர மும் கௌரவமும் நிலைநாட்டப்படாத வரை நாம் ஆயுதங்களைக் கைவிடப் போவதில்லை.

நாம் சுதந்திரமாக, கௌரவமாக, நிம் மதியாக, சமாதானமாக வாழ்வதாயின் அது சுதந்திரத் தமிழீழத்தில்தான் சாத்திய மாகும். அந்த சுதந்திரத் தமிழீழம் கிட் டும்வரை எமது போராட்டம் தொடரும் என்பதை தெட்டத்தெளிவாக எடுத்துக்கூற விரும்புகிறேன்.

ஆகவே, இந்த யுத்த நிறுத்தம், சமா தானப் பேச்சுக்கள், சமரசத் திட்டங்கள் என்ற மாயைகளில் மயங்கிவிடவேண்டா மென நான் மக்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இந்திய அரசின் நல் லெண்ண முயற்சிகளுக்கு நாம் ஒத்துழைக் கும் அதேவேளை, எமது இலட்சியத்தி லிருந்து நாம் ஒருபோதும் வழிதவறப் போவதில்லை என்பதையும் நான் திட்ட வட்டமாக எடுத்துக்கூற விரும்புகிறேன். சிங்கள ஆட்சியாளர்கள் தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு ஒரு நேர்மையான, நீதியான கௌரவமான தீர்வை வழங்கப்போவ தில்லை என்பதை இந்திய அரசு உணர்ந்து கொள்ளும்போது, எமது இலட்சியத்திற்கு மதிப்பளித்து, எமது மக்களின் தேசிய சுயநிர்ணய உரிமையை ஆதரிக்கவேண்டும் என்பதே எனது அவா.

தர்மமும் உண்மையும் இறுதியில் வெற்றியளித்து, தமிழ்த் தாயில் கருக் கொண்டுள்ள வரலாற்றுக் குழந்தையான தமிழீழம் என்றோ ஒருநாள் பிரசவமெடுக் கும் என்பது எனது நம்பிக்கை.

எம்மிடம் ஆத்ம பலமும், ஆயுத பல மும் இருக்கிறது. மக்கள் பலமும் எமது கரங்களைப் பலப்படுத்துமானால் எமது இலட்சியம் வெற்றியடைவதை யாராலும், எந்த சக்தியாலும் தடுத்து நிறுத்திவிட முடியாது என்பதை உறுதியுடன் கூற விரும்புகிறேன்.

□□□

# திம்பு பேச்சுவார்த்தைகள் தோல்வியில் முடிந்தது ஏன்?



குறிப்பு:

தாயகம், தேசியம், தன்னாட்சி உரிமை என்ற தமிழீழ மக்களின் அடிப்படையான கோரிக்கைகளை சிறீலங்கா அரசு ஏற்க மறுத்ததால், திம்பு பேச்சுவார்த்தைகள் தோல்வியில் முடிந்தது. சிங்கள ஆட்சியாளரின் இனவாதப் போக்கையும், அரசியல் ஏமாற்றுவித்தைகளையும், அம்பலப்படுத்தி தலைவர் பிரபாகரன், 1985-ம் ஆண்டு, செப்டம்பர் மாதம் தமிழீழ மக்களுக்கு விடுத்த அறிக்கை.

எமது தேசிய சுதந்திரப் போராட்டம் இன்று முழு உலகத்தின் கவனத்தையும் ஈர்த்துள்ளது. ஒரு உள்நாட்டு நெருக்கடியாகத் தோன்றிய எமது பிரச்சினை இன்று உலகத்தை ஈர்க்கும் ஒரு சர்வதேச நெருக்கடியாக விஸ்வரூபம் கொண்டுள்ளது. சிங்கள அரசானது எம்முடன் தனித்து நின்று போராடவில்லை. ஏகாதிபத்திய நாசகார சக்திகள் அனைத்தையும் தனக்குப் பக்கபலமாக அணிதிரட்டி எமது மக்களுக்கு எதிராக ஒரு இன ஒழிப்பு யுத்தத்தை நடத்தி வருகிறது. இந்த ஏகாதிபத்திய நாசகார சக்திகளின் ஊடுருவல் இந்திய உபகண்டத்தின் ஸ்திர நிலைக்கும், இந்துமா சமுத்திர பந்தோபஸ்து நிலைக்கும் ஆபத்து ஏற்படும் எனப் பயந்ததால் இந்திய அரசு இப் பிரச்சினையில் தலையிட்டது. சமாதானப் பேச்சுக்கள் மூலம் ஒரு நியாயமான தீர்வை ஏற்படுத்தி இந்த நெருக்கடியைத் தணித்து விடலாம் என நம்பியது. இந்திய அரசின் நல்லெண்ண முயற்சிக்கு நாம் முட்டுக்கட்டையாக இருக்க விரும்பவில்லை. தமிழீழ மக்களின் அடிப்படையான அரசியல் பிரச்சினைகளை தீர்த்து வைப்பதிலோ அல்லது அவர்களது அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்வதிலோ ஜெயவர்த்தனா அரசுக்கு துளிகூட அக்கறை இல்லை என்பது நமக்கு நன்கு தெரியும். நீண்டதும், கசப்பானதுமான வரலாற்று அனுபவம் எமக்கு சில அரசியல் உண்மைகளைப் புகட்டியிருக்கிறது. ஆனால், புதிய பாரதப் பிரதமரின் முயற்சிக்கு நாம் எவ்வகையிலும் குந்தகமாக இருக்கவில்லை. ஜெயவர்த்தனா அரசின் சர்வாதிகாரக் கொடுங்கோன்மை ஆட்சியின் அட்டுழியங்களை அம்பலப்படுத்துவதோடு, தமிழர் பிரச்சினையை நியாயமான முறையில் தீர்த்து வைப்பதில் சிங்கள அரசுக்கு எவ்வித விருப்பும் இருக்கவில்லை என்பதை பகிரங்கப்படுத்தவும் எமக்கு ஒரு அரிய வாய்ப்பு ஏற்பட்டது. ஆகவே நாம் யுத்த நிறுத்தத்திற்கு இணங்கினோம். பேச்சு வார்த்தைக்குச் சம்மதித்தோம்.

நாம் தீர்க்கதரிசனத்துடன் அனுமானித்தபடி தமிழீழ மக்களின் அடிப்படைப் பிரச்சினைகளைத் தழுவிய எந்தவொரு உருப்படியான தீர்வுத் திட்டமும் சிங்கள அரசினால் முன் வைக்கப்படவில்லை. தமிழ் மக்களால் ஏற்கனவே நிராகரிக்கப்பட்ட பழைய, புளித்துப்போன திட்டங்கள் புதிய போர்வைகளில் மீண்டும், மீண்டும் மேசைக்கு வந்தபோது நாம் அவற்றை நிராகரித்தோம். சிறீலங்கா அரசு முன் வைத்த திட்டங்கள் தமிழ் மக்களின் அடிப்படை அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யவில்லை என்பதை இந்திய அரசு ஒத்துக்கொண்டது.

எமது கோரிக்கை என்ன? எமது அரசியல் இலட்சியம் என்ன? என்பதில் நாம் மௌனமாக இருந்து விடவில்லை. எமது தமிழீழத் தனியரசுப் போராட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை விளக்கிய திட்டம் ஒன்றை நாம் முன்வைத்தோம். நாம் ஒரு தேசிய இனம் என்ற ரீதியிலும், வரலாற்று ரீதியாக அமைந்த எமது பாரம்பரிய தாயகப் பூமி எமது சொத்துடைமை என்பதாலும், எமது அரசியல் தலைவிதியை நாமே நிர்ணயிக்கும் சுய நிர்ணய உரிமை எமக்குண்டு. இந்த சுய நிர்ணய உரிமையின் அடிப்படையிலேயே எமது தனியரசுப் போராட்டம் அமைந்திருப்பதால் எமது போராட்டம் நியாயமானது என்பதை விளக்கியிருந்தோம். தேசிய சுயநிர்ணய உரிமைக்கான எமது போராட்டம் நீண்ட வரலாற்றையுடையது. பல வடிவப் போராட்டங்களால் பரிணாமம் பெற்றது. காந்தியப் பாதையில், அமைதி வழிப் பாதையில், மொழி உரிமை கோரி, சம உரிமை கோரி, சமஷ்டி கோரி நடைபெற்ற அகிம்சை வடிவப் போராட்டங்கள் அனைத்துமே எதிரியின் இராணுவ ஒடுக்குமுறையால் அடக்கியொடுக்கப்பட்டன. இறுதியில் சுயநிர்ணய உரிமையின் அடிப்படையிலான தனியரசுக் கோரிக்கை பிறந்து, அது புரட்சிகர ஆயுதப் போராட்ட வடிவம் பெற்றது. இப்படியாக தமிழரின் அரசியல் போராட்ட வரலாற்றின் உச்சகட்டமாகவே தமிழீழக் கோரிக்கையும், அதனை அடையும் மார்க்கமாக ஆயுதப்

போராட்டமும் பரிணமித்தது என்பதை விளக்கியிருந்தோம். தமிழீழ மக்களின் தேசியத்துக்கும், தாயகத்திற்கும், தேசிய சுய நிர்ணய உரிமைக்கும் உத்தரவாதமளிக்கப் படாத எந்த ஒரு தீர்வையும் நாம் அங்கீகரிக்கப் போவதில்லை என்பதே எமது உறுதியான நிலைப்பாடாக இருந்தது. ஆனால், சிங்கள அரசு எமது நிலைப்பாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழீழ மக்களின் தேசிய அபிலாசைகளைப் பிரதிபலிக்கும் அடிப்படைக் கோட்பாடுகளை எல்லாம் பரிசீலனை செய்யாமலே நிராகரித்து விட்டது. ஈழத் தமிழர்கள் ஒரு தனித்துவமான தேசிய இனமல்ல; அவர்களுக்குப் பாரம்பரியமாக தாயகம் எதுவுமில்லை; அவர்களுக்கு தமது அரசியல் தலைவிதியை நிர்ணயிக்கும் சுயநிர்ணய உரிமை இல்லை என்ற ரீதியில் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளுக்கு எல்லாம் கதவடைத்து விட்டது சிங்கள அரசு.

இந்த நிலையில் சிறீலங்கா அரசுடன் பேசுவதற்கு எமக்கு எந்த அடிப்படையும் இருக்கவில்லை. அப்படித் தொடர்ந்து பேசுவதிலும் அர்த்தமிருப்பதாகத் தெரியவில்லை. எமது அரசியல் இலட்சியங்களைக் கைவிட்டு, எமது சுதந்திரப் போராட்டத்தைக் கைவிட்டு, ஆயுதங்களைக் கைவிட்டு, சுய கௌரவத்தைக் கைவிட்டு, அடிமைகளாக சிங்கள சர்வாதிகாரத்தின் கீழ் நாம் நசுக்கப்பட்டு வாழ வேண்டுமென சிங்கள அரசு விரும்புகிறது போலும். பேச்சுவார்த்தை என்ற வலை விரிப்பில் எம்மைச் சிக்க வைத்து, சுதந்திர வீரர்களான எம்மை அடிமைகளாக்கி, அழித்தொழிப்பதுதான் ஜெயவர்த்தனாவின் சூத்திரதாரத் திட்டம். இந்தப் பொறிக்கிடங்கில் விழுந்து விட விடுதலைப் புலிகள் தயாராக இல்லை.

'பேச்சுவார்த்தை' என்ற நாடகத்தில் போலி வேடம் பூண்டு உலகத்தையும், இந்தியாவையும், ஏமாற்றிக்கொண்டு, அதே சமயம் தமிழீழத்தில் மிகவும் பயங்கரமான இனக்கொலையை கட்டவிழ்த்து விட்டது சிங்கள அரசு. சிங்கள இராணுவத்தின் பேயாட்டத்தில் நூற்றுக்கணக்கான அப்பாவித் தமிழ் மக்கள் கொன்று குவிக்கப்பட்டனர். கேந்திர முக்கியத்துவம் வாய்ந்ததும், தமிழரின் வரலாற்றுச் சிறப்புடையதுமான திருக்கோணமலையில் சிங்கள முப்படைகள் மாபெரும் தாக்குதல் ஒன்றை மேற்கொண்டன. போர்க் கப்பல்களிலிருந்து பீரங்கியால் தாக்கியும் ஆகாயத்திலிருந்து குண்டுமாரி பொழிந்தும் நடத்தப்பட்ட இந்த மிருகத்தனமான தாக்குதலில் இருபத்தைந்து தமிழ்க் கிராமங்கள் வரை நாசம் செய்யப்பட்டன. நூற்றுக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்கள் தமது சொந்த மண்ணிலிருந்து அகதிகளாக விரட்டியடிக்கப்பட்டனர். இவ்விதமாக தமிழரின் தாய்ப் பூமியை கபளீகரம் செய்து கொண்டு, தமிழ் மாநிலத்தை சுடுகாடாக மாற்றிக் கொண்டு, தமிழரை இன வாரியாக அழித்துக் கொண்டு, சமரஸம் பேசுவோம் வாருங்கள் என்று எம்மை அழைக்கிறது சிங்கள அரசு. அவர்களைப் பொறுத்தவரை இந்தப் பேச்சுவார்த்தை என்பது வெறும் கேலிக் கூத்து. தமிழர் இனக்கொலையை மூடி மறைத்து, இந்திய அரசை ஏமாற்றும் நோக்கத்துடனேயே தாம் சமாதானப்பிரியர் என்ற வகையில் போலிவேடம் பூண்டு, அற்புதமாக நடிக்கிறார்கள்.

சிங்கள இனவாத ஆட்சியாளர் ஒரு இராணுவத் தீர்வையே விரும்புகிறார்கள் என்பது அவர்களது நடவடிக்கைகளிலிருந்து தெட்டத் தெளிவாகியுள்ளது. எமது தேசிய சுதந்திரப் போராட்டத்தை ஒரு பயங்கரவாதப் பூதமாகத் திரித்துக்காட்டி, சுதந்திரப் போராளிகளை வன்முறைப் பித்தர்களாக சித்திரித்துக் காட்டி, இராணுவ ரீதியாக எம்மை ஒழித்துக் கட்ட வேண்டும் என்பதே அவர்களது நோக்கம். இந்த இலக்கில் அவர்கள் முழுச்சிங்கள தேசத்தையுமே இராணுவ மயமாக்கி வருகிறார்கள். பெரியதொரு இனயுத்தத்திற்கு ஆயத்தங்கள் செய்து வருகிறார்கள்.

சிங்கள இனவாத அரசின் இந்த நாசகாரத் திட்டத்தை இந்திய அரசு புரிந்து கொள்ள வேண்டும் என்பதே எமது அவா. ஜெயவர்த்தனா இனத்துவே

சம் கொண்ட ஒரு பாசிஸ சர்வாதிகாரியே அன்றிப் பரந்த நோக்குடைய சமாதானப் பிரியர் அல்ல. அவரது தனிப்பட்ட அரசியல் வரலாறானது தமிழரின் இரத்தத்தாலும், கண்ணீராலும் எழுதப்பட்டது. அவர் அரசியலில் புகுந்த காலம் தொட்டு இன்று வரை ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழினத்தின் உரிமைகளைப் பறித்தெடுப்பதில்தான் அக்கறை காட்டி வந்திருக்கிறார். தமிழினத்தைப் படிப்படியாக ஒழித்துக்கட்டி, இலங்கையை ஒரு சிங்களத் தீவாக, ஒரு பௌத்த பூமியாக மாற்றுவதையே அவர் தமது வாழ்க்கையின் உன்னத இலட்சியமாகக் கொண்டவர். இந்த சிங்கள - பௌத்த இனவெறியர் தமிழரின் பிரச்சினையை சுமுகமாகத் தீர்த்து வைப்பார் என்பதில் எமக்கு எள்ளளவும் நம்பிக்கையில்லை.

ஜெயவர்த்தனா ஒரு சூத்திரதார அரசியல்வாதி என்பதையும், நம்ப முடியாத ஏமாற்றுப் பேர்வழி என்பதையும் நன்கு உணர்ந்து கொண்டவர் முன்னாள் பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அம்மையார். ஜெயவர்த்தனா அரசானது தமிழர் பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வைத் தேடாது, தமிழரை ஒழித்துக் கட்டுவதில்தான் முனைந்து நிற்கிறது என்பதை அவர் தமது அனுபவ மூலமாகக் கண்டறிந்தார். இதனால் அவர் ஜெயவர்த்தனா அரசு மீது வெறுப்புக் கொண்டிருந்ததோடு, ஈழத் தமிழர் மீது அனுதாபமும் அக்கறையும் காட்டி வந்தார். புதிய பாரதப் பிரதமர் தமிழரின் பிரச்சினையில் அக்கறை கொண்டவர். அவரது நல்லெண்ண முயற்சியையும் ஆதரிப்பதுபோல ஜெயவர்த்தனா அரசு நடித்துக் கொண்டாலும், சமாதானத் தீர்வில் எவ்வித அக்கறையும் எடுக்காது, இந்திய அரசை தமிழீழ விடுதலைப் போராளிகளுக்கு எதிராக முடிந்து விடுவதில்தான் முற்றுமுழுதாக முனைந்து வருகிறது. ஜெயவர்த்தனாவின் இந்த நயவஞ்சக ராஜதந்திரச் சூழ்ச்சியை நாம் நன்கு அறிவோம். இதனை இந்திய அரசும் வெகு விரைவில் புரிந்து கொள்ளும் என்பதே எமது நம்பிக்கை.

தமிழீழத் தனியரசே எமது அசைக்க முடியாத அரசியல் இலட்சியம். இந்த இலட்சியத்தை அடையவே நாம் உயிரை அர்ப்பணித்துப் போராடி வருகிறோம். ஒடுக்கப்படும் எமது மக்களின் அரசியல் அபிலாசையும் அதுவே. வேறு எந்த மாற்றுத் திட்டமும் எமது மக்களின் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வாக அமைய மாட்டாது என்பதே எமது கருத்து. மூன்றாம் உலகத்து ஒடுக்கப்படும் மக்களின் தேசிய சுதந்திரப் போராட்டங்களை கௌரவித்து, ஆதரித்து வரும் பாரத நாடு, ஈழத் தமிழ் மக்களின் சுதந்திரப் போராட்டத்திற்கு ஆதரவு வழங்கும் என்பதே எமது எதிர்பார்ப்பு. இந்திய மக்களின் அங்கீகாரம் எமக்குக் கிட்ட காலம் பிடிக்கலாம். ஆயினும் நாம் அதற்காகத் தொடர்ந்து போராடிக் கொண்டே இருப்போம்.

தர்மமும், உண்மையும் எமது பக்கம் சார்ந்திருக்கிறது. அதுவே எமது பலம். அதர்மமும், பொய்மையும் எதிரியின் பக்கம் சார்ந்திருக்கிறது. அதுவே அவனின் பலவீனம். ஈற்றில் வெற்றி கொள்வது நாம். ஏனெனில் என்றும் அழியாத தர்மம் எமக்குப் பக்கபலமாக இருக்கிறது.

□□□

# 'சுதந்திர தமிழீழ தனியரசே எமது போராட்ட இலட்சியம்'



குறிப்பு:

தமிழகத்திலிருந்து வெளிவரும் வார இதழான **'தேவி'**க்கு தலைவர் வழங்கிய பேட்டியை இங்கு பிரசுரிக்கிறோம். 1985 அக்டோபர் 16ஆம் திகதி வெளியாகிய இதழில் இப்பேட்டி வெளிவந்தது. தமிழ்ப்பத்திரிகை உலகத்திற்கு தலைவர் முதன் முதலாக அளித்த பேட்டி இதுவென்பது குறிப்பிடத்தக்கது. தனது வாழ்க்கைப் பின்னணி மற்றும் அன்றைய போராட்ட சூழ்நிலைபற்றி தலைவர் இப் பேட்டியில் எடுத்துக்கூறுகிறார்.

யுத்த நிறுத்தம் என்று இந்திய அரசு இலங்கையிடம் சொல்லி ரொமேஷ் பண்டாரியையும் ஜெயவர்த்தனேயிடம் அனுப்பிய பிறகும்—

தொடர்ந்து அத்துமீறல்கள், படுகொலைகள், தீ வைப்புகள், விமான வேட்டைகள்!

கண்டு கொண்டதாக தெரியவில்லை, நம் மத்திய — மாநில அரசுகள்!

என்ன செய்யப் போகிறார்கள் போராளிகள்? அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழ் ஈழத்தை மீட்க என்ன செய்யப் போகிறார்கள்?

மனதில் இந்தக் கேள்விகளுடன் தளபதி வெற்றி (வி) பிரபாகரனை சந்தித்தோம். 'தேவி' என்றதும் உளம்பூரித்தது அந்தப் புலி. ''நான் பேட்டி தரும் முதல் தமிழ்ப் பத்திரிகை 'தேவி' தான்'' என்று கைகொடுத்தார் பிரபாகரன்.

அவரைச் சுற்றிலும் இளம் புலிகள். இவர்கள் புலிகள் என்பதாலேயே இவர்களின் பெற்றோர்களை சிங்களவர்கள் வேட்டை ஆடினார்கள். இவர்களின் கண்களில் விடுதலை வேட்கை மிகுந்திருந்ததை காண முடிந்தது.

''தம்பி, தம்பி'' என்று இவர்கள் தங்கள் தளபதியை செல்லமாக அழைக்கிறார்கள்.

பிரபாகரன் பேசினார்.

''நான் 15 வயதிலேயே தலைவர்களின் வரலாற்றை படிக்க ஆரம்பித்தவன். 'நாம் தமிழர்' என்று உணர்வூட்டிய சி.பா. ஆதித்தனாரின் வரலாற்றையும் அவரின் இலட்சியங்களையும் படித்தேன். சுதந்திர ஈழத்திற்காக அவர் கொடுத்த குரல் இன்னும் என் நெஞ்சிலே ஆழப்பதிந்து இருக்கிறது.

எனது அரசியல் குரு நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்தான். இந்திய விடுதலைக்காக அவர் அமைத்த ஐ. என். ஏ. ராணுவம் என் சிந்தையில் அன்றே பதிந்து விட்டது. நேதாஜியின் பார்வட்பிளாக் கொடியில் உள்ளது சீறும்புலி. எங்கள் சின்னமும் பாயும் புலி தான்!'' என்று பெருமையுடன் சொன்னார் பிரபாகரன்.

''பேரறிஞர் அண்ணா எழுதிய 'ஏ தாழ்ந்த தமிழகமே' என்ற புத்தகமும் டாக்டர் மு. வ. எழுதிய 'தம்பிக்கு' என்ற புத்தகமும் என்னை மிகவும் கவர்ந்தவை'' என்றார்.

பிரபாகரனின் பெற்றோர்கள் திருச்சியில்தான் இன்றும் வாழ்கிறார்கள். ஆனால் அவர்களைப் பார்த்துப்பேசி 6 ஆண்டுகள் ஆகிவிட்டனவாம். அவர்கள் வாழும் முகவரி கூட பிரபாகரனுக்குத் தெரியவில்லை.

தமிழ் ஈழ விடுதலைக்காக ஆயுதமேந்தி இருக்கும் சுத்த வீரனுக்கு பெற்றோர் நினைவு இல்லாமலிருந்தது ஆச்சரியமில்லையே!

''திம்பு பேச்சுவார்த்தைபற்றி பலர் பலவிதமாகச் சொன்னாலும் உங்கள் நிலை என்ன, உருப்படியாக எதுவும் இருக்கிறதா?'' என்று கேட்டதும் திட்டவட்டமான குரலில் பேசத்தொடங்கினார்.

''இன்றுவரை (அழுத்தத்துடன்) பேச்சுவார்த்தையில் நல்ல திருப்பம் ஏற்பட்டதாக இல்லை. ஒரு பலனும் ஏற்படவில்லை. 1983-ல் இந்திராகாந்தி காலத்தில் நடந்த வட்டமேசை மாநாட்டில் இலங்கை அரசால் கடைசியாக முன்வைக்கப்பட்டு தமிழர் கூட்டணியால் நிராகரிக்கப்பட்டதுதான் திரும்பவும் வைக்கப்பட்டது. இதனால்தான் நாங்கள் பேசத் தயங்கினோம். இனப்படுகொலை தொடரவே பேச்சு வார்த்தையை புறக்கணிக்க வேண்டியதாயிற்று.

''இப்போது கொண்டுவந்திருக்கிற தீர்மானம் கூட தமிழருக்கு சாதகமான - உருப்படியான திட்டமாக இல்லை. பேச்சு வார்த்தை மூலம் தீர்வு காண ஜே. ஆர். (ஜெயவர்த்தனே)தயாராக இல்லை''

''அப்படியிருந்தும் நீங்கள் பேச்சு வார்த்தையில் கலந்து கொண்டது, இந்திய - இங்குள்ள அரசின் நிர்ப்பந்தத்தினால் தான் என்று யூகிக்கப்படுகிறது. இது சரி தானா?''

''நிர்ப்பந்தமா? ஆரம்பத்திலிருந்து எங்கள் பிரச்சினையில் யாரும் எங்களை(எல்.டி.டி.ஈ.)வற்புறுத்தவில்லை. அகதிகள் பிரச்சினையில் சிங்கள அரசுடன் பேச வேண்டிய நிலைக்கு இந்திய அரசு தள்ளப்பட்டது. ஜே. ஆரைக் கேட்டிருக்கிறார்கள். இத்தகைய நிலையால் இந்தப் பிரச்சினையில் இந்திய அரசு ஈடுபட்டிருக்கிறது.

''இந்திய அரசாங்கத்தை ஏமாற்றி, எங்களையும் ஏதோ சலுகைகளுக்காகத் தான் போராடுகிறார்கள் என்று எங்கள் மக்கள் நினைப்பதற்காக ஒரு நாடகம் நடத்தப் பார்க்கிறார் ஜே. ஆர். ஆனால் சுதந்திர ஈழம் என்ற எங்கள் கொள்கையை நாங்கள் கைவிடுவதாக இல்லை!''

திட்டவட்டமாக சொன்னார் பிரபாகரன். இமயமே சாய்ந்தாலும் இவர் பிறழ மாட்டார் என்பதைக் குரல் காட்டியது.

''தனி ஈழம் அமைவதை அங்குள்ள மக்கள் விரும்பவில்லை என்று சில கூலிகள் கூறுகிறார்களே?''

—இப்படிக் கேட்டதும் பிரபாகரனுக்கு சிரிப்பு வந்துவிட்டது. இப்படி சொல்பவர்களும் இருக்கிறார்களே என்று வேதனையும் அடைந்தார்.

தமிழீழ விடுதலையை அங்குள்ள மக்கள் ஆதரிக்கவில்லை என்று சொல்பவர்கள் அங்கு செல்லாதவர்கள். தமிழீழ மக்களுடன் தொடர்பு இல்லாதவர்கள்'' என்று நெற்றிப் பொட்டிலடித்த மாதிரி சொன்னார்.

''உங்கள் அமைப்பு மீது இன்னொரு பிரிவினர் சொல்லும் குற்றச்சாட்டு ஒன்று இருக்கிறது. நீங்கள் அடிக்கடி தாக்குதல் நடத்துவது தவறு என்றும் திட்டமிட்டு கால அவகாசம் எடுத்துக்கொண்டு எல்லோரும் சேர்ந்து தாக்குவதுதான் நல்லது என்றும் அந்த அமைப்பு கூறுகிறது. என்ன சொல்கிறீர்கள்?''

''இந்த நிலையில் பதிலளிக்க விரும்பவில்லை. ஒருமித்து பொது எதிரியை சந்திக்கத்தான் விரும்புகிறோம். இதனால் தான் எங்களைப்பற்றிய தவறான பேச்சுக்களுக்கு நாங்கள் பதில் அளிப்பதில்லை.''

''தம்பி! (பிரபாகரனின் செல்லப் பெயர்) உங்கள் இயக்கத்தினரை அழைத்து இந்தியாவிலுள்ள மாநில அமைப்புகளை போன்ற உரிமையை இலங்கை அரசிடம் இருந்து பெற்றுக்கொள்ளுங்கள் என்று ஜி. கே. மூப்பனார் வற்புறுத்தியதாகச் சொல்லுகிறார்களே உண்மைதானா?''

''அது தவறானது. எங்களை இதுவரையில் யாரும் வற்புறுத்தவில்லை. அப்படி வற்புறுத்தினாலும் அதற்கு நாங்கள் இணங்கப்போவதில்லை!''

''போர் நிறுத்தம் என்ற பெயரில் அப்பாவி மக்களை சிங்கள ராணுவமும் ஊர் காவல் படையும் வேட்டையாடி வரும் போது நீங்கள் மட்டும் அமைதியாக இருப்பது எந்த வகையில் நியாயம்?''

''நாங்கள் உண்மையான போர் நிறுத்தத்தைத் தான் விரும்புகிறோம். அதே நேரத்தில் மக்கள் தாக்கப்படும்போது பதில் தாக்குதலும் நடத்தி இருக்கிறோம்.

பேச்சு வார்த்தை நடந்து கொண்டு இருக்கும் போது ஏற்படும் இப்படிப்பட்ட அழிவுகளுக்கு இந்திய அரசு தான் பொறுப்பு என்பதையும் நாங்கள் வலியுறுத்திச் சொல்லி இருக்கிறோம்.''

''நீங்கள் நான்கு அமைப்புகளும் இணைந்து இருக்கிறீர்களே - ஈழத்தின் எல்லைகளைப்பற்றி பேசிவிட்டீர்களா?''

''இப்போது இணைந்திருக்கும் நோக்கம் பொது எதிரியை சந்திப்பதற்காகவே'' என்ற பிரபாகரன், இணைப்பு பற்றி ஒரு சிறு விளக்கத்தையும் தந்தார்.

''டெலோ, ஈ.பி.ஆர்.எல்.எப், ஈரோஸ் அமைப்புகள் அடங்கிய இ. என். டி.எல்.எவ். வுடன் நாங்களும் (புலிகள்) சேர்ந்து செயல் படுகிறோம். காலப் போக்கில் எங்களைப் பற்றிய முரண்பாடுகளை பேசி தீர்த்துக் கொள்வோம்.''

''பேச்சுவார்த்தை என்று காலம் கடத்தியே சிங்களவர்கள் தங்கள் வலிமையை பெருக்கிக் கொண்டு விட்டார்கள். நவீனரக ஆயுதங்களையும் பெற்றுக்கொண்டு விட்டார்கள். அவர்களை சமாளிக்க நம்மிடம் ஆயுத பலம் உள்ளதா?'' என்றதும் சிரித்து விட்டார் பிரபாகரன்.

''எதிரியிடம் இருக்கும் ஆயுதம் பல பேரைக் கொல்லக் கூடியவைதான். அதி நவீனமானவைதான். அந்த ஆயுதங்கள் எங்கள் கைக்கு வந்தாலும் அந்த வேலையைத்தானே செய்யும். எனவே அந்த ஆயுதங்களை அவர்களிடம் இருந்தே நாங்கள் பெற்றிருக்கிறோம். அதாவது கைப்பற்றி இருக்கிறோம்.''

''பெட்ரோல் குண்டு(நேபாம்)கதிர்வீச்சு (லேசர்) போன்ற நாசசக்தி கருவிகளையும் அவர்கள் வைத்திருக்கிறார்களே'' என்று கேட்டதும் மீண்டும் கடகடவென சிரித்தார்.

''யுத்த முறையில் எந்த ஆயுதத்திற்கும் பாதுகாப்பு வசதி உண்டு. அதை பயன்படுத்தும் முறையும் எங்களுக்குத் தெரியும். பாதுகாப்பு வழிகள் இருக்கின்றன. ஆயுதங்கள் மட்டுமே முக்கியமல்ல. தந்திரங்களும், உபாயங்களும்தான் முக்கியம்.''

''சிங்களவர்களின் வெறியாட்டத்தினால் அதிக அளவில் இங்கு அகதிகள் வந்து விட்டார்கள். எஞ்சியிருப்பவர்கள் அங்கு மிகவும் பாதிக்கப்பட வாய்ப்பு இருக்கிறதே?

''அதிகமாக பாதிக்கப்பட்ட தமிழர்கள் இன்னும் அங்குதான் இருக்கிறார்கள். தங்கள் மண்ணை எப்பாடு பட்டேனும் காக்க வேண்டும் என்ற உணர்வுடன் அங்கேயே இருக்கிறார்கள். சுதந்திரப் போராட்டம் என்றால் அழிவுகள் இருக்கத் தானே செய்யும். இதை எம்மக்கள் நன்றாகவே அறிந்துள்ளனர்.''

அவர்களை நாங்கள் பாதுகாத்துக் கொண்டு வருகிறோம். கண்ணி வெடிகள், மிரட்டல் இவற்றினால் ராணுவத்தினர் சில பகுதிகளில் வெளிவரவே பயப்படுகிறார்கள். பெரிய அளவில் உதவிகளும், ஆயுதங்களும் கிடைத்தால் முழுக்க, முழுக்க எங்கள் ஆதிக்கமே அங்கு இருக்கும்.

பெரிய தாக்குதலுக்கு தயாராகி வருவதாக ஜே. ஆர். கூறியிருப்பது மிகைப் படுத்திய கூற்றே! இனவெறி பிடித்த அரக்க கூட்டத்திடமிருந்து எங்களை பாதுகாத்துக் கொள்ள எடுத்துக்கொள்ளும் முயற்சியே அது. வெளிநாடுகளிடம் உதவி பெறுவதற்காக பொய்யான தகவலைச் சொல்லி வருகிறார். நாங்கள் சிங்களவரை தாக்குவதாகச் சொல்வது பொய். எங்கள் மக்களை பாதுகாக்கவே போராடுகிறோம்.

''இந்திரா காந்தியின் அணுகுமுறை ஈழத் தமிழ்ப் போராளிகளுக்கு சாதகமாக இருந்தது என்றும் ராஜீவ்காந்தி வந்த பிறகு அது மாறி விட்டது என்றும் தோன்றுகிறதே. உண்மை தானே?''

''வேறுபாடு இருப்பதாக தெரியவில்லை!''

''வேறுபாடு இல்லை என்கிறீர்கள். மூன்று போராளிகளை நாடு கடத்தும்படி உத்தரவிட்டது எதைக் காட்டுகிறது?''

''அப்படிப்பட்ட உத்தரவு போட்டிருந்தாலும் தமிழக மக்கள் காட்டிய உணர்வு மூலம் அந்த நடவடிக்கை தவறு என்பதை உணர்ந்திருக்கலாம்!''

''உங்களை நிர்ப்பந்தம் செய்திருக்கிறார்கள் என்று மீண்டும் சொல்கிறேன்?''

''இல்லை! அப்படி இருந்தால் அதை மறைக்க வேண்டிய அவசியம் இல்லை!''

''பின் ஏன் தலை மறைவு ஆனீர்கள்?''

''தலைமறைவு அல்ல. நான் நாடு (ஈழம்) செல்ல வேண்டிய சூழ்நிலை இருந்தது. அங்கு நான் சென்ற போது இங்கு நாடு கடத்தல் நடந்திருக்கிறது. இது தற்செயலாக நடந்ததே தவிர நான் தலைமறைவாகச் செல்லவில்லை. இதுதான் உண்மை!''

''மொசாத்— எஸ். ஏ. எஸ். இந்த இரு பிரிவினரும் அழிக்கப்பட வேண்டிய வெளிநாட்டு கூலிப்படையினர். இவர்கள் மீதும் நீங்கள் தாக்குதல் நடத்த வேண்டியது தானே?''

''இவர்கள் அங்கு (ஈழம்) தனியாக வருவதில்லை. சிங்களவருடன் சேர்ந்தே வருவார்கள். எங்கள் தாக்குதலில் இவர்களில் சிலர் அழிக்கப்பட்டிருக்கலாம். இதை ரகசியமாக வைத்திருக்கிறார்கள்.

இசுரேலின் இன்னொரு ஏஜன்ஸி அமைப்பு இருக்கிறது. **'SIN BET'** என்ற அமைப்பு அங்கு செயல்பட்டுக் கொண்டு இருக்கிறது. இதே போல் எஸ்.ஏ.எஸ்.சின் கே.எம்.எஸ். என்ற **'KINI MINI SERVICE'** என்ற பிரிவும் இருக்கிறது. இவர்களைப் பற்றிய எல்லா விபரங்களும் எங்களுக்குத் தெரியும்''

சிங்கள ராணுவத்தின் சகல ரகசியங்களும் பிரபாகரனுக்கு நன்றாகத் தெரிந்து இருக்கிறது.

மிகத்திறமையான இளைஞர்கள் புலிப் படையில் இருக்கிறார்கள் என்பதையே இது காட்டியது.

''தமிழ்நாட்டில் சிங்கள ஒற்றர்கள் திரிவதாக சொல்கிறார்களே உண்மை தானா?''

''சிங்கள ஒற்றர்கள் நேரடியாக இங்கு வரவில்லை. அகதிகள் என்ற பெயரில் காட்டிக் கொடுக்கும் சிலர் இங்கு வந்திருக்கலாம்'' என்று மனம் வருந்திக் கூறினார்.

அவர் வருந்தியது சிங்கள ஒற்றர்களுக்காக அல்ல. அகதிகள் பெயரில் ஒற்றர்களாக வந்துள்ள எட்டப்பன்களுக்காக! தன் விரலே தன்னைக் குத்தலாமா?

''ஈழப் பிரச்சினையில் உங்களுக்கு உடன்பாடான மாற்றுத் திட்டம் என்ன?''

''தமிழ் ஈழம்தான் எங்களின் முடிவான முடிவு!''

''அந்த முடிவை மாற்றிக் கொள்ளுங்கள் என்று இந்திய அரசு வற்புறுத்தினால்?''

''எங்கள் மக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடிய தீர்வை இந்திய அரசு காட்டுமானால் நாங்கள் பரிசீலிக்கத் தயார். 'தமிழ் ஈழம்' தான் எங்கள் வழி. இதை விட சிறப்பான ஒரு வழியைக் காட்டட்டும். பரிசீலிக்கிறோம்!''

''ஈழத் தமிழர்கள் எதை விரும்புகிறார்கள்?''

''பேச்சு வார்த்தைக்குப் போகாதே என்று ஆர்ப்பாட்டம் நடத்துகிறார்கள். இனப்படுகொலை கூடாது. அமைதி நிலவ வேண்டும் என்று விரும்புகிறார்கள். ஆனால் அந்த அமைதி நிரந்தர அமைதியாக இருக்க வேண்டும். எனவே தனி ஈழம் தவிர வேறு மாதிரியான முடிவுக்கு வராதே, பேச்சு வார்த்தைக்கு போகாதே என்று ஆர்ப்பாட்டம் நடத்துகிறார்கள்''

''இந்திய அரசு ஏற்பாடு செய்தால் நீங்கள் ஜெயவர்த்தனேயுடன் பேச்சு நடத்தத்தயாரா?''

'ஓ!' என்று சொன்ன பிரபாகரன் ''எங்கள் தமிழீழ எல்லைகளைப் பற்றி பேசுவதே ஜே. ஆரிடம் பேசுவதற்குரியது என்று கருதுகிறோம்!'' என்று தன் நிலையை தெளிவாக்கினார்.

''இப்போதே தமிழ்ப் பகுதிகளில் பொலிஸ் நிர்வாகம் இல்லாமல் போய்விட்டது. பொலிஸ் நிலையங்கள் ராணுவ முகாம்களாகி விட்டன. அவர்களும் எங்களுக்குப் பயந்து வெளி வருவதில்லை.

பொலிஸ் செய்யவேண்டிய நிர்வாக ஒழுங்கு களை, மக்கள் பிரச்சினைகளை இப்போது போராளிகள்தான் கவனித்துக் கொண்டிருக் கிறார்கள். சுருக்கமாகச் சொன்னால் சிவில் நிர்வாகம் எங்களிடம்தான் இருக்கிறது.

தமிழ் ஈழத்தில் பொருளாதார நெருக் கடியும் ஏற்பட்டிருகிறது. கல்வி, சுகாதாரம் பாதிக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும் அதற்குள் வாழ எங்கள் மக்கள் பழகிக் கொண்டு விட்டார்கள். இதற்குக் காரணம் சுதந்திர உணர்வே!'' என்று உணர்ச்சி வசப்பட்டார் பிரபாகரன்.

''கடைசியாக ஒரு கேள்வி. எங்களு டைய யோசனையைக்கேட்காததால் நீங்கள் இந்த மண்ணிலிருந்து செயல்படக்கூடாது, அனைவரும் வெளியேறி விடுங்கள் என்று இந்திய அரசு தேதி நிர்ணயிக்குமானால் என்ன செய்வீர்கள்?''

—இதைக் கேட்பதற்கு சங்கடமாகத் தான் இருந்தது. இருந்தாலும் நம் இந்திய ஆட்சியாளர்களின் போக்கு அப்படியெல் லாம் இருக்கிறதே—

ஆனால் பிரபாகரன் கொஞ்சமும் தயங் காமல், தளராமல் பதில் சொன்னார்.

''நாங்கள் ஆரம்பத்திலிருந்தே எங்கள் மண்ணிலிருந்துதான் போராடி வருகிறோம். அது மட்டுமல்ல, எங்கள் சுதந்திரப்போரை எங்கள் மக்களை நம்பித்தான் ஆரம்பித் திருக்கிறோம். எங்கள் மக்களும் தயாரா கவே இருக்கிறார்கள். எனவே நாங்கள் தொடர்ந்து எங்கள் மண்ணிலிருந்து போராடுவது கடினமான காரியமல்ல. அது மட்டுமல்ல, எங்கள் விடுதலைப்புலி அமைப் பில் பெரும்பகுதியினர் தமிழீழ மண்ணிலி ருந்துதான் போராடி வருகிறார்கள்.

நாங்கள் சில அடிப்படை உதவிகளுக் காகத் தான் தமிழக மக்களுடன், எங்கள் சகோதரர்களுடன் உறவு வைத்திருக் கிறோம். நீங்கள் சொல்வது மாதிரியான நிலைவந்தால் நாங்கள் எங்கள் நாட்டுக்குச் சென்று உரிமைக்காக பாடுபடுவோம்.

ஆனால் உடன் பிறவாசகோதரர் களான தமிழக மக்கள் அவ்வாறான நிலைக்கு செல்லவிட மாட்டார்கள் என்று நம்புகிறேன்''

தாய்த் தமிழக மக்கள்மீது பிரபாகரன் வைத்திருக்கும் நம்பிக்கை நெகிழ வைத் தது.

அந்த வீரத் திருமகனின் முயற்சி வெற்றிபெற வாழ்த்தி விட்டு விடை பெற் றோம்.

□□□

# சிங்கள அரசு இராணுவத் தீர்வையே விரும்புகிறது.

குறிப்பு:

தலைவர் பிரபாகரன் பிரபல இந்திய ஆங்கில ஏடான 'சண்டே' வார இதழுக்கு அளித்த இரண்டாவது பேட்டியின் தமிழாக்கத்தை இங்கு தருகிறோம். இந்த விசேட பேட்டி 1985 ஆம் ஆண்டு செப்டம்பர் 29- அக்டோபர் 5 இதழில் பிரசுரமாகியது. இந்தப் பேட்டியில் சிறீலங்கா அரசின் இன அழிப்பு நடவடிக் கைகளைச் சுட்டிக்காட்டும் தலைவர், இனப்பிரச்சினைக்கு அரசியல் தீர்வைக் காண்பதற்குப் பதிலாக இராணுவத் தீர்விலேயே அரசு அக்கறை கொண்டிருப்பதாக விளக்குகிறார்.

தமிழீழத் தனியரசே தமிழ் மக்களின் தேசியப் பிரச்சினைக்கு இறுதியான தீர்வாக அமையுமென எடுத் துரைக்கும் அவர், தமிழீழத் தனியரசு உருவாகும் வரலாற்று நிகழ்வை எந்தவொரு சக்தியாலும் தடுத்து நிறுத்த முடியாது எனவும் இப்பேட்டியில் வலியுறுத்து கிறார். தமிழீழ இலட்சியத்தை அடையும்வரை தமிழ் மக்கள் இரத்தம் சிந்திப் போராடவேண்டும் என்றும், இரத்தம் சிந்தாமல், தியாகம் புரியாமல் எந்தவொரு தேசமும் சுதந்திரம் பெற்றதில்லை என்றும் எடுத்து விளக்குகிறார்.

# சிங்கள அரசு இராணுவத் தீர்வையே விரும்புகிறது



O நீங்கள் தலைமறைவாக இருக்கத் தீர்மானித்தது ஏன்?

★ தலைமறைவாகும் நோக்கம் எனக்கு இருக்கவில்லை. எனது தாய் நாடாகிய தமிழீழம் சென்று சில காரியங்களைக் கவனிக்க வேண்டியிருந்தது. சமாதானப் பேச்சு வார்த்தை குறித்து எனது தளபதிகளுடன் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தமிழ்ப் பகுதிகளில் நிலவும் தற்போதைய சூழ்நிலை பற்றியும், மக்கள் மனோநிலை பற்றியும் நேரில் கண்டறிய விரும்பினேன். நான் அங்கிருந்த சமயம் தமிழ் நாட்டில் சில சம்பவங்கள் நடந்தன. (தமிழீழ விடுதலைப் புலிகளின் அதிகார பூர்வமான பேச்சாளர் திரு. பாலசிங்கத்தின் நாடு கடத்தலைக் குறிப்பிட்டு) அதனால் நான் தொடர்ந்தும் அங்கிருக்க எண்ணினேன்.

O யுத்த நிறுத்தம் குறித்து உங்கள் தளபதிகளின் அபிப்பிராயம் என்ன?

★ யுத்த நிறுத்தம் என்பது ஒரு நாடகம். இந்தப் போர்வையின் கீழ் சிங்கள ஆயுதப் படைகள் தமிழ் மக்கள் மீது தொடர்ந்தும் அட்டூழியங்களைப் புரிந்து வருகின்றனர். இனப் படுகொலை தொடர்ந்தும் இடம் பெறுகிறது. தமிழ் மக்கள் தமது வீடுகளிலிருந்து விரட்டியடிக்கப்படுகிறார்கள். இது உண்மையான போர் நிறுத்தமாக இருக்குமானால் எமது தளபதிகள் மகிழ்ச்சியடைவார்கள். நாம் போர் நிறுத்த ஒப்பந்தத்தை செம்மையாகப் பேணி, எமது கெரில்லா நடவடிக்கைகளை நிறுத்தி வைத்தோம். ஆனால் சிங்கள ஆயுதப் படைகள் தொடர்ந்தும் பொது மக்களை தாக்கி வருகிறது. இதனால் நாம் திருப்பித் தாக்க நிர்ப்பந்திக்கப்படுகிறோம். இன்றைய சூழ்நிலையில் நாம் நிதானமாகச் செயல்பட வேண்டியிருக்கிறது. இந்த யுத்தநிறுத்தம் என்பதே ஒரு கேலிக்கூத்து. இந்தப் போலி நாடகத்தின் திரைக்குப் பின்னால் சிறீலங்கா அரசு இனப் படுகொலையை தொடர்ந்து நடத்தி வருகிறது என்பதை எனது தளபதிகளும் நன்கு அறிவார்கள். ஆகவே இச்சூழ்நிலையில் அவர்களையும் நான் சரியான முறையில் வழிநடத்த வேண்டியுள்ளது.

O பாலசிங்கம் நாடு கடத்தப் பட்டதும் நீங்கள் தலைமறைவாகத் தீர்மானித்தது ஏன்?

★ நான் உடனடியாகத் திரும்பியிருக்கலாம். ஆனால் அந்த நாடு கடத்தல் உத்தரவு குறித்து எனது எதிர்ப்பைத் தெரிவிக்க விரும்பினேன்.

O ஈழத்தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களுக்கு பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தி அழைப்பு விடுத்த போதும்கூட நீங்கள் தொடர்ந்தும் அணுக முடியாத நிலையில் இருந்தீர்கள். இது இந்திய அரசுக்கும், உங்களுக்குமிடையிலான உறவைப் பாதிக்கும் என நீங்கள் கருதவில்லையா?

★ இந்த நாடு கடத்தல் உத்தரவு அவசியமில்லை என நான் திடமாக எண்ணியதால் எனது அதிருப்தியை வெளிக்காட்ட விரும்பினேன்.

O அப்படியானால் நீங்கள் மீண்டும் வெளியே வந்த காரணம் என்ன?

★ பல காரணங்கள் உண்டு. முதலாவதாக நான் தலைமறைவாக இருந்தமையால் நாம் பேச்சு வார்த்தைக்கு எதிரானவர்கள் என்றும், நாம் ஆபத்தான பயங்கரவாதிகள் என்றும் சில தீய சக்திகள், விடுதலைக்கு விரோதமான சக்திகள் எம்மைத் தவறாக உருவகப்படுத்த முயன்றன. இரண்டாவதாக, நாம் இராணுவ ரீதியான தீர்வை மட்டும் விரும்பும் அதி தீவிரவாதிகள் என எம்மை அந்நியப்படுத்தி இனம் காட்ட முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. அத்தோடு எம்மை ஆபத்தான பயங்கரவாதிகள் எனச் சித்திரித்துக் காட்டும் வகையில் சில பத்திரிகைகள் செய்திகளை திரித்து மிகைப்படுத்தி வெளியிட்டதுடன் பொது மக்கள் மத்தியிலும் பொய் வதந்திகள் பரப்பப்பட்டன. மூன்றாவதாக, எனது தலைமறைவைப் பயன்படுத்தி சிறீலங்கா அரசு தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி உறுப்பினர்களைக் கொலை செய்தது விடுதலைப் புலிகள் என எம்மீது அபாண்டமான குற்றத்தைச் சுமத்தியது.

O பிரதமர் ராஜீவ் காந்தியை சந்திப்பதன் மூலம் என்ன பலனை எதிர்பார்க்கிறீர்கள்?

★ எமது பிரச்சினையை தெளிவாக எடுத்து விளக்கலாம் என நம்புகிறோம். போர் நிறுத்தம் என்ற போர்வையின் கீழ், ஜெயவர்த்தனா தமிழ் மக்களைப் படிப்படியாக கொன்று குவித்து வருகிறார் என்பதையும் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இலங்கையில் இடம் பெறுவது ஒரு இனப் படுகொலை என்பதையும் சந்தேகத்திற்கிடமின்றி விளக்குவோம். போர் நிறுத்தம் என்று சொல்லிக்கொண்டு அங்கு உண்மையில் நடைபெறும் சம்பவங்கள் என்ன என்பதை விபரமாக எடுத்துரைப்போம். இலங்கை அரசாங்கமானது இதுவரையும் உருப்படியான, அர்த்தமுள்ள சமரஸத் திட்டம் எதையும் முன்வைக்கவில்லை என்பதையும் சுட்டிக் காட்டுவோம். இதுவரையும் நாம் மூன்றாவது நபர்கள் மூலமாகவே இந்தியப் பிரதமருடன் தொடர்புகளை வைத்திருந்தோம். அவரை நேரடியாகச் சந்திப்பதன் மூலம் பல தப்பபிப்பிராயங்கள், சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளலாம்.

O பிரதமர் அனுதாபம் காட்டுவார் என நினைக்கிறீர்களா?

★ அப்படித்தான் நம்புகிறேன்.

O கடந்த மூன்று மாதங்களாக விடுதலைப் போராளிகள் சம்பந்தப்பட்ட மட்டில் இந்திய அரசின் நிலைப்பாடு கடினமாகியுள்ளது என எண்ணுகிறீர்களா?

★ ஆரம்பத்தில் நான் அப்படி நினைக்கவில்லை. ஆனால் பாலசிங்கத்தை நாடு கடத்தியதை அடுத்து இந்தியா கடுமையான போக்கை கடைப்பிடிக்கிறது என்பதை நம்ப வேண்டியிருக்கிறது.

O இந்தியாவின் நிலைப்பாட்டில் இவ்வித மாற்றம் ஏற்பட்டதன் காரணம் என்ன என்று நினைக்கிறீர்கள்?

★ இந்த மாற்றத்திற்கான காரணம் என்ன என்பது எனக்குத் தெரியாது. சில சமயங்களில் சர்வதேச நெருக்கடிகள் அல்லது அழுத்தங்கள் காரணமாக இருக்கலாம். இந்த மாற்றத்திற்கான காரணத்தை உடனடியாக எம்மால் அனுமானிக்க முடியாது. ஆனால் காலப்போக்கில் அதன் காரணங்கள் என்னவென்பது தெரிய வரும்.

O இந்திய அரசு இலங்கைக்கு சார்பான நிலைப்பாட்டை எடுத்திருக்கிறது என நினைக்கிறீர்களா?

★ இதன் அடிப்படையில் நாம் இது வரை சிந்தித்ததே இல்லை. ஆயினும் நடைபெற்ற சில சம்பவங்கள் இத்தகைய சந்தேகத்தை எமது மனதில் கிளப்பியிருக்கிறது.

O திம்புவில் இரண்டாவது கட்டப் பேச்சுக்கள் முறிந்ததை அடுத்து ராஜீவ் காந்தி உங்களை அழைத்த போது நீங்கள் ஏன் உடனடியாகப் பதிலளிக்க வில்லை

★ தமிழீழ விடுதலைப் புலிகளின் இரு பிரதிநிதிகளும் திரும்பிவிட்ட போதும் ஏனைய இயக்கங்களின் ஒவ்வொரு பிரதிநிதிகள் திம்புவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தனர். பேச்சு வார்த்தைகளை மீண்டும் ஆரம்பிக்கும் நோக்கத்தோடு ஈழத் தேசிய விடுதலை முன்னணித் தலைவர்களை டெல்லிக்கு அழைக்க இந்தியா விரும்பியது. அதேவேளை வவுனியாவிலும், திருக்கோணமலையிலும் தமிழ் மக்கள் பெருந்தொகையில் கொன்று குவிக்கப்பட்டு வந்தனர். இந்தச் சூழ்நிலையில், மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய போராளிகளாகிய நாம் சமாதானப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொள்வது என்பது கேலிக் கூத்தான விடயம் அல்லவா? சிறீலங்கா அரசாங்கம் யுத்த நிறுத்த விதிகளை ஒழுங்காகப் பேணாது பொறுப்பற்ற முறையில் செயற்படும் போது சமாதானப் பேச்சுக்கள் என்பது அர்த்தமற்றது. தமிழ் மக்கள் கொலை செய்யப்படுவதைத் தடுப்பதற்கு எந்தவித உறுதி மொழியையும் இலங்கை அரசு தரவில்லை. இந்தச் சூழ்நிலையில் பேச்சு வார்த்தைகளை நிறுத்திக்கொள்வதென நாம் தீர்மானித்தோம்.

O **தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் இரு முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்களை தமிழீழ விடுதலைப் புலிகள் கொலை செய்தார்களா? நீங்கள்தான் இதற்குப் பொறுப்பு என இந்திய உளவு ஸ்தாபனங்கள் திட்ட வட்டமாகக் கூறுகின்றனவே?**

★ இந்தக் கொலைகளுக்கு நாங்கள் பொறுப்பு அல்ல. உளவுத்துறையினரின் கூற்றுக்கு நாம் என்ன செய்ய முடியும்? நாம்தான் பொறுப்பு என சிறீலங்கா அரசு சுமத்திய குற்றச்சாட்டை நாம் உடனடியாக மறுத்துள்ளோம். ஈழத் தேசிய விடுதலை முன்னணியும் மறுத்துள்ளது. இந்திய உளவுத் துறையினர் அப்படித்தான் கூறினாலும் நாம் இதைச் செய்யவில்லை என்பதை யாழ்ப்பாணத்து மக்கள் நன்கறிவர். எவ்வித ஆதாரமுமின்றி இந்திய உளவுத் துறையினர் தப்பாக அனுமானித்திருக்கலாம். நான் தலைமறைவாகிய காரணத்தினால் அவர்கள் இந்த முடிவுக்கு வந்திருக்கலாம். நாம் அப்படி செய்திருந்தால் அதற்கான காரணங்களை எடுத்துக் காட்டி உரிமைகோரி இருப்போம். கொள்கைத் தெளிவின் அடிப்படையில்தான் நாம் எமது நடவடிக்கைகளை மேற்கொள்கிறோம். ஆகவே நாம் இந்த நடவடிக்கையை மேற்கொண்டிருந்தால் உண்மையை மறைத்திருக்க மாட்டோம். உதாரணமாக நாம் திரு. ஆலாலசுந்தரத்தைச் சுட்டபோது (அண்மையில் கொலை செய்யப்பட்ட தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் பாராளுமன்ற உறுப்பினரான திரு. ஆலாலசுந்தரம் முன்பு தமிழீழ விடுதலைப் புலிகளால் காலில் சுடப்பட்டவர்)

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



நாம்தான் அதைச் செய்ததாக உரிமை கோரினோம். நாம் அவரை கொலை செய்ய வில்லை. அது அவசியமாக இருக்கவில்லை. அவரது சமூக விரோத நடவடிக்கைகளுக் காக நாம் அவரைத் தண்டித்தோம். கூட் டுறவுச் சங்க ஊழலில் அவருக்கு பங்கிருந் தது. அவரது மோசடியை நிருபிக்கும் ஆதாரங்களை நாம் மக்கள் முன்வைத் தோம். அதே சமயம் கூட்டுறவு ஊழலை நிரூபணம் செய்யக்கூடிய ஏராளமான பத் திரங்களை அவர்கள் கூட்டுறவுச் சங்கத் துள் வைத்து தீயினால் நாசமாக்கினர். நாம் ஆனந்தராசாவை (யாழ்ப்பாணம் சென். ஜோன்ஸ் கல்லூரி அதிபர்) சுட்ட போதும் அதற்கு உரிமை கோரத்தான் செய்தோம். இந்தக் கொலைக்கு காரண மானவர்கள் பற்றிய தகவல் தருபவர் களுக்கு ஐந்து லட்சம் ரூபா சன்மானம் தருவதாக சிறீலங்கா அரசு அறிவித்தது. இந்த அறிவித்தலிலிருந்து சிங்கள அரசுக் கும், ஆனந்தராசாவுக்கும் இடையேயிருந்த உறவின் தன்மையை யாழ்ப்பாண மக்கள் புரிந்து கொண்டனர். நாம் எதற்காக அவ ரைக் கொன்றோம் என்பதை விளங்கிக் கொண்டதால் அவர்கள் மௌனமாக இருந் தனர். சிங்கள இராணுவம் எமது மக் களைக் கொன்று குவித்தும், எமது இளை ஞர்களை வேட்டையாடியும், தமிழர் சொத் துக்களை தீ மூட்டி அழித்தும், தமிழ்ப் பெண்களைக் கற்பழித்தும் வெறியாட்டம் ஆடி வரும் வேளையில் ஆனந்தராசா இராணுவத்தினருடன் கிரிக்கட் பந்தாட் டம் நடத்த ஒழுங்குகள் செய்து கொண் டிருந்தார். சிங்கள ஆயுதப் படைகளுக்கும், தமிழ்ப் பொது மக்களுக்கும் மத்தியில் நட்புறவு நிலவுகிறது எனவும், ஒருசில தீவிரவாதிகளே இனப் பிரச்சினைக்கு தூப மிடுகிறார்கள் எனவும் உலகத்திற்கு எடுத் துக் காட்டிப் பிரசாரம் செய்யவே இந் தப் பந்தாட்டப் போட்டியை சிங்கள அரசு பயன்படுத்தத் திட்டமிட்டிருந்தது. ஆகவே தான் இவரை ஒழித்துக்கட்ட நாம் முடிவு செய்தோம்.

**O தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி யின் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்களை தமிழீழ விடுதலைப் புலிகளைச் சேர்ந்த ஒருசில கிளர்ச் சிக்கார அங்கத்தினர் கொன்றிருக்க லாம் அல்லவா?**

★ நிச்சயமாக இல்லை. விடுதலைப் புலிகள் இயக்கத்தில் எனது அனு மதியின்றி எதுவுமே நடக்காது. தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணித் தலை வர்களுக்கும் இளம் தலைமுறையினருக் கும் மத்தியிலான இடைவெளி ஆபத்தான முறையில் விரிவடைந்து வருகிறது. தமிழீழப் போராட்டத்தைக் கைவிட்ட துரோகி களாகவே இளைய தலைமுறை அவர்களை நோக்குகிறது. தமிழீழத்தில் மக்கள் மத்தி யில் இவர்கள் இல்லாததால் இந்த இடை வெளி இன்னும் விரிவடைந்து செல்கிறது. தமிழீழத்தின் யதார்த்த சூழலிலிருந்து இவர்கள் முற்றாக அந்நியப்பட்டு இருக் கிறார்கள். ஆகவே தமிழ் மக்களிடமிருந்து அந்நியப்பட்டிருக்கும்வரை இளம் தலை முறையினரிடமிருந்து இதுபோன்ற கடும் நடவடிக்கைகளை இவர்கள் எதிர்நோக்க வேண்டித்தான் இருக்கும். உண்மை நிலை என்னவென்றால், தமிழீழப் போராட் டத்தை நான் கைவிடுவதாயின் எனக்கும் இதே நிலைதான் ஏற்படும்.

**O இளம் தலைமுறையினர் தமிழீழப் போராட்டத்தில் தீவிர உறுதிப்பாடு உடையவர்கள் என சொல்கிறீர்களா?**

★ தமிழீழத் தனியரசே ஒரே தீர்வாக இருக்கும் என்பதை தமிழீழத்தில் நடைபெற்ற சம்பவங்கள் காட்டு கின்றன. இனக் கொலையை இலக்காகக் கொண்ட எத்தனையோ தாக்குதல்களை எதிர்கொண்ட தமிழ் மக்கள் தாம் சமா தானமாகவும், பாதுகாப்பாகவும் வாழ வேண்டுமாயின் தமிழீழத்தைத் தவிர வேறு தீர்வு எதுவும் இருக்க முடியாது என்பதை நன்கு உணர்ந்துள்ளனர்.

O தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி யின் முன்னாள் பாராளுமன்ற உறுப் பினர்கள் கொல்லப்பட்டமைக்கு தமி ழீழ விடுதலைப் புலிகள்தான் பொறுப் பாக இருக்க வேண்டும் என்ற சந் தேகம் ராஜீவ் காந்தியின் நிலைப் பாட்டை கடுமையாக்கி விட்டது. இத னால்தான் பாலசிங்கத்தின் நாடு கடத்தல் உத்தரவை ரத்துசெய்ய அவர் தயாராக இருந்த போதும் ரத்து செய் யவில்லை?

★ இந்தக் கொலைகளுக்கும் எமக்கும் சம்பந்தமேயில்லை. தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர்களைக் கொன் றது நாம்தான் என ஊகித்து நாடு கடத் தல் உத்தரவை இந்திய அரசு ரத்து செய்ய மறுத்தால் அது தவறானதாகும். எம்மைத் தண்டிப்பதில் எவ்வித அர்த்தமு மில்லை. இந்த செயலுக்குக் காரணமாக விருந்த சக்திகளைத்தான் அவர்கள் தண் டித்திருக்க வேண்டும். அதன் மூலம்தான் மீண்டும் இவ்வித சம்பவங்கள் நடைபெறா மல் தடுக்கலாம்.

O பாலசிங்கம் நாடு கடத்தப் பட்டதால் உங்களுக்கு ஏற்பட்ட தாக்கம் என்ன?

★ நாம் இந்திய அரசாங்கத்துடன் பெருமளவு ஒத்துழைத்திருக்கி றோம். அப்படியிருந்தும் இது நடந் திருப்பதால், இது எமக்கு இழைக்கப்பட்ட அநீதியாகவே கருதினோம். இச்சம்பவம் எமக்கும். அவர்களுக்குமிடையில் ஓரளவு கசப்புணர்வைத் தோற்றுவித்திருக்கிறது.

O உங்களுக்கும், பாலசிங்கத்திற்கும் இடையிலான உறவு எப்படிப்பட்டது?

★ அவர் எமது அரசியல் ஆலோசகர். ஒரு உண்மையான தேசபக்தராகிய அவர் எமது மக்களின் தேசிய உணர்வைப் பிரதிபலிக்கிறார்.

O பாலசிங்கத்தை இந்தியா நாடு கடத் தியதன் காரணம் என்ன?

★ 'பொது மக்கள் நலன்' கருதியே அவர் நாடு கடத்தப் பட்டார் என இந்தியா கூறியிருக்கிறது. இந்தக் காரணம் கேலிக்கிடமானதாக இருக்கிறது. அவரை அனுப்பி விட்டு எம்மை இங்கு பேச்சு வார்த்தைக்காக வைத்திருப்பதில் எவ்வித அர்த்தமும் இருப்பதாகத் தெரிய வில்லை.

O பாலசிங்கம் இல்லாமல் உங்களால் இயங்க முடியாது என்ற டெல்லியின் அனுமானம்தான் அவரை நாடு கடத் தியதன் உண்மையான காரணமாக இருக்கலாம் என நீங்கள் நினைக் கிறீர்களா?

★ அவர்கள் அப்படி எண்ணுவார்களா யின் அவர்களது கணிப்பு தவறான தாகும். அவர்கள் கையாளும் பிரச் சினை தனி மனிதர்களான பாலசிங்கத்து டனோ அல்லது பிரபாகரனுடனோ சம்பந் தப்பட்டதல்ல. இது எமது மக்களின் தேசிய அபிலாசையோடு சம்பந்தப்பட்ட பிரச்சினை.

O இந்திய அரசாங்கம் இந்த நாடு கடத் தல் உத்தரவை ரத்து செய்யும் என நினைக்கிறீர்களா?

★ அப்படித்தான் நம்புகிறேன்.

O பாலசிங்கம் திருப்பி அழைக்கப்படா மல் பேச்சு வார்த்தை தொடராது என்பதில் ஈழத் தேசிய விடுதலை முன்னணி உறுதியாக இருக்கிறதா?

★ பாலசிங்கம் இல்லாத பட்சத்தில் பேச்சு வார்த்தைகள் சம்பந்தமாக நான் சில பிரச்சினைகளையும், கஷ் டங்களையும் எதிர்நோக்க வேண்டி வரும். அரசியல் அமைப்பு சம்பந்தப்பட்ட விவ காரங்களில் நிபுணத்துவம் பெற்றவர் என் பதால் பேச்சு வார்த்தைகளில் அவர் கலந்து கொள்வது அவசியமானது. நான் பிரதமரைச் சந்திக்கும் பொழுது இந்தக் காரணங்களை எடுத்து விளக்கி நாடு கடத் தல் உத்தரவை ரத்து செய்யுமாறு கோரு வேன்.

O நாடு கடத்தல் உத்தரவை ரத்து செய்வதற்கு பிரதமர் மறுத்து விட்டால் என்ன நடக்கும்?

★ அப்படியாயின் பேச்சு வார்த்தைகள் சம்பந்தப்பட்ட மட்டில் சில சிக்கல்கள் உருவாகலாம்.

O நீங்கள் பிரதம மந்திரியைச் சந்திக்கும்பொழுது தமிழீழம்தான் ஒரே தீர்வு என்ற உங்கள் இலட்சியத்தை எடுத்து விளக்குவீர்களா?

★ நிச்சயமாக. தமிழீழத் தனியரசு அமைவதே ஒரே தீர்வு என்பதையும், இந்த முடிவுக்கு எம்மைத் தள்ளிய வரலாற்று ரீதியான காரணங்களையும் எடுத்து விளக்குவோம்.

O ஆனால் பிரிவினை கோரிக்கையை தாம் ஆதரிக்கப் போவதில்லை என்று பிரதமர் ஏற்கனவே கூறியிருக்கிறார் அல்லவா?

★ நாம் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி பிரதமருக்கு எமது முடிவை எடுத்துக் கூறுவோம். இந்திய அரசு வேறொரு தீர்வை வைத்திருக்குமானால் எமக்கு அதை சமர்ப்பிக்கட்டும். ஆனால் அந்தத் தீர்வு செயற்படத்தக்க உருப்படியான திட்டமாக அமையுமா என்பதை அவர்கள் எமக்கு நிரூபித்துக் காட்ட வேண்டும்.

O இந்தப் பேச்சு வார்த்தைகளால் ஒரு நியாயமான, நீதியான தீர்வை அடையலாம் என நினைக்கிறீர்களா?

★ சிறீலங்கா அரசாங்கம் நடந்து கொள்ளும் விதத்தைப் பார்க்கப் போனால் பேச்சு வார்த்தை மூலம் இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் உண்மையான அக்கறை அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. யுத்த நிறுத்த காலத்தில் அவர்கள் பெருந்தொகையில் ஆயுதங்களை வாங்கிக் குவித்திருக்கிறார்கள். இதிலிருந்து அவர்கள் ஒரு இராணுவத் தீர்வையே விரும்புகிறார்கள் என்பது புலனாகிறது. பேச்சு வார்த்தைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுதே தமிழ் மக்களை அவர்கள் தாய் மண்ணிலிருந்து விரட்டியடித்து அகதிகளாக்கியிருக்கிறார்கள். திருக்கோணமலையில் மட்டும் இப்பொழுது 35,000 தமிழ் அகதிகள் இருக்கிறார்கள். யுத்த நிறுத்தம் பேணப்படுவதாகச் சொல்லிக் கொண்டு 600 அப்பாவித் தமிழர்களை கொன்று குவித்திருக்கிறார்கள்.

O நீங்கள் ஒரு குருவானவரின் அங்கியணிந்து மாறுவேடத்தில் மட்டக்களப்பில் காணப்பட்டதாக செய்திகள் கூறின?

★ நான் தமிழீழத்தில் இருந்தது உண்மை. ஆனால் மற்றவை எல்லாம் கட்டுக் கதைகள்.

O சிறீலங்காவில் தமிழ் மக்கள் ஒரு இனப் படு கொலைக்கு ஆளாகி வருகின்றனர் என்பதை நீங்கள் உறுதியாக நம்பும் பட்சத்தில், இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதில் இந்தியா கையாளக்கூடிய சிறந்த வழி என்ன என்று நினைக்கிறீர்கள்?

★ விடுதலைப் போராளிகளுக்கு உதவி செய்வதன் மூலம் அவர்கள் இந்த இனப் படுகொலையை தடுத்து நிறுத்தலாம். தமிழ் மக்களைப் பாதுகாக்க முயற்சிப்பவர்களுக்கு அவர்கள் உதவலாம். எமக்கு இந்தியாவின் தார்மீக ஆதரவு அவசியம்.

O சிறீலங்காவில் இந்தியா இராணுவ ரீதியில் தலையிட வேண்டும் என நினைக்கிறீர்களா?

★ நான் இந்த வாதத்தை ஆதரிக்கவில்லை. அது இந்தியாவுக்கு சர்வதேச அரங்கில் பல சிக்கல்களை உருவாக்கும்.

O இலங்கைத் தமிழர் பிரச்சினையில் ராஜீவ் காந்தியின் நிலைப்பாடு அவரது தாயாரின் கொள்கையிலிருந்து மாறுபட்டுள்ளதா?

★ அப்படிப் பெரும் வேறுபாடு இருப்ப தாக எனக்குத் தெரியவில்லை.

O ஒன்றரை வருடங்களுக்கு முன்பாக 'சண்டே' இதழுக்கு நீங்கள் அளித்த பேட்டியில் வவுனியாவிலும், திருக் கோணமலையிலும் இராணுவப் பயங் கரவாதம் தாண்டவமாடும் என திட்ட வட்டமாகக் கூறியிருந்தீர்கள். இன்று உண்மையாகிவிட்ட இந்த சம்பவங் களை அன்று எப்படி உங்களால் அனுமானிக்க முடிந்தது?

★ இப்பகுதியில் இராணுவத் தாக்கு தல்கள் நடைபெறும் என நான் ஊகிக்க முடிந்ததற்கும் காரணம் என்னவென்றால் இப்பிரதேசங்களில் சிங் களக் குடியேற்றம் தீவிரமாக நடைபெற் றுக் கொண்டிருந்தது. எமது பிரதேசங் களை ஆக்கிரமித்து தமிழ் மக்களை யாழ்ப் பாணக் குடாநாட்டுக்குள் தள்ளிவிடும் திட் டம் ஒன்று படிப்படியாக நிறைவேற்றப் பட்டு வந்தது. அவர்களது சூத்திரகாரத் திட்டம் என்ன என்பதை நாம் முன்கூட் டியே அறிந்ததால் இத்திட்டத்தை முறி யடிக்கும் நோக்குடன் நாம் வவுனியா விலும், திருக்கோணமலையிலும் தளங் களை அமைத்தோம். நேற்றுத்தான் (செப் டம்பா 15) நாம் திருக்கோணமலையில் ஒரு ஹெலிகப்டரைச் சுட்டு வீழ்த்தி னோம். எமது எல்லைகளைப் பாதுகாப் பது அத்தியாவசியமானது. அல்லாவிடின் எல்லைகள் எமது வாசல்வரை வந்துவிடும். எமது தளங்கள் காரணமாகத்தான் ஜெய வர்த்தனா எமது எல்லைகளை உட்புறமா கத்தள்ள முடியாது திண்டாடுகிறார். எதிர் காலத்திலும் அவரால் அப்படிச் செய்ய முடியாது.

O அண்மிய வருங்காலத்தில் என்ன நடக் கலாம் என நினைக்கிறீர்கள்?

★ தமிழீழத்திற்கான போராட்டம் வளர்ந்து நாளுக்கு நாள் உக்கிரம் அடைந்து வருகிறது. தமிழீழத் தனி யரசு அமைவது திண்ணம். இந்த வர லாற்று நிகழ்ச்சியை எந்தவொரு சக்தியா லும், அது எத்தனை வலிமை வாய்ந்த தாக இருந்தாலும், தடுத்து நிறுத்தவே முடியாது. இதற்கு மாறாக ஏதாவது நிகழு மானால் அது தமிழ் மக்கள் இப்போராட் டத்தில் அழிவதாகத்தான் இருக்கும். நாம் எல்லோரும் அழிந்து தமிழினமே இத்தீவி லிருந்து முற்றாக சங்காரம் செய்யப்பட லாம்.

O விடுதலைப் போராளிகள் பெரிய அள வில் தாக்குதலை நடத்த திட்டமிடு கிறார்கள் என சிறீலங்கா அரசு கூறு கிறது. இது உண்மையா?

★ நாம் அப்படி ஒரு முடிவும் எடுக்க வில்லை. நாம் ஒருபொழுதும் பொய் வதந்திகளையும் மிகைப் படுத்தப் பட்ட செய்திகளையும் வெளியிடுவ தில்லை.

O தமிழீழ விடுதலைப் புலிகள் தமிழ்ப் பொது மக்களை விரைவில் ஆயுத பாணியாக்குவார்கள் எனப் பாலசிங் கம் கூறியிருக்கிறாரே?

★ அவர் எதிர்காலத்தைப் பற்றி கூறி யிருக்கிறார். எதிர்காலத்தில் அப்படி நடக்கும்.

O சிறீலங்கா அரசு தமிழ் மக்கள் மீது பிரமாண்டமான தாக்குதலை நடத் தும் என எதிர்பார்க்கிறீர்களா?

★ ஆம். அப்படித்தான் எதிர்பார்க்கி றோம். பெய்ரூட்டில் நடந்ததைவிட மிகப் பெரிய அளவிலாக இது இடம் பெறலாம். 1983 ஜூலையில் நிகழ்ந்த கல வரத்தைவிட திருக்கோணமலையிலும், வவுனியாவிலும் நடந்த சம்பவங்கள் மிக வும் மோசமானவை. இது போன்ற சம்ப வங்கள் மிகவும் கொடூரமான முறையில் மீண்டும் நடைபெறலாம். எம்மை ஒரே யடியாக ஒழித்துக் கட்டுவதற்கு இலங்கை அரசாங்கம் கங்கணம் கட்டி நிற்கிறது என்பதற்கு தமிழ்ப் பொது மக்கள் மீது நடத்தப்பட்ட விமானத் தாக்குதல் ஆரம்ப அறிகுறியாகும்.

O தமிழ்ப் பகுதிகள் மீது குண்டுகள் பொழியப்படும் போது உங்கள் உறுதிப் பாட்டால் என்ன செய்ய முடியும்?

★ குண்டுகளும் அணுவாயுதங்களும் ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்று குவிக்கக் கூடியவை. ஆனால் இந்த ஆயுதங்கள் யாருடைய கையில் இருக்கிறது என்பதுதான் முக்கியம். இந்த ஆயுதங்கள் தற்சமயம் சிறீலங்கா அரசாங்கத்திடம் இருக்கிறது. இவற்றை அவர்களிடமிருந்து கைப்பற்றுவது கடினமான காரியமில்லை. எம்மிடமிருக்கும் ஆயுதங்களில் பெரும்பாலானவை சிங்கள ஆயுதப் படைகளிடமிருந்து கைப்பற்றப்பட்டவைதானே.

O யுத்த நிறுத்தத்தை நீடிப்பதற்கு நீங்கள் இணங்குவீர்களா?

★ நாம் ஒரு யுத்தத்தை நடத்திக் கொண்டிருக்கவில்லை. எமது மக்களை இன அழிவிலிருந்து காப்பாற்ற ஒரு தற்காப்புப் போராட்டத்தையே நடத்தி வருகிறோம். இனப் படுகொலையை இலக்காகக் கொண்ட தாக்குதல்கள் நிறுத்தப்படுமாயின் எமது கெரில்லாப் போர் நடவடிக்கைகளையும் நிறுத்திக் கொள்ள நாம் தயாராக இருக்கிறோம். யுத்த நிறுத்த மீறல்களை தடுக்கும் முகமாக அதைக் கண்காணிப்பதற்கு ஒரு வெளி ஸ்தாபனம் இல்லாத பட்சத்தில் யுத்த நிறுத்தத்தை நீடிப்பதற்கு நாம் இணங்குவது சிரமமானதே. யுத்த நிறுத்தத்தை நீடிப்பதாயின் சிறீலங்காவும், மத்தியஸ்தராகச் செயற்படும் இந்தியாவும், யுத்த நிறுத்தம் மீறப்படாது என எமக்கு உத்தரவாதம் அளிக்க வேண்டும். யுத்த நிறுத்தத்தைக் கண்காணிக்கவும், அரசியல் கைதிகளின் நிலைமையைக் கண்டறியவும் சர்வதேச செஞ்சிலுவைச் சங்கம் போன்ற அரசாங்க சார்பற்ற ஸ்தாபனங்கள் அனுமதிக்கப்பட வேண்டும்.

O சிறீலங்கா இராணுவம் கட்டுப்பாட்டை மீறி இயங்குகிறது என நினைக்கிறீர்களா?

★ நான் அப்படி நினைக்கவேயில்லை. இந்தத் தாக்குதல்களை எல்லாம் திட்டமிட்டு நடத்தும் சூத்திரதாரி ஜெயவர்த்தனாதான். அவர் இரட்டை வேடம் போடுகிறார். ஒருபுறம், தமிழ் மக்கள் மீது பயங்கரவாதத்தை கட்டவிழ்த்து விடுமாறு இராணுவத்துக்கு உத்தரவு பிறப்பித்து விட்டு, மறுபுறம் இராணுவத்தினர் கட்டுப்பாட்டை மீறி நடக்கிறார்கள் எனக் கூறி தப்பித்துக்கொள்ள முனைகிறார். இராணுவத்தில் கிளர்ச்சிக்காரர்கள் இருப்பார்களாயின் இதுவரையில் ஒரு சதி நடந்து ஜெயவர்த்தனா பதவியிலிருந்து தூக்கியெறியப்பட்டிருப்பார்.

O ஒரு அரசியல் தீர்வு ஏற்பட வேண்டும் என்பதில் ஜெயவர்த்தனாவுக்கு உண்மையான அக்கறை இருக்கிறதா? அவரது இடத்தில் வேறொரு தலைவர் இருந்தால் பேச்சுக்கள் மூலம் தீர்வு ஏற்படும் சாத்தியம் அதிகரிக்குமா?

★ சிங்களத் தலைமைப் பீடத்தில் மாற்றம் ஏற்பட்டாற் போல இந்தப் பிரச்சினைக்கு தீர்வு ஏற்படுமென நாம் நினைக்கவில்லை. மாறிமாறிப் பதவிக்கு வந்த சிங்கள அரசாங்கங்கள் எம்மை ஏமாற்றித் துரோகமிழைத்தமையை எமது வரலாறு தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

O தமிழீழ இலட்சியத்திற்காக நீண்டகால அடிப்படையில் இரத்தம் சிந்தவும், வன்முறையை எதிர்கொள்ளவும் தயாராக இருக்கிறீர்களா?

★ நிச்சயமாக. உலகத்தில் எந்த ஒரு நாடும் இரத்தம் சிந்தாமலும், தியாகங்கள் புரியாமலும் சுதந்திரம் பெற்றதில்லை. தமிழராகிய நாம் எமது விடுதலைக்காக உயிரை அர்ப்பணிக்கவும் தயாராக இருக்கிறோம்.

O ஆனால், தென் ஆபிரிக்கா போன்று சுதந்திரப் போராட்டமானது மிக நீண்ட காலத்திற்கு எவ்வித முடிவுமின்றி இழுபட்டுச் செல்லக்கூடும் அல்லவா?

★ ஒரு விடுதலைப் போராட்டத்திற்கு எவ்வித கால வரம்பையும் நிர்ண யிக்க முடியாது. இறுதி இலட்சி யத்தை அடையும் வரை போராட்டம் தொடர்ந்து நடைபெறும். இது ஒரு மக் கள் யுத்தம். ஆகவே, ஒரு சில கெரில்லாப் போராளிகள் இறந்து போவதால் விடுத லைப் போராட்டம் ஒரு முடிவுக்கு வருவ தில்லை. மக்களின் உறுதிப்பாடு, சர்வதேச ஆதரவு மற்றும் சூழ்நிலைதான் ஒரு விடு தலைப் போராட்டத்தின் வெற்றிக்கு வழி வகுக்கின்றன. எமது வாழ்நாளிலேயே தமிழீ ழத்தை அடையலாம் என்ற நம்பிக்கை யில் நாம் போராடுகிறோம். எமது விடு தலைப் போராட்டத்தின் பழுவை அடுத்த பரம்பரை மீது சுமத்த நாம் விரும்பவில்லை. எமது கடின உழைப்பின் பயனை அவர்கள் அனுபவிக்க வேண்டும். எமது வாழ்நாளில் எமது இலட்சியம் நிறைவேறாது போக லாம். அப்படியாயின் அடுத்த தலைமுறைக் குப் போராட்டத்தைக் கையளிக்கும் தெளிந்த பார்வை எமக்குண்டு.

O அடுத்தகட்ட சமாதானப் பேச்சுக்களில் நீங்கள் பங்கு பற்றுவீர்களா?

★ அது சிறீலங்கா அனுப்பும் தூதுக் குழுவின் தகைமையைப் பொறுத் திருக்கிறது.

O விடுதலைப் போராளிகள் மீது இந்தியா ஒரு தீர்வைத் திணிக்கும் என நினைக் கிறீர்களா?

★ நான் அப்படி நினைக்கவில்லை. அப் படி ஒரு தீர்வை திணிக்க முயல் வதில் அர்த்தமில்லை. ஏனென் றால் எமது மக்களின் நியாயபூர்வமான அரசியல் அபிலாசைகளைபூர்த்தி செய்யாத எந்தவொரு தீர்வையும் நாம் ஏற்றுக்கொள் ளப் போவதில்லை.

O சமாதானப் பேச்சுக்கள் என்ற போர் வையில் காலத்தைக் கடத்தி இராணு வத்தைப் பலப்படுத்துவதுதான் ஜெய வர்த்தனாவின் சூழ்ச்சியாக இருக் கலாம் என நினைக்கிறீர்களா?

★ ஆம். அப்படித்தான் நினைக்கிறேன். அதேவேளை காலம் எமக்குப் பயன ளிக்கும்.

O மக்களால் போற்றப்படும் ஒரு வீர புருஷனான நீங்கள் தமிழ்ப்பகுதிகளில் பிரபல்யமடைந்துள்ளீர்கள். உங்கள் வாழ்நாளிலேயே நீங்கள் ஒரு வர லாற்று நாயகனாக உருவாகி வரு வதன் காரணம் என்ன?

★ இதற்கு மக்கள்தான் பதில் சொல்ல வேண்டும். அடிப்படையில், இவ்வித மான உணர்ச்சிப் பாங்கினை நான் வெறுக்கிறேன். ஏனென்றால் இது ஒருவ னின் அகந்தையை தட்டிக் கொடுக்கிறது. ஒரு விடுதலைப் போராளியானவன் தனது சுயத்தின் வரம்புகளுக்கு அப்பால் மேலோங்கி தன்னை முழுமையாகப் போராட்டத்திற்கு அர்ப்பணிக்க வேண்டும். நான் எமது மக்களின் சுதந்திர வேட்கை கையைப் பிரதிபலிக்கும் ஒரு வடிவம்தான்.

O சில சூழ்நிலைகள் காரணமாக தமிழ் விடுதலைப் போராளிகளுக்கும், இந்திய அரசாங்கத்திற்கும் மத்தியிலான உற வுகள் வெகுவாகப் பாதிக்கப்பட்டு இந் தியா தனது ஆதரவை வாபஸ் பெற் றுக்கொள்கிறது என வைத்துக் கொள்வோம். அப்படியாயின் தனித்து நின்று போராட்டத்தை முன்னெடுத் துச் செல்லும் நிலையில் இருக்கிறீர் களா?

★ எமக்கு வேறெதாவது மாற்று வழி யுண்டா? எமது இலட்சியத்தை அடையும்வரை நாம் போராடித்தான் ஆகவேண்டும். இந்தியாவின் அனுதாபம் எமக்குத் தார்மீக பலத்தைக் கொடுக்கிறது. ஆனால் இந்தியா தனது ஆதரவை நிறுத் திக் கொள்ளுமாயின் அதனால் எமது விடு தலைப் போராட்டம் நின்றுவிடப் போவ தில்லை. இந்தியாவின் ஆதரவுடனோ அல் லது வேறெந்த வெளிநாட்டு சக்திகளின் உதவியுடனோ நாம் எமது போராட் டத்தை ஆரம்பிக்கவில்லை நாம் சாகும் வரை போராடியே தீருவோம். நான் இறந்துபோக நேருமாயின் இன்னுமொரு வர் எமது போராட்டத்தை முன்னெடுத் துச் செல்லுவார். மாவீரன் சுபாஸ் சந்திர போஸ் குறிப்பிட்டது போல, ''எந்த ஒரு விடுதலைப் போராளியும் தான் தனியாக நின்று சுதந்திரத்தைப் பெற்றுத் தரமுடி யும் என தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளக்கூடாது.'' எனது தலைமுறை சுதந்திரத்தை அடைய முடியாது அழிந்து போனால் அடுத்த பரம்பரை போராட் டத்தை தொடர்ந்து முன்னெடுத்துச் செல் லும். □

# எதிரியைவிட துரோகிகளே மிகவும் ஆபத்தானவர்கள்

குறிப்பு:

தமிழீழ மக்களின் தன்னாட்சி உரிமைப் போராட்டத்திற்கு விரோதமான முறையில் எதிரியோடு இணைந்து செயற்படும் இனத் துரோகிகள் மீது மக்கள் விழிப்பாக இருக்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி, 1985-ம் ஆண்டு டிசம்பர் மாதம் தலைவர் வெளியிட்ட அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

''நாம் எமது விடுதலைப் பயணத்தை ஆரம்பித்து முப்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது. விபரிக்கமுடியாத துன்பங்களும் வியக்கத்தக்க தியாகங்களும் நிறைந்த ஒரு மகத்தான வீர காவியமாக எமது விடுதலை வரலாறு நீண்டுசெல்கிறது. இரத்தத்தால் எழுதப்படும் எமது இனத்தின் விடுதலை வரலாறு மனித குலத்தின் விடுதலை எழுச்சிக்கு ஒரு உன்னத எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

உலகில் எங்குமே நிகழாத கொடுமைகள் எம்மீது கட்டவிழ்த்துவிடப்பட்டன. மனித நாகரீகமே வெட்கித் தலைகுனியுமளவிற்கு எதிரி எம்மீது மிருகத்தனமாக நடந்துகொண்டான். எமது பழைய தலைமையின் துரோகத்தனம் காரணமாக, நம்பி, நம்பி ஏமாந்த வெகுளித்தனம் காரணமாக, நாம் என்றுமில்லாதபடி பாரிய அழிவுகளை சந்திக்கவேண்டியிருந்தது. தமிழின ஒழிப்பையே இலட்சியமாகக்கொண்டு செயல்படும் ஈவிரக்கமற்ற எதிரியுடன் கொஞ்சிக் குலாவி, சலுகைகள் கேட்டு, சமரஸ ஒப்பந்தங்கள் செய்து, சப்பாணிப் போராட்டம் நடத்தி, தமிழினத்தைப் பெரிய அழிவுப் பாதையில் இட்டுச்சென்ற பெருமை எமது காந்தியவாத தலைவர்களையே சாரும்.

குட்டக் குட்டத் தலைகுனிந்து, அடிமைகளாக, அவமானத்துடன் வாழ்ந்த தமிழனை, தலைநிமிர்த்தி, தன்மானத்துடன் வாழவைத்த பெருமை எமது விடுதலை இயக்கத்தையே சாரும். உண்மையில் எமது வீர சுதந்திரப் போராட்டம் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தோற்றத்திலிருந்தே ஆரம்பமாகிறது என்பதை எவரும் மறுக்க முடியாது. கடந்த பத்து ஆண்டுகால ஆயுதப் போராட்ட வரலாற்றில் எமது இயக்கம் ஒப்பற்ற சாதனைகளை நிலைநாட்டியது. எத்தனையோ இடையூறுகள் மத்தி

யில், எத்தனையோ கஷ்டங்கள் மத்தியில், எத்தனையோ சோதனைகள் மத்தியில், சலிப்படையாது, நம்பிக்கை தளராது, இரும்பையொத்த உறுதியுடன் தொடர்ச்சியான, தீர்க்கமாக ஆயுதப் புரட்சிப் போராட்டத்தை நாம் முன்னெடுத்துவருகிறோம். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற ஒழுக்க விதிகளில் நெறிப்படுத்தப்பட்டு, அஞ்சாநெஞ்சம் படைத்த இலட்சிய வீரர்களை உருவாக்கிய எமது விடுதலை இயக்கம் இன்று முழு உலகமுமே வியக்கத்தக்க முறையில் சிங்கள அரச பயங்கரவாதிகளையும் அவர்களுக்கு முண்டு கொடுத்துவரும் சர்வதேச நாசகார சக்திகளையும் தனித்துநின்று சமர்புரிந்து விரட்டியடித்துவருகிறது. விடுதலைப் புலிகளின் வியப்பூட்டும் இராணுவ சாதனைகள் காரணமாகவே இன்று எமது விடுதலைப் போராட்டம் உலக அரங்கில் மிகப் பிரசித்திபெற்றதாக விளங்குகிறது. சமாதானப் பேச்சு என்றும், சமரஸத்திட்டம் என்றும், போர்நிறுத்தம் என்றும் சிங்கள அரசு இன்று வெள்ளைக் கொடி காட்டுவதும் எமது போராட்ட சாதனைகளின் விளைவாகத்தான். இந்தப் பத்தாண்டு கால விடுதலை யுத்தத்தில் எமது விடுதலை வீரர்கள் நெஞ்சத்தைப் பிளக்கும் தியாகங்களைப் புரிந்தனர். மக்களின் விடுதலை என்ற ஒரே இலட்சியத்திற்காக, மக்களை இன அழிவிலிருந்து காப்பாற்றவேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக, மக்கள் சுபீட்சமாக, நிம்மதியாக வாழவேண்டும் என்ற ஒரே குறிக்கோளுக்காக இளம் புலி வீரர்கள் களத்தில் தமது உயிரை அர்ப்பணம் செய்துவருகின்றனர்.

இன்று வடக்கில் பல பகுதிகள் விடுதலைப் பிரதேசங்களாக எமது கட்டுப்பாட்டில் எமது நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரப்பட்டுள்ளன. தமிழ் மக்களை நரவேட்டை ஆடிவந்த சிங்கள இராணுவம் முகாம்களுக்குள் முடங்கிக்கிடக்கின்றது. மக்களின் ஒரே பாதுகாப்பு அரணாக இன்று எமது இயக்கம் தமிழீழம் எங்கும் தன்னை நிலைப்படுத்தி, பலப்படுத்தி வருகிறது.

தமிழீழத் தனியரசு என்ற எமது இலட்சிய நட்சத்திரம் அடிவானத்தில் பிரகாசிக்கத்தொடங்கியிருக்கிறது. நீண்ட, கடினமான விடுதலைப் பயணத்தின் பயனாக நாம் சுதந்திர மலையின் சிகரத்தை அண்மித்துக்கொண்டிருக்கிறோம். எமது விடுதலைப் போராட்ட வரலாற்றின் இந்த முக்கியமான கால கட்டத்தில், எமது வெற்றிகளை நாம் நிலைப்படுத்தி விடிவை நோக்கி விரைந்து செல்லவேண்டிய இந்த நேரத்தில், எமது போராட்டத்தை முறியடிக்கவும், எமது விடுதலை இயக்கத்தை அழித்துவிடவும், எமது எதிரி ஒருபுறமும், மற்றும் தீய சக்திகள் மறுபுறமுமாக சூழ்ச்சிகர நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட்டு வருகின்றன. எண்ணற்ற தியாகங்கள் புரிந்து, எத்தனையோ உயிர்ப்பலி கொடுத்து, இத்தனை ஆண்டுகளாக கண்ணீரும் வியர்வையுமாக நாம் கட்டி எழுப்பிய எமது வீர சுதந்திரப் போராட்டம், இந்த சதிகார சக்திகளினால் இன்று ஒரு ஆபத்தான சூழ்நிலையை எதிர்கொண்டு நிற்கிறது. இந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் நாம் விழிப்புடன் செயற்படத்தவறினால் இத்தனை ஆண்டு காலமாக நாம் செய்த தியாகங்கள், நாம் புரிந்த சாதனைகள், நாம் அடைந்த வெற்றிகள், நாம் அனுபவித்த துன்ப துயரங்கள், நாம் கொடுத்த உயிரிழப்புகள், பொருளிழப்புகள், எல்லாமே அர்த்தமற்றவையாய் போய்விடுவதுடன் நாம் மீண்டும் அடிமை வாழ்வில் தள்ளப்பட நேரிடும்.

எமது எதிரிபற்றி நாம் நன்கறிவோம். அவனது நோக்கம் என்ன என்பது எமக்குத் தெளிவாகத் தெரியும். நீண்டகால கசப்பான வரலாற்று அனுபவம் எமக்குப் பல உண்மைகளை உணர்த்தியிருக்கிறது. சமாதானப் பேச்சு என்றும், சமரஸத் திட்டம் என்றும், மாகாண சபை என்றும், மாநில சுயாட்சி என்றும், எமது எதிரி நாடகமாடுவது எமது விடிவுக்கு வழிகோல அல்ல, எமது அழிவுக்கு வழிகோலவே. சிங்கள அரசபயங்கரவாதிகள் தமிழ் மக்கள் மீது எத்தனை அன்பும், அக்கறையும் கொண்டிருக்கிறார்கள் என்பது எமது மக்களாகிய உங்களுக்குத் தெரியாதது அல்ல. தேசிய விடுதலைப் போராட்டத்தை திசை திருப்பி விடுதலைப் போராளிகளை நிரா

யுதபாணிகளாக்கும் சூழ்ச்சிகர நோக்கு டனே இந்த சமாதானப் பேச்சு என்ற பொறிக்கிடங்கு கிண்டப்படுகிறது. எதிரி யின் சூத்திரதார நோக்கம் எமக்குத் தெரியு மாதலால் இந்தப் பொறிக்குள் நாம் ஒரு பொழுதும் சிக்குப்படப்போவதில்லை. ஆனால் இந்தப் பொறிக்குள் எம்மை விழுத்திவிட எமது எதிரியோடு கை கோர்த்து நின்று சமரஸம்பேசும் இனத் துரோகக் கும்பல்பற்றியே நாம் விழிப்பாக இருக்கவேண்டும். இவர்கள் விடுதலையின் விரோதிகள்.

எமது எதிரியைவிட துரோகிகளே ஆபத்தானவர்கள். எமது எதிரியையும் அவனது நோக்கத்தையும் நாம் இனம் கண்டுகொள்வது சுலபம். ஆனால் எமது துரோகிகள் முகமுடி அணிந்து நடமாடு கிறார்கள். எதிரியின் கைப்பொம்மைகளாக செயற்படுகிறார்கள். தமது சுயநலத்திற் காகவும், வர்க்க அபிலாசைகளுக்காகவும் சொந்த இனத்தையே காட்டிக்கொடுக்கத் தயங்காத இந்த ஆபத்தான பிற்போக்கு சக்திகள்மீது எமது மக்கள் மிகவும் விழிப் பாக இருக்கவேண்டும்.

தமிழீழ விடுதலைப் போராட்டத்தை முன்னெடுக்கும் மாபெரும் விடுதலை சக்தி யாக எமது இயக்கம் வளர்ச்சி கண்டிருக் கிறது. ஆயுதப் போராட்ட களத்திலும் எமது விடுதலை வீரர்களே முன்னணிப் படையாக விளங்குகின்றனர். அரசியல் இலட் சியத்திலும் எமது இயக்கமே தெளிவுடனும் உறுதியுடனும் செயற்படுகிறது. வெகுசன அரங்கிலும் மிகப் பிரபல்யம் பெற்று மக் களின் நல்லாதரவு பெற்றிருப்பதும் எமது விடுதலை இயக்கமே. எமது இயக்கத்தின் இந்த மகத்தான வளர்ச்சிகண்டு பொறாமை யும் எரிச்சலும்கொண்ட சில தீய சக்திகள் எமது இயக்கத்திற்கு மாசு கற்பிக்கும் வகையில் மிகவும் கீழ்த்தரமான, விசமத்தன மான நடவடிக்கைகளில் ஈடுபட்டுவருகின் றன. மக்களிடமிருந்து எம்மை அந்நியமாக் கும் நோக்குடன் எமக்கு எதிராக மிகவும் அபாண்டமான பொய்ப் பிரச்சாரத்தை இவர்கள் மேற்கொண்டுவருகிறார்கள். மக் களின் விடுதலை என்ற இலட்சியத்திற்காக இவர்கள் இயங்கவில்லை. எமது விடுதலை இயக்கத்தை அழித்துவிடும் ஒரே நோக்கத் திற்காகவே இந்த சக்திகள் செயற்படுகின் றன. இவர்களின் சூத்திரதார நடவடிக்கை களிலும், பொய்ப் பிரச்சாரங்களிலும் ஏமாந்து போகாது விழிப்புடன் இருக்க வேண்டுமென மக்களை நாம் கேட்டுக் கொள்கிறோம்.

ஒடுக்கப்படும் மக்கள் சமூகம் விழிப் படைந்து, புரட்சிகரப் பிரக்ஞைபெற்று, தேசியப் போராட்டத்தில் முழுமையாகப் பங்குகொள்ளும்பொழுதே விடுதலை சாத் தியமாகிறது. மக்கள் மத்தியில் விரக்தியும் சோர்வும், குழப்பமும், நம்பிக்கையின்மை யும் தோன்றும்பொழுது ஒரு தேசத்தின் போராட்டசக்தி வலுவிழக்கிறது. இந்த அரசியல் உண்மையை விடுதலைக்கு விரோதமான சக்திகள் நன்கறிவர். ஆகவே தான் மக்களின் நம்பிக்கையைத் தளர்த்தி, விடுதலைப் பற்றை மழுங்கடித்து, உறுதிப் பாட்டை உடைத்து, உண்மையான விடு தலை இயக்கத்திலிருந்து மக்களை அந் நியப்படுத்த இந்த சதிகார சக்திகள் செயற்படுகின்றன.

எமது அன்பார்ந்த பொதுமக்களே!

இன்று எமது விடுதலைப் போராட் டம் கூர்மையடைந்து முழு முனைப்புடன் முன்னேற்றம் கண்டுவருகிறது. இந்த இக் கட்டான காலகட்டத்தில் நாம் பல முனை களில் பல்வேறு சதிகார சக்திகளை சந்திக்க வேண்டியிருக்கிறது. எமது பிரதான எதிரி யான சிங்கள இனவாத அரசு உலகத்தை ஏமாற்றும் நோக்குடன் ஒரு புறம் சமாதானக் கொடியை உயர்த்திக் கொண்டு மறுபுறம் பெரியதொரு இன ஒழிப்பு யுத்தத்திற்கு தன்னைத் தயார் செய்து வருகிறது.

சிங்களப் பேரினவாத அரசின் ஆட்சி யமைப்பின் கீழ் நாம் பாதுகாப்பாக, நிம் மதியாக, சுதந்திரப் பிரஜைகளாக வாழ முடியும் என நினைப்பது முட்டாள்தன மானது; தற்கொலைக்கு ஒப்பானது. சிங் கள அரச பயங்கரவாதிகள் எமது இனத்தை பூண்டோடு அழிப்பதையே நோக்காக்

கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் மிகவும் கசப்பான கோரமான அனுபவங்கள் மூலம் உணர்ந்திருக்கிறோம். தனியாகப் பிரிந்து தனியரசு அமைப்பதே எமது பிரச்சினைக்கு இறுதியான, ஒரே தீர்வு என்பதில் நாம் மனம் தளராது உறுதியாக இருக்க வேண்டும். நாம் தன்மானத்துடன், சுதந்திரமாக, நிம்மதியாக வாழ்ந்து, எமது சமூக, பொருளாதார வாழ்வை மேம்படுத்துவதாயின் எமக்கு தமிழீழத் தனியரசை அமைப்பதைத் தவிர வேறுவழியில்லை. இந்த அரசியல் இலட்சியத்தை நாம் அடைவதாயின் ஒரு புரட்சிகர விடுதலை இயக்கத்தை பலம் பொருந்தியதாக கட்டிவளர்க்க வேண்டும். அந்த இயக்கம் முன்னெடுக்கும் விடுதலைப் போராட்டத்தில் மக்கள் வெறும் பார்வையாளர்களாக இராது, நேரடிப் பங்காளிகளாக மாறவேண்டும். அந்த உண்மையான விடுதலை இயக்கத்தை அழிக்க முற்படும் சதிகார சக்திகளை மக்கள் இனம் கண்டு ஒதுக்கவேண்டும். நாம் விடிவை நோக்கி விரைவதானால், விடுதலைப் பாதையில் வீறுநடை போடுவதானால், நாம் விழிப்பாக செயல்படவேண்டும். விடுதலையை வேண்டி நிற்கும் ஒரு தேசிய சமுதாயத்தின் உறுதிப்பாட்டை எந்தவொரு சக்தியாலும் அழித்துவிடமுடியாது.

உலகில் எந்த ஒரு தேசிய சமுதாயமும் இரத்தம் சிந்தாமல், வியர்வை சிந்தாமல், அளப்பரிய தியாகங்கள் செய்யாமல், பேரழிவுகளைச் சந்திக்காமல் சுதந்திரம் பெற்றது கிடையாது. சுதந்திரப் பாதை கரடுமுரடானது, கஷ்டங்கள் நிறைந்தது. இத்தனை வருடங்களாக எத்னையோ உயிர்களைப் பலிகொடுத்து, எண்ணற்ற துன்பங்களைச் சுமந்து, இரத்தம் சிந்தி, வியர்வை சிந்தி, ஒப்பற்ற தியாகங்கள்புரிந்து முன்னெடுத்துவரும் எமது சுதந்திரப் போராட்டத்தை எந்த வகையிலும் தளர்த்தாது, தொடர்ந்து பலப்படுத்துவதே தேசாபிமானமுள்ள ஒவ்வொரு தமிழனதும் தலையாய கடமையாகும்.

□□□

# விடுதலைப் புலிகள் இயக்கம் உருவாக்கம் பெற்றது ஏன்?



குறிப்பு:

பம்பாயிலிருந்து வெளிவரும் பிரபல ஆங்கில மாதச் சஞ்சிகையான 'ஜென்டில்மன்', "**பாயும் புலி**" என்ற தலைப்பில் தலைவரின் பேட்டியை முக்கியம் கொடுத்து பிரசுரித்தது. 1986 ஆம் ஆண்டு, மார்ச் மாத இதழில் பிரசுரமாகிய இப்பேட்டியை தமிழில் மொழிபெயர்த்து இங்கு தருகிறோம். தமிழீழ மக்களின் தேசிய இனப்பிரச்சினையின் வரலாற்றுப் பின்னணி, விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தோற்றம், வளர்ச்சி மற்றும் பல முக்கிய விடயங்கள் பற்றிய தலைவரின் கருத்துக்களை இப்பேட்டி தாங்கி வருகிறது.

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.

கேள்வி:

**உங்களை ஆயுதம் ஏந்த நிர்ப்பந்தித்த காரணங்கள் என்ன?**

பதில்:

தமிழ் மக்களின் அவலநிலைதான் என்னை ஆயுதமேந்த நிர்ப்பந்தித் தது. அப்பாவித் தமிழ் மக்கள்மீது கட்ட விழ்த்து விடப்பட்ட அநீதியான, மனிதா பிமானமற்ற கொடுமைகள் என்னிடம் ஒரு கொதிப்புணர்வை ஏற்படுத்தியது. ஈவிரக்க மற்ற முறையில் எமது மக்கள் படுகொலை செய்யப்பட்டமையும், அவர்களது சொத் துடமைகள் அநியாயமாக அழிக்கப்பட்ட மையும் எனக்கு ஒரு உண்மையைப் புலப் படுத்தியது. அதாவது, எமது மக்கள் திட்ட மிடப்பட்ட ஒரு இனப்படுகொலைக்கு ஆளாகிவருகிறார்கள் என்பதை நான் உணர்ந்துகொண்டேன். தமிழினத்தை வேரோடு ஒழித்துக்கட்ட திட்டமிட்டுச் செயற்பட்ட பாசிச சர்வாதிகார அரசிட மிருந்து எமது மக்களைக் காப்பாற்றி அவர் களது விடுதலையை வென்றெடுக்கவேண்டு மென்றால் புரட்சிகர ஆயுதப் போராட் டம் தான் ஒரே வழி என்பதை நான் உணர்ந்தேன்.

கேள்வி:

**உங்களது மக்களின் குறைபாடுகளை, அபிலாசைகளை, பாராளுமன்ற சன நாயகம் மூலமாகவும், சுதந்திர பத் திரிகை உலகம் வாயிலாகவும் வெளிப் பாடு காண நீங்கள் முயற்சித்திருக் கலாம் அல்லவா?**

பதில்:

முப்பது ஆண்டு காலத்திற்கு மேலாக, தமிழ் மக்கள் தமது குறை பாடுகளை பாராளுமன்றம் மூலமாக வெளி யிட்டு வந்திருக்கிறார்கள். பாலைவனத்தில் எழுந்த அவல ஓலம் போன்று பாராளுமன்றத்தில் அவர்கள் எழுப்பிய குரலை யாருமே செவிமடுக்கவில்லை. மக் களின் அபிலாசைகள், குறைபாடுகள் தீர்வு காணும் ஒரு அரசியல் அரங்காக சிறீலங்கா வின் பாராளுமன்ற சனநாயகம் செயல்பட வில்லை. சிறீலங்காவில் பாராளுமன்ற சன நாயகம் என்பதே இல்லை. பெரும்பான்மை இனத்தின் சர்வாதிகார கொடுங்கோன்மை ஆட்சிமுறையே பாராளுமன்றம் என்ற பெயரில் அங்கு செயல்பட்டுவருகிறது. இறுதியாக, இந்தப் பாராளுமன்றத்திலி ருந்து தமிழ்ப் பிரதிநிதிகளும் விரட்டியடிக் கப்பட்டிருக்கிறார்கள். சிறீலங்காவில் பத் திரிகைச் சுதந்திரமும் இல்லை. அரசின் கட்டுப்பாட்டிலேயே பத்திரிகைகள் இயங்கு கின்றன. அந்தப் பத்திரிகைகளிலும் இனத் துவேசம் கொண்டவர்களே ஆசிரியர்களாகச் செயல்படுகிறார்கள். இந்தச் சூழ்நிலையில், தமிழ் மக்கள் தமது அபிலாசைகளுக்கு சனநாயக வழிமுறையில் வெளிப்பாடுகாண முடியாது.

கேள்வி:

**சிங்கள மக்களின் நல்லாதரவைப்பெற நீங்கள் முயற்சி செய்கின்றீர்களா?**

பதில்:

சிங்கள மக்களின் ஆதரவைப்பெற நாம் எம்மாலான முயற்சிகளைச் செய்து வருகிறோம். ஆயினும், இனவாத அரசியல் வாதிகளும் பௌத்த குருமாரும் தமிழ் மக் களுக்கு எதிரான முறையில் சிங்கள மக் களின் மனதில் விஷத்தை ஊட்டிவருகிறார் கள். இதனால், எமது போராட்டம் நியாய மானதாக இருப்பினும் சிங்கள மக்களை எமது போராட்டத்திற்கு ஆதரவாக அணி திரட்டுவது கடினமாக உள்ளது. எனினும் சிங்கள மக்களின் நம்பிக்கையையும் ஆதர வையும் பெறுவதற்கு நாம் தொடர்ந்து முயற்சிப்போம்.

கேள்வி:

**இன்றைய விரிசல் நிலையிலும், தமிழ் சிங்கள மக்கள் மத்தியில் ஒரே தன்மையுடைய சமூக, பொருளாதார அபிலாசைகள் இருப்பதாகக் கருது கிறீர்களா?**

பதில்:

ஆம். சாதாரண சிங்கள மக்களும் தமிழ் மக்களும் ஒடுக்கப்பட்டு சுரண்

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



டப்பட்டு வருகிறார்கள். ஆகவே, இவ்விரு இனத்தவர் மத்தியிலும் ஒரே தன்மையுடைய சமூக, பொருளாதாரப் பிரச்சினைகளும் அபிலாசைகளும் இருக்கத்தான் செய்கிறது. தேசிய முரண்பாடுதான் இவர்கள் மத்தியில் விரிசலை ஏற்படுத்துகிறது. தனது ஆட்சியை நிலைப்படுத்தும் ஒரே நோக்கத்திற்காக சிங்கள ஆளும்வர்க்கமானது தமிழ், சிங்கள மக்களிடையே இன முரண்பாட்டிற்கு தூபமிட்டுவருகிறது.

**கேள்வி:**

**தீவிரவாத அரசியல் போராட்டத்தில் உங்களை இறங்கவைத்த புறநிலைகள்பற்றி கூறுவீர்களா?**

பதில்:

சிறுபராயத்திலிருந்தே தமிழ் மக்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட அநீதிகள், கொடுமைகள்பற்றி கேள்விப் பட்டுவந்தேன். எனது பாடசாலைப் பருவத்தில் இன ஒடுக்குமுறையின் தாக்கத்தை நான் நேரடியாக உணர்ந்துகொள்ள முடிந்தது. தமிழ்த் தேசத்தை சூழ்ந்துவரும் அரச ஒடுக்குமுறையின் பேராபத்தை எனது வாலிபப் பருவத்தில் நான் தெட்டத் தெளிவாக உணரமுடிந்தது. இந்தப் பேராபத்திலிருந்து தமிழ் மக்களை காப்பாற்றுவதாயின் ஆயுத எதிர்ப்பு இயக்கம் ஒன்றை கட்டி எழுப்பவேண்டும் என எண்ணிக்கொண்டேன். இந்த விழிப்புணர்வின் அடிப்படையில்தான் விடுதலைப் புலிகள் இயக்கத்தை தோற்றுவித்து, ஆயுதப் போராட்டத்தை தொடங்கினேன்.

**கேள்வி:**

**உங்களது குடும்பப் பின்னணி பற்றியும், குடும்பத்துடனான உங்கள் உறவு பற்றியும் கூறுவீர்களா?**

பதில்:

நான் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்து வளர்ந்தேன். எனது தந்தையார் ஒரு அரச ஊழியர். எனக்கு இரண்டு மூத்த சகோதரிகள் இருக்கிறார்கள். அவர்கள் திருமணமாகி குடும்பம் நடத்துகிறார்கள். இளம் பராயத்திலிருந்தே புரட்சிகர அரசியலில் ஈர்க்கப்பட்ட நான் பொலிஸாரால் தேடப்பட்டுவந்தேன். இதனால் 19 வயதிலேயே வீட்டை விட்டு வெளியேறி தலைமறைவு வாழ்க்கையில் ஈடுபடநேர்ந்தது. அதிலிருந்து பெற்றோருடனான உறவுகளை நான் இழந்துவிட்டேன்.

**கேள்வி:**

**தமிழரின் தீவிரவாத போராட்டத்தின் சின்னமாக உங்களைச் சித்திரித்துக் காட்டுகிறார்கள். உங்களது இயக்கம் உங்களை ஒரு மாவீரனாக வர்ணிக்கிறது. ஒரு புரட்சிவாதி என்ற ரீதியில், இப்படியான தனிமனித வழிபாட்டினை நீங்கள் அனுமதிக்கலாமா?**

பதில்:

இப்படியான கருத்துருவ தோற்றப் பாடுகள் சித்திரிப்புகளுக்கு என்னால் ஒன்றும் செய்ய இயலாதிருக்கிறது. ஒடுக்கப்பட்ட எனது மக்களின் சமூக விடிவும், அரசியல் விடுதலையுமே என்னை சதா ஆட்கொண்டுவரும் அக்கறைகளாகும். எனது விடுதலைப் பற்றை மக்கள் நன்கு அறிவார்கள். அதனால் என்மீது அவர்களுக்கு அபார நம்பிக்கையுண்டு. நான் அவர்களை சரியான பாதையில் வழிநடத்திச் செல்கிறேன் என்பதை அவர்கள் தெளிவாக உணர்ந்திருக்கிறார்கள். இதனால் என்மீது ஆழமான அன்பைக் காட்டுகிறார்கள். என்னைப்பற்றிய தோற்றப்பாடுகள் மக்கள் என்மீதுகொண்ட அன்புணர்வின் வெளிப்பாடுகளாக இருக்கலாம்.

**கேள்வி:**

**சிறீலங்காவின் அரசியல் நிலைமை பற்றி உங்களது கணிப்பீடு என்ன?**

பதில்:

சிறீலங்காவின் அரசியல் நிலைமை மிகவும் நெருக்கடி மிகுந்ததாக இருக்கிறது. தமிழ் இனம் ஒரு இனப்படுகொலையை எதிர்கொண்டு நிற்கிறது. சிங்கள ஆயுதப்படைகள் தொடர்ந்து தமிழர்கள்மீது வெறியாட்டம் ஆடிவருகிறது.

கொலை, கொள்ளை, தீவைப்பு, சித்திர வதை, கற்பழிப்பு போன்ற கொடுமைகளுக்கு தமிழ் மக்கள் ஆளாகி வருகிறார்கள். பல்லாயிரக்கணக்கான மக்கள் தமது சொந்தக் கிராமங்களிலிருந்து இடம் பெயர்ந்து அகதிகளாக அல்லல்படுகிறார்கள். போர்நிறுத்தம் என்ற போர்வையில் எமது மண்ணைப் பறிப்பதிலும், எமது மக்களைக் கொன்று அழிப்பதிலும் ஆயுதப் படைகள் ஈடுபட்டுவருகின்றன. தமிழ் மக்களுக்கு நீதி வழங்க சிங்கள ஆளும்வர்க்கம் தயாராக இல்லை. சமாதான வழியில் பேச்சுக்கள் மூலம் இனப் பிரச்சினைக்கு தீர்வுகாணவும் அவர்கள் தயாராக இல்லை. ஆயுத பலத்தால் தமிழர்களை அடக்கி ஆளவேண்டும் என்பதே சிங்கள அதிகார வர்க்கத்தின் கொள்கையாக இருக்கிறது. இந்த இனத்துவேச அடக்குமுறைக் கொள்கை காரணமாக ஒரு நெருக்கடியான, ஆபத்தான நிலைமை உருவாகி வருகிறது.

கேள்வி:

**சிறீலங்கா அரசுக்கும் தமிழ் மக்களின் பிரதிநிதிகளுக்கும் மத்தியில் தற்போது நடைபெறும் பேச்சுவார்த்தைகள்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

பதில்:

இந்தப் பேச்சுவார்த்தைகள் ஒரு கேலிக்கூத்தாகவே முடியும். இந்தப் பேச்சுவார்த்தை என்பது உலகத்தை ஏமாற்றுவதற்காக ஜெயவர்த்தனா மேடையேற்றியுள்ள ஒரு அரசியல் நாடகமன்றி வேறொன்றுமல்ல. தன்னை ஒரு சமாதானத்தின் பிரியனாக ஜெயவர்த்தனா காட்டிக் கொண்டபோதும் உண்மையில் அவர் சமாதானத் தீர்வை விரும்பவில்லை. தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும்வகையில் ஒரு நியாயமான தீர்வுத் திட்டம் எதையும் முன்வைக்க அவர் தயாராக இல்லை. சமாதானத்தின் போர்வையில், இனப் படுகொலையை இலக்காகக் கொண்ட ஒரு பயங்கரயுத்தத்தையே அவர் தமிழர்கள்மீது கட்டவிழ்த்துவிட்டிருக்கிறார்.

கேள்வி:

**தனது இராணுவ நிலையைப் பலப்படுத்தவே ஜெயவர்த்தனா அரசு போர்நிறுத்த உடன்பாட்டை பயன்படுத்தியது என நீங்கள் அண்மையில் ஒரு குற்றச்சாட்டை முன்வைத்தீர்கள் அல்லவா?**

பதில்:

ஆம். போர்நிறுத்த உடன்பாட்டை அனுகூலமாகப் பயன்படுத்தி ஜெயவர்த்தனா அரசு ஒரு பாரிய இராணுவ மயப்படுத்தல் திட்டத்தைச் செயல்படுத்த முனைந்தது. தனது இராணுவ இயந்திரத்தை பலப்படுத்துவதிலேயே அரசாங்கம் தனது தேசிய வரவு செலவுத் திட்டத்தில் பெரும்பகுதி நிதியை செலவுசெய்து வருகிறது. இந்தப் பணத்தைக்கொண்டு உலக சந்தையிலிருந்து மிகவும் பயங்கரமான ஆயுதங்களை சிறீலங்கா வாங்கியுள்ளது. அதே சமயம், கட்டாய இராணுவ சேவைக்கான சட்டம் ஒன்றையும் நிறைவேற்றியுள்ளது. முழுச் சிங்கள தேசமுமே ஒரு பெரிய யுத்தத்திற்காக அணிதிரட்டப்படுகிறது. தமிழ்ப் பகுதிகளில் புதிய இராணுவ முகாம்கள் நிறுவப்படுகின்றன. அந்நியக் கூலிப் படைகள் சேவைக்கு அமர்த்தப்படுகின்றன. அதேசமயம், சிங்கள இராணுவத்தினருக்கு எதிர்ப் புரட்சி யுக்திகளில் பாகிஸ்தான் போன்ற நாடுகள் உதவிபுரிகின்றன. இந்தத் தயாரிப்பு நடவடிக்கைகளிலிருந்து ஒரு உண்மை தெட்டத்தெளிவாக புலனாகிறது. அதாவது, சிங்கள அரசு சமாதான வழியிலான அரசியல் தீர்வை விரும்பவில்லை. இராணுவ அணுகுமுறையிலேயே சிங்கள ஆட்சிபீடம் அதீத அக்கறை காட்டி வருகிறது.

கேள்வி:

**சென்ற தடவை நீங்கள் டெல்லிக்கு விஜயம் செய்தபொழுது உங்களுக்கு அரசியல் சாதகமான முறையில் போர்நிறுத்த கண்காணிப்பு குழு ஒன்றை நியமிக்க சிறீலங்கா அரசாங்கம் இணங்கியது அல்லவா? இந்தப் போர்நிறுத்த கண்காணிப்புக் குழு**

அமைக்கப்பட்டதை அடுத்து வன்முறை தணிந்து சமாதானம் நிலவக்கூடிய ஒரு நல்ல சூழ்நிலை பிறந்துள்ளது என்று சொல்லலாமா?

பதில்:

நீங்கள் எந்தக் கண்காணிப்புக் குழு பற்றி சொல்கிறீர்களோ எனக்குத் தெரியாது. அப்படி இந்தக் கண்காணிப்புக் குழு ஏதாவது அறிக்கை ஒன்றை வெளியிட்டு இருக்கிறதா? ஜெயவர்த்தனா அரசின் ஆயுதம் தரித்த காடையர்கள் புரிந்த போர்நிறுத்த மீறல்கள் பற்றி இந்தக்குழு விசாரணை ஏதாவது நடத்தியிருக்கிறதா? உண்மை என்னவென்றால், பேச்சுக்கள் ஒரு புறம் நடைபெற்றுக்கொண்டிருக்க, மறு புறம் மேலும், மேலும் அப்பாவித் தமிழ் மக்கள் படுகொலை செய்யப்படுகிறார்கள். எமது மீனவர்களைக் கொன்று அழிப்பதற்காக சிங்கள அரசு சிங்கப்பூரிலிருந்து பீரங்கிப் படகுகளை வாங்கியிருக்கிறது. தரைப் படை, விமானப்படை, கடற்படை ஆகிய முப்படைகளுமே கூட்டாகச் சேர்ந்து தமிழர்களுக்கு எதிராக போர் நடவடிக்கைகளில் ஈடுபட்டுவருகின்றன. இதுதான் உண்மை நிலை.

கேள்வி:

அப்பொழுது இந்த சமாதான அணுகுமுறை தோற்றுவிட்டது என்றா சொல்கிறீர்கள்?

பதில்:

சமாதானப் பேச்சுக்களால் உருப்படியான பலன் எதுவும் கிட்டவில்லை என்பதே எனது கருத்தாகும்.

கேள்வி:

இனப் பிரச்சினைக்கு பேச்சுவார்த்தை வாயிலாக தீர்வுகாணும் சாத்தியக்கூறுகள் இப்போது இல்லை என்பது அதன் அர்த்தமா?

பதில்:

அது எதனைப் பொறுத்தது என்றால்...

கேள்வி:

இந்தியாவின் நிலையைப் பொறுத்தது... அப்படித்தானே?

பதில்:

ஒருவகையில் ஆம்.

கேள்வி:

மேலும் இரத்தக்களரியைத் தவிர்ப்பதென்றால் சமாதானப் பேச்சு மூலம் தீர்வு ஒன்றை காண்பதற்கு வாய்ப்புக்கள் அளிக்கப்பட வேண்டும் என எண்ணுகிறீர்களா?

பதில்:

கடந்தகால வரலாற்று அனுபவங்களிலிருந்து பார்த்தால் சிங்கள அரசு ஒரு நியாயமான இணக்கப்பாட்டிற்கு வரப் போவதில்லை என்று திட்டவட்டமாகச் சொல்லலாம். ஜெயவர்த்தனா ஒரு நாடகத்தை அரங்கேற்றி சமாதானப் பிரியன் என்ற முகமூடி அணிந்து நடிக்கிறார். ஜெயவர்த்தனாவின் இந்த கபட நாடகத்தால் இந்திய அரசு தான் விரும்பியது எதையுமே சாதிக்கமுடியவில்லை. இதனால் ஒரு முரண்பாட்டு நிலை ஏற்பட்டிருக்கிறது. இரு தரப்பினரையும் ஒரு இணக்கத்திற்கு கொண்டுவர இந்தியா முயற்சிக்கலாம். இவ் விசயத்தில் இந்தியா தீவிர முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

கேள்வி:

ரொமேஷ் பண்டாரியுடன் நீங்கள் பேச்சுக்களை நடத்தியபோது இதுபற்றிச் சொன்னீர்களா?

பதில்:

ஆம். இதுபற்றிக் கூறினோம்.

கேள்வி:

சிங்கள குடிமக்கள்மீது தீவிரவாதப் போராளிகள் தாக்குதல்களை நடத்தினார்கள் என பத்திரிகைச் செய்தி ஒன்று கூறுகிறது. ஆயுதப் போராட்ட இலக்கில் குடிமக்கள் சம்பந்தமான உங்கள் கொள்கைப்பாடு என்ன?

பதில்:

இந்தப் பத்திரிகை செய்திகளில் எவ்வித உண்மையும் இல்லை. எமது விடுதலை இயக்கத்திற்கு களங்கம் ஏற்படுத்தவே இப்படியான பொய்ப் பிரச்சாரங்கள் கட்டவிழ்த்துவிடப்படுகின்றன, நாமல்வத்தை என்ற இடத்தில் நடைபெற்றதாகக் கூறப்படும் இச் சம்பவத்திற்கும் எமக்கும் எவ்வித தொடர்புமில்லை. எமது சகோதர தமிழ் அமைப்புக்கள் இச் சம்பவத்தில் ஈடுபட்டனவா என்பதும் எமக்குத் தெரியாது.

கேள்வி:

**சிங்களக் குடிமக்கள் தமிழ்த் தீவிரவாத போராளிகளால் தாக்கப்படுகிறார்கள் என்பதை ஊர்ஜிதப்படுத்தும் வகையில் டெல்லியிலுள்ள சிறீலங்கா தூதரக அதிகாரி ஒருவர் எனக்குச் சில புகைப்படங்களைக் காண்பித்தார்.**

பதில்:

இதோ பாருங்கள், சிங்களப் பகுதிகளில் ஊர்காவற்படையினர் என்ற பெயரில் ஆயுதம்தரித்த காடையர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்குச் சிங்கள இராணுவத்தினரே பயிற்சியும் அளித்து ஆயுதங்களையும் கொடுக்கிறார்கள். இவர்கள் குடிமக்கள் என்ற போர்வையில் நடமாடும் கொலைப்படையினர். தமிழ் மக்களைக் கொல்லவும், அவர்களது சொத்துடமைகளை நாசம் செய்யவும் இவர்கள் காலத்திற்கு காலம் ஏவப்படுகிறார்கள். இவர்கள் மீது சில தடவைகள் நாம் தாக்குதலை நடத்தியிருக்கிறோம். இது ஒருபுறமிருக்க, எல்லைப் புறங்களில் சிங்கள, தமிழ் கலவரங்களும் வெடிப்பதுண்டு. தமிழ்க் கிராமங்களில் சிங்களவர்கள் பலவந்தமாக குடியமரும்பொழுது நிலத்தைப் பாதுகாக்க மோதல்கள் நிகழ்வதுண்டு. இப்படியான சம்பவங்களின்போது நிகழும் அனர்த்தங்களை புகைப்படம் எடுத்து ஜே. ஆரின் பிரச்சார முகாமையாளர்கள் உலகெங்கும் விநியோகிக்கும் விவகாரம் எமக்கு நன்கு தெரியும். இதைக் காண்பித்து போராளிகள் பொதுமக்களைத் தாக்குவதாகப் பொய்ப் பிரச்சாரம் நடக்கிறது. ஆனால் உண்மை நிலபரத்தை அவர்கள் ஒருபொழுதும் சொல்வதில்லை.

கேள்வி:

**பேச்சுவார்த்தைகள் ஒரு தேக்கநிலை அடைந்திருப்பதாகவும் ஒரு சமரசத் தீர்வுக்கான சாத்தியக்கூறுகள் தென்படவில்லை என்றும் கூறுகிறீர்கள். அப்படி என்றால் உங்களது அடுத்த கட்ட நடவடிக்கை என்ன? சிங்கள ஆயுதப் படைகளுக்கு எதிராக மீண்டும் ஆயுதப் போராட்டத்தை தொடர்வதுதான் உங்களது திட்டமா?**

பதில்:

இப்பொழுது போர் நிறுத்தப்பட்டுள்ளது. எம்மீது தாக்குதல் நடைபெற்றால் நாம் எமது பாதுகாப்பிற்காக திருப்பித் தாக்குவோம். நாம் வலிந்து முன்சென்று தாக்குதலை நடத்தப்போவதில்லை.

கேள்வி:

**திருக்கோணமலை மாவட்டத்தில் தமிழ் விவசாயிகளை விரட்டிக்கலைத்துவிட்டு அப்பகுதிகளில் இராணுவம் சிங்களவர்களைக் குடியமர்த்துவதாக சில செய்திகள் கூறுகின்றன. இந்தச் செய்திகள் உண்மையாக இருந்தால் உங்களது நிலைப்பாடு என்ன?**

பதில்:

நாம் போராடுவதைத்தவிர எமக்கு வேறு வழியில்லை. போராட்டம் மூலமாகவே இராணுவத்தினரின் இத் திட்டத்தை முறியடிக்க முடியும்.

கேள்வி:

**தமிழர் பிரச்சினையில் இந்தியாவின் அணுகுமுறையும், இரு சாராருக்கும் இடையில் மத்தியத்துவம் வகிக்கும் இந்தியாவின் பங்கும் உங்களுக்குத் திருப்தியாக உள்ளதா?**

பதில்:

மத்தியஸ்தர் என்ற நிலையில் இனப் பிரச்சினைக்கு சமாதானப் பேச்சுக்

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNNAKULI BRANCH LIBRARY



கள் வாயிலாக ஒரு தீர்வுகாணவேண்டும் என இந்தியா நேர்மையான முயற்சிகளை மேற்கொண்டுவருகிறது. இந்தியாவின் அணுகுமுறை எமக்குத் திருப்தியை அளித்த போதும் ஜெயவர்த்தனாவின் அணுகுமுறை ஆழமான ஏமாற்றத்தைக் கொடுக்கிறது. தமிழர் பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வைக்காண வேண்டும் என்ற இந்தியாவின் நல்லெண்ண முயற்சிக்கு ஜெயவர்த்தனாவின் ஆணவம் கொண்ட கடும்போக்கு ஒரு பெரும் முட்டுக்கட்டையாக அமைந்து விட்டது.

**கேள்வி:**

அப்படியென்றால் திம்பு பேச்சுவார்த்தையின்போது போராளிகள் அமைப்புக்கள் ஏன் வெளிநடப்புச் செய்தன?

**பதில்:**

தமிழ் மக்களுக்கு எதிராக இராணுவ பயங்கரவாதமும், இனப்படுகொலையும் கட்டவிழ்த்து விடப்பட்ட காரணத்தினால்தான் நாம் வெளிநடப்புச் செய்தோம். அப்படியான ஒரு சூழ்நிலை தான் இப்பொழுதும் சிறீலங்காவில் தாண்டவமாடுகிறது.

**கேள்வி:**

சிறீலங்காவில் உருவாகியுள்ள தமிழர் தேசிய நெருக்கடி உபகண்டத்தில் இந்திய நலன்களைப் பாதிப்பதாக நீங்கள் அடிக்கடி கூறிவருகிறீர்கள். உங்களது போராட்டத்திற்கு ஆதரவு திரட்டும் நோக்கில்தான் இப்படிக் கூறிவருகிறீர்களா?

**பதில்:**

முன்பொரு காலம் உள்நாட்டு நெருக்கடியாக இருந்துவந்த தமிழர் பிரச்சினை இன்று சர்வதேசப் பரிமாணங்களைப் பெற்ற உலகப் பிரச்சினையாக விரிவடைந்துள்ளது. இது இந்தியாவிற்கு கலக்கத்தைக் கொடுக்கிறது. தமிழரின் சுதந்திரத்தை எப்படியாவது நசுக்கிவிடவேண்டும் என்ற இலட்சியத்தை நிறைவேற்றும் நோக்கில் சிறீலங்கா சர்வதேச நாசகார சக்திகளை இலங்கைத் தீவில் ஊடுருவ அனுமதித்திருக்கிறது. இஸ்ரேலிய உளவு நிறுவனங்கள், பிரித்தானிய கூலிப்படைகள் இலங்கையில் ஊடுருவி இருப்பது மட்டுமல்லாமல் பாகிஸ்தானிய தலையீடும் பாரிய இராணுவமயப்படுத்தல் திட்டமும் இப்பிராந்தியத்தில் சமாதானத்திற்கும், உறுதிநிலைக்கும் பங்கம் ஏற்படுத்தியுள்ளது. இந்த ஆபத்தான திருப்பநிலை இந்தியாவின் அரசியல் - பூகோள நலன்களைப் பாதிக்கும் என்பது திண்ணம். ஏனென்றால் இந்துமாசமுத்திரப் பகுதி ஒரு சமாதானப் பிரதேசமாக அமையவேண்டும் என்பது தான் இந்தியாவின் நிலைப்பாடாக இருக்கிறது.

**கேள்வி:**

சிறீலங்காவின் நெருக்கடியில் அமெரிக்க ஆட்சிபீடம் வகிக்கும் பங்குபற்றி என்ன நினைக்கிறீர்கள்?

**பதில்:**

அமெரிக்காவிற்கு இப்பிரதேசத்தில் கேந்திர, அரசியல், பூகோள அபிலாசைகள் உண்டு. இலங்கையிலுள்ள திருக்கோணமலை இயற்கைத் துறைமுகம் இந்துமாசமுத்திரத்தில் மிகவும் கேந்திர முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்திருக்கிறது. இலங்கையில் படிப்படியாக ஊடுருவி, இத்தீவை தமது ஆதிபத்தியத்தின்கீழ் கொண்டுவருவதே அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் நோக்கமாகும். தீவிரமாகிவரும் இனநெருக்கடியானது அமெரிக்க உதவியை நாட ஜெயவர்த்தனா அரசை நிர்ப்பந்தித்தது. இஸ்ரேல், பாகிஸ்தான், தென்கொரியா, சீனா ஆகிய தனது நட்புறவு நாடுகள் மூலமாக அமெரிக்கா சிறீலங்காவிற்கு உதவி வருகிறது. இனநெருக்கடியை மேலும் தீவிரப்படுத்தி, படிப்படியாக இத்தீவில் காலூன்றி, திருக்கோணமலையில் தளம் ஒன்றை அமைத்துக்கொள்வதுதான் அமெரிக்காவின் நோக்கம்.

**கேள்வி:**

சோசலிச நாடுகள் உங்களது இலட்சியத்திற்கு அனுதாபம் காட்டுகின்றனவா?

பதில்:

ஆம். இந்நாடுகள் எமக்கு அனுதாபம் காட்டுகின்றன.

கேள்வி:

உங்களது அரசியல் தத்துவம் என்ன? உங்களை பெரிதும் கவர்ந்த கெரில்லாப் போராட்டத் தலைவர் யார்?

பதில்:

புரட்சிகர சோசலிசம்தான் எனது அரசியல் சித்தாந்தம். சோசலிசம் எனும்பொழுது வர்க்க வேறுபாடு ஒழிந்த, மனிதனை மனிதன் சுரண்டும் அநீதி நீங்கிய, சமத்துவ சமூக அமைப்பையே குறிப்பிடுகிறேன். இந்தப் புரட்சிகரமான சமுதாயத்தில் மனித சுதந்திரங்களும் உரிமைகளும் பேணிப் பாதுகாக்கப்படும், மனித வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கப்படும். சே குவாரா தான் என்னை மிகவும் கவர்ந்த கெரில்லாப் போராட்டத் தலைவர்.

கேள்வி:

தமிழ் மக்களின் போராட்டத்தை எவ்வாறு வர்ணிப்பீர்கள்?

பதில்:

தமிழ் மக்களின் போராட்டம் தன்னாட்சி உரிமையை வென்றெடுப்பதற்கான போராட்டம். தமது அரசியல் தலைவிதியை தாமே நிர்ணயித்துக்கொள்ளும் அரசியல் சுதந்திரத்திற்கான போராட்டம்.

கேள்வி:

இனப் பிரச்சினையின் வரலாற்றுப் பின்னணி பற்றி விளக்குவீர்களா?

பதில்:

தமிழரின் தேசிய இனப்பிரச்சினை நாற்பது ஆண்டுகால வரலாற்றைக் கொண்டது. சிங்கள ஆளும் வர்க்கமானது பிரித்தானிய காலனித்துவ ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்றதிலிருந்து தமிழ் மக்களுக்கு எதிரான ஒடுக்குமுறைக் கொள்கையைக் கடைப்பிடித்தது. தமிழ்த்தேசியத்தின் தனித்துவத்தை சிதைக்கும் நோக்கைக் கொண்ட இன அழிப்பு வடிவமாக இந்த ஒடுக்குமுறை அமைந்தது. மொழி, பண்பாடு, பொருளாதார வாழ்வு, தாயக நிலம் ஆகிய தமிழ்ச் சமூகத்தின் அத்திவாரங்களை தகர்த்தெறியும் நோக்கமாக இந்த ஒடுக்குமுறை ஏவிவிடப்பட்டது. இதனால் தமிழினம் தாங்கொணாத் துயருக்குள் தள்ளப்பட்டது. அத்தோடு தமிழருக்கு எதிராக திட்டமிட்ட வன்முறையை அரசு கட்டவிழ்த்துவிட்டது. காலத்திற்கு காலம் இலங்கைத் தீவில் வெடித்த இந்த இனப் பூகம்பங்களால் பாரிய உயிரிழப்புகளும் பொருளிழப்புகளும் ஏற்பட்டன. இந்த அரச பயங்கரவாதப் புயல் இன்னும் ஓயாது வீசிக்கொண்டேயிருக்கிறது.

ஆரம்பகாலத்தில் எமது மக்கள் காந்திய வழி தழுவிய அமைதிவழிப் போராட்டங்களை நடத்திவந்தனர். அரச வன்முறையை ஆட்சேபித்து சத்தியாக்கிரகப் போராட்டங்களையும் ஒத்துழையாமை இயக்கங்களையும் நடத்தினர். இருபது ஆண்டுகளுக்கு மேலாக, தமது அரசியல் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கில் எமது மக்கள் மாநிலச் சுயாட்சி கோரி வந்தனர். ஆனால் அவர்களது கோரிக்கைகளுக்கு அங்கீகாரம் கிடைக்கவில்லை. மாறி மாறி ஆட்சிக்கு வந்த சிங்கள அரசுகள் ஒப்பந்தங்களையும் உடன்பாடுகளையும் மீறிவந்தன. சமாதான வழியில் இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பதிலாக சிங்கள அதிகார வர்க்கமானது ஈவிரக்கமற்ற இராணுவ அடக்குமுறைக் கொள்கையை கடைப்பிடித்துவருகிறது.

இந்த வரலாற்று சூழ்நிலையில்தான், அதாவது, அமைதி வழி தழுவிய சகல போராட்ட வடிவங்களும் தோல்விகண்ட தருணத்தில்தான் புரட்சிகர ஆயுதப் போராட்டம் எழுபதுகளின் ஆரம்பத்தில் தோற்றம்கொண்டது. விடுதலைப் புலிகள் இயக்கமே இந்த ஆயுதப் போராட்டத்தின் முன்னோடியாக திகழ்ந்தது. காலக்கிரமத்தில் எமது இயக்கமே தமிழர் தேசியப் போராட்டத்தின் முன்னணிப் படையாக வளர்ச்சிபெற்றது. எமது ஆயுதப் போராட்

டமே எமது மக்களின் சுதந்திர இலட்சியத்தை முன்னெடுத்து வருகிறது. எமது ஆயுதப் போராட்டமே சிங்கள அரசுக்கு பெரும் சவாலாகஎழுந்திருப்பதுடன், தமிழர் பிரச்சினையை சர்வதேச அரங்கில் பிரபல்யம் அடையவும் செய்துள்ளது.

கேள்வி:

சிங்கள அரசியல்வாதிகளும், பௌத்த குருமாரும் இனப்பிரச்சினையில் எத்தகைய பங்கு வகித்தார்கள் எனக் கருதுகிறீர்கள்?

பதில்:

இந்தத் தேசியநெருக்கடியை உருவாக்கம் பெறச் செய்ததில் சிங்கள அரசியல்வாதிகளுக்கும் பௌத்த குருமாருக்கும் முக்கியமாக பங்குண்டு. அரசியல் அதிகாரம்பெறும் ஒரே நோக்கத்திற்காக அரசியல்வாதிகள் சிங்கள மக்கள் மத்தியில் இனத்துவேச விதைகளை விதைத்தார்கள். பௌத்த குருமார் பேரினவாதத்தையும் மதவெறியையும் தூண்டிவிட்டார்கள். சிங்கள பௌத்த பேரினவாதச் சித்தாந்தமானது ஒரு பாரிய சக்தியாக சிங்கள மக்களைப் பற்றிக்கொண்டது. இதனால் தமிழர் விரோத அரசியல் வளர்ந்து இன்றைய இனப் பிரச்சினைக்கு மூல காரணியாக அமைந்தது.

கேள்வி:

இன்றைய நெருக்கடி நிலை யாருடைய நலன்களைப் பேணுவதாக அமைகிறது என நினைக்கிறீர்கள்?

பதில்:

இன்றைய நெருக்கடி அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளதும், சிங்கள தரகு முதலாளித்துவ வர்க்கத்தினதும் நலன்களைமட்டுமே பேணுவதாக உள்ளது.

கேள்வி:

எல்லாத் தமிழ் அமைப்புக்களுமே தமிழ் மக்களின் இலட்சியத்திற்காகப் போராடுகின்றன. அப்படியிருந்தும் இந்த அமைப்புக்கள் மத்தியில் பிளவுகளும் கருத்து முரண்பாடுகளும் நிலவுவதன் காரணம் என்ன? இந்த நிலைமையைச் சீரமைப்பதற்கு நீங்கள் என்ன யோசனை கூறுவீர்கள்?

பதில்:

எல்லாத் தேசிய விடுதலைப் போராட்டங்களிலும் சித்தாந்த ரீதியில் கருத்து வேறுபாடுகள் நிலவுவது சர்வ சாதாரண விசயம். ஈழத் தேசிய விடுதலை முன்னணி என்ற கூட்டமைப்பு உருவாக்கப்பட்டதிலிருந்து ஓரளவிற்கு எமது நிலைமை சீரடைந்துள்ளது.

கேள்வி:

உங்களுக்கும் உமாமகேஸ்வரனுக்கும் மத்தியில் பிளவு ஏற்பட்டதற்குக் காரணம் என்ன?

பதில்:

இன்றைய அரசியல் சூழ்நிலையில் இவ் விவகாரம் குறித்து நான் எதையும் கூற விரும்பவில்லை. இன்று போராளி அமைப்புகள் மத்தியில் ஒற்றுமைப் பிரச்சினை என்பது முக்கிய விடயமாக மேலோங்கி நிற்கையில் பழைய விவகாரங்களைக் கிளறுவது புத்திசாலித்தனமாகாது.

கேள்வி:

உங்கள் இருவருக்கும் மத்தியில் நிலவிய சித்தாந்த வேறுபாடுகள் தீர்ந்து விட்டதா?

பதில்:

பழைய விடயங்கள்மீது இப்பொழுது பிரேத பரிசோதனை நடத்துவதில் எவ்வித அர்த்தமும் இல்லை. என்ன நடந்தது என்பது எல்லோருக்கும் தெரிந்த விடயம்.

கேள்வி:

எதிர்காலத்தில் இந்த அமைப்பும் (உமாவின் அமைப்பு) ஈழத் தேசிய விடுதலை முன்னணியில் சேர்ந்து கொள்ளும் வாய்ப்பு உண்டா?

பதில்:

அந்த சாத்தியக்கூறு இல்லை என்று சொல்லமுடியாது.

கேள்வி:

தமிழ் நாட்டில் உங்களது புகழ் மேலோங்குவதைக் கண்டு பயந்த எம். ஜி. ஆர். உமாமகேஸ்வரனுக்கு பகிரங்கமாக ஆதரவளிப்பதாக சொல்லப்படுகிறதே?

பதில்:

உண்மையில், அப்படி எதுவும் நிகழவில்லை.

கேள்வி:

தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணி என்றதுமே தமிழ்ப் போராளிகளுக்கு வெறுப்பு ஏற்படுகிறதே எதற்காக? நீங்களும் அவர்களை சந்தர்ப்பவாதிகள் என குற்றம் சுமத்தியிருக்கிறீர்கள்.

பதில்:

தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின்அரசியல்சந்தர்ப்பவாதம் என்பது சகலருக்கும் தெரிந்த விடயம். தமது சுயநல அரசியல் அபிலாசைகளுக்காக எமது மக்களைஏமாற்றிவரும் பதவிவெறிபிடித்த அரசியல்வாதிகள் இவர்கள். தனித் தமிழ் அரசு அமைக்கப் போவதாகக்கூறி இவர்கள் 1977-ம் ஆண்டு பொதுத் தேர்தலில் எமது மக்களிடம் மனுப் பெற்றனர். இந்த வாக்குறுதியை நிறைவேற்ற இவர்கள் எதுவுமே செய்யவில்லை. அதேவேளை அற்ப சலுகைகளுக்காக இவர்கள் அரசுடன் பேச்சுக்களை நடத்துகிறார்கள். இந்த வகையில் இவர்களது அரசியல் நடவடிக்கைகளை துரோகத்தனம் என்றும் சந்தர்ப்பவாதம் என்றுமே நான் வர்ணிப்பேன்.

கேள்வி:

தமிழ் நாட்டு அரசியல் தலைவர்கள் சிலர் தமிழ்ப் பேரினவாத உணர்வுகளை கிளறிவிட முயற்சிக்கிறார்கள். இவ்வாறு இவர்கள் பிரிவினைவாதத்தைத் தூண்டுவது உங்களது போராட்டத்தைப் பாதிக்கும் அல்லவா?

பதில்:

நாம் அவர்களை இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கவில்லை. இலங்கையில் வதியும் தமது சகோதரர்களின் அவல நிலை குறித்து தமிழ் நாட்டுத் தலைவர்கள் உண்மையாகவே கலக்கம் அடைகிறார்கள், சிங்கள இராணுவம் தமிழர்கள்மீது அட்டூழியங்கள் புரியும்போதெல்லாம் அவர்கள் மக்களை அணிதிரட்டி ஆட்சேபக்குரல் எழுப்புகிறார்கள். தமிழீழ மக்களின் இலட்சியப் போராட்டத்திற்கு தமிழ் நாட்டில் உணர்வுபூர்வமான பெரும் ஆதரவு பெருகி வருகிறது. ஈழத் தமிழ் மக்களை இனப் படுகொலையிலிருந்து காப்பாற்றி, அவர்களது பிரச்சினைக்கு தீர்வுகாண இந்தியா உதவவேண்டும் என தமிழ்நாட்டுத் தமிழர்கள் விரும்புகிறார்கள்.

கேள்வி:

தமிழ்ப் போராளிகளுக்கு இந்தியா பயிற்சி அளிப்பதாகவும், இந்தியாவில் போராளிகளுக்கு பயிற்சிமுகாம்கள் இருப்பதாகவும் காலத்திற்கு காலம் செய்திகள் வெளியாகி வருகின்றன. இதுபற்றி என்ன சொல்கிறீர்கள்?

பதில்:

இந்த செய்திகளில் உண்மை எதுவும் இல்லை.எமக்கு இந்தியாவில் பயிற்சி முகாம்கள் எதுவுமில்லை. எமது மண்ணில் தான் எமது பயிற்சி முகாம்கள் அமைந்துள்ளன.

கேள்வி:

தமிழர் பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வைக் காண்பதில் இந்தியா எத்தகைய பங்கை வகிக்கவேண்டும் எனக் கருதுகிறீர்கள்?

பதில்:

உலகின் ஒடுக்கப்படும் சமூகங்களின் விடுதலைக்காக இந்திய மக்கள் குரல் கொடுத்துவருகிறார்கள். நீதிக்காகவும், மனித தர்மத்திற்காகவும் போராடும் ஒரு நீண்ட, மகத்தான பாரம்பரியத்தைக் கொண்டவர்கள் பாரத மக்கள். பாலஸ்தீன நமீபிய, தென் ஆபிரிக்க மக்களின் தேசிய சுதந்திரப் போராட்டங்களுக்கு இந்திய மக்கள் ஆதரவளித்து வந்திருக்கிறார்கள், சமீபத்தில்கூட பொலிசாரியோ விடுதலை இயக்கத்தை அங்கீகரித்திருக்கிறார்கள். தமது அயல்நாட்டில் நடைபெறும் ஒரு விடுதலைப் போராட்டத்திற்கு பாரத மக்கள் ஆதரவு அளிப்பார்கள் என்பதிலும், தமிழீழ மக்களின் தன்னாட்சி உரிமைக்கு அங்கீகாரம் வழங்குவார்கள் என்பதிலும் எனக்கு நம்பிக்கையுண்டு. □

# விடுதலைக்காகப் போராடுவது எங்கள் வரலாற்றுக் கடமை



குறிப்பு:

தமிழ் நாட்டிலிருந்து வெளியாகும் ''ஜுனியர் விகடன்'' சஞ்சிகையில் பிரசுரமாகிய தலைவரின் பேட்டி இது. 28-5-1986, 4-6-1986 ஆகிய இதழ்களில் இப் பேட்டி பிரசுரமாகியது.

தமிழர்கள் பெருவாரியாக வாழும் யாழ்ப்பாணம் மீது ஜெயவர்த்தனாவின் விமானங்கள் வெறித்தனமாகக் குண்டுகளை வீச.. சிங்களர் படை நகருக்குள் நுழைந்து தாக்குதல் நடத்தக் கிளம்பிவிட்டது என்னும் செய்தி நம்மைப் பதைபதைக்கச் செய்தது.

இதைத் தொடர்ந்து விடுதலைப் புலிகள் நிகழ்த்திய வீராவேசமான எதிர்த்தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் சிங்கள இராணுவம் திணறிப்போய் பின்வாங்குகிறது என்னும் செய்தி சற்று நிம்மதியைத் தருகிறது.

இருப்பினும்... விடுதலைப் புலிகளால் சகல வசதிகளோடு கூடிய சிங்கள இராணுவத்தைத் தொடர்ந்து சமாளிக்க முடியுமா? சிங்கள ஓநாய்கள் ஒருவேளை உள்ளே புகுந்துவிட்டால் அப்பாவித் தமிழ் மக்களின் கதி என்னவாகும். இதுபோன்ற கவலைகள் வேறு மனத்தை நெருடியது...

உண்மையில் அங்கு தற்போது நிலைமை எப்படி இருக்கிறது? இது பற்றி யார் நேரடியாக நமக்குத் தகவல்கள் சொல்வார்கள்...?

திடீரென்று விடுதலைப் புலிகளின் இயக்கத் தலைவர் பிரபாகரன் சென்னைக்கு வந்திருக்கும் தகவல் கிடைத்தது. (அவர் சென்னையில் இருக்கிறாரா, இலங்கையில் இருக்கிறாரா என்பதெல்லாம் இரகசியமாக வைக்கப்படுவதால் நினைத்தபோது சந்தித்துவிட முடியாத நிலை!) சென்னைக்கு வந்திருக்கும் தகவல் கிடைத்ததும்தொடர்பு கொண்டோம். மறுநாள் காலை சந்திக்கலாமென்று தகவல் வந்தது. கூடவே நாங்கள் வந்து அழைத்துப் போவோம் என்று சொல்லியனுப்பினார்கள்.

மறுநாள் காலை ஒன்பது மணிக்கு இரும்பையொத்த உடல்வாகு கொண்ட மூன்று இளைஞர்களுடன் ஒரு வேன் நம் அலுவலகத்துக்கு வந்து நிற்க, ஏறி அமர்ந்தோம்.

சும்மா சொல்லக்கூடாது. இளம் புலிகள் சென்னை வீதிகளில், பீக் அவரில் கூட படு லாவகமாக வேனை ஓட்டுகிறார்கள்;

சென்னை இந்திரா நகரில் உள்ள தமிழ் ஈழ விடுதலைப்புலிகள் இயக்கத்தின் தலைமையகம்... தேதி மே 21 காலை மணி 9-30

வீட்டைச் சுற்றி விடுதலைப் புலி இயக்கத்தின் இளைஞர்கள்... உள்ளே மாடி ஹாலில்—

'தம்பி' என்று செல்லமாக அழைக்கப்படும் அவர்கள் இயக்கத் தலைவர் வேலுப்பிள்ளை பிரபாகரன் இருக்கிறார்.

சற்று பருமனான ஆனால் வலுவான உடல்வாகு, ரொம்ப உயரமில்லை. வகிடு இல்லாமல் மொத்தமாகத் தூக்கி வாரப்பட்ட சீரான தலைமுடி, தீர்க்கமான விழிகள், நேருக்கு நேர் நம் கண்களைப் பார்த்துப் பேசுகிறார். அடர்த்தியான கச்சிதமான மீசை பிரபாகரனுக்குத் தனி கம்பீரத்தைத் தருகிறது.

நாம் அங்கே சந்தித்தபோது ஈழத்திலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகளை அவருடைய தோழர்கள் 'டைப்' அடித்து அவரிடம் காட்டிக் கொண்டிருந்தனர். பிரபாகரன் அவற்றைக் கூர்ந்து படித்துவிட்டுச் சில செய்திகளை ஓ.கே. செய்தார். அவை வெளியுலகம் அறிய பத்திரிகைகளுக்கு உடனுக்குடன் அனுப்பப்பட்டன.

வல்வெட்டித்துறையில் இலங்கை இராணுவம் விமானமூலம் குண்டு வீசிய செய்தி அப்போது வந்தது. வீராவேசமாக எதிர்த்தாக்குதல் நடத்தியதில் எட்டு விடுதலைப் புலிகள் பலியானார்கள்.

இந்தச் செய்தியை பிரபாகரன் நம்மிடம் படித்துக்காட்டிவிட்டுச் சற்று மௌனமானார்.

## எங்கள் இலக்குகளை தாக்கமுடியாது

தமிழ் மக்களின் பாதுகாப்பு பற்றிக் கவலையோடு கேட்டோம்.

''இலங்கை இராணுவம் நடத்தும் இந்த விமானத் தாக்குதலில் மக்கள் அதிகம் இறந்து விடவில்லை காரணம் இம்மாதிரி விமானத் தாக்குதல்களை இலங்கை அரசு நடத்தப்போவதை சில வாரங்களுக்கு முன்பே தமிழ்ப் பகுதிகளில் எச்சரித்து விட்டோம். ஒவ்வொரு வீட்டிலும் பதுங்கு குழிகள் வெட்டப்பட்டுள்ளன. ஆண் துணை இல்லாத வீடுகளில் எங்கள் இயக்க வீரர்கள் பதுங்கு குழிகளை வெட்டி உத வினார்கள். விமான ஓசை கேட்டவுடனேயே குழிகளில் பதுங்க பெரியவர்கள் மட்டு மல்ல, குழந்தைகள் கூடப் பயிற்சி பெற்று விட்டார்கள்'' என்றார் பிரபாகரன்.

இலங்கை இராணுவம் விமானமூலம் வீசப்படும் குண்டுகள் பெரும்பாலும் 'வேஸ்ட்' என்று வர்ணித்தார் பிரபாகரன். ''வேண்டுமானால் மக்களிடையே பீதியைக் கிளப்ப உதவலாம்.. மற்றப்படி எங்கள் இலக்குகளை அவர்களால் தாக்க முடி யாது! அவர்களிடம் 'நேபாம்'(விஷகெமிக் கல்)குண்டுகள் வீசுவதற்குத் தயாராக இருக்கின்றன. இன்னமும் அந்தக் குண்டு களை அவர்கள் பயன்படுத்தவில்லை. இரக்கமில்லாமல் 'நேபாம்' குண்டுகள் வீசி னால் அப்பாவிப் பொதுமக்கள் துன்பம் அடைய நேரிடும்...'' பிரபாகரன் கூறினார்.

இலங்கை இராணுவம் மே17-ம் திகதி யாழ்ப்பாணத்தின் மீது தாக்குதலைத் தொடங்கியது. கடற்படை, விமானப் படை துணையோடு, இராணுவம் அந்த தீவை முப்புறங்களில் சூழ்ந்து முன்னேறி, விடுதலைப் புலிகளை நசுக்கி அழிக்கத் திட்டமிட்டது. மூன்றே நாளில் காரியத்தை முடிக்கவேண்டும் என்று திட்டம் தீட்டி னார்கள். ஆனால், மூன்று நாட்கள் கழித் தும் சிங்கள இராணுவம் ஒரு கிலோ மீற் றர் கூட முன்னேற முடியவில்லை. விடு தலைப் புலிகள் கொடுத்த பதிலடியில் இராணுவம் திணறிப்போனது.

மே17-ம் தேதியிலிருந்து தாக்குதல் நடக்கப்போகிறது என்பதை 15-ம் தேதி யன்றே நோட்டீஸ் அடித்து மக்களை ஒரு உள்நாட்டு யுத்தத்திற்கே தயார் செய்திருக் கிறது விடுதலைப்புலிகள் இயக்கம். ''இணைப்புப் பாலங்கள் உடைக்கப்பட் டன.. ஏராளமான மரங்கள் வெட்டி சாலை களின் குறுக்கே போடப்பட்டன. கண்ணி வெடிகள் புதைக்கப்பட்டன. சாலைகள் வழியே இராணுவம் நகர முடியாமல் தடுக் கப்பட்ட நேரத்தில், கடல் வழியே ஆயுத சப்ளைகள் வராமல், கடற்கரை ஓரங்களில் அணிவகுத்து ராக்கெட்டுகள், இயந்திரத் துப்பாக்கிகளுடன் தாக்குதலைத் துவங்கி னோம்'' என்றார் பிரபாகரன்.

''முற்றுகையை நீடிக்க வைத்து மக்க ளைப் பட்டினி போட்டுப் பணியவைக்க முயற்சி நடந்தால்?'' என்று கேட்டோம்.

''அதெல்லாம் நடக்காது. எங்கள் இயக்கத்தில் பல பிரிவுகள் உள்ளன. அதில் ஒரு பிரிவு தமிழீழப் பகுதியில் உணவு விஷயத்தில் சுயதேவைப் பூர்த்திக்குக்கவனம் செலுத்தியது. புரோட்டீன் சத்துள்ள தானிய வகைகள், கிழங்கு வகைகளை யெல்லாம் பயிரிடச் செய்திருக்கிறோம்.

இலங்கை இராணுவத்தினரின் 'பயங்கர மான யாழ்ப்பாண முற்றுகை' கடைசியில் பிசுபிசுத்துப் போய்விட்டது. ''மூன்றுநாள் ஆபரேசன் திட்டம் அது. அதற்குரிய சப்ளை முடிந்துவிட்டது. இராணுவ அதி காரி தோல்வியை ஒப்புக் கொண்டு விட் டார்... அத்துலத் முதலி தோல்விக்குச் சப்பைக்கட்டு கட்டுகிறார்'' என்றார் பிரபாகரன்.

## மக்களின் ஆதரவோடு புலிகள் ஆட்சி நடக்கிறது

யாழ்ப்பாணத்தில் மக்களின் முழு ஆதரவோடு விடுதலைப் புலிகள் ஆட்சி தான் நடக்கிறது. ''வரி வசூலை நாங்கள் தான் செய்கிறோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்'' என்றார் புன்முறுவலு டன் பிரபாகரன்.

''யாழ்ப்பாணத்துக்கு நீங்கள் எப் போது போய் வந்தீர்கள்?'' என்று கேட்ட போது, பதில் சொல்ல வந்து பிறகு ஒரு கணம் தயங்கி ஒரு சிறு புன்னகையுடன், ''இடையிடையே போய் வருவேன் யுத்த முனையில் எதுவும் எனது உத்தரவுகள் படியே நடக்கும். அவசர முடிவுகள் எடுக்க அங்கே உள்ள எனது தளபதிகளுக்கு அதி காரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர் கள் எல்லோரும் நான் எப்படிச் சிந்திப் பேனோ அப்படி சிந்திக்கப் பயிற்சி பெற்ற வர்கள்!'' என்றார்.

வேறு எந்த கெரில்லா படைகளுக்கும் இல்லாத அளவுக்கு விடுதலைப் புலிகள் தகவல் தொடர்பு வசதிகளைப் பக்காவாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இலங்கை இராணுவம் முகாமைவிட்டு ஒரு அடி எடுத்து வைத்தால், விடுதலைப் புலிகளுக்குத் தக வல் உடனே வந்து சேருகின்றது. அந்த அளவுக்கு ஆங்காங்கே 'சென்ட்ரி'க்கள் போட்டிருக்கிறார்கள். பதிலடி எதிர்பாரா மல் கிடைக்க இராணுவம் திகைக்கிறது!

தொண்டமானாறு பாலத்தில் இராணு வம் சற்று நகர, தகவல் பறந்து விடுதலைப் புலிகள் மின்னல் வேகத்தில் இயங்கிப் பாலத்தின் இன்னொருபகுதியைக் குண்டு வைத்துக் தகர்த்து விட்டனர்! இராணுவம் ஸ்தம்பித்து நின்றது.

யாழ் கோட்டையில் உள்ள இலங்கை இராணுவ முகாம் கையைப் பிசைந்து. தலை யைச் சொறியும் நிலையில்தான் இருக் கிறது. அவர்களுக்குப் போகும் தண்ணீர் சப்ளைகூட விடுதலைப் புலிகளால் 'கட்' செய்யப்பட்டுவிட்டது. 'குடிதண்ணீராவது கிடைக்க வழி செய்யுங்கள்' என்று இராணுவ அதிகாரி நேரடியாக விடுதலைப் புலிகள் முகாமிற்குத் தூது அனுப்பிய சம்பவம் நடந்தது. வேறுவழியில்லாமல் ஹெலிகாப் டரில் இராணுவத்துக்குத் தண்ணீர் கொண்டு வந்தார்கள்.

யாழ் மக்களுக்கு குண்டு வெடிப்பு களுக்கு நடுவில் தங்கள் பணிகளைச் செய் வது இப்போது நன்றாகவே பழக்கமாகி விட்டது. விடுதலைப் புலிகள் துப்பாக்கி களை இயக்கும்போது, மக்கள் 'டீ' கொண்டு வந்து தருகிறார்கள். யுத்தத்தை வேடிக்கை பார்க்க கூட்டமாக வருகிறார்கள். அவர் களை புலிகள் வலுக்கட்டாயமாக வீடு களுக்குத் திருப்பி அனுப்பும் நிலை ஏற்படு கிறது!

## தமிழில் இராணுவ விஞ்ஞானம்

விடுதலைப் புலிகளுக்கு நவீன ஆயுதங் கள் அத்தனையும் அத்துப்படியாகி இருக் கிறது. இராணுவ விஞ்ஞானத்தைப் புத்தக வடிவில் தமிழில் கொண்டுவந்திருக்கிறார் கள் இவர்கள். 'போர்க்குரல்' என்ற இந்தப் புத்தகம் தமிழில் முதல் முயற்சி. இத்தனை போராட்டத்திற்கு நடுவில் தமிழில் இரா ணுவத்தைப் பற்றியும், போர்முறைகளைப் பற்றியும் விஞ்ஞான ரீதியில் பல வால் யூம்களாகத் தயாரித்திருக்கிறார்கள்.

பொதுவாக பிரபாகரனுக்குப் புத்த கங்கள் படிக்கும் ஆர்வம் அதிகம். உலக நாடுகள் முழுவதிலிருந்தும் 3 லட்ச ரூபாய் பெறுமான யுத்த நுணுக்கப் புத்தகங்கள் சேகரிக்கப்பட்டு, 'போர்க்குரலில்' அவற் றின் கவர்ச்சியான மொழிபெயர்ப்பு தரப் படுகிறது... போர்க்குரல் லே-அவுட்டெல் லாம் பிரமாதம்! இருப்பினும் பிரபாகரன் திருப்தி அடையவில்லை.

"என்னைத் திருப்திப்படுத்துவது எளி தான காரியமல்ல. இன்னும் சிறப்பாகத் தயாரித்திருக்க முடியும்'' என்று சிரித்தார் பிரபாகரன்.

அவரது தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கான 'புலி' முத்திரைக்குச் சரி யான புலித் தலையைத் தேர்ந்தெடுக்கப் பட்டபாடு சுவையானது. சிவகாசி பட்டாசில் இருக்கும் புலியின் படத்திலிருந்து உலகம் முழுவதும் வெளியாகும் புலிப்படங்கள் வரை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் பட்டன. எதிலும் அப்படி ஒபர்ஃபெக்ஷன் எதிர்பார்க்கிறார் பிரபாகரன். நாளைக்கு

CHULIPURAM BRANCH LIBRARY



ஒரு புலியின் படத்தைப் பார்த்துவிட்டு ''அடடா இதை உபயோகித்திருக்கலாமே! என்று வருத்தப்படக் கூடாதல்லவா?'' என்று விளக்கம் தந்தார் அவர். இந்த அணுகுமுறை அவரது எல்லா செயல்களி லும் எதிரொலிக்கிறது.

எங்கள் இயக்கத்தில் சேருவதற்குக் கட்டுப்பாடுகள் உண்டு. வாழ்க்கையில் விரக்தி அடைந்தவர்கள் யாரும் இதில் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை. தோல்வி உணர்வு கொண்டவர்களுக்கு இதில் இட மில்லை. அப்படிப்பட்டவர்களுக்குத் தன்னம் பிக்கை இருக்காது. இந்தப் போராட்ட விடயத்திலும் விரக்திதான் அடைவார்கள்... தமிழீழம் உடனே கிடைத்துவிடும் என்ற கனவோடும் வரக்கூடாது. போராட்டத் திற்குக் காலவரம்பு கிடையாது.. தனி ஈழம் கிடைக்க சர்வதேச சூழ்நிலைகள்கூட அனுசரணையாக இருக்க வேண்டிய நிலை உண்டு...

பிரபாகரன் கூறிவிட்டுச் சற்று உணர்ச்சி வசப்பட்டார்...

## போராடுவது எமது வரலாற்றுக் கடமை

''இலங்கையில் தமிழனாகப் பிறந்த தால் வாழும் நிலம் பறிக்கப்பட்டது. கல்வி பறிக்கப்பட்டது... பொருளாதார வசதிகள் மறுக்கப்பட்டன. இதை எதிர்த்துப் போராடாவிட்டால் ஜடம்தான். பிறகு ஒரு மனிதனாக வாழ்வதில் அர்த்தமில்லை... நாங்கள் போராடுவதை சரித்திரக் கடமை யாகக் கருதுகிறோம்.. பதவிகளையோ அல்லது எதையும் எதிர்பார்த்துப் போராட்டம் நடத்தவில்லை...''

சில நிமிடங்கள் அந்த ஹாலில் அமைதி நிலவியது... பேட்டி 'டெலோ'— விடு தலைப் புலிகள் மோதலைப் பற்றி திரும் பியது.

நாங்கள் கேட்டோம்:''இந்தமோதல்... சிறீயின் மரணம் ஆகியவற்றால் தமிழ் மக் கள் கசப்படைந்திருக்கிறார்கள். தமிழர்களி டையே ஒற்றுமை என்பதே இல்லையா? அந்தக் காலத்தில் சேர, சோழ,பாண்டியர் கள் என்று பிரிந்து மோதியதிலிருந்து இந்த நிலைமைதானா?''

''சேர, சோழ, பாண்டியர்கள் என்று பிரிந்து சண்டையிட்டதும் உண்மை. ஒரு கால கட்டத்தில் சோழர்கள் சேர, பாண் டியர்களை அடக்கியதும் உண்மை'' என் றார் பிரபாகரன் சுருக்கமாக. பிறகு தொடர்ந்தார்:

''எங்களிடம் வஞ்சகத்தன்மை இல்லை. இரண்டு எதிரியைச் சந்திக்க முடியாது. முதுகில் குத்திக் கொண்டிருந்தவர்களைக் கவனிக்க வேண்டிய நேரம் வந்து விட்டது. நிரம்ப தள்ளிப்போட்டு எடுத்த முடிவு தான் அந்த மோதல். சிறிய யுத்தமாகவே நடத்தித் தீர்வு காணவேண்டியதாயிற்று. நாட்டைக் காக்க யுத்தத்தில் இறங்கும் போது மெத்தனமாக முடிவெடுக்க முடி யாது. பகவத்கீதையும் அதைத்தான் சொல்கிறது. உற்றார், உடன்பிறப்பு, குரு, நண்பன் என்று யுத்தகளத்தில் இரக்கம் பார்ப்பதற்கில்லை.சொந்தத் தந்தை, சகோ தரன் போன்றவர்கள் துரோகியாக மாறி னால் அவர்களை அழிக்கத் தயங்காதவர் கள் எங்கள் இயக்கத்தில் இருக்கிறார்கள்.

அவர்கள் நிறைய பொய்களை அவிழ்த்துவிட்டவாறு இருந்தார்கள்...... உண்மை செருப்பை மாட்டிக் கொள்வதற் குள் பொய் பாதி உலகம் உலா வந்திருக் கும் என்பதற்கு ஏற்ப எங்களைப் பற்றிய பொய்ச் செய்திகள் பரப்பப்பட்டன. எனக் குப் பொதுவாகவே பிறரை விமர்சித்து அறிக்கை விடுவதெல்லாம் பிடிக்காது... அவர்களுக்குப் பதில் சொல்ல ஆரம்பித் தால் குழாயடிச் சண்டைபோல, அவலங்கள் வெளிவரும்!

நாங்கள் அவர்கள் இயக்கத்தவரை உயிரோடு கொளுத்தியதாகச் சொல்கிறார் கள். அப்படி எதுவும் என் இயக்கத்தில் நடக்காது அது நினைத்துப் பார்க்கவே இயலாத செயல். என் இயக்கத்தில் யாரா வது தெரிந்து தவறு செய்தால் அவர்களை

நான் மன்னிப்பதில்லை. ஆகவே இங்கே இருப்பவர்களுக்குத் தவறு செய்ய நிறைய துணிச்சல் தேவைப்படும்..!

பிரபாகரன் சொல்லி முடித்தார்.

''யாழ்ப்பாண மக்களிடம் விசாரியுங்கள் விடுதலைப் புலிகள் தவறு செய்வதாகச் சொல்லட்டும்.. மண்டியிடுகிறேன். சொல்லமாட்டார்கள்! மற்ற இயக்கத்தவர்கள் செய்யும் தவறுகளை மக்கள் வந்து சொன்னதாலேயே, தடியெடுத்தவன் தண்டல்காரனாக ஆகக்கூடாது என்பதாலேயே, 'டெலோ' மீது நடவடிக்கை எடுக்க வேண்டியதாயிற்று.

பிரபாகரன் எதிரில் ஒரு மருந்துக் குப்பி இருந்தது.

''அது என்ன?'' என்று கேட்டோம். இதில்தான் எனது இயக்கத்தவர்கள் சயனைட் நிரப்பி கழுத்தல் மாட்டிக் கொண்டிருப்பார்கள். எதிரிகளிடம் சிக்கினால் சயனைட்டைவாயில் போட்டுகொண்டுஉயிர்த் தியாகம் செய்வார்கள். பலர் செய்துமிருக்கிறார்கள்'' என்று சொல்லிவிட்டு ஏதோ நினைவுகளில் மூழ்கினார் பிரபாகரன்.

பிரபாகரனின் விடுதலைப்புலி இயக்கத்தைச் சேர்ந்த இளைஞர்கள் கெரில்லா யுத்தத்தில் ஈடுபடும்போது, ஒருகால் சிங்கள இராணுவத்தினரிடம் சிக்கிக் கொண்டாலும், ஒரு சிறு தகவலைக்கூட அவர்களிடமிருந்து கறந்துவிட முடியாது. காரணம், ஒவ்வொரு வீரரும் தன் கூடவே கொடிய விஷமான சயனைட் நிரப்பப்பட்ட சிறு குப்பி ஒன்றை வைத்திருக்கிறார். தப்ப முடியாத, நெருக்கடியான சூழ்நிலை ஏற்பட்டால் உடனே அந்த விஷத்தை விழுங்கி உயிர்த் தியாகம் செய்து விடுகிறார்கள்!

இப்படி சயனைட்டை விழுங்கி இறந்தவர்கள், அந்த இயக்கத்தில் முப்பது பேருக்கு மேலிருக்கும்! இராணுவ மோதல்களில் உயிர் விட்டவர்கள் எத்தனைபேர்! அவர்களுடைய இயக்கப் புத்தகத்தில் இந்த இளம் கொழுந்துகளின் புகைப்படங்களைப் பார்த்தபோது நம் கைகள் நடுங்கின. உள்ளம் அழுகுரல் எழுப்பியது. இந்த இழப்புக்களையெல்லாம் தாங்கிக்கொண்டு தொடர்ந்து கடமையாற்றும் அந்த லட்சியவாதிகளை வர்ணிக்க வார்த்தைகளைத் தேடவேண்டும்.

## விடுதலை இயக்கத்தில் சேர்ந்தது ஏன்?

விடுதலை இயக்கத்தில் பிரபாகரன் சேர்ந்தது ஏன்? அதற்கு என்ன பின்னணி? பிரபாகரன் சொன்னார்:

''ஒரு நாள் என் அம்மாவிடம் ஒரு பெண்மணி பேசிக்கொண்டிருந்தார். தனது மகள் திருமணத்துக்குப் பணம் திரட்டிக் கொண்டிருந்தார் அந்தப் பெண்மணி என்பது புரிந்தது அந்தப் பெண்மணியை உற்றுப் பார்த்தேன்; அவரது கால்கள் முழுவதும் நெருப்பில் எரிந்து கருகி விட்டிருந்தது. 1958-ல் நடந்த இனக் கலவரத்தில் அவர்களது குடும்பம் நாசமாக்கப்பட்ட கதையை அவர்கள் பேச்சிலிருந்து அறிந்தேன். என் இதயத்தில் அழுத்தமாகப் பதிந்து விட்டது அந்த நெருப்பில் கருகிய கால்கள்! அப்பொழுதெல்லாம் தமிழர்கள் படுகொலை செய்யப்படும் செய்திகள் வரும் கூடிக் கூடிப் பேசுவோம். பாணந்துறையில் குருக்களைக் கொலை செய்ததைப்பற்றி ஊர் பீதியுடன் பேசியது என் இதயத்தை இச்செய்திகள் தாக்கிச் சின்னாபின்னமாக்கும்.

நான் கடைக்குட்டி. வீட்டில் எல்லோருக்கும் செல்லப் பிள்ளை. வெளியே நடமாட விடமாட்டார்கள். புத்தகம்தான் துணை. நெப்போலியன், அலெக்சாந்தர், வீரசிவாஜி, நேதாஜி போன்றவர்களின் வரலாறுகளைப் படித்தவாறு இருப்பேன்.. வெளியே இருந்து என்னைத் தாக்கிய துயரச் செய்திகளும், இந்த வரலாறுகளைப் படிப்பதும் எனக்குள் மாற்றங்களைச் செய்தன

வல்வெட்டித்துறையில் நிரந்தர இராணுவ முகாம் உண்டு. கள்ளக் குடியேற்றம், கள்ளக்கடத்தல் ஆகியவற்றைத் தடுப்பது

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



இந்த இராணுவமுகாமின் நோக்கம். ஆனால், இராணுவத்தினர் அப்பாவிப் பொதுமக்களை அநாவசியமாகத் திடீரென்று தாக்குவார்கள். பொதுமக்கள் பாதிக்கப்பட்ட சம்பவங்களும் என் உள்ளத்தில் கொதிப்பை ஏற்படுத்தியது.

பிரபாகரனின் குடும்பத்தை இலங்கை அரசு 'ஒரு கை' பார்க்காமலா இருக்கும். அவரது வீடு இடிக்கப்பட்டது. அப்பாவுக்கு பென்ஷன் மறுக்கப்பட்டது. நாடோடியாகத் திரிய வேண்டிய கதி ஏற்பட்டது அவருக்கு.

போராட்ட வாழ்வின் நடுவே பிரபாகரன் திருமணம் புரிந்துகொண்டிருக்கிறார். மனைவி பெயர் மதிவதனி தன் ஒரே குழந்தைக்கு 'சாள்ஸ் அன்ரனி' என்று பெயரிட்டிருக்கிறார். இதற்கு ஒரு காரணம் உண்டு.

## ஆயுதங்களை இயக்குவதில் கைதேர்ந்தவர்

பிரபாகரனின் உயிர்த் தோழராக சாள்ஸ் அன்ரனி என்பவர் இருந்தார். தமிழர்களுக்காகப் போராடிய அந்தவீரரை இலங்கை இராணுவம் சூழ்ந்துகொண்டு வீழ்த்தியது. பிரபாகரன் கோபம் கொண்டார்! அன்ரனியின் உடையை அணிந்து, கையில் துப்பாக்கியோடும், கண்களில் தீப்பொறியோடும் பாய்ந்து வெளியே சென்று இலங்கை இராணுவத்தைச் சேர்ந்த பதின்மூன்று பேரை அழித்துப் பழிவாங்கினார்! அவர் நினைவாகத்தான் குழந்தைக்குப் பெயர்.

பிரபாகரன் கெரில்லாப் பயிற்சியை கியூபாவில் பெற்றதாகச் சொல்வார்கள். அதைப்பற்றிக் கேட்டபோது, அப்படியெல்லாம் வெளியே பேசப்படுவது உண்மை அல்ல.

சாதாரண துப்பாக்கியிலிருந்து நவீன ஆயுதங்களை இயக்குவதுவரை கைதேர்ந்தவர் பிரபாகரன்!

பிரபாகரனுக்கு ஓவியம், கார்ட்டூன் வரைவதில் ஆசை உண்டு... இயற்கைக் காட்சிகளும் வரைவார்! ''எங்கே ஏதாவது படம் போடுங்களேன்'' என்று கேட்டோம்.

சிறீலங்கா இராணுவத்தையே எதிர்த்துத்திணற வைக்கும் பிரபாகரன் சற்றுத் தயக்கத்துடன், ''நீங்கள் எதிரே இருப்பதால் பயமாக இருக்கிறது'' என்றார், மதனைப் பார்த்து.

பிறகு சில படங்களைக் குட்டியாகப் போட்டுக் காண்பித்தார். எந்தப் படத்தையும் 'நீற்றாக' முடித்து விட்டுத்தான் தலையை நிமிர்த்தினார்!



ஒரு காலில் நிற்கும் கொக்குப் படத்தை ஒரு நிமிடம் எடுத்துக்கொண்டு போட்டார்.

''இந்தப் படத்தில் ஒரு தவறு இருக் கிறது'' என்றார் மதன். ''என்ன''? என்று ஆவலுடன் கேட்டார் பிரபாகரன்.

''கொக்கின் கால் இப்படி உட்பக்க மாக மடங்காது என்றார் மதன்.

''அப்படியா...'' என்று சிரித்த பிர பாகரன், ''எத்தனையோ பிரச்சினைகள்... இனிமேல் கரெக்டாகப் போடுவேன்...'' என் றார், மதன் போட்ட திருத்தப் படத் தைப் பார்த்தவாறு.

விடைபெற வேண்டிய நேரம் வந்த போது, தமிழீழம் பற்றி மீண்டும் பேச்சு திரும்பியது. ''தமிழீழம் பெறும் நாளை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். எங்களுக் குத் தேவையான உதவிகள் கிடைக்கும் என்றால் ஈழத்தை அடைவது பெரிய விடய மல்ல'' என்றார்.

தன்னைச் சிலர் 'இந்திய எதிரி' என்று வர்ணிப்பதைப் பற்றிக் குறிப்பிட்டு, அந் தக் குற்றச்சாட்டைத் திட்டவட்டமாக மறுத்தார் பிரபாகரன்.

''இந்திய இராணுவம் நடவடிக்கையில் இறங்குவதில் உள்ள சிரமம் எங்களுக்குப் புரிகிறது. அதனால் இந்தியாவைச் சர்வ தேச நாடுகள் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடிய நிலைமை ஏற்படலாம்...''

''தனி ஈழம் அமைக்க சம்மதித்தால் அது தமிழ் இன நாடாக அமைந்து, இந் தியாவில் உள்ள தமிழ்நாடு பிரிவினை கோரும் கட்டம் வரலாம் என்று சில இந் தியத் தலைவர்கள் முன்பு கருதினார்கள். தனி ஈழம், தமிழ்நாட்டுப் பிரிவினையைத் தூண்டிவிடும் என்பது அபத்தம். இந்தியா என்ற மாபெரும் நாடு உலகத்துக்கே வழி காட்டும் அற்புதமானநாடு. உலகமே வியக் கும் விதத்தில் இந்தியாவில் ஜனநாயக ஆட்சி நடக்கிறது. மக்கள் குரலுக்கு தலை வணங்கும் ஆட்சி நடக்கிறது. சமஉரிமை கள் வழங்கப்பட்டுள்ளன. இந்நிலையில் பிரிவினைக்கோசம் இனி இந்தியாவில் எழு வதற்கே வாய்ப்பில்லை.

□□□

# இந்திய இராணுவத் தலையீடு தமிழீழத்தில் அவசியமில்லை

குறிப்பு:

பிரபல சர்வதேச ஆங்கிலச் சஞ்சிகையான 'நியூஸ் வீக்'கின் இந்திய செய்தியாளரான திரு. மசும்தாருக்கு தலைவர் பிரபாகரன் அளித்த இப்பேட்டி, 11-8-1986 திகதியிட்ட இதழில் பிரசுரமாகியது.

மசும்தார்:

உங்களது இராணுவத் தாக்குதல்களின் போது அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்படுவதாக உங்களது எதிரிகள் குற்றம் சுமத்துகிறார்கள். இதுபற்றி உங்களது கருத்து என்ன?

பிரபாகரன்:

தமிழீழ விடுதலைப் புலிகள் அப்பாவிப் பொதுமக்களைக் கொல்வதில்லை. இதுபோன்ற வன்செயல்களை நாம் கண்டிக்கிறோம். சில சந்தர்ப்பங்களில் சிங்கள ஊர்காவற்படையினரை நாம் தாக்கி அழித்திருக்கிறோம். இவர்களை அப்பாவிப் பொதுமக்கள் எனக் கூறமுடியாது. ஏனென்றால் இவர்கள் ஆயுதப் பயிற்சிபெற்றவர்கள். ஆயுதம் தரித்தவர்கள்.

மசும்தார்:

உங்களது இராணுவத் தலைமையின் கீழ் எத்தனை ஆயுதம் தரித்த போராளிகள் இருக்கிறார்கள்? அவர்கள் எங்கு பயிற்சி பெறுகிறார்கள்?

பிரபாகரன்:

அது இரகசியமான விடயம். ஆனால் ஒன்றை மட்டும் சொல்லலாம். 51,000 துருப்புகளைக் கொண்ட சிறீலங்காவின் இராணுவத்தை எதிர்த்துப் போராடக்கூடிய அளவிற்கு நாம் வலிமையுடையவர்கள். ஒரு நீண்ட கெரில்லாப் போரை தொடர்ந்து நடத்துவதற்கான ஆயுத பலம் எம்மிடமுண்டு.

மசும்தார்:

ஏனைய தமிழ்க் கெரில்லாக் குழுக்களைவிட விடுதலைப் புலிகள் இயக்கம் மிகப் பலம்வாய்ந்த தலையான சக்தியாக தலைநிமிர்ந்து நிற்பதற்குக் காரணம் என்ன?

பிரபாகரன்:

ஒழுக்கமும் கட்டுப்பாடும் எம்மைப் பொறுத்தவரை மிக முக்கியமானவை. அத்துடன் தனிப்பட்ட ஒழுக்

கத்தையும் தேசாபிமான உணர்வையும் நாம் வலியுறுத்துகிறோம். எதிரியின் கைகளில் அகப்பட்டுக்கொள்வதை தவிர்ப்பதற்காக எமது உறுப்பினர்கள் 'சைனைட்' வில்லைகளை வைத்திருக்கிறார்கள். இவை எல்லாவற்றையும்விட மக்கள் எமக்குப் பக்கபலமாக இருக்கிறார்கள்.

மசும்தார்:

உங்களது ஆயுதப் போராட்டத்திற்கு நிதி தேடுவதற்காக நீங்கள் போதை மருந்துகள் கடத்துவதாக உங்களது எதிரிகள் குற்றம் சுமத்துகிறார்கள். இது பற்றி என்ன சொல்கிறீர்கள்?

பிரபாகரன்:

எமது மக்களே எமக்கு நிதியுதவி வழங்குகிறார்கள். நாம் எமக்கு தேவையான ஆயுத தளபாடங்களையும் வெடிப்பொருள்களையும் எதிரியிடமிருந்து பறித்தெடுக்கிறோம். அத்துடன் சர்வதேச சந்தையிலிருந்தும் வாங்கிக் கொள்கிறோம். எமக்கு எந்த நாடும் உதவி செய்யவில்லை. நாம் இங்கு இந்தியாவில் அரசியல் அகதிகளாக இந்தியாவின் தார்மீக ஆதரவில் வாழ்ந்து வருகிறோம். நாம் எமது போராளிகள் மீது மிகவும் கண்டிப்பான ஒழுக்க விதிகளையும் கட்டுப்பாடுகளையும் விதித்திருக்கிறோம். எமது ஒழுக்க விதிகளின்படி மதுபானம் அருந்துவதே தடை செய்யப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, போதைவஸ்துகளை நாம் கடத்துவதாக எவர்தான் எம்மீது சந்தேகம் கொள்ள முடியும்? அத்துடன் போதைப்பொருள் கடத்தலை எமது இயக்கம் வன்மையாகக் கண்டித்து வருகிறது.

மசும்தார்:

நீங்கள் சியூபாவில் ஆயுதப் பயிற்சி பெற்றதாக பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. நீங்கள் எவ்விதம் இராணுவப் பயிற்சியைப் பெற்றீர்கள்?

பிரபாகரன்:

நான் தனிப்பட்ட முறையில், சொந்த முயற்சியால் பயிற்சியைப் பெற்றேன். நான் எனது இயல்பான திறனாற்றல் மூலமே செயல்படுகிறேன்.

மசும்தார்:

தமிழ் மக்களுக்கு அதிகாரப் பரவலாக்கம் வழங்குவது சம்பந்தமாக சிறீலங்கா அரசுக்கும், தமிழ் மிதவாதத் தலைவர்களுக்கும் மத்தியில் நடைபெற்றுவரும் சமீபத்திய பேச்சுவார்த்தைகள் பற்றி உங்களது கணிப்பீடு என்ன?

பிரபாகரன்:

சிறீலங்கா அரசினால் சமர்ப்பிக்கப்பட்ட யோசனைகள் பேச்சுவார்த்தைகளை ஆரம்பிப்பதற்கே போதுமானவையல்ல. பேச்சுவார்த்தைகளை ஆரம்பிப்பதற்கு அடிப்படையாக நான்கு மூலக் கோட்பாடுகளை நாம் அறிவித்திருந்தோம். தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழர் தன்னாட்சி உரிமை, தமிழர் குடியுரிமை ஆகிய அடிப்படைகள் முதலில் சிங்கள அரசினால் அங்கீகரிக்கப்படவேண்டும். இந்த நான்கு கோட்பாடுகளின் அடிப்படையில் ஒரு தீர்வுத் திட்டம் உருவாக்கப்பட்டால் நாம் பேச்சுக்களில் பங்குபற்றுவது பற்றி பரிசீலனை செய்யலாம்.

மசும்தார்:

தமிழரின் பிரச்சினையைத் தீர்ப்பதில் ஜனாதிபதி ஜெயவர்த்தனா எவ்வளவு ஆர்வமாக இருக்கிறார் என நீங்கள் நினைக்கிறீர்கள்?

பிரபாகரன்:

ஜெயவர்த்தனா முன்னெடுத்துள்ள இந்த சமாதான முயற்சியானது உலகத்தை ஏமாற்றுவதற்கு மேற்கொள்ளப்படும் ஒரு போலி நாடகம். இந்தப் பேச்சுக்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கும்

பொழுது 150க்கும் மேற்பட்ட அப்பாவித் தமிழர்கள் சிங்கள இராணுவத்தினால் படு கொலைசெய்யப்பட்ட சம்பவத்தைப் பார்க்கும்போது இப்பேச்சுக்கள் வெறும் கண்துடைப்பு என்பது தெளிவாகிறது. ஜெயவர்த்தனாவுடன் பேசுவதா? இரு தனி நாடுகளின் எல்லைகளை நிர்ணயிப் பது சம்பந்தமான பேச்சுவார்த்தை யாகவே அது இருக்க முடியும்.

மசும்தார்:

இங்கிருந்து நீங்கள் செயல்படுவதற்கு இந்தியா உங்களுக்கு ஏன் அனுமதி வழங்கியிருக்கிறது என நினைக்கிறீர்கள்?

பிரபாகரன்:

மனிதாபிமான அடிப்படைதான் காரணம். சிறீலங்காவில் தமிழருக்கு எதிரான ஒரு இனக்கொலை நடக்கிறது. நாங்கள் இந்த இனக்கொலைக்கு எதிராக எமது மக்களைப் பாதுகாக்க போராடு கிறோம் என்பது இந்தியாவுக்கு நன்கு தெரியும்.

மசும்தார்:

சீக்கிய பயங்கரவாதிகளுக்கு பாகிஸ்தான் பயிற்சி அளிக்கின்றதென புதுடில்லி குற்றம்சாட்டும் அதேசமயம், உங்களுக்கு புகலிடம் அளித்து 'பயங்கரவாதத் திற்கு' ஊக்கம் அளிப்பதாக இந்தியா மீது உங்கள் எதிராளிகள் குற்றம் சுமத்தி வருகிறார்கள். இதுபற்றி உங் களது அபிப்பிராயம் என்ன?

பிரபாகரன்:

இதில் அடிப்படையிலேயே வேறு பாடு இருக்கிறது. எமது மக்கள் ஒரு இன அழிவை சந்தித்து நிற்கிறார்கள். ஆனால் அதேசமயம் பஞ்சாப்பில் இந்திய இராணுவம் ஒரு இனப்படுகொலையை நடத்தவில்லை.

மசும்தார்:

இலங்கையின் இனப்பிரச்சினைக்கு பேச்சு வார்த்தை மூலம் தீர்வு காணப்பட வேண்டுமென்பதையே இந்தியா விரும்பு கிறது. உங்களின் தனித்தமிழ் அரசு அமைக்கும் கோரிக்கையை ஆதரிக்க வில்லை. இது பற்றி உங்கள் கருத் தென்ன?

பிரபாகரன்:

உலகம் மாறிக்கொண்டே வருகிறது. இதுபோல்தான் அரசியலும். மாறி வரும் சூழ்நிலைகளால் எங்களுடைய போராட்டத்தை இறுதியில் இந்தியா அங் கீகரிக்க வேண்டிய ஒரு நிலை வரும் என்ற நம்பிக்கையிலிருக்கிறோம். பல்வேறு விடு தலை இயக்கங்களை இந்தியா அங்கீகரித் திருக்கிறது. பலஸ்தீன விடுதலை இயக்க மான பி. எல். ஓ., ஆபிரிக்க விடுதலை இயக் கமான ஸ்வாப்போ ஆகிய இயக்கங்களை அங்கீகரித்ததுபோல் எங்களையும் கடைசி நேரத்தில் இந்தியா அங்கீகரிக்க வேண்டிய தொரு நிர்ப்பந்தம் ஏற்படக்கூடும்.

மசும்தார்:

அமெரிக்காவிடமிருந்து நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?

பிரபாகரன்:

இன ஒழிப்பை எதிர்நோக்கும் ஒரு தேசிய இனம் நாங்கள் என்பதை அமெரிக்க மக்கள் உணர்ந்துகொள்ள வேண்டுமென்பதே எமது விருப்பம். எங்கள் மக்களை அழித்தொழிப்பதற்கு உபயோ கப்படுத்தப்படும் சகல உதவிகளையும் சிறீ லங்கா அரசுக்கு வழங்குவதை நிறுத்த வேண்டுமென்று அமெரிக்க அரசைக் கேட் டுக் கொள்கிறோம்.

மசும்தார்:

உங்கள் சுதந்திர தமிழீழ அரசிற்கு என்ன விதமான அரசியல் முறையைக் கொண்டு வர உத்தேசித்திருக்கிறீர்கள்?

பிரபாகரன்:

நாங்கள் ஒரு சோஷலிச சமுதாயத்தை அமைக்க விழைகிறோம். இது சோவியத் யூனியனையோ, சீனாவையே வேறு எதைப்போலவுமே இராமல் தனித்துவமானதாக அமையும்.

மகும்தார்:

நீங்கள் சொல்லும் இனஒழிப்பை நிறுத்துவதற்காக இந்தியாவின் இராணுவத் தலையீட்டைக் கோரவேண்டுமென்று எப்போதாவது சிந்தித்ததுண்டா?

பிரபாகரன்:

இராணுவத்தை எதிர்த்துப் போராடக்கூடிய பலம் வாய்ந்த படை எங்களிடமிருப்பதால் இந்திய இராணுவத் தலையீடு அவசியமில்லை. உண்மையில் இந்தியாவின் தலையீடு மற்றும் சர்வதேச சக்திகளை சிறீலங்காவில் ஊடுருவச்செய்து மேலும் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி விடக்கூடும்.

□□□

99097

குறிப்பு:

பிரபல இந்திய ஆங்கில தினசரியான 'இந்து'வின் ஆசிரியர் திரு. ராமுக்கு. தலைவர் பிரபாகரன் அளித்த பேட்டியின் தமிழாக்கத்தை இங்கு தருகிறோம். இந்தப் பேட்டி 'இந்து'ப் பத்திரிகையில் 4-9-1986, 5-9-1986 ஆகிய திகதிகளில் பிரசுரமாகியது. மிகவும் முக்கியத்துவம் கொடுத்து பிரசுரிக்கப்பட்ட இப் பேட்டி பல இந்தியப் பத்திரிகைகளிலும் சஞ்சிகைகளிலும் மறு பிரசுரம் செய்யப்பட்டது.

தமிழீழத்தில் சமாதானமும் அரசியல் தீர்வும் ஏற்படுமா? கொழும்பு பேச்சுவார்த்தைகள் பயனுள்ளதாக அமையுமா? ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சிகர நோக்கங்கள் என்ன? தமிழர் தேசிய பிரச்சினைக்கு இறுதித் தீர்வு எப்படியாக அமையும்? விடுதலைப் புலிகளின் போர்முறைத் திட்டத்தின் இலக்குகள் என்ன? புலிகளின் அரசியல் கொள்கைத் திட்டம், சித்தாந்தம் எவ்வகையானது? இதுபோன்ற பல்வேறு கேள்விகளுக்கு தலைவர் மிகவும் தெளிவான விளக்கத்தை அளிக்கிறார். அத்தோடு அன்றைய அரசியல் - இராணுவ சூழ்நிலை பற்றியும் விமர்சிக்கிறார்.

தனது வாழ்க்கைப் பின்னணி பற்றியும், தனது ஆரம்ப கால சிந்தனை வளர்ச்சி, ஆயுதப் புரட்சிப் போராட்டத்திற்குத் தன்னைத் தூண்டிவிட்ட காரணிகள் போன்ற பல சுவாரஸ்யமான தகவல்களை தலைவர் இப்பேட்டியில் வெளியிட்டுள்ளார்.

# எனது வாழ்க்கைப் பின்னணியும் கொள்கையும் இலட்சியமும்

ராம்:

பிரபாகரன் அவர்களே! சிறீலங்காவின் தமிழ்ப் பகுதிகளில் நிலவும் இராணுவ நடவடிக்கைகள் பொதுமக்கள் எதிர் நோக்கும் பிரச்சினைகள் பற்றிய உங்கள் கருத்தென்ன? நெருக்கடியான இந்த நிலைமையின் அடிப்படைத் தன்மை என்ன?

பிரபா:

எங்கள் தாயகம் இராணுவத்தால் ஆக்கிரமிக்கப்பட்டு முற்றுகையிடப் பட்டுள்ள ஒரு பிரதேசமாகும். எங்கள் தாய் மண்ணை நீங்கள் பார்த்தால் சிறிய இடங்களில்கூட பெரிய இராணுவ முகாம்கள் இருப்பதைக் காண்பீர்கள். சில குறிப் பிட்ட பகுதிகளில் மிகப் பெரிய இராணுவ மையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இன்று கூட மட்டக்களப்பு மாவட்டத்தில் பாது காப்பற்ற ஐந்து அப்பாவிப் பொதுமக்களை இராணுவம் சுட்டுக் கொன்றுள்ளது. பொது மக்கள் பாதுகாப்புடன் வாழ முடியாத நிலை அங்கே! தெருவில் நடமாடும்போது எந்த நேரத்திலும் இராணுவத்தால் சுட் டுக் கொல்லப்படலாம் என்ற அச்சத்தோடு தான் மக்கள் வாழ்கிறார்கள்.

ராம்:

வடக்கில் - குறிப்பாக யாழ்ப்பாணத் தில், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம்தான் மிகப் பலம் பொருந் தியதென்றும் - நீங்கள்தான் அங்கு சிவில் நிருவாகத்தை முற்றாகப் பொறுப்பேற்று நடத்துகிறீர்கள் என் றும் இலங்கையின் தமிழ்ப் பகுதி களுக்குச் சென்றுவந்த வெளிநாட்டுப் பத்திரிகையாளர்களும் - பார்வை யாளர்களும் தரும் செய்திகள் கூறு கின்றனவே - இவை மிகைப்படுத்தப் பட்ட கூற்று என நினைக்கிறீர்களா?

பிரபா:

ஓரளவு இதில் உண்மையுண்டு. யாழ்ப் பாணக் குடாநாடு எங்கள் பரந்த கட்டுப்பாட்டின் கீழேதான் உள்ளது. அத் தோடு மன்னார் மாவட்டமும், கிளிநொச்சி மாவட்டமும் கூட எங்களது கட்டுப்பாட் டின் கீழுள்ள பிரதேசங்களாக மாறிவரு கின்றன என்று சொல்லலாம். கிழக்கில் - திருக்கோணமலை, மூதூர், மட்டக்களப்பு, அம்பாறை ஆகிய பகுதிகளிலும் நாங்கள் இயக்க நடவடிக்கைகளை விஸ்தரித்து எங் களைப் பலப்படுத்தி வருகிறோம்.

## தமிழீழ மக்களின் பாதுகாப்புப் படை

ராம்:

பொதுவாகப் பேசுவோம் - தமிழீழத் தில் ஏனைய ''போராளிகள் இயக்கங் கள்'' கொண்டுள்ள நிலைப்பாடும் ஈடு பாடும் பற்றி என்ன சொல்கிறீர்கள்? மற்றொருபுறம் - உங்கள் நடவடிக்கை கள் குறித்தும் இராணுவத்தினர் குறித்தும் இந்த இயக்கங்களின் நிலை என்ன?

பிரபா:

இராணுவத்தைப் பொறுத்தவரை - அது தமிழீழத்தில் ஒரு சிவில் நிர் வாகம் இருப்பதாகவே கருதவில்லை. இந்த நிலைதான் அங்கு உருவாகியுள்ளது. சிவில் நிர்வாக சமூக வாழ்வின் சாயல்கூட அங் கில்லை. வீடுகளில் மக்கள் அமைதியாக வாழமுடியாது. எந்த நேரத்திலும் அவர் களுடைய வீடுகள் தாக்கப்படலாம். இரா ணுவம் எந்த நேரத்திலும் அவர்களது கிராமங்களை வளைத்து அவர்களைச் சுட்டுக் கொல்லலாம். இப்படியான நிகழ்வு

களுக்கு அங்கே நீதி விசாரணை இல்லை. கொடுமைகளுக்கு எதிராக நீதி விசாரணை இல்லாத நிலையில் நிர்வாகம் பழமை போல் இயங்குகிறது என்று நாங்கள் சொல்ல முடியுமா? போராளிகள் இயக்கங்களைப் பொறுத்தவரை — எமது இயக்கம் தான் பரந்துபட்ட அளவில் தமிழீழ மெங்கும் ஆயுதப்போரை நடத்தி வருகிறது. அதே வேளையில் ஏனைய இயக்கங்கள் குறிப்பிட்ட சிறு நிலப்பகுதிகளிலேயே செயல்படுகின்றன. நாம் அனைவரும் மக்களின் தற்காப்புப் படையாக இயங்குகிறோம். அரசின் இராணுவம் ஓர் இனவாதப் பேரழிவுப் படையாகச் செயல்படும் அதேநேரத்தில், தமிழ் மக்களின் விடுதலைக்கான ஒரு தேசிய மக்கள் படையாக நாங்கள் எங்கள் போரை முன்னெடுத்துச் செல்கிறோம். ஒரு முக்கியமான விடயம் இராணுவம் மக்களைக் கொன்று வெறியாட்டம் ஆடுவதும், நாம் மக்களைக் காப்பாற்றப் போராடுவதுமான இந்த நிலைமை கிழக்கு மாகாணத்தில்தான் நிலவுகிறது. வடக்கை-குறிப்பாக - யாழ்ப்பாணப் பகுதியைப் பொறுத்தவரை இராணுவத்தின் இத்தகைய கொடிய வெறியாட்டத்தை நாங்கள் முற்றாகத் தடுத்து நிறுத்தியிருக்கிறோம். நாங்கள் ஏற்படுத்தி இருக்கும் முற்றுகையை அவர்களால் தகர்க்க முடியாது. முகாம்களுக்கு உள்ளேதான் இராணுவ வெறியர்கள் இப்போது முடங்கிக் கிடக்கிறார்கள். அங்கிருந்து பீரங்கிக் குண்டுகளை ஏவியும் - வானில் விமானத்திலிருந்து குண்டுகளைப் பொழிந்தும் அப்பாவிப் பொதுமக்களை அவர்கள் தாக்குகிறார்கள். வடக்கில் முகாமைவிட்டு வெளியே வந்து எந்தத் தாக்குதலையும் நேர் நின்று நிகழ்த்த முடியாதவர்களாய் அவர்கள் வக்கற்றிருக்கிறார்கள். வடமாகாணத்தில் எங்கள் முழுக் கட்டுப்பாட்டின் கீழ் இராணுவத்தினரை நாம் முடக்கி வைத்திருககிறோம்.

## மாம்பழம் கேட்ட இராணுவத்தினர்

**ராம்:**

**சிறீலங்கா இராணுவத்தின் கட்டுப்பாடு குறித்தும் - இப் பிரச்சினையில் அவர்கள அணுகுமுறை பற்றியும் என்ன கருதுகிறீர்கள்? ஓர் இராணுவமாய் இருந்தும் வடக்கில் முகாம்களிலே முடங்கிக் கிடக்கும் அவர்களின் மனோநிலை பற்றி என்ன நினைக்கிறீகள்?**

**பிரபா:**

உண்மை நிலையைச் சொல்வதாக இருந்தால் அவர்கள் மனம் குழம்பிப் போய் விரக்தியுற்றிருக்கிறார்கள். சில இடங்களில் இராணுவ அதிகாரிகளிடம் இருந்து மக்கள் குழுக்கள் மூலம் எங்களுக்கு வேண்டுகோள்கள் விடுவிக்கப்படுகின்றன. தொண்டமானாற்றில் இராணுவத்தினர் அவர்களுக்கான குடிநீர் விநியோகத்தைத் தடுக்கவேண்டாம் என்று எங்களைக் கேட்டுக்கொண்டார்கள். யாழ்ப்பாணத்தில் எங்கள் இயக்க அமைப்பாளர்களை அவர்கள் 'வயர்லஸ்' கருவி மூலம் தொடர்பு கொண்ட சந்தர்ப்பங்களும் உண்டு. ஒரு தடவை எங்கள் அமைப்பாளர்கள் ''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று 'வயர்லஸ்' மூலம் அவர்களைக் கேட்டார்கள். ''எங்களுக்கு இரண்டு லாரிகளில் விறகு அனுப்பி வையுங்கள். அத்துடன் மாம்பழங்களும் அனுப்புங்கள்'' என்று இராணுவ அதிகாரிகள் பதில் சொன்னார்கள். இந்த அளவுக்கு நாங்கள் ஏற்படுத்தியுள்ள விநியோகத் தடையினால் அவர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். நாங்கள் ஒரு 'லாரி' விறகு அனுப்பி வைத்தோம்.

**ராம்:**

**மாம்பழங்களும்?**

**பிரபா:**

(சிரிப்பு) உண்மையில் இராணுவம் அங்கு மிகவும் துன்பப்படுகிறது. முக்கிய தேவைப் பொருள்களின் விநியோகம் எங்களால் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதால் இந்த விடயத்தில் எங்களோடு ஏதாவது ஓர் உடன்பாட்டைச் செய்துகொள்ள அவர்கள் விரும்புகிறார்கள்.

**ராம்:**

**மே மாதத்தில் (1986 மே) வடக்கில், யாழ்ப்பாணத்தில் இலங்கை அரசு**

தன் சொந்த மக்கள் மீது விமானக் குண்டு வீச்சுத் தாக்குதலை நடத்தி- பாரிய இராணுவ நடவடிக்கை ஒன்றை மேற்கொண்டதே - உங்கள் கருத்தைக் கேட்கிறேன்- இதனுடைய விளைவு என்ன? மக்களை அச்சுறுத்துவதில் அரசு வெற்றி கண்டதா? உங்களுக்கு இதிலிருந்து ஏதேனும் படிப்பினை உண்டா? அல்லது நீங்கள் இதை உயிர்களோடு விளையாடும் வழ்மையான இராணுவத்தின் விபரீத வெறியாட்டம்தான் என்கிறீர்களா?

பிரபா:

எம்மைப் பலவீனப்படுத்த எடுக்கப்பட்ட நடவடிக்கையாகவே கருதுகிறேன். புதிய சுற்றுப் பேச்சுவார்த்தைக்குச் சற்று முன்பாகவே இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. தாக்குதலை நடத்தி முடித்த உடனே அவர்கள் எம்மோடு பேச விரும்பினார்கள்.

## சிறீலங்காவின் போர்த்தந்திரம்

ராம்:

சிதம்பரத்தின் கொழும்புத் தூதுப் பயணத்தை அடுத்து இது நடந்தது.

பிரபா:

ஆம், போர்த்தந்திரம்தான் இதில் முக்கியமானது. ஆனையிறவில் இருந்து இராணுவம் புறப்படும் அதே வேளை எங்களால் முடக்கி வைக்கப்பட்டிருக்கும் ஏனைய முகாம்களில் இருந்தும் இராணுவம் புறப்படும். அப்படிப் பலதிசைகளிலும் இருந்து ஒரே நேரத்தில் பெருந்திரளாய் முன்னேறும் இராணுவத்தின் நடுவில் நாங்கள் வசமாக மாட்டிக்கொள்வோம் என்று அவர்கள் கணித்தார்கள். நான்கு புறமும் சுற்றி வளைப்பதன் மூலம் நாங்கள் சில தளங்களை விட்டுப் பின்வாங்க வேண்டி வரும் என்றும்— சில இடங்களில் அவர்களால் முன்னேற முடியாமல் போனாலும்—இருக்கும் நிலையில் ஓர் மாற்றம் ஏற்படும் வகையில் பிடித்த இடங்களில் புதிய முகாம்களை நிறுவி முன்பே உள்ள பழைய முகாம்களோடு விநியோகத் தொடர்புகளை உருவாக்கிக்கொண்டு— அந்த நிலையில் இருந்து போரைத் தொடர்ந்து அவர்களால் முன்னெடுத்துச் செல்லக்கூடியதாக இருக்கும் என்று அவர்கள் கருதினார்கள். இப்போர்த் தந்திரம் இன்னொரு அம்சத்தையும் உள்ளடக்கியிருந்தது. அவர்கள் தரை மார்க்கமாக எங்களைத் தாக்கும் அதே நேரத்தில் கடற்படை மூலம் கடலில் இருந்து எம்மைத் தாக்கவும் — விமானப்படை மூலம் குண்டுகள் வீசவும் திட்டமிடப்பட்டது. சிறீலங்காவின் முப்படைகளும் இணைந்து மேற்கொள்ளும் படையெடுப்பாகவே அதைத் திட்டமிட்டு நடத்தினார்கள்.

எனினும், முன்பே இராணுவத்தின் இத்திட்டம் பற்றி அறிந்திருந்ததால் நாங்கள் எச்சரிக்கையாகவே இருந்தோம். கடலிலும் தரையிலும் படைகளின் புதிய நடமாட்டங்கள் — ஆயுதப் பெருக்கம்— இராணுவத்தினரின் பிற ஏற்பாடுகள் எல்லாம் முன்பே எங்களுக்குத் தெரிந்திருந்தது. ஓர் பாரிய தாக்குதலுக்கு அவர்கள் தயாராகிறார்கள் என்று புரிந்து கொண்டோம். இந்நிலைமையைச் சந்திக்கும் வகையில் நாங்கள் எமது படையைத் தயார் செய்தோம். கிட்டத்தட்ட ஓர் உள்நாட்டுப் போருக்காக எங்களை நாங்கள் ஆயுதபாணிகளாக்கிக் கொண்டோம். ஆபத்தான இந்த நிலையைச் சந்திக்க மக்களை ஆயத்தம் செய்தோம். விமானக் குண்டுவீச்சில் இருந்து அவர்கள் தங்களைக் காத்திட பாதுகாப்புக் குழிகளை அமைப்பது எப்படி என்பதையும் மக்களுக்கான ஏனைய காப்பு வழிமுறைகளையும் அவர்களுக்கு நாங்கள் கற்றுக் கொடுத்தோம். எந்த ஆபத்தையும் சந்தித்து இராணுவத்தின் தாக்குதலை முறியடித்துக் காட்டுவது என உறுதி பூண்டோம். எமது தரப்பில் பெரிய அளவிற்கு உயிர்ச்சேதம் ஏற்பட்டாலும் இந்தப் போரில் எதிரிக்கு விட்டுக்கொடுப்பதில்லை என்பதே எமது தீர்க்கமான முடிவாக இருந்தது. இயக்க வீரர்கள் வீராவேசத்தோடு எல்லா முனைகளிலும் இராணு

13980

வத்தினருடன் மோதியதற்கு இந்த முடிவு தான் காரணம் என்பேன். ஒருவர்கூட எம்மவர் இப்போரில் பின்வாங்கி ஓட வில்லை. விளைவு — எங்கள் வீரர்களில் ஒன்பது பேரை நாங்கள் இழந்தோம். நாங்கள் இராணுவத்தைத் தாக்கிய போது முகாம்களைவிட்டு வெளியே வர முயன்ற அவர்கள் ஆங்காங்கே தனிமைப்படுத்தப்பட்டு சிதறடிக் கப்பட்டார்கள். கிளிநொச்சி முகாமில் இருந்துவந்த இராணுவத்துடன் பளை என்ற இடத்தில் நாங்கள் மோதினோம். இச்சந்தர்ப்பத்தில் இராணுவம் ஆனை யிறவு முகாமிலிருந்து உதவிக்கு வரமுயன் றது. நாங்கள் அவர்களைத் தடுத்து நிறுத் தினோம். இப்போரில் தமிழ் ஈழ மக்கள் காட்டிய ஆர்வத்தை— உற்சாகத்தை என் னால் குறிப்பிடாமல் இருக்கமுடிய வில்லை. எமது வீரர்களின் எதிர்த் தாக்கு தலைக் கண்டு உணர்ச்சி வசப்பட்ட மக் கள் இப்போரின் போது முழு ஒத்து ழைப்பை எமக்கு வழங்கினார்கள்.

**ராம்:**

**தமிழீழ விடுதலைப் புலிகளைப் பொறுத்தமட்டில் - நீங்கள் உங்கள் ஆற்றலை வெளிக்காட்டிய இந்தப் போர் நிகழ்ச்சி உங்கள் இயக்கத்தின் தகுதிநிலையில் ஓர் மாற்றத்தைக் கொண்டுவந்திருக்கிறது. உங்கள் மதிப்பு உயர்ந்திருக்கிறது.**

**பிரபா:**

ஆம் - இந்த அனுபவம் மக்களி டையே ஓர் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. விடுதலைப் புலிகளுக் கும் 'ரெலோ' இயக்கத்துக்கும் இடை யிலான மோதல்கள் அப்போதுதான் முடி வடைந்திருந்தன. நாங்கள் 'ரெலோ'வை மோதி அழித்துவிட்டதால் மொத்தமான தமிழர் விடுதலை இயக்கம் களைத்து பல வீனப்பட்டுவிட்டது என்று சிறீலங்கா அரசு நினைத்தது. இந்தச் சூழ்நிலையில் அரசு போரைப் பிரகடனம் செய்தபோதும் நாங் கள் எதிர்த் தாக்குதல் நடத்தி களத்தில் நின்று இராணுவத்தை வென்றதால் - மக் களின் விடுதலைக்காக களத்தில் உறுதி யோடு போராடிய எம்மீது மக்கள் நம் பிக்கை மேலும் கூடிற்று. இப்போர் நிகழ்ச்சி யின் பின்பு - மக்கள் முன்னர் வழங்கியதைப் பார்க்கிலும் கூடுதலான ஆதரவை - இன்று எமது இயக்கத்துக்கு வழங்கி வரு கிறார்கள்.

## வெளிநாட்டிலிருந்து இராணுவ ஆலோசகர்கள்

**ராம்:**

**எதிர்காலத்தில் சிறீலங்கா அரசின் திட் டம் என்னவாக இருக்கும் என்று உங் களால் முன்னுணர்வோடு பார்க்க முடி யுமா? கொழும்பில் பேச்சுவார்த்தை நடைபெற்றிருக்கிறது. இந்த நிலையில் எதிர்வரும் நான்கு அல்லது ஆறு வார காலத்திற்குள் என்ன நடக்கக்கூடும் என்று எதிர்பார்க்கிறீர்கள்?**

**பிரபா:**

பேச்சுவார்த்தை தொடங்கிய நேரத்தி லேயே (சிறீலங்கா அரசுக்கும் தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும் இடையில் ஜூலை மாதத்தில்) - முன்பு மேற்கொண்ட பாரிய இராணுவத் தாக்குதல் நடவடிக்கை யைப் போல மீண்டும் புதிதாய் ஒரு படை யெடுப்பை மேற்கொள்ள முப்படைகளும் ஆயத்தம் செய்துகொண்டிருப்பதாக எங் களுக்கு ஒரு தகவல் கிடைத்தது. பாகிஸ் தானில் பயிற்சி பெற்ற சிறீலங்கா இரா ணுவ வீரர்களுக்கு பாகிஸ்தானிலிருந்து ஆயு தங்கள் மறைவாக வந்து இறங்கிக் கொண் டிருந்ததை அறிந்தோம். வெளிநாட்டு இராணுவ ஆலோசகர்கள் வரவழைக்கப் பட்டிருப்பதாகவும் சீனாவில் இருந்து பீரங் கிப் போர்ப் படகுகள் வந்து சேர்ந்துள் ளன என்றும் தகவல்கள் கிடைத்துள்ளன. ஆகவே - வெளிநாட்டு இராணுவ ஆலோ சகர்களின் உதவியோடு - முன்பு தங்களுக்கு ஏற்பட்ட தோல்வியை மறைக்க - இம்முறை ஒரு மிகப் பெரிய தாக்குதலை இராணு வம் நடத்தக்கூடும் என நாங்கள் எதிர் பார்க்கிறோம். இதற்கான உறுதியான சான்றுகள் எம்மிடம் இல்லை - ஆனால் இப்படித்தான் நாங்கள் ஊகிக்கிறோம்.

ராம்:

இனி நாம் கொழும்பு பேச்சுவார்த்தைக்கு வருவோம். சிறீலங்கா அரசுக்கும் தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும் இடையில் நடைபெறும் பேச்சுவார்த்தை பற்றிய உங்கள் கணிப்பு என்ன? இப் பேச்சுவார்த்தையின் விளைவு என்னவாக இருக்கும் என்று நினைக்கிறீர்கள்?

பிரபா:

பேச்சுவார்த்தை இன்னும் உரிய வடிவம் பெறவில்லை என்பதே எமது கருத்தாகும். நாங்கள் அறிந்தவரை பேச்சுவார்த்தைக்குப் போயிருக்கிறவர்கள் கூடதம்மளவில் ஒரு தெளிவான திட்டத்தை - திட்ட வடிவை (Frame Work) உருவாக்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. பேச்சுவார்த்தைக்குப் போனவர்கள் திட்டத்தை-திட்டவடிவை தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

ராம்:

பத்திரிகைச் செய்திகளின்படி தமிழர் விடுதலைக் கூட்டணித் தலைவர்களில் ஒருவர் ''இருட்டு அறையில் கறுப்புப் பூனையைத் தேடுவதுபோல் நிலைமை இருக்கிறது'' என்று கூறியிருக்கிறாரே?

பிரபா:

இதைப்பற்றி அவர்களிடம்தான் கேட்கவேண்டும் அவர்களிடம் ஒரு 'திட்ட வடிவம்' இல்லை. தாய் நாடுபற்றி இவர்கள் பேசுகிறார்கள். எமது தாய் நாடு எது? தாய்நாடு பற்றி ஒருவர் எவ்வாறு பேசவேண்டும்? மாகாணங்கள் - மாகாண சபைகள் என்றா? இவற்றுக்கு மேலான அதிகாரங்கள் கொண்ட ஒன்றை அவர்கள் மனதால் எண்ணிப் பார்க்க வேண்டாமா? இவை குறித்து அவர்களிடம் ஒரு தெளிவான திட்டம் இருப்பதாகத் தெரியவில்லை.

## கூட்டணித் தலைவர்களின் பேச்சுவார்த்தை

ராம்:

தொடக்கத்தில் நீங்கள் தமிழர் விடுதலைக் கூட்டணியோடு ''பேச்சுவார்த்தை'' குறித்துக் கலந்து பேசி இருக்கிறீர்கள். பேச்சுவார்த்தை மூலம் தீர்வுகாண எடுக்கப்படும் முயற்சிகளைக் குழப்பமாட்டோம் என்று இந்திய அரசுக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறீர்கள். இந்த நிலையில் இருந்து நீங்கள் மாறக் காரணம் என்ன?

பிரபா:

இந்திய அரசு முன்னின்று நடத்திக் கொண்டிருக்கும் பேச்சுவார்த்தை குழம்பக்கூடாது என்ற நல்லெண்ணத்தால் தான் தமிழர் விடுதலைக் கூட்டணியின் பேச்சுவார்த்தை பற்றிய எங்கள் கருத்தை வெளிப்படுத்தாமல் இருந்தோம். அதே வேளை - தமிழர் விடுதலைக் கூட்டணியினர் முதல் சுற்றுப் பேச்சுவார்த்தையில் என்ன நடந்தது என்பதை எங்களைச் சந்தித்து – எடுத்து விளக்கிவிட்டு - ஆலோசனை பெற டெல்லி போனார்கள். ஆனால் அங்கிருந்து திரும்பவும் கொழும்பு சென்றவர்கள் எங்களைக் கலந்தாலோசிக்காமலே போய்விட்டார்கள். ''எந்த முடிவுக்கும் வர இயலாதவர்களாக இருக்கிறோம்'' என்று தான் எங்களோடு பேசிய நேரத்தில் அவர்கள் சொன்னார்கள். தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும் - தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும் இடையில் நடந்த இப்பேச்சுவார்த்தைகளின் விளைவாக எமது மக்கள் மனதில் ஒரு குழப்பம் ஏற்படத் தொடங்கிற்று. சிறீலங்கா அரசோடு எந்தத் திட்டமும் இல்லாத நிலையில் தமிழர் விடுதலைக் கூட்டணி நடத்தும் பேச்சுவார்த்தைகளுக்கு நாங்களும்(விடுதலைப் புலிகள்) உடன்பாடுதானோ என்ற ஐயம்-மனக்குழப்பம் மக்களுக்கு ஏற்பட்டதால் - மக்களின் இந்தக் குழப்ப மனநிலையைக் களைய எமக்கும் தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும் உள்ள தொடர்பின் தன்மை பற்றி

பொது அரங்கில் விளக்கவும் பேச்சுவார்த்தையைப் பொறுத்தவரை தமிழர் விடுதலைக் கூட்டணியின் சுயவடிவத்தை வெளிச்சத்துக்குக் கொண்டுவரவும் வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டோம்.

ராம்:

கொழும்பு பேச்சுவார்த்தையைத் தொடர்ந்து - "போராளிகள் இயக்கங்களும்" இனி வருங்காலத்தில் பேச்சுவார்த்தைகளில் கலந்துகொள்ளும் என்ற பொதுவான ஒரு கருத்து அரசியல் மட்டத்தில் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் நிலவுகிறது. இந்திய வெளிநாட்டு அமைச்சர் சிவசங்கர் இப் பேச்சுவார்த்தையைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு உங்களுக்கு அழைப்பு விடுத்திருக்கிறார் என்று கருதுகிறோம். அப்படி ஓர் நிலை வருமானால் - பேச்சுவார்த்தையின் உள்ளடக்கங்களோ விளைவுகளோ பற்றி உங்களுக்கு எடுத்துச் சொல்லப்படும். அவற்றை ஏற்றுக் கொள்வீர்களா? தள்ளி விடுவீர்களா?

பிரபா:

முதலில் ஏனைய 'போராளிகள் இயக்கங்களோடு' சேர்ந்து - இந்த விடயத்தில் என்ன முடிவைத் தொடர்ந்து எடுக்கலாம் என்பது பற்றிய ஒரு 'பொதுக் கருத்தை' உருவாக்க வேண்டும் என்றுதான் நாங்கள் நினைக்கிறோம். ஆனால் ஒரு பிரச்சினை. பேச்சுவார்த்தைக்குப் போனவர்கள் குழம்பிய நிலையில் போயிருக்கிறார்கள் என்றே பத்திரிகைகள் கூறின. என்ன விளைவு ஏற்படும் என்பதை அவர்கள் ஆராயவில்லை. நிலம் போன்ற முக்கியமான விடயங்களில் அவர்கள் எந்த உறுதியான முடிவையும் கொண்டிருக்கவில்லை. உண்மை இதுதான் என்றால் - இது அர்த்தமற்ற ஒன்றாக உங்களுக்குப் படவில்லையா? பேச்சுவார்த்தைக்குப் போனவர்கள் தெளிவாய் இல்லை - குழம்பிக் கிடக்கிறார்கள்.

## இந்திய அரசின் சமரச முயற்சி

ராம்:

கொள்கை அளவில் பிரச்சினைகளை நேரடியாகப் பேசுவதற்கு நீங்கள் தயங்கவில்லை என்று முன்பும் இப்போதும் இந்திய அரசுக்கும் எடுத்துச் சொல்லியிருக்கிறீர்கள். இப்பிரச்சினையில் இந்திய அரசின் ஈடுபாடு உருப்படியான பயனுள்ள வகையில் அமையுமானால் பேச்சுவார்த்தைக்கு நீங்கள் எதிராக நிற்கமாட்டீர்கள் என்றுதானே இதற்குப் பொருள் - சரியா?

பிரபா:

திம்பு பேச்சுவார்த்தை நடைபெற்ற போது அதுதான் நிலை. ஆனால் இன்னொன்றையும் நாங்கள் வலியுறுத்த விரும்புகிறோம். ஜெயவர்த்தனா தமிழ் மக்களுக்கு எதை வழங்கப்போகிறார் என்ற அனுமானத்துடன் இந்திய அரசு எங்களைப் பேச்சுவார்த்தைக்கு வலியுறுத்துகிறது. ஆனால் இதில் ஒரு நியாயமான நிலை இருக்கவேண்டும். தமிழ் மக்களின் அத்தியாவசிய தேவைகள் என்ன என்பதை அடிப்படையாக வைத்து ஜெயவர்த்தனா பேச்சுக்கு அழைக்கப்பட வேண்டும். நான் உறுதியாகச் சொல்கிறேன். என்னைப் பொறுத்தவரை வடக்கு - கிழக்கு பற்றிய பிரச்சினை ஓர் அடிப்படையான பிரச்சினை-இந்தப் பிரச்சினையைப் பேச்சுவார்த்தைக்கான நிகழ்ச்சி நிரலிலிருந்து நீக்கிவிட்டு ஜெயவர்த்தனா தமிழர் விடுதலைக் கூட்டணியைப் பேச்சுவார்த்தைக்கு அழைத்தால் - அந்தப் பேச்சுவார்த்தையில் ஏதாவது அர்த்தமுண்டா? ஜெயவர்த்தனா எங்களுக்கு என்ன தர விரும்புகிறார் என்பதை இந்திய அரசு பரிசீலனை செய்வதை விடுத்து, இரு சாராரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒரு அடிப்படையைக்காண இந்திய அரசு முயலவேண்டும். இதுதான் பயன் தரக்கூடியது என்பது எமது கருத்து.

முன்பே இதுகுறித்து உங்களுடன் பேசியிருக்கிறேன். சில விடயங்களில் இந்தியா

வெளிப்படையான, திட்டவட்டமான நிலைப்பாட்டைக் கொண்டிருந்தால் அது எங்களுக்கு உதவியாக இருக்கும். எடுத்துக் காட்டாக— தமிழர் விடுதலைக் கூட்டணி யினர் நிலப் பிரச்சினையில் கூட இன்னும் ஒரு முடிவுக்கு வந்ததாக இல்லை. 'சட்டம்' ஒழுங்கு விடயத்தில் கூட முரண்பாடுதான் காணப்படுகிறது. இன்னொரு விதத்தில் சொல்லப்போனால் உருப்படியில்லாத் திட்டம் ஒன்றை தந்து எங்களை ஏமாற்றி விட்டு ஜெயவர்த்தனா ஆதாயம் பெறப் பார்க்கிறார். தமிழர் பிரச்சினையில் ஜெய வர்த்தனா தீவிரமான அக்கறை காட்டுவ தாக எனக்குத் தெயவில்லை.

ராம்:

1983ஆம் ஆண்டு ஜூலையில் நிகழ்ந்த தமிழினப் படுகொலைக்கு பின்பு நடை பெற்ற எல்லாப் பேச்சு வார்த்தைகளை யும் உற்றுநோக்கினால் பல்வேறு விட யங்களை நாம் கவனிக்கலாம். எல்லா விடுதலை அமைப்புகளும் — ஒருபுறம் — தமிழீழக் கோரிக்கையில் உறுதியாய் நிற்கும் அதே வேளை— இந்திய அரசு வேறு திசையில் இப்பிரச்சினையை அணுகி வந்திருக்கிறது. உதாரணமாக 'இணைப்பு - சி' சமரசத் திட்டம். இதில் போதுமான அளவு அதிகாரப் பகிர்வும் தன்னாட்சி உரிமையும் மாகாண சபை களுக்கு வழங்கப்பட்டன. (இவை பிர தேச சபைகளாகவும் அழைக்கப்பட்டன) இதுதவிர சில கட்டங்களில் —பேச்சு வார்த்தைகளில்— ''சமஷ்டி முறை'' பற்றியும் எடுத்துச் சொல்லப்பட்டது. 1985 மார்கழியில்—தமிழர் விடுதலைக் கூட்டணியினர் உண்மையில் 'சமஷ்டி ஆட்சி முறை'யைத்தான் தமிழீழத் துக்கு மாற்றுத்திட்டமாக வைத்தார்கள். 1984 இல்— அனைத்துக் கட்சிகள் மாநாட்டில் இதற்கும் குறைவான உரிமைகள் வழங்கும் திட்டத்தையே சிறீலங்கா அரசு முன்வைத்தது. அதைத் தமிழர் விடுதலைக் கூட்டனி மறுத்த பின்பும் -திரும்பத் திரும்ப இக்குறைந்த பட்சத் திட்டத்தையே சிறீலங்கா அரசு வலியுறுத்திற்று. முன்னோக்கிப் போவ தும்- பின் சாய்ந்து தளர்வதுமாக பேச்சுவார்த்தைகள் அசைந்தசைந்தே நடை போட்டிருக்கின்றன. நீங்கள் தமி ழீழக் கோரிக்கையைத் தமிழர்களின் அசைக்க முடியாத ஒற்றைத் தீர்வாகக் கருதுகிறீர்களா? அல்லது - பேச்சுவார்த் தையின்போது சரியான மாற்றுத் திட்டம் வருகின்றவரை தமிழீழக் கோரிக் கையை பேரம் பேசுவதற்காக முன் வைத்திருக்கிறீர்களா? உங்கள் பிரச்சினை யில் இந்தியா கொண்டுள்ள நிலைப் பாட்டைத் தெரிந்திருந்தும் - இன்றைய அரசியல் சூழலில் தமிழீழ விடுதலைப் போரை நடத்தி வெல்ல முடியும் என்று நம்புகிறீர்களா?

பிரபா:

நிச்சயமாக நம்புகிறேன். நீங்கள் எங் கள் வரலாற்றுப் பின்னணியைக் கவ னித்தால் - 30 ஆண்டு காலப் போராட்ட அனுபவமே எம்மை இன்று இந்த உறுதி யான கொள்கைக்குக் கொண்டு வந்துள்ளது என்பதை உணர்வீர்கள். தமிழீழம் ஒன்றுதான் எங்களுக்குப் பாதுகாப்பான தீர்வாக இருக்க முடியும். இதற்கு வேறு மாற்றுத் திட்டம் எதுவுமில்லை என்றே நாங்கள் கருதுகிறோம். வரலாற்று ரீதியாக, படிப்படியாக, பரிணாமம் பெற்றே இறுதியில் தமிழீழக் கோரிக்கை உருவானது. 1961 இல் எமது மக்கள் 'சமஷ்டி அமைப்பு' ஒன்றைக் கோரிக்கை யாக வைத்து - நடத்திய சத்தியாக்கிரகத் தில் - தமிழீழப் பகுதிகளில் இயங்கிய அரச நிர்வாகம் ஸ்தம்பிதமடைந்தது. 1961ஆம் ஆண்டிலேயே 'சமஷ்டி' அமைப்புக்கான போராட்டம் மிகவும் கூர்மையடைந்து தீவிரமாகியிருந்தது. (ஒரு ஏளனச் சிரிப்பு டன்) இன்று நிகழ்வது, பின்னோக்கிய நடைமுறையாகவே எனக்குப் படுகிறது. இன்று பேசப்படுவது - 1957 இன் - பண்டா- செல்வா உடன்படிக்கையின் உள்ளடக் கத்தை விடக் குறைவானதே. 'சமஷ்டி' அமைப்பு தீர்வைவிட இது மிகக் குறை வானது. இன்று மாகாணம் பற்றியும், மாகாண சபை பற்றியும் பேசுகிறோம். நீங்கள் இதை சரியான முறையில் விமர் சித்துப் பார்த்தால், ஜெயவர்த்தனா இந் தப் பிரச்சினையை மிகவும் பின்னோக்

கிய முறையில் அணுகுகிறார் என்பது புலனாகும். பேச்சுக்களின்போது அவர் முன்வைத்த திட்டங்கள் இதை தெளிவாகக் காட்டுகிறது. 1961 இல் தங்கள் பிரச்சினைக்கு 'சமஷ்டி ஆட்சிமுறை' பொருத்தமான தீர்வாக அமையும் என்று மக்கள் ஆவலோடும் உற்சாகத்தோடும் எதிர்பார்த்தார்கள். இதனைத் தொடர்ந்து நீண்ட காலமாக பெரும் துன்பங்களையும், பெரும் இழப்புகளையும், பெரும் நெருக்கடிகளையும் எமது மக்கள் எதிர்நோக்க வேண்டியிருந்தது. சிங்கள இனவாத அரசியல்வாதிகளை மாறி மாறி, நம்பி ஏமாந்த எமது தலைவர்களால் இந்த நிலை ஏற்பட்டது.

ஜெயவர்த்தனா-சிறிமாவோ பண்டாரநாயக்கா ஆகியோரின் இன்றைய நிலை நமக்கு, எதைக்காட்டுகிறது? ஒரு 'மாகாண சபை' பற்றியே இன்றைய பேச்சுவார்த்தை அமைந்துள்ள போதிலும் சிறிமாவோ பண்டாரநாயக்கா அதை எதிர்க்கிறார் -பிற சிங்களக் கட்சிகளும் எதிர்க்கின்றன. ஓரளவு தமிழர்களுக்கு உரிமை வேண்டும் என்று கூறும் விஜயகுமாரணதுங்க போன்ற சிங்களத் தலைவர்களின் கூட்டத்தில்வெடிகுண்டுகள்வீசப்படுகின்றன. பேரினவாதமும்- இனவெறியும் தலைவிரித்தாடும் வரை எமது பாரம்பரிய தாயகமான தமிழீழத்தில் எமக்கென ஒரு சொந்த அரசை அமைப்பதைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை. இதற்கு ஒரு சரியான மாற்றுத் திட்டத்தை ஜெயவர்த்தனாவோ- அல்லது இந்திய அரசோ முன்வைத்தால், நாம் அதை எமது மக்களின் பரிசீலனைக்கு விட்டு, அவர்கள் அதை ஏற்றுக்கொள்வார்களானால் நாங்கள் எமது நிலையை மாற்றுவது பற்றிச் சிந்திக்கலாம். ஆனால் நாம் இந்த வகையில் சிந்திப்பதற்கான முறையில் அப்படி ஒன்றும் நடைபெறவில்லையே? ஆனால் சமீபகாலமாக நாம் எதைக் காணக்கூடியதாக இருக்கிறது? இனவெறியரின் தமிழர் ஒழிப்பு வெறியாட்டங்கள் அங்கு தாண்டவமாடின. பேரினவாதமும் - இனவெறியும் அங்கே அரசியலை மிஞ்சி நிற்கின்றன. ஓர் அரசியல் தீர்வு வந்துவிடும்போல் இருக்கும் நேரம் பார்த்து இனவெறிக் கிளர்ச்சிகள் வெடிக்கின்றன. 1958ஆம் ஆண்டு தொடக்கம் இது தான் நாங்கள் பெற்ற அனுபவம்.

**ராம்:**

**ஆளும் கட்சியிலும் எதிர்க்கட்சியிலும் உள்ள சிங்கள அரசியல்வாதிகளைப் பற்றிய உங்கள் கருத்தை நான் அறியலாமா? இலங்கை அரசியலில் இனவாத மற்ற - அல்லது இனவாதத்துக்கு எதிரான முற்போக்கு சக்திகள் உண்டா? தென்னிலங்கை அரசியல் அரங்கு பற்றி என்ன கருதுகிறீர்கள்.**

பிரபா:

நீண்டகால அரசியல் அனுபவத்தின் அடிப்படையில் பார்ப்போம். சிங்கள அரசியல் கட்சிகளை எடுத்துக்கொண்டால் இலங்கைத் தீவு சுதந்திரம் பெற்றதாகச் சொல்லப்பட்ட நாளில் இருந்து இன்று வரை ஐக்கிய தேசியக்கட்சியும் சிறீலங்கா சுதந்திரக்கட்சியுமே மாறி மாறி ஆட்சி நடத்தியுள்ளன. இந்த இரு கட்சிகளும் எவ்விதத்திலும் எங்கள் பிரச்சினையைத் தீர்ப்பதில் அக்கறை காட்டவில்லை. எமது போராட்டம் சிறிமாவோ அம்மையார் பிரதமராக இருந்த காலத்தில் துவக்கப்பட்டது என்பதைக்கூட இங்கே சுட்டிக்காட்டலாம். தீவிரவாதப் போராட்டம் 1972ஆம் ஆண்டில்தான் கூர்மையடையத் தொடங்கியது. இந்த ஆண்டு எங்கள் அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் புதிய அரசியல் அமைப்பு உருவாக்கப்பட்டது. பழைய அரசியல் அமைப்பில் தமிழர்களுக்கு வழங்கப்பட்டு இருந்த கொஞ்ச உரிமைகள்கூட இப்புதிய குடியரசு அரசியலமைப்பினால் பறிக்கப்பட்டன. இதற்குக் காரணமானவர்களில் இடதுசாரி முற்போக்குக் கட்சிகளில் ஒன்றான லங்கா சமசமாஜக் கட்சியைச் சேர்ந்த கொல்வின் ஆர். டி. சில்வா என்ற சிங்களத் தலைவரும் ஒருவராவார். புதிய குடியரசு அரசியல் அமைப்பை உருவாக்கிய சிறிமாவோ பண்டாரநாயக்கா அம்மையாரின் தலைமையிலான கூட்டுக்கட்சி ஆட்சியில் அப்போது கொல்வின் ஆர். டி. சில்வா மட்டுமல்ல - இலங்கைக் கம்யூனிஸ்ட் கட்சி

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



யைச் சேர்ந்த பீட்டர் கெனமனும் முக்கிய மானவராய் இருந்தார்.

முற்போக்காளர்களான இடதுசாரிகள் கூட அரசியல் அமைப்பு மூலம் எமது அடிப் படை உரிமைகளைப் பறித்தெடுக்க முயன்ற இவ்வேளையில்தான் எங்கள் விடுதலைப் போர் கூர்மையடையத் தொடங்கியது. 1972இல் எமது விடுதலைப் போரானது குடியரசு அரசியல் அமைப்புக்கு எதிராகத் தீவிரமடைந்தது. இக்குடியரசு அரசியல் அமைப்பை எழுதியவர் நாடறிந்த பழம் பெரும் இடதுசாரியான கொல்வின் ஆர். டி. சில்வா அவர்கள் என்பதை நீங்கள் எண் ணிப் பார்க்கவேண்டும். குடியரசு அரசியல் அமைப்புக்கு ஒப்புதல் தரமாட்டோம் எனக் கூறிப் பாராளுமன்றத்தில் தமிழர் பிரதி நிதிகள் வெளிநடப்பும் செய்தார்கள். இந்த அரசியல் அமைப்பில் கையெழுத்திட்ட ஓரிரு தமிழ்ப் பிரதிநிதிகள் எமது மக்களால் துரோகிகளாய்க் கணிக்கப்பட்டார்கள்.

மிக அண்மையில் நடந்த ஒரு நிகழ்வை எடுத்துக் காட்டலாம். S. L. M. P கட்சி யின் தலைவர் விஜயகுமாரணதுங்க அவர் கள் சிங்கள மக்கள் மத்தியில் மேடையில் பேச முடியாமல் போயிற்று. அவர் மீது சிங்களவர்கள் வெடிகுண்டு வீசினார்கள். தமிழருக்கு ஆதரவு தெரிவிக்கும் எந்தச் சிங்கள அரசியல் கட்சியும் அங்கே இயங்க முடியாது என்பதையே இது காட்டுகிறது. இதனால்தான் எந்தக் காலத்திலும் இங்கே சிங்கள அரசியல்வாதிகளை நம்பும் சூழ்நிலை இல்லை என்கிறோம். ஏதேனும் முற்போக் கான குரல் அங்கே ஒலித்தால் -அது வலிமை குன்றிய குரலாகவே இருக்கிறது. எமக் காகக் குரல்கொடுக்கும் சிங்களவர்கள் மிகச் சிலரே - அப்படியானவர்களின் குரல்களும் அடக்கப்பட்டு விடுகின்றன.

ராம்:

**ஜெயவர்த்தனா அரசின் போக்கிற்கு அவர்களுக்கு இன்று ஏற்பட்டிருக்கும் சங்கடமான நிர்ப்பந்த நிலைமைதான் காரணம் என்று கருதுகிறீர்களா? தமி ழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கடுமையான போரெதிர்ப்பு நடவடிக்கை கள் - நாட்டின் பொருளாதார வீழ்ச்சி - தமிழர் பிரச்சினையில் சிறீலங்கா அரசு கையாளும் கொடுமுறைகளுக்கு எதிரான உலக நாடுகளின் கண்டனம் - ஆகியவற் றைச் சொல்கிறேன் - இவைகளே சிறீ லங்கா அரசை பேச்சுவார்த்தை மூல மான 'அரசியல் தீர்வுக்கு' இழுத்து வந் தன என்று, எண்ணுகிறீர்களா? அல்லது 'அரசியல் தீர்வு' என்று சொல்லப்படு வது சிறீலங்கா அரசுடைய வெறொரு திட்டத்தின் ஓர் அம்சம் என்கிறீர்களா?**

பிரபா:

நல்லவர்கள் போல உலக அரங்கில் தங்களைக் காட்டிக்கொள்ளவே இலங்கை அரசு இந்த நாடகத்தை ஆடு கிறது. உண்மையில், உள்நாட்டில் போருக் கான ஆயத்தங்களைச் செய்யும் அதே வேளை - வெளி உலகத்துக்குத் தன்னை ஒரு சமாதானப் பிரியனாகக் காட்டிக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஜெயவர்த் தனாவுக்கு ஏற்பட்டிருக்கிறது. அல்லது, தான் சமாதானத்தை விரும்புகிறவர் என் றும் - சமாதானத்தைக் காண இயலாமல் போன நிலையில்தான் போரை நடத்த வேண்டியுள்ளதென்றும் உலகின் முன் நடிக்க அவர் முனைகிறார். தான் நடை போடும் இனவாத - இனவெறிப் பாதை யில் தோரணம் கட்டி மயக்குகிறார் ஜெய வர்த்தனா. அவருடைய அண்மைக்கால போர்முழக்கங்கள் அவரது சுயவடிவை வெளிக்கொணர்கின்றன. சமீபத்தில் அவர் சொன்னார்:- ''உடல் வலிமையுள்ள எல் லாச் சிங்களவர்களையும் நான் தமிழர் மீது போர் தொடுக்கும் படையாக மாற்று வேன். அந்தப் படைக்கு நானே தலைமை தாங்குவேன்.'' ஜெயவர்த்தனாவின் இக் கூற்று அவரைச் சமாதானப் பிரியராகக் காட்டவில்லையே.

ஜெயவர்த்தனா அரசு இன்னொரு நோக்கத்துக்காகவும் இந்த நாடகத்தை மேடையேற்றி வருகிறது. பெருமளவு நிதி உதவி வழங்கும் நாடுகளை அணுகி- ''நான் பிரச்சினையைத் தீர்க்க என்னா லானவரை முயன்றேன் - முடியவில்லை. அதனால்தான் தமிழர் மேல் போர்ப் பிர

கடனம் செய்ய வேண்டியதாயிற்று'' என்று கூறி - அவர்களைத் திருப்திப்படுத்தி-நிதி உதவி பெறுவதுதான் ஜெயவர்த்தனாவின் நோக்கம். எத்தனை தடவை தோல்விகள் ஏற்பட்டாலும் - சளைக்காமல் - அரசியல் தீர்வு காண்பதில் ஆர்வம் கொண்டவரைப்போல் ஜெயவர்த்தனா வெளியே காட்டிக்கொள்கிறார். ஆனால் தீர்வுக்கான எந்த உருப்படியான திட்டத்தையும் அவர் முன்வைக்கவில்லை. சுற்றிச் சுற்றி இன்னும் 'மாகாண சபை' பற்றியே பேசிக் கொண்டிருக்கிறார்.

மூன்றாவதும், முக்கியமானதும் என்னவென்றால் இந்திய அரசைப் பயன்படுத்துவதில் ஜெயவர்த்தனா கடைப்பிடிக்கும் அரசியல் தந்திரம். இந்திய அரசுக்குத் தன் மீது நம்பிக்கை வரும் விதத்தில் நடந்து கொண்டால் - தான் தமிழர்க்குக் கொடுக்கும் பெறுமதியற்ற சலுகைகள் நியாயமானவை என்று இந்திய அரசை நம்ப வைத்தால் - அவற்றை இந்திய அரசு ஏற்றுக்கொள்ளச் செய்தால் - இந்திய அரசுக்கும் போராளிகளுக்கும் இடையில் விரிசலை உருவாக்க முடிந்தால் - பின்பு எங்களை நிராயுதபாணிகளாக்கவும் அழித்து விடவும் முடியும் என்று ஜெயவர்த்தனா சிந்திக்கிறார். தான் முன்வைத்துள்ள திட்டங்களையே தமிழர் ஏற்றுக்கொள்ள இந்திய அரசு - முயலவேண்டும் என்றும் - பின் அவற்றை இலங்கையில் நடைமுறைக்குக் கொண்டுவர உதவ வேண்டும் என்றும் தான் ஜெயவர்த்தனா இந்திய அரசைப் பகிரங்கமாக கேட்டுக்கொண்டுள்ளார்.

**ராம்:**

**இறுதியாக உங்கள் அரசியல் பார்வை, சித்தாந்தம் பற்றி சில கேள்விகளை கேட்க விரும்புகிறேன். தமிழீழ விடுதலைப் புலிகளைப் பற்றியும் உங்களைப் பற்றியும் பல கோணங்களில் எழுதப்பட்டும் பேசப்பட்டும் வருகின்றன. ஒவ்வொரு மனிதனும் பல படி நிலைகளைத் தாண்டித்தான் வளர்கிறான். உங்களைப் பொறுத்தவரை காலத்தின் ஊடாக நீங்கள் பெற்ற அரசியல் பரிணாம வளர்ச்சிபற்றி நான் அறிய விரும்புகிறேன். தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் சித்தாந்தம் பற்றி முதலில் கூறுங்கள்.**

பிரபா:

சோசலிசமும் தமிழீழமும்தான் எமது அரசியல் குறிக்கோள் - அடிப்படைக் கோட்பாடு.

**ராம்:**

**பத்திரிகையாளர்களும் - வெளிநாட்டுப் பார்வையாளர்களும் தமிழீழப் போராளிகள் இயக்கங்களை மதிப்பாய்வு செய்யும் போது - சில இயக்கங்களைத் தேசியவாதக் கோட்பாட்டில் உருவானவை என்றும் - வேறு சில இயக்கங்களை சோசலிசக் கோட்பாட்டில் அமைந்தன என்றும் வேறுபடுத்திப் பேசுகிறார்கள். தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கமும் முன்பிருந்த டெலோ இயக்கமும் தேசியவாதக் கோட்பாட்டில் தோன்றியவை என்றும் ஈ. பி. ஆர். எல். எப், ஈரோஸ் ஆகிய இயக்கங்கள் சோசலிசக் கருவில் பிறந்தவை என்றும் கூறுகிறார்கள். இந்த வேறுபாடுபற்றி உங்கள் கருத்து என்ன?**

பிரபா:

சித்தாந்த ரீதியில் எல்லா இயக்கங்களும் ஒரே நிலைப்பாட்டைக் கொண்டிருப்பது போலத் தோன்றலாம். ஆனால் நடைமுறையில்தான் வேறுபாடுகளைப் புரிந்துகொள்ளலாம். சோசலிசம் என்பது இன்று பல ரகங்களைக் கொண்டாதாக இருக்கிறது. சோசலிசத்திற்கு ஒருவர் அளிக்கும் விளக்கத்திலிருந்தும் அதை நடைமுறைப் படுத்தும் தன்மையிலிருந்துமே அதன் வேறுபாடுகளை நாம் காணக் கூடியதாக இருக்கிறது. இன்று எல்லோருமே தம்மைச் சோசலிசவாதிகளெனக் கூறிக்கொள்கிறார்கள். ஜெயவர்த்தனாகூட தன்னை ஒரு சோசலிசவாதியெனக் கூறிக்கொள்ளவில்லையா? சோசலிசம் பேசுகிறவர்கள் அதனை நடைமுறைப்படுத்தும் பொழுது தான் அதன் தன்மையை நாம் தீர்மானிக்க முடியும். எமது மக்களின் அபிலாசைகளை

யும் நலன்களையும் முழுமையாய்ப் பேணும் ஒரு சோசலிச சமுதாயத்தைக் கட்டி எழுப்புவதே எமது இலட்சியம். வெகுசனத்தின் ஆக்க சக்திக்கு ஊக்கமளிப்பதாக எமது சோசலிச இலட்சியம் அமையும்.

ஒரு சோசலிச சமுதாய அமைப்பில், பரந்தளவில் மக்கள் சனநாயகத்திற்கு இடமளிப்பதே எமது குறிக்கோள். யூகோஸ்லாவியா பாணியில் சோசலிச அமைப்பைக் கட்டுவது எமது நோக்கமல்ல. எமக்கே உரித்தான, தனித்துவமான ஒரு சோசலிச வடிவத்தை நாம் எதிர்காலத்தில் அமைப்போம். யூகோஸ்லாவியா மேற்கொண்ட ஒரு முயற்சியையும் நாம் கவனத்திற்கு எடுத்துக் கொள்ளவேண்டும். நேருவின் காலத்தில் நேருவுடன் சேர்ந்து மூன்றாவது உலக சக்தியை அது உருவாக்க முயன்றது. அணிசேரா மண்டல நாடுகளின் இயக்கத்திற்கு இது மூலமாக அமைந்தது. முற்போக்கான சோசலிசப் போராட்டத்தில் அவர்களுக்கு பாரிய பங்குண்டு. அதே வேளை எவரோடும் சார்பற்ற ஒரு சுதந்திரமான பாதையை யூகோஸ்லாவிய மக்கள் தழுவிக்கொண்டனர். இப்படியான அம்சங்கள் எம்மை வெகுவாகக் கவர்ந்துள்ளன. இதனை நாம் மிகவும் ஆழமாக பரிசீலனை செய்து பார்க்கிறோம். இந்த வழிமுறை பற்றியும் நாம் எண்ணிப் பார்ப்பதுண்டு. எனினும், எமது கலாசாரம், பாரம்பரியம் வரலாறு ஆகியனவற்றிற்கு உகந்ததாக ஒரு சோசலிச சமுதாய அமைப்பை கட்டி எழுப்புவது பற்றியே நாம் சிந்தித்து வருகிறோம். எமது சமுதாயக் கட்டுமானம் விசேட தனித்தன்மைகளைக் கொண்டதாக இருக்கிறது. எமது சமூகத்தில் பெரும் முதலாளிகள் என்று குறிப்பிட யாருமில்லை. குறிப்பிடத்தக்க அளவு நடுத்தர வர்க்கத்தினர் உண்டு.

ராம்:

**அண்மையில் - பத்திரிகையாளர் பேட்டி ஒன்றிலும் வேறு அறிக்கைகளிலும் தேசிய விடுதலைக்குப் பின்னர் ஒரு கட்சி அரசு அமையுமென நீங்கள் கருத்து வெளியிட்டு இருந்தீர்கள். இது சிலருக்குசந்தேகத்தையும் அச்சத்தையும் கொடுத்துள்ளது. இது பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

பிரபா:

எமது மக்கள் எதை விரும்புகிறார்கள் என்பதைப் பொறுத்தே அது அமையும். அவர்களுக்கு விருப்பமான கட்சியை அவர்கள் தெரிவு செய்யலாம். இந்தியாவைப் பாருங்கள் - நீண்ட நெடுங்காலமாய் காங்கிரஸ் கட்சி இங்கே ஆட்சி செலுத்தவில்லையா? இன்றும் அதே காங்கிரஸ் கட்சிதான் இங்கு ஆட்சி செய்கிறது. எனது கருத்து சிலருக்கு சந்தேகத்தையும் அச்சத்தையும் கொடுத்திருப்பதாக குறிப்பிட்டீர்கள். போராட்டத்தில் பங்குபற்றாமலே தலைமைப் பதவியை கைப்பற்ற விரும்புபவர்களே இப்படிப் பேசுகிறார்கள் என்பது எனது கருத்து. போராட்டத்தில் பங்குபற்றாமல் விலகி நின்று கொண்டு அதே வேளை தலைமைப் பதவிக்கு கனவுகாணும் சிலரின் மனதிலேயே எனது கருத்து தாக்கத்தை உண்டுபண்ணியிருக்கிறது.

## கட்டுப்பாட்டிற்கு முதலிடம் கொடுக்கிறோம்

ராம்:

**ஒளிவு மறைவில்லாமல் ஒரு கேள்வி கேட்கிறேன். உங்களைப்பற்றி வெளியேபல கருத்துக்கள் உலாவுகின்றன. விடுதலை வீரர்களுக்கு மகத்தான தியாக உணர்வை தட்டி எழுப்பவல்ல கட்டுப்பாடும் ஆற்றலும் மிக்க ஒரு தலைவராய் உங்களைப் பலர் காணகிறார்கள். இன்னொரு புறம் - சிலர் உங்களுடைய 'தயவு தாட்சண்யமற்ற தன்மையைச்' சுட்டிக்காட்டுகிறார்கள், அண்மையில் கொழும்பில் இருந்து அனுப்பப்பட்டு, 'நியூ யோர்க் டைம்ஸ்'' (New York Times) பத்திரிகையில் வெளிவந்த ஒரு கட்டுரையை எடுத்துக் காட்டாகக் கூறலாம். அந்தக் கட்டுரையில், ''போருபாயத்தில் மதிநுட்பமும் அதே வேளை, தயவுதாட்சண்யமற்ற தன்மையும் கொண்ட உலக கெரில்லாத் தலை**

வர்களது பட்டியலில் வேலுப்பிள்ளை பிரபாகரன் என்ற பெயரும் சேர்த்துக் கொள்ளலாம்'' என்று எழுதப்பட்டிருக் கிறது. இந்த மதிப்பீடுகளிலிருந்து உங் களது நடவடிக்கைகள் மனிதநேயமும் சனநாயகப் பண்புகளும் குன்றியவை என்பதுதான் அர்த்தமாகிறது. இதுபற்றி உங்கள் கருத்தென்ன?

பிரபா:

கண்டிப்பான தன்மை என்பது இரா ணுவக் கட்டுப்பாட்டின் ஓர் இயல்புத் தன் மையே! எந்த நாட்டிலானாலும் சரி - இராணுவக்கட்டுப்பாட்டுக்கென்று சிலதனித் தன்மைகள் உண்டு. 'கம்யூனிச' நாடாகட் டும், சனநாயக நாடாகட்டும் இராணுவ கட்டுப்பாடு எந்த இடத்திலும் தனி இயல்பு கொண்டதாகவே இருக்கும். எந்த இராணு வத்தின் நடவடிக்கையையும் கவனியுங்கள். விளைவுகளைப் பற்றிக் கவலைப்படுவதில் அல்ல - வெற்றியை அடைவதிலேயே அது கண்ணும் கருத்துமாய் இருக்கும். இராணுவ நடவடிக்கைகளில் 'வெற்றியே' எல்லா வற்றையும்விட முக்கியமானது. இன் னொன்று நாங்கள் மக்களுக்காகப் போரா டும் மக்களின் நம்பிக்கைக்குரிய போராளி கள். எம்மை மதிப்பாய்வு செய்கிறவர்கள் எதிரிகளோடு மோதும் எங்கள் ' இரக்கமற்ற தன்மையைச்'' சுட்டிக்காட்டுகிறார்கள். இரக்கமற்ற தன்மையே வடிவமாகக் கொண்ட எதிரிகளோடுதான் நாங்கள் மோது கிறோம் என்பதை மறந்து விடுகிறார்கள். நாங்கள் அவர்களை அன்போடு அணுக முடி யும் என்று நினைக்கிறீர்களா? முடியாது - இதுதான் உண்மை. ஆனால் உண்மையில் நடைமுறையில் - நாங்கள் அறப்பண்பும் ஒழுங்குணர்வும் அமைந்தவர்களாகவே இருக்கிறோம் - சரியா?

நல்ல கட்டுப்பாட்டில் நம்பிக்கையுள்ள ஓர் தலைமை ஆசிரியரின் கீழ், கட்டுப்பாடு கள் மிக்க ஒரு பள்ளிக்கூடம் இருக்கு மானால், அங்கே பயிலும் மாணவர்கள் நல்ல கல்வி பெற்று, வாழ்வில் உயர்நிலை அடைவார்கள். ஆசிரியர்களும் குறிப்பாக தலைமை ஆசிரியரும் கட்டுப்பாட்டுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சில பள்ளிக் கூடங்கள் 'முதல்தர'ப் பள்ளிக்கூடங்களாய் மக்களால் கணிக்கப்படுவதை நீங்கள் அறி வீர்கள். அப்படியான தலைமை ஆசிரியருக் குக் கீழே பயின்று ஒவ்வொரு ஆண்டும் வரிசை வரிசையாக வெளியேறும் மாணவர் கள் பிற்காலத்தில் சிறப்புடன் வாழ்க்கை நடத்துவதையும் கண்டிருப்பீர்கள். எங்கள் நிலையிலும் இந்த உவமை பொருந்தும். இதனால்தான் நாங்கள், கட்டுப்பாட்டுக்கு முதலிடம் தருகிறோம்.

ராம்:

இந்தக் 'கட்டுப்பாடு' பற்றி இன்னும் விளக்கமாகச் சொல்லுங்கள் பார்க்க லாம்.

பிரபா:

கட்டுப்பாடு என்பது என்ன? மக்களுக்கு எதிரானவர்களையும் - மக்களுக்கு எதி ரான நடவடிக்கைகளையும் - மனதில் வைத்து எண்ணிப் பாருங்கள். எமது இயக் கத்தில் போராளி ஒருவன் சேர்ந்தால் மக் களுக்காகப் போராடும் ஒரு வீரன் என்று தான் பொருள். அவன் மக்களின் நலனுக்கு எதிரான நடவடிக்கைகளில் இறங்கி னால் -அவனை நாங்கள் ஆதரித்தால் - அடிப்படை இலட்சியத்தில் இருந்து எமது போர் திசைதிரும்பிவிடும். இன் னொன்றையும் எண்ணிப் பாருங்கள் - ஆயு தம் கொண்டவர்களிடமே அதிகாரம் போய்ச் சேருகிறது. அந்த அதிகாரங்கள் பிழையான வழியில் பயன்படுத்தப்பட் டால் சர்வாதிகாரம் உருவாவதைத் தடுத்து நிறுத்த யாராலும் முடியாது போய் விடும். இதனால்தான் நாங்கள் எமது இரா ணுவ அமைப்பைப் பலத்த கட்டுப்பாட்டுக் குள் வைத்திருக்கிறோமே தவிர நாங்கள் இரக்கமற்றவர்கள் என்பதல்ல. இரக்க மற்ற தன்மையை இரக்கமில்லாதவர்களி டமே காட்டுகிறோம் - எமது வெற்றிக்கு இது தேவை என்பதால்.

ராம்:

ஆனால் - சிங்கள அப்பாவிப் பொது மக்கள் கூட உங்களால் கொல்லப்பட் டிருக்கிறார்களே - அனுராதபுரப் படு கொலைகள்......?

பிரபா:

அந்த நிகழ்ச்சிக்கும் எமக்கும் சம்பந்தம் இல்லை என்று நாங்கள் மறுத்திருக்கிறோம். அந்த நிகழ்ச்சியை நாங்கள் கண்டித்திருக்கிறோம்.

## 'சைனட்டின்' முக்கியத்துவம்

ராம்:

உங்கள் இயக்கப் போராளிகள் 'சைனைட்' புட்டியைக் கழுத்தில் கட்டிக்கொண்டு களத்தில் நிற்கிறார்களாமே உண்மையா? அல்லது மிகைப்படுத்தப்பட்ட சேதியா?

பிரபா:

உண்மைதான். இயக்கத்தின் தொடக்க காலத்தில் இருந்தே இதை நாங்கள் செய்துவருகிறோம். விளைவு? எங்கள் தோழர்கள் பலர் தியாகிகளாய் உயிர்களை அழித்துக்கொண்டார்கள். எங்கள் இயக்க ஆட்களை நீங்கள் சிறைச்சாலைகளில் பார்க்க முடியாது - விரல் விட்டு எண்ணக் கூடிய ஓரிருவரைத் தவிர - ஆம். அவர்கள் கூட எங்கள் இயக்கத்தின் உள் வளையத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. எமக்கு உதவியாக இருக்கும் ஆதரவாளர்களைக் காட்டிக் கொடுக்காமல் - அவர்களை இராணுவத்திடம் இருந்து காப்பாற்ற எமது தோழர்கள் தங்கள் உயிர்களைப் பலி தருகிறார்கள். இந்த நிலை இல்லையென்றால் எமக்கு உறுதுணையாக இருக்கும் மக்கள் குடும்பங்களோடு கொடிய சிறைச்சாலைகளில் அழுந்தவேண்டி இருந்திருக்கும்.

அது மட்டுமல்ல, இதே 'சைனைட்' தான் எமது இயக்கத்தின் உயிரும் ஆகும். எமது இயக்கத்தின் வேகமான வளர்ச்சிக்குக் காரணம் 'சைனைட்' தான். நாங்கள் எமது இலட்சியத்துக்கு எம்மை ஒப்படைத்திருக்கிறோம் என்பதன் 'அடையாளச் சின்னம் தான்' அது.

யாழ்ப்பாண மாவட்டத்தின் எங்கள் தளபதி கிட்டு இவ்வாறு ஒரு பேட்டியில் சொன்னார்:-

''இந்த சைனைட்'' எங்கள் கழுத்தில் தொங்கும்வரை உலகில் எந்த சக்திக்கும் நாங்கள் அஞ்சமாட்டோம்!'' ஆம். இந்த 'சைனைட்'தான் தங்கள் இலட்சியத்துக்காக எம்மவர்கள் உயிரையே தூக்கி எறியும் மேலதிக உறுதியைத் தந்திருக்கிறது. எதிரியைத் தாக்கும்போது எமது வீரர்கள் அவர்களுடைய உயிர்களைக் கணக்கெடுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். குண்டு மழையின் நடுவில் எதிரியை நோக்கி அவர்கள் முன்னேறிக்கொண்டிருப்பார்கள்.

ராம்:

மாணவப்பருவம் தொடக்கம் இன்று வரை அரசியலில் உங்கள் படிநிலை வளர்ச்சியை அறியவிரும்புகிறேன். சின்ன வயதில் உங்கள் உள்ளுணர்வுகளைத் தட்டி எழுப்பிய விடுதலைப் போராட்ட வீரர்கள் - வரலாறுகள் உண்டா? சொல்லுங்கள்.

பிரபா:

சிறுவயது முதல் இந்தியப் போராட்ட வரலாறுதான் என்னைக் கவர்ந்திருந்தது. இப்போராட்டத்தில் நேதாஜி அவர்கள் கொண்டிருந்த பங்கு என்னை ஆழமாகத் தொட்டது. அந்தக்காலத்தில் நான் வீட்டில் மிகவும் கட்டுப்பாடான சூழலில் தான் வளர்ந்தேன். வெளியாரோடு கலந்து பழக எனக்கு அனுமதி இருக்கவில்லை. இளம் பெண்களைக் கண்டால் வெட்கப்படுவேன். என் தந்தையின் நல்லொழுக்கம் என்னை நெறிப்படுத்தியது. வெற்றிலை கூடப் போடமாட்டார் - ஒழுக்கங்களை அவரைப் பார்த்தே நான் உருவாக்கிக் கொண்டேன். ஓர் அரச ஊழியராக - மாவட்ட நில அதிகாரியாக அவர் இருந்தார். என் தந்தையார் கொஞ்சமும் ஒளிவு மறைவில்லாதவர் - நேர்மையாளர். எமது ஊர் மக்கள் இப்படிச் சொல்லிக் கொள்வார்கள் - ''அந்த மனிதர் நடந்தால் - அவர் காலின் கீழே உள்ள புல்லுக்குக்கூட

நோகாது'' - ஆம் - அப்படிப்பட்ட தந்தைக்கு இப்படி ஒரு மகன் பிறந்தானே என்றுதான் மக்கள் பேசிக்கொண்டார்கள். அவர் கண்டிப்பானவராக இருந்தார். அதே வேளை நெஞ்சைத் தொடுகிற ஓர் ஆற்றலும் அவரிடம் இருந்தது. நண்பன் ஒருவனைப்போல் பக்கத்தில் உட்கார்ந்து - நியாயங்களை எடுத்துச் சொல்லி - அவர் என்னை நல்வழிப்படுத்தினார்.

## என்னைக் கவர்ந்த இந்தியத் தலைவர்கள்

சுபாஷ் சந்திரபோஸின் வாழ்க்கை என்னைப் பெரிதும் கவர்ந்தது. சிறுவனாய் இருந்த காலத்தில் காந்தி அடிகளின் 'உண்மை' - 'பிரமச்சரியம்' பற்றிய நூல்களைப் படித்தேன். சின்ன வயதிலேயே ஆன்மீகத்தைத் தேடிப்போய் ஈற்றில் துறவு வாழ்க்கையில் வெறுப்புற்றுத் திரும்பிய சுபாஷ் சந்திரபோஸை எனக்குப் பிடித்திருந்தது (சிரிப்பு). ஆனாலும் வாழ்வில் துன்பமும் தொல்லையும் சூழ்ந்த போதெல்லாம் அவர் மீண்டும் மீண்டும் ஆன்மீகத்தையே நாடினார். சுபாஷின் வாழ்க்கை என்னை மிகவும் ஈர்த்தது. என் நெஞ்சில் சுபாஷ் நிலைத்த மனிதர் ஆனார். அவர் ஆற்றிய சொற்பொழிவுகள் (நூல்வடிவில் வந்ததை) அப்படியே நெஞ்சில் பதிந்தன. ''கடைசித் துளி இரத்தம் இருக்கும் வரை என் மண்ணுக்காக நான் போராடுவேன்!'' என்ற சுபாஷின் வீர உரையை எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். நினைவுக்கு வரும்போதெல்லாம் இந்தச் சொற்கள் என் நெஞ்சைச் சிலிர்க்க வைத்தன. அடுத்து 'பகவத்சிங்கின்' வரலாறு என்னை ஆகர்சித்தது.

சுருக்கமாகச் சொன்னால் - அநீதியாளர்களை மோதியவர்களின் வாழ்க்கை வரலாறுகளையே - அந்த நாட்களில் நான் சுற்றிச் சுழன்றுகொண்டிருந்தேன்.

இதற்கெல்லாம் ஒரு காரணம் இருந்தது. எமது தாயகத்தில் சிங்களவர்கள் அப்போது எம்மை மிகவும் கொடுமையாக நடத்திக்கொண்டிருந்தார்கள். அக்கொடுமைகள் பற்றிய செய்திகள் அவ்வப்போது பத்திரிகைகளிலும் நூல்களிலும் வெளிவந்து கொண்டிருந்தன. ஒரு கட்டத்தில் - 1958 இல் நடைபெற்ற பயங்கர தமிழர் படுகொலைகள் பற்றி நான் படிக்க நேர்ந்தது. அந்த நிகழ்ச்சிகள் எத்தனை கொடூரமானவை தெரியுமா? கோயிலில் உறங்கிக் கொண்டிருந்த பூசை செய்யும் ஒரு பிராமணரைத் தட்டி எழுப்பி கொடிய சிங்களவர்கள் எண்ணெய் ஊற்றி எரித்துக் கொன்றார்கள். பாணந்துறை என்ற இடத்தில் இந்த நிகழ்ச்சி நடந்தது.

கடவுள் பத்தியுள்ள-சமய உணர்வுள்ள எமது மக்கள் கோயில் அர்ச்சகரையே கொன்று விட்டார்களே கொடியவர்கள்— நாங்கள் ஏன் இவர்களைத் திருப்பித் தாக்கக்கூடாது என்று எண்ணத் தலைப்பட்டார்கள். இந்த இனவெறிக் கலவரத்தில் இன்னொரு கொடுமையும் நிகழ்ந்தது. ஒன்றும் தெரியாத பிஞ்சுத் தமிழ்க் குழந்தை ஒன்றைச் சிங்கள வெறியர்கள்-துடிக்கத் துடிக்கக் கொதிக்கும் தாரில், தோய்த்துக் கொன்றார்கள். இந்த நிகழ்ச்சிகள் என் நெஞ்சிலும் என் நண்பர்கள் நெஞ்சிலும் அந்தச் சின்ன வயதிலேயே நெருப்பை மூட்டிற்று. ஒன்றுமறியாத அப்பாவிகளைக் கொல்கிறார்களே - திருப்பி நாம் ஏன் இவர்களை ஓங்கி அடிக்கக் கூடாது என்று எண்ணத் தொடங்கினோம்.

இந்தக் காலகட்டத்திலேதான்-இந்தியப் போராட்ட வரலாறும் என் உணர்வுகளுக்கு எருவாயிற்று. ஒவ்வோர் ஆண்டும் இந்திய சுதந்திர நாளில் -பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் இந்திய விடுதலைப் போராட்டம் பற்றிய கட்டுரைகளை வெளியிட்டு வந்தன. அவற்றைப் படிக்கும் வாய்ப்பு அப்போது எனக்குக் கிடைத்தது. திருப்பூர் குமரனை எடுத்துக் கொள்ளுங்கள். அவனுடைய அகிம்சையிலும் ஓர் இரும்பு உறுதி இருந்தது. ஆயுதப் போரின் அனுபவங்களைப்பற்றி நான் கற்றறிந்திருந்த அதேவேளை - அகிம்சைப் போரின் ஒழுங்குணர்வாலும் கவரப்பட்டேன். இப்போராட்டங்களில் காணப்பட்ட மன உறுதியும் - துன்பங்களின் நடுவில் நிற்கும்

துணிச்சலும் - என்னை உணர்ச்சிவசப்படுத்தின. சின்ன வயதிலேயே இத்தகைய உணர்வுகளில் தோய்ந்துதான் சிந்திக்கத் தொடங்கினேன். ''நாமும் ஓர் ஆயுதப் போராட்டத்தைத் தொடங்கினால் என்ன''?

நெப்போலியனின் எழுச்சி — வீரச் செயல்கள் பற்றி அன்று நான் படித்தவை இன்றும் நெஞ்சில் நிலைத்து நிற்கின்றன.

மகாபாரதத்தில் வீமன், கர்ணன் ஆகிய கதாபாத்திரங்களைப் படித்தபோது ஒரு மனநிறைவு ஏற்பட்டது. பாரதத்தில் வரும் கதாபாத்திரங்களை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பார்ப்பார்கள். தன்னிழப்புக்கு - உயிர்த்தியாகத்துக்கு- ஒவ்வொரு மணித்துளியும் தயாராக இருந்தானே கர்ணன் - அவனை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. விவேகானந்தரின் பொன்மொழிகள் சிலவற்றைப் படித்தேன் - 'இளைஞர் அணி' ஒன்றைத் திரட்ட வேண்டும் என்ற எண்ணம் மெல்ல அரும்பிற்று. ஆம் - அப்போது எனக்கு 16 வயதுதான்!

கிருபானந்தவாரியாரின் சமயச் சொற்பொழிவுகளைக் கேட்டிருக்கிறேன் - அரசியல் கூட்டங்களுக்குப் போயிருக்கிறேன் - எங்களூர் மேடையில் அரங்கேறிய 'சோக்கிரடீஸ்' போன்ற நாடகங்களைப் பார்த்திருக்கிறேன்......

இப்படித்தான் நாங்கள் உருவானோம். எமது வரலாற்றுப் பின்னணியே எம்மை ஆயுதபாணிகள் ஆக்கிற்று. நாங்கள் சிந்தித்தோம் - ''ஆயுதங்கள் இன்றி நாம் வெறுங்கைகளோடு பாதுகாப்பற்ற நிலையில் இருப்பதால்தானே -ஆயுதங்கள் உள்ள சிங்களவர்கள் கொடுமையாகத் தாக்குகிறார்கள். நாம் ஏன் வெறுங்கைகளோடு இருக்கவேண்டும்? ஆயுதங்களால் முறியடிப்போம்!'' ஆம் - அனுபவங்களின் இந்த முதிர்ச்சி நிலையில் தான் நான் இயக்கத்தை ஆரம்பித்தேன்.

## இராணுவ பலத்தின் முக்கியத்துவம்

*ராம்:*

தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் வளர்ச்சியை உன்னிப்பாகக் கவனித்து வருகிறவர்கள் - அந்த இயக்கத்தின் தலைவரான நீங்கள் முன்பெல்லாம் 'இராணுவ எண்ணங்களோடு' மட்டுமே பிணைகிடந்தீர்கள் என்றும் - அண்மைக் காலத்தில்தான் அரசியலில் ஆழமாக இறங்கியுள்ளீர்கள் என்றும் கூறுகிறார்கள் (முன்பு நீங்கள் வெட்கப்படும் சுபாவம் உள்ளவராகவும் எளிதில் மக்களை சந்திக்க விரும்பாதவராகவும் இருந்தீர்கள்)- இன்று நீங்கள் மனம்விட்டு பல அரசியல் பிரச்சினைகள் பற்றியும் கருத்துத் தெரிவிக்கிறீர்கள் - பேசுகிறீர்கள்-உங்களில் ஒரு மாற்றம் தெரிகிறது...

*பிரபா:*

ஓர் அரசியல் பின்னணியில்தான் ஆயுதப் போராட்டமே உருவாகிறது. அரசியல் தெளிவில்லாமல் - எமது கடந்த காலங்களில் - நிறைந்த துன்பங்களுக்கு நடுவில் - ஓர் இயக்கத்தை எம்மால் கட்டி வளர்த்திருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? 1973 - க்கும் 1983 - க்கும் இடையில் - 10 ஆண்டுகள் நான் தலைமறைவு வாழ்க்கை நடத்தவேண்டியிருந்தது. எல்லையற்ற துன்பங்கள் நிறைந்த காலம். இராணுவ வெறியாட்டத்துக்கு நடுவில் - அவர்களின் வலைக்குத் தப்பி நாங்கள் வாழ வேண்டி இருந்தது. இந்தக் காலத்தில் துன்பங்களையும் சந்தித்து - இயக்கத்தையும் வளர்த்தோம் என்றால் - எங்களுக்கு என ஓர் அரசியல் பின்னணி இல்லாமல் எம்மால் முடிந்திருக்குமா? எங்களை அரசியலில் ஆர்வமற்றோர் என்று சொல்ல முடியுமா?

என் இயல்பான போக்கையும் சொல்கிறேன் - உண்மையான அரசியலில் நான் எப்போதும் பேச்சுக்குத் தருவது குறைந்த அளவு முக்கியத்துவமே. செயலால் வளர்ந்த

பின்புதான் நாம் பேசத் தொடங்க வேண்டும். நடவடிக்கைகளால் - எமது செயல்பாட்டால் - வளர்ச்சி பெற்றபின்புதான் நாங்கள் மக்களைச் சந்திக்கத் தொடங்கினோம். இதனாலேதான் எமக்கு மதிப்பேற்பட்டது சொல்லுக்கு முன்னே எப்போதும் செயல் இருக்க வேண்டும். இந்தச் செயல்தான் மக்களையும் எம்மையும் இறுகப் பிணைத்தது. எமது போராளிகளின் தனிப்பட்ட நேர்மை - ஒழுக்கம் - வழிகாட்டும் வகையில் வாழும் வாழ்க்கை - இவையே மக்கள் எங்கள்மீது மரியாதை வைக்கக் காரணமாகும். செயலால்தான் நாங்கள் செல்வாக்குப் பெற்றோம். செயல்தான் நமது நடவடிக்கைகளுக்கு அரசியல் வடிவம் தருகிறது. ''இராணுவம் உங்களைத் தாக்கி வருகிறது - நாங்கள் அவர்களை எதிர்த்துத் தாக்குவோம் - உங்களைப் பாதுகாப்போம்'' என்று நாம் சொன்னால் - சொன்னதைச் செயல்படுத்தும்போதுதான் மக்கள் நம்மீது நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். நாம் மக்கள் மத்தியில் ஓர் இடத்தைப் பிடிக்கிறோம்.

இதனால்தான் நாங்கள் எமது அமைப்பில் இராணுவ நடவடிக்கைகளில் கூடிய கவனம் செலுத்துகிறோம். உங்களுக்கு எமது போராட்டத்தின் அடிப்படைத் தன்மை தெரியும். இராணுவத்துக்கு இன வெறியை ஊட்டி - அந்த வெறியர்களின் துணையோடு எமது நிலத்தில் சிங்களவர்களைக் குடியேற்றி-எங்கள் தாயகத்திலேயே எம்மை அழிக்கமுயலும் சிறீலங்கா அரசை நாங்கள் மோதுகிறோம். இராணுவ பலம் கொண்ட ஓர் அரசியல் இயக்கம் மட்டுமே இந்த இனவெறி அரசுக்குச் சரியான எதிர்ப்பைத் தரமுடியும். உலகின் நிலை என்ன? எந்த விடுதலைப் போராட்டத்துக்கும் ஓர் இராணுவப் பின்னணி இருந்திருக்கிறது - இல்லையா? அஹிம்சை அடிப்படையில் இந்திய விடுதலைப் போர் நடந்த காலத்தில்கூட நேதாஜியின் 'இந்திய தேசிய இராணுவம்' ஒரு முக்கிய இடத்தைப் பெற்றது. இந்திய விடுதலை வரலாற்றில் சுபாஷுக்கு நிச்சயம் ஓர் இடம் உண்டு. செயலின் முழு வடிவமாய் அவர் இருந்தார்.

இந்தியாவின் இன்றைய நிலைபற்றி என்ன நினைக்கிறீர்கள்? இன்று உலக நாடுகளின் நடுவில் இந்தியா நிமிர்ந்து நிற்பதற்கே - அதன் இராணுவ பலம்தான் காரணம் - இல்லையென்றால் சீனா தன் எல்லையை டில்லிவரை கொண்டு வந்திருக்கும்!

□ □ □

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY

# தமிழ்த் தாயகம் எமது தேசியத்திற்கு அடிப்படை

குறிப்பு:

"மாகாண சபை நகல் திட்டம்" என்ற பெயரில் சிறி லங்கா அரசாங்கம் 1986ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் ஒரு தீர்வுத் திட்டத்தை முன்வைத்தது. இந்திய அரசிடம் கையளிக்கப்பட்ட இத் தீர்வுத் திட்டத்தை முன்னாள் தமிழக முதலமைச்சர் கனம் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் தலைவர் பிரபாகரனின் பரிசீலனைக்கு சமர்ப்பித்தார். இத் தீர்வுத் திட்டம் குறித்து எம். ஜி. ஆர். அவர்களுக்கு தலைவர் எழுதிய பதில் கடிதத்தை இங்கு தருகிறோம். தமிழரின் தேசிய வாழ்விற்கு தாயக நிலம் அடிப்படையானது என சுட்டிக்காட்டும் தலைவர், இனப்பிரச்சினைக்கு ஒரு நியாயமான, நிரந்தரமான தீர்வு ஏற்படவேண்டுமாயின் தமிழர் தாயகத்தை சிங்கள ஆளும் வர்க்கம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என இக் கடிதத்தில் வலியுறுத்துகிறார். மாகாண சபைத் திட்டத்திலுள்ள அடிப்படையான குறைபாடுகளையும் தலைவர் எடுத்து விளக்குகிறார்.

சென்னை
3-11-1986

**கனம் எம். ஜி. இராமச்சந்திரன்**

முதலமைச்சர்,

தமிழ்நாடு.

மதிப்பிற்குரிய ஐயா,

சிறீலங்கா அரசினால் எமக்கு சமர்ப்பிக்கப்பட்ட தீர்வுத் திட்டத்தின் உள்ளடக்கத்தை மிகவும் துல்லியமாகப் பரிசீலனை செய்தோம். இத் தீர்வுத் திட்டம் தமிழரின் அடிப்படை அரசியல் அபிலாசைகளை பூர்த்தி செய்யத் தவறிவிட்டது. இதில் பல குறைபாடுகள் உள்ளன. சென்ற ஆண்டு திம்புமாநாட்டில் நாம் முன்மொழிந்த அடிப்படைக் கோட்பாடுகள் எதையுமே இத்திட்டம் கருத்தில் எடுத்துக்கொள்ளவில்லை.

தனி மாகாண சபைகளை உருவாக்கும் இத் திட்டமானது எமது அடிப்படைக் கோரிக்கையான தமிழர் தாயகத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. தாம் வாழும் நிலம்மீது தமிழருக்கு உள்ள உரிமையை எவரும் மறுக்கமுடியாது. தொடர்பான பூகோள நிலப்பரப்பையும், வரையறுக்கப்பட்ட எல்லைகளையும் கொண்ட வடகிழக்கு மாகாணங்கள் அடங்கிய மானிலத்தையே தமிழர் தாயகம் எனக் குறிப்பிடுகிறோம். இந்த மானிலம் வரலாற்று ரீதியாக அமையப்பெற்ற தமிழ் பேசும் மக்களின் குடிநிலமாகும். இதனைப் பிரித்து கூறுபோட முடியாது. தமிழர் தாயகத்தின் பூகோள முழுமைக்கு அங்கீகாரம் வழங்குவதன் மூலம் தான் தமிழரின் தேசிய இனப் பிரச்சினைக்கு அர்த்தபூர்வமான, நிரந்தரமான தீர்வைக்காண முடியும். தனி மாகாண ரீதியில் அதிகாரப் பரவலாக்கம் செய்யும் சிங்கள அரசின் இத்திட்டமானது தமிழர் தாயகத்தின் பூகோள ஒருமைப்பாட்டை சீர்குலைப்பதாக அமையும். ஆகவே, இத்திட்டம் தமிழரின் நியாயபூர்வமான அபிலாசைகளைப் பூர்த்திசெய்ய மறுக்கிறது.

கிழக்கு மாகாணத்தில் சிங்கள மக்களும், முஸ்லிம் மக்களும் பெருந்தொகையில் வாழ்கிறார்கள் என சிறீலங்கா அரசு நியாயப்படுத்துவதை நாம் ஏற்றுக்கொள்ளமுடியாது. கிழக்கு மாகாணம் தமிழர் தாயகத்தின் இணைபிரியாத அங்கம். அங்கு பெருந்தொகையில் தமிழ் பேசும் மக்கள் வசித்துவருகிறார்கள். அங்குள்ள பூர்வீகக் குடிகளான தமிழரும், தமிழ்பேசும் இஸ்லாமியரும் பல நூற்றாண்டுகளாக ஒன்றிணைந்த மக்களாக, ஒரே மொழியைப் பேசி, ஒரே பிரதேசத்தில் ஒன்றுகூடி வாழ்ந்துவருகிறார்கள். இம் மானிலத்தின் குடிசன விகிதாசாரத்தை மாற்றியமைத்து, தமிழர் தாயகத்தை துண்டாடும் நோக்கில் நீண்ட காலமாகவே, மாறி மாறி பதவி ஏறிய சிங்கள அரசுகள் இப் பகுதியில் சிங்களக் குடியேற்றத் திட்டங்களை அமைத்துவந்தன என்

பது உலகம் அறிந்த உண்மை. வடக்கு, கிழக்கு மாகாணங்கள் என்ற ரீதியில் தமிழ் மானிலம் இரு நிலத்துண்டுகளாக பிரிக்கப்படுமானால் தமிழ்த் தேசியத்துக்கு ஆதாரமாக விளங்கும் பூகோள ஒருமைப்பாடு குலைபடும். அதனால் தமிழ்த் தேசிய தனித்துவம் பாதிக்கப்படும். எனவேதான், பிளவுபடாத ஒரே பூகோளப் பிரதேசமாக தமிழர்தாய கத்தை சிறீலங்கா அரசு அங்கீகரிக்கவேண்டுமென்பதை வலியுறுத்தி வருகிறோம். இந்த அங்கீகாரத்தின் அடிப்படையில்தான் ஒரு அர்த்த பூர்வமான அரசியல் தீர்வு காணமுடியும்.

கொழும்பு அரசாங்கத்தால் சமர்ப்பிக்கப்பட்டுள்ள யோசனைகளில் நிறைய குறைபாடுகள் உள்ளன. சிறீலங்கா பாராளுமன்றத்திற்கும் ஜனாதிபதிக்கும் ஏற்கெனவேயுள்ள மேலதிகாரங்கள் மாகாணசபை களுக்கு வழங்கப்பட்டிருக்கும் சட்டவாக்க, நிறைவேற்று அதிகாரங்களை நலியவைக்கும். அத்துடன் கோட்பாட்டு ரீதியாகவோ அன்றி செயற் பாட்டு ரீதியாகவோ மாகாண சபைக்கான அதிகாரங்களை திண்ணிய மானவை அல்லது உறுதியானவை என்று சொல்லமுடியாது. இந்திய ஆட்சியமைப்பில் மானில சமஷ்டி அரசுகளின் கீழ் வரும் பல்வேறு துறைகளுக்கு வழங்கப்பட்டிருக்கும்அதிகாரங்களுக்கு ஒத்ததாகக்கூட இத் திட்டத்தின் அதிகாரப் பரவலாக்கம் அமையவில்லை. பல துறைகள் மத்திய அரசின் நிர்வாக ஆட்சியின் கீழ் கொண்டுவரப்பட்டுள்ளன. சிறீ லங்காவின் அரசியலமைப்பானது சாராம்சத்தில் பேரினவாதப் பண்பு களையும், ஏதேச்சாதிகார தன்மைகளையும் கொண்டது. இந்த அரசி யலமைப்பில் ஜனாதிபதிக்கே முழு ஆட்சியதிகாரங்களும் வழங்கப்பட் டிருக்கின்றன.

இத் திட்டத்தின் பிரகாரம் மாகாண சபைக்கு வழங்கப்பட்டிருக் கும் சட்டவாக்க அதிகாரங்கள் மிகவும் வரையறுக்கப்பட்டவை. மாகாண நிரலிலுள்ள துறைகள் சம்பந்தமாக மாகாண சபை நிறைவேற்றும் சட் டங்களை நிராகரித்துவிடும் அதிகாரம் பாராளுமன்றத்திற்கு வழங்கப் பட்டிருக்கிறது. எனவே, சிறீலங்கா அரசியல் அமைப்பு மூலம் பாராளு மன்றத்திற்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் மாகாண சபையை கட்டுப்படுத்துவதாக அமைந்துள்ளன.

ஜனாதிபதியிடம் ஏகபோக அவசரகால அதிகாரங்கள் குவிக்கப் பட்டுள்ளன. நாட்டின் பாதுகாப்பிற்கு ஆபத்தான சூழ்நிலை ஏற்பட் டுள்ளது என அவர் கருதும் பட்சத்தில் அவசரகால சட்டத்தின் கீழ் ஏதேச்சாதிகாரமான முறையில் ஜனாதிபதி தனது அதிகாரங்களைப் பிரயோகிக்கலாம். அவசரகால நிலையைப் பிரகடனம் செய்து, சட்டம் ஒழுங்கை நிலைநாட்டும் போர்வையில், எந்த ஒரு மாகாண சபையையும் கலைத்துவிடவும், மாகாண முதலமைச்சரின் பொறுப்புகளைத் தனதாக் கிக் கொள்ளவும் ஜனாதிபதிக்கு அதிகாரமுண்டு. மாகாண சட்டசபை யால் நிறைவேற்றப்படும் சட்டங்களுக்கு அங்கீகாரம் வழங்கும் விவ காரத்தில் ஜனாதிபதிக்கும் அவரது பிரதிநிதியான ஆளுனருக்கும் மேலதிக அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. மாகாண சபையால் நிறைவேற்றப்படும் சட்டங்களை ஒதுக்கி வைக்கவும் ஜனாதிபதியால் முடியும்.

சட்டம், ஒழுங்கு விவகாரத்தை எடுத்துக் கொண்டால் இத் தீர்வுத் திட்டமானது மத்திய அரசிடமே அதிகாரங்களைக் குவித்திருக்கிறது. மாகாண காவல்துறையைநிர்வகிக்கும்சகலஅதிகாரங்களும் பொலீஸ் மாஅதிபரிடமும் தேசிய காவல்துறை ஆணைக்குழுவிடமும் வழங்கப்பட்டிருக்கிறது. மாகாணத்தின் உதவி பொலீஸ் மாஅதிபர் போன்ற உயர் அதிகாரிகளை நியமிக்கும் அதிகாரம் ஜனாதிபதியிடம் உள்ளதால் மாகாண பாதுகாப்பு விவகாரங்களில் மத்திய அரசே ஆளுமையைச் செலுத்தும். அத்துடன் சட்டம் ஒழுங்கை நிலைநாட்டும் சாக்கில் தேசிய காவல்துறை பிரிவுகளை எந்த ஒரு மாகாணத்திற்கு அனுப்பிவைக்கவும் பொலீஸ் மாஅதிபருக்கு அதிகாரமுண்டு.

மாகாண காவல்துறை அமைப்பிற்கு மேலாக தேசிய காவல்துறை அமைப்பு ஒன்று திணிக்கப்பட்டிருப்பதோடு, ஜனாதிபதிக்கும் பொலீஸ் மாஅதிபருக்கும் ஏகபோக அதிகாரங்கள் வழங்கப்பட்டிருப்பதால் மாகாண காவல்துறை அதிகாரமற்ற நிறுவனமாக வலுவிழந்திருக்கிறது. இதனால் தமிழ் மக்களுக்கு தகுந்த பாதுகாப்பு அளிக்கும் நிறுவனமாக மாகாண காவல்துறை செயற்பட முடியாது.

நில உரிமை சம்பந்தப்பட்ட மட்டிலும் இத் தீர்வுத் திட்டம் திருப்திகரமானதாக இல்லை. காணி அபிவிருத்தித் திட்டம், மாகாண நீர்ப்பாசனத் திட்டம் ஆகியனவற்றிற்கு காணிகளைப் பயன்படுத்துவதில் மத்திய அரசிற்கு முழுமையான அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. மாகாண சபையின் நிர்வாக அதிகாரத்திற்குள் உட்படாத துறைகளுக்கு நிலத்தைப் பயன்படுத்துவதற்கும் மத்திய அரசிற்கு அதிகாரமுண்டு. அத்துடன் நிலத்தைப் பகிர்ந்தளிப்பதற்கும் மாகாண ஆளுநரின் அங்கீகாரம் பெற்றாகவேண்டும்.

நீர்ப்பாசனம், காணி அபிவிருத்தி என்ற போர்வையில் சிங்கள அரசு தமிழரின் நிலத்தை ஆக்கிரமித்துவரும் இந்த சூழ்நிலையில், இத்திட்டமானது தமிழரின் தாயகப் பூமிக்கு எவ்வித பாதுகாப்பையும் அளிப்பதாக இல்லை.

சிறீலங்கா அரசாங்கத்தினால் சமர்ப்பிக்கப்பட்ட தீர்வுத் திட்டத்தில் காணப்படும் அடிப்படையான குறைபாடுகளை நாம் இங்கு சுட்டிக்காட்டியுள்ளோம். தமிழர் தாயகத்தையும் மற்றும் தமிழ் மக்களின் நியாயபூர்வமான அரசியல் அபிலாசைகளையும் சிறீலங்கா ஆட்சிபீடம் ஏற்றுக்கொண்டால் அன்றி தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரமான தீர்வு ஏற்படப்போவதில்லை என்பதையும் நாம் இங்கு தெட்டத் தெளிவாக வலியுறுத்த விரும்புகிறோம். அத்துடன், தமிழர் பிரச்சினைக்கு சமாதான வழியில் ஒரு தீர்வைக் காண்பதற்கு சிறீலங்கா அரசு உண்மையாக விரும்புமானால் அப்பாவிப் பொதுமக்கள் அநியாயமாகக் கொல்லப்படுவது உடன் நிறுத்தப்படவேண்டும்; பாரிய இராணுவமயமாக்கல் கொள்கை கைவிடப்படவேண்டும்; தமிழ்ப் பகுதிகளில் இராணுவ முகாம்கள் அமைக்கப்படுவது நிறுத்தப்படவேண்டும்; சமாதானமும், இயல்பு நிலையும் ஏற்படுவதற்கான சூழ்நிலை உருவாக்கப்படவேண்டும்.

இறுதியாக, சமாதான அணுகுமுறை மூலமாக் தமிழர் பிரச்சினைக்கு ஒரு தீர்வுகாண எடுக்கப்பட்டுவரும் நேர்மையான முயற்சிகளுக்காக தமிழக முதலமைச்சருக்கும் இந்திய அரசிற்கும் எமது நன்றியைத் தெரி வித்துக் கொள்கிறோம். தமிழ் மக்களின் சுதந்திரம், கௌரவம், பாது காப்பு ஆகியனவற்றிற்கு உத்தரவாதம் அளிக்கும் வகையில் ஒரு நிரந் தரமான தீர்வைக்காண்பதற்கு இந்தியா மேற்கொள்ளும் முயற்சிகளுக்கு எமது விடுதலை இயக்கம் தன்னாலான ஒத்துழைப்பையும் ஆதரவை யும் நல்குமென வலியுறுத்த விரும்புகிறோம்.

வணக்கம்.

உங்கள் உண்மையுள்ள,

**வேலுப்பிள்ளை பிரபாகரன்**

தலைவர், இராணுவத் தளபதி

தமிழீழ விடுதலைப் புலிகள்

# சாகும்வரை உண்ணாவிரதம்: தலைவர் அளித்த விளக்கம்

குறிப்பு:

**1986 ம்** ஆண்டு, நவர்பர் மாதம், 22-ந் திகதி தலைவர் பிரபாகரன் சென்னையில் சாகும்வரை உண்ணா விரதப் போராட்டம் ஒன்றை ஆரம்பித்தார். இந்திய மத்திய - மாநில அரசுகளின் கூட்டு நடவடிக்கையாக விடுதலைப் புலிகள் இயக்கத்தின் ஆயுதங்களும், தகவல் தொடர்பு சாதனங்களும் பறிமுதல் செய்யப்பட்டதை ஆட்சேபித்து சாகும்வரை உண்ணாவிரதத்தைத் தலைவர் மேற்கொண்டார். உண்ணாவிரதத்தைத் தொடர்வதற்கு முன்பாக புலிகள் மீது மேற்கொள்ளப்பட்ட இந் நடவடிக்கையைக் கண்டித்தும், தமது கோரிக்கைகளை விளக்கியும் பத்திரிகைகளுக்கு தலைவர் வெளியிட்ட அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

□□□

"கடந்த இரு வாரங்களாக இந்திய மத்திய மாநில அரசுகள் எமது இயக்கம் மீது மேற்கொண்ட நடவடிக்கைகள் தமிழீழ மக்களின் விடுதலைப் போராட்டத்தைப் பெருமளவில் பாதித்துள்ளது. தமிழீழ மக்களை இன வாரியாக ஒழித்துக் கட்ட சிங்கள இனவாத அரசு முழுமூச்சாக முயன்றுவரும் இவ்வேளையில் எமது ஆயுதங்களைப் பறித்தும், எமது தகவல் தொடர்பு சாதனங்களைக் கைப்பற்றியும், எமது நடமாட்டங்களைக் கண்காணித்தும் எம்மில் பல அழுத்தங்களைப் பிரயோகித்து, மத்திய மாநில அரசுகள் மேற்கொண்டு வரும் இந்த நடவடிக்கை சிங்கள அரசின் கையை பலப்படுத்துவதோடு தமிழீழ மக்களின் பேரழிவுக்கு வழி வகுப்பதாக அமையும் என அஞ்சுகின்றோம்.

இன அழிவை எதிர்நோக்கி இருக்கும் எமது மக்கள் பாரத நாட்டை குறிப்பாக தமிழ் நாட்டின்மீது அபார நம்பிக்கை வைத்திருப்பவர்கள். வரலாற்று ரீதியாக, கலாசார ரீதியாக பாரதத்துடன் ஆழமான ஆன்மீகத் தொடர்புகளை வைத்திருக்கும் எமது மக்கள் பாரதநாடு எமது பாதுகாவலனாக இருந்துவரும் என நம்பி வாழ்ந்தவர்கள். ஆனால் மத்திய மாநில அரசுகளின் சமீபத்திய நடவடிக்கைகள் எமது மக்களை பாதுகாப்பற்ற பெரும் ஆபத்தான சூழ்நிலையில் தள்ளியுள்ளது.

தமிழ் நாட்டில் தமிழீழ விடுதலைப் புலிகளின் மீது மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையால் மகிழ்ச்சியும் உற்சாகமும் கொண்ட சிங்கள அரசு தமிழ்ப் பிரதேசங்கள் மீது ஒரு பாரிய படையெடுப்பை மேற்கொள்ள ஆயத்தங்கள் செய்து வருகிறது. 21-11-86ல் முல்லைத்தீவில் சிங்கள இராணுவம் பெருந் தொகையான அப்பாவித் தமிழர் மீது பெரியளவிலான தாக்குதலை நடத்தியதாக அறிகிறோம்.

எமது இயக்கம் தமிழ்நாட்டில் எவ்வித சமூகவிரோத நடவடிக்கைகளிலும் ஈடுபடவில்லை. அப்படியிருந்தும் எமது மக்களின் பாதுகாப்பிற்காக வைத்திருந்த ஆயுதங்கள் பறிபோனபோது நாம் வேதனையடைந்தோம். எனினும் நாம் உறுதி தளரவில்லை. ஆனால் நாம் எமது மக்களோடும் போராளிகளோடும் தொடர்பு வைத்திருந்த தகவல் தொடர்பு சாதனங்கள் எம்மிடமிருந்து பறிக்கப்பட்ட நடவடிக்கையானது மிகவும் பாரதூரமானது. தமிழீழவிடுதலைப் போராட்டத்திலிருந்து எம்மை முற்றாக அன்னியமாக்கிவிடும் ஆபத்தான நடவடிக்கையாகவே இதைக் கருதுகிறோம்.

தமிழீழ மக்கள்மீது இழைக்கப்படும் அநியாயங்களையும் அட்டூழியங்களையும் உலகத்திற்கு வெளியிடும் ஒரே செய்தித் தொடர்பைத் துண்டித்துவிட்டதால் இச் செயலானது சிங்கள அரசு தமிழீழ மக்கள் மீது கட்டவிழ்த்துவிடும் இனப்படுகொலையை மூடிமறைக்க துணைபோவதாக அமையும், இந்நடவடிக்கைக்கு கடும் ஆட்சேபனை தெரிவிக்கும் முகமாக நான் 22-11-86 அதிகாலையிலிருந்து சாகும்வரை உண்ணாவிரதம் அனுஷ்டித்து வருகிறேன். தமிழீழ மக்களின் இன்றைய இக்கட்டான நிலையை தமிழ் நாட்டு மக்களுக்கும் உலக மக்களுக்கும் எடுத்துக்காட்டவே நான் இந்தக் கடும் நடவடிக்கையை எடுத்தேன். எமது தகவல் தொடர்பு சாதனங்கள் எம்மிடம் உடனடியாக ஒப்படைக்கப்பட வேண்டும், எம்மீது போடப்பட்டுள்ள பொலிஸ் கண்காணிப்பு உடன் நீக்கப்பட வேண்டும். அல்லாது விடில் நான் பாதுகாப்பற்ற எமது மக்களுக்காக தமிழீழம் சென்று போராடுவதற்கு எந்தவிதமான கட்டுப்பாடுகளுமின்றி அனுமதிக்கப்பட வேண்டும். இக்கோரிக்கைகள் நிறைவேற்றப்படாத பட்சத்தில் நான் தொடர்ந்து சாகும் வரை உண்ணாவிரதம் இருப்பேன் என உறுதியாகக் கூற விரும்புகிறேன்."

□□□

# தலைவரின் கோரிக்கைக்கு தமிழக அரசு பணிந்தது



**குறிப்பு:**

இந்திய மத்திய—மாநில அரசுகளினால் பறிமுதல் செய்யப்பட்ட தகவல் தொடர்பு சாதனங்கள் உடனடியாக ஒப்படைக்கப்படவேண்டும் என்றும் விடுதலைப் புலிகள்மீது போடப்பட்டுள்ள பொலீஸ் கண்காணிப்பு உடன் நீக்கப்பட வேண்டும் என்றும் தலைவர் பிரபாகரன் முன்வைத்த கோரிக்கைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டதால் தலைவர் தமது சாகும் வரை உண்ணாவிரதத்தை கைவிட்டார். புலிகளின் தகவல் தொடர்பு சாதனங்களை உடனடியாக கையளித்துவிடுமாறு அன்றைய முதலமைச்சர் கனம் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் பிறப்பித்த கட்டளையை அடுத்து தமிழக காவற்துறையினர் இந்த சாதனங்களை தலைவரிடம் ஒப்படைத்தனர். இதனையடுத்து இரு தினங்களாகத் தொடர்ந்த உண்ணாவிரதத்தை தலைவர் கைவிட்டார். திராவிட இயக்கத் தலைவர் திரு. வீரமணி அவர்கள் தலைவருக்கு பழ ரசம் அருந்தக் கொடுத்து உண்ணாவிரதத்தை முடித்துவைத்தார். உண்ணாவிரதம் முடிந்ததைத் தொடர்ந்து தமிழக பத்திரிகையாளருக்கு தலைவர் பேட்டியளித்தார். இந்தப் பேட்டியை இந்தியப் பத்திரிகைகள் முக்கியத்துவம் கொடுத்து பிரசுரித்திருந்தன. 'இந்து' பத்திரிகையில் 24. 11. 1986-ல் வெளியாகிய இப்பேட்டியை தமிழாக்கம் செய்து இங்கு தருகிறோம்.

தாம் முன்வைத்த கோரிக்கைகளை நிறைவுசெய்வதாக தமிழக முதலமைச்சர் உறுதியளித்ததைத் தொடர்ந்து விடுதலைப் புலிகள் இயக்கத்தின் தலைவர் திரு. வேலுப்பிள்ளை பிரபாகரன் தனது சாகும் வரை உண்ணாவிரதத்தை கைவிட்டார்.

''தமிழக காவல்துறையினரின் அடாவடித்தனங்களும் அத்துமீறிய செயல்களுமே என்னை உண்ணாவிரதம் இருக்கத் தூண்டியது. முதலில் எங்களிடம் ஆயுதங்களைப் பறித்தார்கள். பின்னர் எங்களை வீட்டுக் காவலில்வைத்து கண்காணித்தார்கள். இவற்றை எல்லாம் நாங்கள் பொறுமையுடன் சகித்து வந்தோம். ஆனால் எமது தொலைத்தொடர்பு சாதனங்களைப் பறித்தெடுத்தபோது நாம் பொறுமையை இழக்க நேரிட்டது. ஏனென்றால் தமிழீழக் களத்திலுள்ள எமது போராளிகளுடன் நாம் தொடர்புகொள்ளும் சாதனங்கள் இவை. இவற்றைப் பறிப்பதன்மூலம் தமிழகத்திற்கும் தமிழீழத்திற்கும் மத்தியிலான எமது தொடர்பை துண்டித்துவிடவே இந் நடவடிக்கை எடுக்கப்பட்டதாக நாம் கருதினோம்'' இவ்வாறு திரு. பிரபாகரன் கூறினார்.

''தமிழீழப் போராளிகள் சட்டவிரோதமாக தமிழ்நாட்டில்வந்து குடியேறி சட்டவிரோதமாக இங்கு செயல்படுவதுபோல ஒரு தோற்றப்பாட்டை தமிழகப் பொலீஸார் உருவாக்க முயற்சிக்கின்றனர்.ஆனால் உண்மையில் நாம் இங்கு சட்ட விரோதமாக வரவில்லை. தமிழீழ மக்களின் பிரதிநிதிகளாக கௌரவிக்கப்பட்டு, இந்திய அரசின் விருந்தினர்களாகவே நாம் இங்கு அழைக்கப்பட்டோம்.நாம் இந்தியாவில் சட்டத்தையும் ஒழுங்கையும் எவ்வகையிலும் மீறவில்லை. இதனை நிரூபித்துக்காட்டவே நான் இந்த உண்ணாவிரதத்தை மேற்கொண்டேன்'' என அவர் மேலும் தெரிவித்தார்.

சாத்வீக போராட்டம் மூலம் தமிழர் பிரச்சினைக்கு தீர்வுகாண முடியும் என தமது இயக்கம் நம்பவில்லை என்றும் திரு. பிரபாகரன் ஒரு கேள்விக்கு பதிலளிக்கும் போது குறிப்பிட்டார். சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டத்தை ஒரு வழிமுறையாகக் கையாண்டு இந்தியாமீது அழுத்தத்தைப் பிரயோகிப்பது தமது நோக்கமல்ல என்றும் அவர் கூறினார். ''இந்தியாமீது அழுத்தத்தை பிரயோகிப்பதால் எமது மக்களின் விடுதலையை நாம் வென்றெடுக்க முடியாது'' என்றும் திரு. பிரபாகரன் சுட்டிக்காட்டினார்.

''நாம் எமது விடுதலைப் போராட்டத்தை எமது மண்ணில்தான் நடத்த வேண்டும்'' என்று கூறிய புலிகளின் தலைவவர், தமிழ் நாட்டு மக்களுக்கு எதிராக ஆயுதப் போராட்டத்தை நடத்துவதற்காக புலிகள் இயக்கம் இங்கு வரவில்லை என்றும் எடுத்துரைத்தார்.

சமீபத்தில் பங்களூரில் நடைபெற்ற சார்க் மாநாட்டின்போது சிறீலங்கா ஜனாதிபதி ஜெயவர்த்தனா போதித்த சாத்வீகத் தத்துவத்தை தன்னால் புரிந்துகொள்ள முடியவில்லை என திரு. பிரபாகரன் கூறினார். ''இவ்வாரம் முல்லைத் தீவிலும், யாழ்ப்பாணத்திலும் நடைபெற்ற கண்மூடித்தனமான விமானக் குண்டுவீச்சினால் பத்து அப்பாவித் தமிழ் மக்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இதுதான் ஜெயவர்த்தனாவின் சாத்வீக தர்மம்'' என்று அவர் குறிப்பிட்டார்.

''தமிழர் தாயகம் அங்கீகரிக்கப்பட வேண்டும். இதில் நாம் மிகவும் உறுதியாக இருக்கிறோம். ஆனால் தமிழரின் தாயகக் கோரிக்கையை ஜெயவர்த்தனா நிராகரித்து விட்டார். இந்த நிலையில், இந்திய அரசு ஜெயவர்த்தனாமீது அழுத்தத்தைப் பிரயோகிக்க வேண்டும். அதை விடுத்து புலிகள்மீது அழுத்தம்போடுவது எந்த வகையிலும் நியாயமில்லை. இந்திய அரசு தமிழ் மக்களுக்கு நீதியைப் பெற்றுத்தர முயற்சிக்கவேண்டும். அப்படியான நேர்மையான முயற்சிகளுக்கு புலிகள் இயக்கம் தன்னாலான ஆதரவை வழங்கும்'' என்றும் விடுதலைப் புலிகளின் தலைவர் எடுத்து விளக்கினார்.

○○○

# தமிழினத்தை அழித்துவிட பின்னப்படும் சதிவலை



குறிப்பு:

**த**மிழ் நாட்டில் வெளியாகும் **'தேவி'** இதழுக்கு தலைவர் அளித்த பேட்டியை இங்கு தருகிறோம். 1986, டிசம்பர், 3-ந் திகதி இதழில் வெளியாகிய இப்பேட்டியில் பெங்களூர் பேச்சுவார்த்தையின்போது சிறீலங்கா அரசாங்கம் முன்வைத்த தீர்வுத் திட்டம்பற்றியும், அதில் பொதிந்துள்ள ஆபத்துபற்றியும் தலைவர் எடுத்து விளக்குகிறார்.

இந்தமுறை விடுதலைப் புலிகளின் தளபதி பிரபாகரனை சந்திக்கச் சென்ற போது ஒரு புதிய சூழ்நிலை அங்கே நிலவு வதை அனுபவபூர்வமாக சந்திக்க நேர்ந் தது.

தமிழக பொலீசின் இரகசியப் பிரிவினர் அதிக அளவில் சுற்றிக் கொண்டிருந்த துடன் ஒரு ஜீப்பும் சற்றுத் தொலைவில் நின்றுகொண்டிருந்தது. பிரபாகரன் எங்கு சென்றாலும் விரட்டிக் கொண்டு பின் தொடர உத்தரவிட்டிருக்கின்றார்களாம்.

அடைக்கலம் தேடி வந்தவர்களை தமிழக அரசு எவ்வளவு 'அன்பாக' நடத்தி வருகிறார்கள் என்பதை நேரில் பார்க்க முடிந்தது.

யார் யார் பிரபாகரனை சந்திக்க வருகிறார்கள் என்பதையும் நமது ஒற்றர் பிரிவு குறிப்பெடுத்து அவ்வப்போது மேலிடத்துக்கு தெரிவிக்கிறது. பத்திரிகையாளர் என்பதை மட்டும் அவர்களுக்கு சொல்லி விட்டு பிரபாகரனை சந்திக்கச் சென்றார் 'தேவி' நிருபர்.

''பெங்களூருக்கு அவசரமாக அழைக் கப்பட்டு சென்றீர்கள். அங்கு நீங்கள் நிர்ப்பந்தம் செய்யப்பட்டதாக அறி கிறோம். உண்மையில் என்ன நடந்தது என்பதைச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டதும் ''மறைப்பதற்கு ஒன்று மில்லை'' என்றவாறே நடந்ததைச் சொன் னார்.

''நிர்ப்பந்தம் எதுவும் உண்மையிலேயே கிடையாது. எப்பவும் போல் வழக்கமானது தான் நடந்தது. எங்களை மட்டும் தனித்து கூப்பிட்டு பேசினார்கள் என்பதுதான் புதிது.

எங்களின் தனித்தன்மையை உணர்ந்த தின் காரணமாக எங்களிடம் பேச்சு நடத் தினால் மட்டுமே நியாயம் காண முடியும் என்பதை அறிந்திருக்கிறார்கள். இதனால் தான் ஜெயவர்த்தனா சொன்ன திட்டத்தை எங்களிடம் அவர்கள் சொன்னார்கள்.

இந்த பேச்சுவார்த்தையில் மத்திய அமைச்சர்கள் நட்வர்சிங், சிதம்பரம், இலங்கைத் தூதர் தீட்சித், எம். ஜி. ஆர்., பண்ருட்டி, நான், பாலசிங்கம், திலகர் ஆகியோர் கலந்து கொண்டோம்.

வடக்கு மாகாணத்தை தனியாகவும். கிழக்கு மாகாணத்தை தமிழர், சிங்களவர், முஸ்லிம் என்ற ரீதியில் மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம் என்று ஜே. ஆர். சொன்னதாக எங்களிடம் தெரிவிக்கப்பட்டது. வடக்கு—கிழக்கு மாகாணங்கள் இரண்டாக இருப் பதை ஒன்றாக இணைக்க வேண்டும் என் பதை நாங்கள் வற்புறுத்திக் கொண்டிருக் கும் போது இரண்டை நாலாக கூறுபோடும் யோசனையை நாங்கள் எப்படி ஏற்க முடி யும்? அதனால் நிராகரித்துவிட்டோம்.

ஆனால் ஜே. ஆர். சொன்ன திட்ட த்தை இவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லி எங்களை திருப்திப்படுத்த முயன்றார்கள். நாங்கள் எங்கள் தமிழீழத்தை கூறுபோட சம்மதிக்க முடியாது என்றும், ஏற்பதற் கில்லை என்பதையும் திட்டவட்டமாகச் சொன்னோம்'' என்றார் தளபதி பிரபா கரன்.

''கிழக்கு மாகாணத்தை மூன்றாகப் பிரிப்பதால் என்ன தீமை ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் அஞ்சுகிறீர்கள்?''

—இப்படிக் கேட்டதும் மூன்றாகக் கூறு போடுவதால் ஏற்படும் விளைவுகளை சுருக்க மாக, ஆனால் ஆபத்தான அம்சங்களை எடுத்துச் சொன்னார்.

''தமிழர்கள் நிலப்பரப்பளவில் பிரிக் கப்பட்டு விடுகிறார்கள். அடுத்து மத அடிப் படையில் தமிழர் — முஸ்லிம்கள் என்று பிரிக்கப்படுகிறார்கள். இதனால் அண்டைப் பகுதிகளில்உள்ள சிங்களவர்கள் இந்தப்பகுதி களில் குடியமர்த்தப்பட்டு நாளடைவில் தமிழர்கள் சிறுபான்மையினராக ஆக்கப் படுவதுடன் நாடற்றவர்கள் என்ற நிலைக்கு வந்துவிடுவார்கள். இந்த வரைபடத்தைப் பாருங்கள். உங்களுக்கு அந்தப் பேராபத்து நன்றாகத் தெரியும் (வரை படம் இங்கே பிரசுரமாகி இருக்கிறது). பூர்வீகக் குடியின

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.




ரான தமிழர்களும் 150 ஆண்டுகளுக்கு முன்பே வந்து நாட்டை வளமாக்கிய மலையகத் தமிழர்களும் நாடற்றவர்களாக மாறக்கூடிய இந்த திட்டத்தை நாங்கள் எப்படி ஏற்க முடியும்?''

''தம்பி! (பிரபாகரனின் செல்லப் பெயர்) நீங்கள் பெங்களூரில் நிர்ப்பந்தம் செய்யப்படவில்லை என்பதை மறுத்தாலும் அதற்கு முன் இங்கு (சென்னை) நீங்கள் பொலீஸ் காவலில் இருந்ததையும் உங்கள் ஆயுதங்கள் கைப்பற்றப்பட்டதுடன் நீங்கள் மோசமான முறையில் பொலீஸ் நிலையத்தில் நடத்தப்பட்டதையும் பார்க்கும் போது நிச்சயமாக நீங்கள் நிர்ப்பந்தப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள் என்று ஊகிக்கமுடிகிறது!'' என்று நிருபர் சொன்னதும்,

''ஊகங்கள் முடிவு ஆவதில்லையே! இங்கு பொலீசார் நடந்து கொண்டமுறை விரும்பத்தகாததுதான்! அதைக் கண்டித்திருக்கிறோம். பொலீஸ் நடவடிக்கையும் ஏற்கக் கூடியதில்லை.

அன்று காலை 6 மணி அளவில் பொலீசார் வந்தார்கள். சோதனை போடப்

போவதாகச் சொன்னார்கள். ஆயுதங்களை ஒப்படைக்கச் சொன்னார்கள். நானே எங்கள் பாதுகாப்புக்காக வைத்திருந்த எல்லா ஆயுதங்களையும் கொடுத்துவிடச் சொன்னேன்.

பிறகு விசாரணைக்கு என்று பொலீஸ் நிலையத்துக்கு அழைத்துச் சென்று ஒன்றரை மணி நேரம் வைத்திருந்தார்கள். கிரிமினல் கைதிகளை படம் எடுப்பது போல் பக்கவாட்டில், நேராக இப்படி படம் எடுத்தார்கள்.

அப்போதே அதை நான் கண்டித்தேன். நாங்கள் என்ன கிரிமினல்களா? மக்கள் பிரதிநிதிகள் அல்லவா? காவல்துறையினர் செய்கிறார்கள். ஆகவே அவர்களுக்குக் கட்டுப்பட்டு இருந்தேன்!'' என்றார் பிரபாகரன்.

''வீடியோ எடுத்தார்களாமே, இது வரை நாங்கள் இங்கே கேள்விப்படாதது உங்கள் விஷயத்தில் நடந்திருக்கிறது!''

''புலனாய்வுத் துறையில் மாறுதல் வந்திருக்கலாம். வீடியோ எடுத்தால் குற்றங்களைக் கண்டுபிடிப்பது சுலபமாக இருக்குமோ என்னவோ?'' என்று சொல்லிவிட்டு சிரித்தார் பிரபாகரன்.

''அது எப்படியோ, 'பிரபாகரன் யார்?' என்று அடையாளம் தெரியாமல் சிங்கள அரசு திண்டாடித் தெருவில் நின்ற போது இங்கிருந்த பொலீஸ் அதிகாரி மோகன்தாஸ் சிங்கள அரசுக்கு படங்களை அனுப்பிவைத்தார் என்று நெடுமாறன் குற்றம்சாட்டி இருந்தார். தமிழக அரசு-தமிழக பொலீஸ் நடவடிககைகளும் சிங்கள அரசுக்கும் - வெறியர்களுக்கும் மகிழ்ச்சி அளிப்பதாகவே இருந்து வருகின்றன. எனவே இந்த வீடியோ சிங்களவர்களுக்கு அனுப்பப்படாமல் இருந்தால் சரி. இது இருக்கட்டும். ஜெயவர்த்தனாவை இந்திய அரசு தன் வழிககுக் கொண்டுவந்து விடும் என்று எதிர்பார்க்கிறீர்களா?''

''உண்மையில் ஜே. ஆரை தன் வழிக்கு கொண்டு வர முடியாததால் தான் பேச்சு வார்த்தை மூலம் இழுத்துக் கொண்டிருக்கிறது. தமிழர்களுக்கு பாரம்பரிய பூமி இருக்கிறது என்பதையே ஜே. ஆர். ஒத்துக் கொள்ளவில்லையே. அதை ஒத்துக் கொள்ளச் செய்வதற்குப் பதிலாக எங்கள் தலையை நசுக்க ஆரம்பித்து விட்டார்கள். இவர்களால் ஜே. ஆரை வெல்ல முடியவில்லை.''

''உங்களை ஜெயவர்த்தனா இரகசியமாக சந்திக்க தூது அனுப்பினாரே, அதற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?''

''என்னை ஜே. ஆர். இரகசியமாக சந்திக்க விரும்பியது உண்மை. பதவி ஆசை காட்டி என்னை இழுத்துவிட்டால் இந்தியாவை சமரச முயற்சியில் இருந்து விலக்கி விடலாம் அல்லவா? இதுதான் காரணமாக இருக்கலாம்!''

''ரகசியமாக தூது அனுப்பிய ஜெயவர்த்தனா பகிரங்கமாக அழைப்பு அனுப்பினால் போவீர்களா?''

''நிச்சயமாக போகமாட்டேன். தமிழீழத்தை ஒப்புக் கொள்ளாமல் சும்மா சந்திப்பதில் என்ன அர்த்தம். அது தற்கொலை செய்து கொள்வது மாதிரி!''

''பெங்களூரில் கூடிய 'சார்க்' மாநாட்டில் பயங்கரவாதிகளுக்கு இடம் கொடுக்கமாட்டோம் என்று முடிவு செய்து இருக்கிறார்கள். சொந்த நாட்டு விடுதலைக்காக சுதந்திரப் போராட்டம் நடத்தும் உங்களை பயங்கரவாதிகள் என்ற பட்டியலில் சேர்த்து வெளியேற்றினால் என்ன செய்வீர்கள்?''

''இதில் இந்திய பிரதமர் ராஜீவ் தெளிவாகவே விளக்கி இருக்கிறார். அது அந்த அந்த நாட்டுச் சூழ்நிலையைப் பொறுத்து கவனிக்க வேண்டியது என்று சொல்லியிருக்கிறார். ஆனால் எங்களை வெளியேறச் சொன்னால் நாங்கள் போகத் தயாராகவே இருக்கிறோம்''

''ஒரு முக்கியமான பிரச்சினையையும் இங்கே சொல்ல விரும்புகிறேன் தம்பி! அதாவது நீங்கள் ஒரு இயக்கத் தலைவரின் பேச்சைக் கேட்டு நடப்பதாக ஒரு செய்தி

தமிழகத்தில் பரவி இருக்கிறது. இதனால் அந்தக் கட்சித் தலைவருக்கு எதிராகசெயல் படக் கூடிய பெரிய இயக்கங்களின் ஆதரவு உங்களுக்கு கிடைக்காமல் போகலாம் அல்லவா?''

''நீங்கள் குறிப்பிடக் கூடிய தலைவரின் பேச்சைக் கேட்டு நடப்பதாக இருந்தால் அவர் சொன்ன எல்லாவற்றுக்கும் நான் சம்மதித்திருக்க வேண்டுமே? என்னைப் பொறுத்தவரை நான் தமிழீழ விடுதலை இயக்கத் தலைவன். எங்கள் நாட்டுக்காக போராடுகிற என் சகோதர போராளிகளை கேட்டுத்தான் செயல்படுகிறேன். வேறு யார் கருத்தையும் கேட்பதில்லை'' என்று திட்டவட்டமாக வலியுறுத்திய பிரபாகரன் இன்னொன்றையும் சொன்னார்.

''தமிழ்நாட்டு மக்களை நாங்கள் உறுதியாக நம்புகிறோம். தமிழின உணர்வு இன்னும் அழியவில்லை என்று நம்புகிறோம். இப்போது நடந்து கொண்டிருக்கிற தலைவர்களின் கோபம் பனிமூட்டம் போன்றது. அது நாளடைவில் கலைந்து ஒளி கிடைக்கும் என்று நம்புகிறோம்''

''இப்போது விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டில் தமிழீழத்தில் எந்தெந்த பகுதிகள் இருக்கின்றன?''

''யாழ். குடாநாடு முழுவதும் எங்கள் கட்டுப்பாட்டில்தான் இருக்கிறது. தவிர மன்னார் மாவட்டத்தில் பல கிராமங்களும், கிளிநொச்சி மாவட்டமும் எங்களின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கின்றன. இந்தப்பகுதிகளில் பொலீஸ் நிர்வாகம் என்பதே கிடையாது. வவுனியாவிலும் இல்லை.

சிவில் நிர்வாகத்தை நாங்களே கண்காணித்தாலும், குடும்பத்தகராறு, நிலத் தகராறு போன்ற ஊர் பிரச்சினைகளை கவனிக்க பெரிய மனிதர்கள் அடங்கிய இணக்க சபையை அமைத்திருக்கிறோம். இந்தச் சபையில் எல்லா சமூகத்தினரும் இருக்கிறார்கள். அந்தச் சபையே தீர்ப்புச் சொல்லிவிடும்!

உணவு உற்பத்திக்காக அதிக மகசூல் தரக்கூடிய விதைகளை கொடுத்து விவசாய வளர்ச்சிகளையும் கவனித்து வருகிறோம். போக்குவரத்துக் கட்டுப்பாடு, வரி வசூல் எல்லாம் நாங்கள் தான் செய்கிறோம். மக்களுக்குத் தேவையான எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்படுகின்றன. டி.வி, வானொலி எங்களால் நடத்தப்பட்டு வருகிறது''

''நாணயம் அடிப்பது?''

''அது பற்றித்தான் இப்போது திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். அதில் மிகவும் கவனம் தேவை என்பது உங்களுக்கே தெரியும்.''

''உங்களுடைய இராணுவ நிலைமை எப்படி இருக்கிறது?''

''எங்களைப் பொறுத்த வரை நிறைய வெற்றிகள் பெற்றுக் கொண்டு இருக்கிறோம். சிங்கள இராணுவம் பலவீனப்பட்டு வருகிறது. கண்ணி வெடிக்கும் நொறுங்காத கவச வண்டிகளை தென்ஆபிரிக்காவிலிருந்து சிங்கள அரசு கொண்டு வந்திருந்தது. அதையும் வெற்றிகரமாக உடைத்து நொறுக்கி விட்டோம். இரண்டு சிங்கள இராணுவ வீரர்களை உயிருடன் பிடித்திருந்தோம்.

பணய கைதிகளை மாற்றிக் கொள்வோம் என்ற நிலையில் இருந்து இப்போது சிங்கள அரசு மாறிவிட்டது. இது சம்பந்தமாக ஒரு இலங்கை எம்.பி. என்னுடன் நேரடித் தொடர்பு கொள்ள முயன்றார். நான் கிட்டுவுடன் தொடர்பு கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டேன்.''

''உங்களுக்குத்தான் முதல்மந்திரிப்பதவி கொடுப்பதாக ஜே. ஆர். சொல்லியிருந்தாராமே? ஒப்புக் கொள்ள வேண்டியது தானே. படிப்படியாக தமிழீழம் பெற வசதியாக இருக்கும் அல்லவா?''

''நீங்கள் நினைப்பது மாதிரித்தான் தமிழ் மக்களும் நினைக்கக் கூடும் என்பதால் இதை விளக்கி விடுவது நல்லது என்று நினைக்கிறேன். முதல் மந்திரிப்பதவி தருவதாகச் சொன்னதை நான் தூக்கி எறிந்து விட்டேன். உண்மையிலேயே அது ஒரு மாயவலை. தமிழ் இனத்தை அழிப்ப

தற்கு வேறு வகையாகப் பின்னப்பட்ட சதி வலை. அதிகாரங்கள் எதுவுமற்ற, நினைத்தால் ஜனாதிபதியால் கலைக்கக் கூடிய பதவிதான் முதல் மந்திரிப்பதவி. மக்களுக்கு எந்த நன்மையும் செய்ய முடியாத பொம்மை பதவிதான் அது!''

''ஒரே கட்சிதான் ஆட்சியில் இருக்கும், சர்வாதிகார ஆட்சிதான் நடக்கும் என்று நீங்கள் சொல்லி இருக்கிறீர்கள் என்று சொல்லப்படுகிறது. இது எப்படி நியாயமாகும்?''

''தவறாக புரிந்திருக்கிறீர்கள். ஜனநாயகமும் சோசலிசமும் இரு முரண்பட்ட அரசியல் இலட்சியங்களை குறித்து நிற்பதாக பலர் கருதககூடும். இது தவறான கண்ணோட்டமாகும்.

மக்கள் ஜனநாயகம் தான் அங்கு இருக்கும். சோசலிச ஆட்சிதான் அங்கு நடக்கும். பத்திரிகைச் சுதந்திரம் இருக்கும். வழிபாட்டு சுதந்திரம் இருக்கும். ஏழை—பணக்காரன் என்ற வர்க்க பேதமற்ற ஜனநாயக சோசலிசம் இருக்கும். மக்கள் ஆதரித்து தேர்வு செய்யும் ஒரே கட்சி இருக்கும். இதுதான் எங்கள் தமிழீழம்!''

''தமிழீழத்தின் தலைநகர் எது?''

''திருக்கோணமலை. இதற்காகத் தானே பெங்களூரில் தகராறு நடந்தது!''

''வெற்றி நெருங்கிக் கொண்டிருக்கும் இன்றைய நிலையில் எல்லா போராளிகள் அமைப்பும் ஒன்றுபட்டு போராடினால் என்ன.''

''சில அமைப்புகள் வெறும் அறிக்கைகள் மூலம்தான் செயல்படுகின்றன நேரடி நடவடிககையில் ஈடுபடுவதில்லை. நாங்களும் ஈரோஸ் அமைப்பும்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்த நிலையில் கட்டுப்பாடு இல்லாத கள அமைப்புகளுடன், மக்கள் மீதே தாக்குதல் நடத்தும் அமைப்புக்களுடன் எப்படி இணைந்து போராட முடியும்? இதனால்தான் டெலோ, பாதுகாப்பு பேரவை, டெலா மற்றும் சிறுசிறு இயக்கங்களுக்கு நாங்கள் தடை விதித்திருக்கிறோம். சில அமைப்புகள் தங்களை தாங்களே தடை செய்து விட்டு எங்கள் மீது பழியைப் போட்டு விட்டுப் போய் விட்டன.''

''இப்போது ஈழப் பகுதியில் பொதுவான நிலை எப்படி இருக்கிறது? அதாவது சிங்கள இராணுவத்தின் நிலை?''

''யாழ்குடா பகுதியை எங்களிடம் இருந்து கைப்பற்ற இன்னும் இரண்டு வாரத்தில் கடுமையான தாக்குதல் நடாத்த சிங்கள அரசு கருதியிருக்கிறது. ஆகாயம், கடல் தரை இப்படி மூன்று வழிகளிலும் முப்படைத்தாக்குதல் நடக்கலாம்.

இப்போது இஸ்ரேலிடம் இருந்து மேலும் ஆறு யுத்தப் படகுகளை வாங்கி கடல் பகுதியில் தங்களை வலிமைப்படுத்தப் போகிறார்கள். அவர்களை எப்படி சமாளிப்பது என்பது எங்களுக்குத் தெரியும். எப்படி நொறுக்கித்தள்ளப் போகிறோம் என்பது இராணுவ ரகசியம். இதை மட்டும் கேட்காதீர்கள்''

''உங்களைப்பேட்டி காணவரும்போது ரகசிய ஒற்றர் படைப் பிரிவினர் பலரை பார்க்க நேர்ந்தது இன்னும் உங்களை ஏன் கண்காணிக்கிறார்கள்?''

''அதையேன் கேட்கிறீர்கள். எங்களை பொலீஸ் தொடர்ந்து கண்காணிக்கிறது. தொந்தரவு கொடுக்கிறது. எங்களைத் தொடர்ந்து சுற்றிக் கொண்டு இருக்கிறது!'' என்று வேதனையுடன் சொன்னார், தளபதி பிரபாகரன்!

□□□

# அகிம்சைத் தத்துவமும் ஆயுதப் போராட்டமும்



குறிப்பு:

தமிழ் நாட்டில் வெளியாகும் பிரபல வார இதழான 'கல்கி'க்கு தலைவர் பிரபாகரன் அளித்த பேட்டியை இங்கு பிரசுரிக்கிறோம். இந்தப் பேட்டி 14.12.1986-ல் வெளியாகியது. மனிதாபிமானமற்ற சிங்களப் பேரினவாதத்திற்கு எதிராக காந்திய அகிம்சை வழியில் போராடுவதில் அர்த்தமில்லை என இப் பேட்டியில் சுட்டிக்காட்டும் தலைவர், தமிழீழ சுதந்திர இயக்கம் ஆயுதப் போராட்டத்தை முன்னெடுக்கவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறார்.

கல்கி:

தமிழக பொலீசார் உங்களிடமிருந்து பறித்த தகவல் தொடர்புச் சாதனங் களைத் திருப்பித்தர வேண்டுமென்று நீங்கள் உண்ணாவிரதமிருந்தீர்கள். அதற்கு உடனடியாக வெற்றியும் கிடைத் தது. இது அகிம்சைக்குக் கிடைத்த வெற்றி! அப்படியிருக்கும்போது, நீங் கள் இலங்கையிலும், அகிம்சை முறை யிலேயே வெற்றி பெறலாமே! ஆயுத மேந்திப் போராட வேண்டிய அவசிய மென்ன?

பிரபா:

உலகிலேயே அகிம்சை முறையில் வெற்றி பெற்ற நாடு இந்தியாவைத் தவிர வேறு எதுவும் இருக்க முடியாது. அதனால்தான் எனது உண்ணாவிரதத் திற்கு இங்கே வெற்றி கிடைத்தது. ஆனால் மனித நேயமற்ற சிங்கள அரசிடம், இரா ணுவத்திடம் இம்முறை எடுபடாது.

கல்கி:

மனிதாபிமானமுள்ள இந்தியர்களிடம் தான் அகிம்சை முறைப் போராட்டம் வெற்றி பெறுமுடியுமென்றால், மகாத்மாகாந்தி என்ன இந்தியர்களுக்கு எதிராகவா போராடினார்? ஆங்கிலேயர் களை எதிர்த்துத்தானே அகிம்சை முறை யில் போராடி வெற்றி பெற்றார்!

பிரபா:

இந்திய சுதந்திரப் போராட்டத்தில் காந்தி மட்டும்தான் பங்கெடுத்துக் கொண்டார் என்று எப்படிச் சொல்ல முடி யும்? நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் போன்ற வர்களும் இருந்தார்கள்; ஆயுதமேந்தினார் கள். இவற்றோடு சுதந்திர எழுச்சி என்பது இந்தியா முழுவதும் பரந்து கிடந்தது.

கல்கி:

நீங்கள் சொல்வதை நாங்கள் மறுக்க வில்லை. ஆனால் நீங்களே சொன்ன அந்தச் சுதந்திர எழுச்சி என்பது, நூறு சதவிகிதம் இல்லாவிட்டாலும் மிகப் பெரும்பான்மையான இந்திய மக்கள் காந்தியடிகளின் அகிம்சை முறைப் போராட்டத்தின் பின்னால்தான் கிளர்ந்து எழுந்தார்கள் இல்லையா? இறுதியில் அதுதான் வெற்றியும் பெற்றது. நேதாஜி யின் நோக்கங்கள் பகுதி அளவில்தான் வென்றன.

பிரபா:

உண்மைதான். ஆனாலும் காந்தியடி களின் அகிம்சைப் போராட்ட முறை தான் வெற்றிபெற்றது என்று சொல்ல முடியாது. அன்றைய இந்தியர்களின் சுதந் திர எழுச்சியைக்கண்ட ஆங்கிலேயர்கள், இந்தஅகிம்சைமுறை தோல்வியுற்றால் எதிர் காலத்தில் இவர்கள் ஆயுதமேந்தவும் தயங்க மாட்டார்கள் என்று உணர்ந்திருப்பார்கள். அதைத்தான் நேதாஜி போன்றவர்கள் உணர்த்தினார்கள். இது காரணமாகத் தான் தங்கள் காலனி ஆதிக்கத்தின் கீழுள்ள நாடுகளுக்கு விடுதலை கொடுக்க முன்வந்தார்கள். அப்படித்தான் நாங்கள் கருதுகிறோம்.

கல்கி:

எதையும் நாம் ஒரு முன் அபிப்பிராயத் தோடும் பிடிவாதத்தோடும் பார்க்க வேண்டியதில்லை. இந்தியாவில் தோன் றிய புத்த மதத்தை தங்கள் மதமாக ஏற்றுக்கொண்ட சிங்கள மக்கள் அத் தனை பிடிவாதமாகவும் மிருகத்தன மாகவும்தான் இருப்பார்கள் என்று எப் படியொரு முடிவுக்கு வர முடியும்?

பிரபா:

நாங்கள் இப்போதும் சாதாரணச் சிங்கள மக்களுக்கு எதிராக எங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்துவதே இல்லை. அவர்கள் மேல் எங்களுக்கு இன்னமும் மரி யாதை இருக்கிறது. நல்ல உறவுகளும் இருக்கின்றன. எங்கள் போராட்டமெல் லாம் சிங்கள இராணுவத்தோடுதான்.

கல்கி:

அப்படியானால் நீங்கள் சிங்கள மக் களையும் சிங்கள இராணுவத்தினரை

யும் வேறு வேறு பார்வையில்தான் பார்க்கிறீர்களா?

பிரபா:

ஆமாம்.

கல்கி:

சிங்கள இராணுவம் என்பது சிங்கள மக்களைக் கொண்டதுதானே? அதில் என்ன வேறுபாடு?

பிரபா:

அருமையான கேள்வி. சிங்கள இரா ணுவத்தை — அதாவது அரசை ஆட்டி வைத்துக் கொண்டிருப்பவர்கள் புத்தபிக்குகள்தான். மூல காரணம் புத்த பிக்குகள்தான். இலங்கையில் மதமும் அரசியலும் பின்னிக் கிடக்கின்றன.

கல்கி:

கொல்லாமையையும், புலால் உண்ணாமை யையும், அகிம்சையையும் வற்புறுத்திய மதம் புத்தமதம். அப்படிப்பட்ட மதத் தைச் சேர்ந்த புத்த பிக்குகளா இப் படிச் செய்கிறார்கள்?

பிரபா:

ஆமாம். புத்த பிக்குகள்தான் அங்கே அரசியல் நடத்திக் கொண் டிருக்கிறார்கள். பண்டாரநாயக்காவைச் சுட்டுக் கொன்றதே ஒரு புத்தபிக்குதான் என்றால் நம்ப முடிகிறதா?

கல்கி:

ஏதோ ஒருவர் அப்படியொரு வெறியில் இருந்திருக்கலாம். காந்தியடிகளைச் சுட்டுக் கொன்றது ஓர் இந்து என்பதற் காக, இந்துக்கள் எல்லாமே அப்படிப் பட்டவர்கள்தாம் என்றோ, அல்லது இந் திரா காந்தியைச் சுட்டவர்கள் சீக்கியர்கள் என்பதாலேயே சீக்கியர்களெல்லாம் அப் படிப்பட்டவர்கள் தாம் என்றோ சொல்லி விட முடியாதல்லவா?

பிரபா:

நாங்களும் அப்படிச்சொல்லவில்லை. அதன் மூலம் எங்களை நியாயப் படுத்திக் கொள்ளவுமில்லை. அவர்களின் மிருகத்தனம் எந்த அளவுக்கு அதிகரித்திருக் கிறது என்பதைச் சுட்டிக்காட்டுவதற் காகவே சொன்னோம்; எங்களை விளங் கப்படுத்திக் கொள்வதற்காகவே சொன் னோம்.

கல்கி:

இதற்கு என்ன காரணம்?

பிரபா:

இனவெறிதான் காரணம்.

கல்கி:

அந்த இனவெறிக்குத்தான் காரணம் கேட்கிறோம்.

பிரபா:

தமிழர் - சிங்களவர் என்ற இந்த இனவெறி ஆதியிலிருந்தே, அரசர் காலத்திலிருந்தே இருந்து கொண்டிருக் கிறது. பிரிட்டிஷ் காலனி ஆதிக்கத்திலி ருந்து விடுபட்டபின், கல்வி, தொழில் போன்ற பலவற்றில் இந்த இனவெறி பிரதி பலித்திருக்கிறது. இதற்குக் காரணம் தமி ழர்களின் உழைப்பும் முன்னேற்றமும்தான் வேறென்ன?

கல்கி:

இந்த இனவெறி ஆரம்பத்திலிருந்தே இருந்துகொண்டிருக்கிறதென்றால், அர சாங்கத்தில் தமிழர்களுக்கு அவர்கள் பிரதிநிதித்துவம் தந்திருக்க வேண்டிய அவசியமில்லையே?

பிரபா

சிங்கள அரசில் தமிழர் பிரதிநிதித் துவம் என்பது வெறும் கண்துடைப்பு பிரிட்டிஷ் காலத்தில் மத அடிப்படையிலும் இன அடிப்படையிலும் சிறுபான்மையின ராக உள்ள தமிழர்களுக்குப் பாதுகாப்புக்

கொடுத்த இருபத்தொன்பதாவது ஷரத்தைப் புதிய அரசியல் சட்டத்தின் மூலம் பறித்தது சிங்கள அரசுதான் என்பதைநினைவில் கொள்ளவேண்டும். ஆக, பிரிட்டிஷ் காலத்திலிருந்த பாதுகாப்பைக்கூட சிங்கள அரசு தமிழர்களுக்கு வழங்கவில்லை என்பதுதான் உண்மை.

கல்கி:

உங்களுடைய உரிமைகள் பறிக்கப்பட்டிருக்கின்றன என்பதிலும், அந்த உரிமைகள் மீண்டும் பெறப்பட்டாக வேண்டும் என்பதிலும் எங்களுக்குக் கருத்து வேறுபாடே இல்லை. ஆனால், அவற்றைப் பெறுவதற்காக ஆயுதமேந்தித்தான் போராட வேண்டுமா? அகிம்சை முறையிலேயே பெறலாமே என்றுதான் சொல்லுகிறோம்.

பிரபா:

நீங்கள் ஒன்றைக் கவனிக்க வேண்டும். 48-ல் தோட்டத் தொழிலாளர்களின் குடியுரிமை பறிக்கப்பட்ட போதும் சரி, 58-ல் தமிழ் மக்களின் குழந்தைகள் கூடக் கொல்லப்பட்டுக் கோயில்களெல்லாம் இடிக்கப்பட்டபோதும் சரி, அதன்பிறகு நடந்த பல கலவரங்களின் போதும் சரி, தமிழர்கள்தான் கொல்லப்பட்டிருக்கிறார்கள். (கடந்த 83 விருந்து இன்று மட்டும் மொத்தமாக 10,000 பேருக்கும் அதிகமாகத் தமிழர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள்). ஆனால் அப்போதும் நாங்கள் ஆயுதப் போராட்டத்தைப் பற்றிய சிந்தனையே இல்லாமல்தான் இருந்தோம். அப்போது நடந்த இனக் கலவரங்களிலெல்லாம் தமிழர்கள்தான் கொல்லப்பட்டார்கள். சிங்கள இராணுவமோ அல்லது மக்களோ தமிழ் மக்களால் கொல்லப்பட்டதாக வரலாறே இல்லை. முப்பதாண்டுகளுக்கு மேலாக எங்களது போராட்டம் அகிம்சை முறையில்தான் இருந்தது. அதையும் முறியடிக்கும் வகையில்தான் - மொழிவாரியாகத் தமிழர்கள் ஒன்று சேர்ந்துவிடக்கூடாது- தமிழர்கள் சிறுபான்மையினராகவே இருந்து விட வேண்டும் என்ற பிரித்தாளும் சூழ்ச்சியில்தான், தமிழ்ப் பகுதிகளிலெல்லாம் சிங்கள அரசு சிங்கள மக்களைத் திட்டமிட்டுக் குடியேறச் செய்தது; எங்கள் உடைமைகளைப் பறித்தது. எங்கள் மீதான தாக்குதலை மிருகத்தனமாகத் தொடர்ந்தது. இந்தச் சூழ்நிலையில்தான் - நாங்கள் எங்கே கடைசியில் பாலஸ்தீனர்களைப் போல நாடிழந்து போய்விடுவோமோ என்ற பயத்தில்தான்கடந்த 72-ல் ஆயுதமேந்திய எங்கள் தமிழீழ விடுதலைப் புலிகள் அமைப்புத் தோன்றியது. இப்போது கூடப் பாருங்கள். நாங்கள் எந்தச்சிங்களமக்களையும் கொன்றதில்லை. எங்கள் மீது தாக்குதல் நடத்தும் இராணுவத்தினரைத்தான் கொல்லுகிறோம். ஆனால் அவர்கள் அப்படியல்ல; அவர்கள் தாக்குதலை எங்களோடு மட்டும் நடத்தாமல் அப்பாவித் தமிழர்கள் மீதும் நடத்துகிறார்கள். இது அந்த இராணுவத்தின் - சிங்கள அரசின் மிருகத்தனமல்லவா? இதன் முன்பு அகிம்சை எப்படி வெற்றி பெறும்?

கல்கி:

இலங்கைத் தமிழர்கள் அத்தனைபேரும் தனித் தமிழீழம் ஒன்றுதான் பிரச்சினைக்கான தீர்வு என்று கருதுகிறார்களா?

பிரபா:

ஆமாம். வேறு வழி இல்லை என்பதை அனைவரும் உணர்ந்து விட்டார்கள். அதன் அடிப்படையில்தான் தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியினர் தேர்தலில் வெற்றி பெற்றார்கள் என்பதையும் இந்த இடத்தில் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

கல்கி:

சரி. தனித் தமிழீழம் ஒன்றுதான் பிரச்சினைக்கான தீர்வு என்று இலங்கைத் தமிழர்கள் அத்தனை பேரும் உணர்ந்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம். ஆனால், அதைப் பெறுவதற்கான வழிமுறை ஆயுதப் போராட்டம் ஒன்றுதான் என்றா அனைவரும் உணர்ந்திருக்கிறார்கள்?

பிரபா:

நிச்சயமாக, தமிழீழ விடுதலைப் புலிகளின் அமைப்பே தமிழ் மக்களின் அமைப்பின்றித் தனிப்பட்ட அமைப்பு அல்ல.

கல்கி:

அப்படியானால், ஆயுதப்போராட்ட அமைப்பு என்பது ஒன்றாகத்தானே இருக்க வேண்டும். இப்படி பல்வேறு அமைப்புகளாகப் பிரிந்து கிடக்க வேண்டிய அவசியமென்ன?

பிரபா:

அப்படிச் சொல்ல முடியாது. 'ஈரோஸ்' இயக்கத்தோடு இன்னமும் எங்களுக்குத் தொடர்பு இருக்கிறது.

கல்கி:

இருக்கட்டும். ரெலோ இயக்கத் தலைவர் சிறீ. சபாரத்தினத்தையும், மற்ற சிலரையும் உங்கள் இயக்கம் கொல்ல வேண்டிய அவசியமென்ன?

பிரபா:

அவர்கள் மக்கள் விரோதச் செயல்களில் ஈடுபட்டார்கள். யாழ்ப்பாணத்திலுள்ள தமிழர்களிடம் அவர்களே கொள்ளையடிக்க ஆரம்பித்து விட்டார்கள். வேறு வழி இல்லை...

கல்கி:

.. என்று நீங்கள் சொல்லுகிறீர்கள். அப்படித்தானே?

பிரபா:

நீங்கள் யாழ்ப்பாணத்தில் போய்க் கேட்டுப் பாருங்கள். அவர்கள் என்ன செய்தார்கள் என்பதை!

கல்கி:

உங்களுடைய பல்வேறு அமைப்புக்களின் செயல்கள் பல உங்களிடையே ஒற்றுமை நிலவுவதாக உணர்த்தவில்லை. அப்படி நிலவுவதாக ஒப்புக் கொள்வோமாயினும் ஆயுதமேந்திப் போராடிப் பழக்கப்பட்ட போராளிகள், ஒரு காலத்தில் பதவி ஆசைக்காகவும் தங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்த மாட்டார்கள் என்பதற்கு என்ன நிச்சயம்? பல நாடுகளில் இது போல நடந்திருக்கிறதே!

பிரபா:

'தமிழீழ விடுதலைப் புலிகள்' இயக்கம் என்பது தனிப்பட்ட பிரபாகரனின் இயக்கம் அல்ல. நான் முன்பே சொன்னது போல், இந்த இயக்கம் மக்கள் இயக்கம். அதனால் எதிர்காலக் குழப்பங்களுக்கோ, பதவிப் போராட்டங்களுக்கோ அவசியமே இல்லை. தங்கள் தலைமையை மக்கள் தீர்மானிப்பார்கள்.

கல்கி:

உங்கள் இயக்கம் மட்டும்தான் உண்மையான இயக்கம் என்கிறீர்களா?

பிரபா:

நிச்சயமாக. இல்லையென்றால் மக்கள் எங்களுக்கு ஆதரவு கொடுப்பார்களா? மக்களின் முழு ஆதரவும் இல்லாவிட்டால். இன்றைக்கும் யாழ்ப்பாணத்திற்குள் சிங்கள இராணுவம் நுழைய முடியாதபடி எங்களால் தற்காத்துக் கொள்ள முடியுமா என்ன?

கல்கி:

யாழ்ப்பாணத் தமிழர்கள் என்பவர்கள் எப்போதுமே தோட்டத் தொழிலாளர்களாக உள்ள தமிழர்களைக் கள்ளத் தோணி ஏறி வந்தவர்கள் என்றுதான் பரிகாசம் செய்வார்கள். தங்களோடு சமமாக அவர்களைப் பாவிப்பதில்லை. இந்நிலையில் தனித் தமிழீழம் அமைந்தால், இலங்கையின் மற்ற இடங்களிலுள்ள தமிழ்த் தோட்டத் தொழிலாளர்களின் கதி என்ன என்கிறார்களே? இந்தச் சந்தேகத்தை ஒரு முறை தொண்டமானைச் சந்தித்தபோது அவரே எழுப்பினார்!

பிரபா:

எங்கள் முன்னோர்கள் அவர்களை அப் படிப் பரிகாசம் செய்திருக்கலாம். நான் மறுக்கவில்லை. ஆனால் நாங்கள் அப் படியில்லை. அவர்களுக்கும் சேர்த்தேதான் போராடுகிறோம். இப்போது நாங்கள் அவர்களுக்கு அடைக்கலம் கொடுத்துக் கொண்டு தான் இருக்கிறோம். தமிழர்களுக்குள் பேதம் என்ற பேச்சுக்கே எங்களிடம் இடமில்லை.

கல்கி:

சரி, நீங்களே முன்பு சொன்னீர்கள், உங்களுடைய இப்போதைய போராட்டம், தற்காப்புக்கு முக்கியத்துவம் கொடுத்துப் போராடப்படும் போராட்டம் என்று. இந்நிலையில் இந்தியா போன்ற வேறொரு நாட்டின் துணை இல்லாமல் தனித் தமிழீழம் என்பது அடைந்துவிடக் கூடிய லட்சியம்தானா? ஏனெனில் இந்தியா உங்கள் தனித் தமிழீழத்திற்குத் தமது ஆதரவு இல்லையென்பதை வெளிப்படையாகவே கூறிவிட்டதே!

பிரபா:

எங்களால் மட்டுமே முடியுமா முடியாதா என்பது வேறு விஷயம். ஆனால் இப்போது நாங்கள் எங்கள் உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பில்லாத காரணத்தால் போராடித்தான் ஆக வேண்டும் என்ற நிர்ப்பந்தத்தில் இருக்கிறோம். போராடாமலிருந்தாலும் சிங்கள இராணுவத்தின் மிருகத்தனத்தில் நாங்கள் கொல்லப்படுவது உறுதியாகிவிட்டதால், அப்படிச் சாவதை விட போராடிச் சாவதே மேல் என்ற முடிவிற்கு வந்துவிட்டோம்.

கல்கி:

ஆக, யாருடைய உதவியுமின்றித் தனித்து நின்று போராடி வெற்றி பெற முடியாது என்பது உங்களால் உணரப்பட்டிருக்கிறதா?

பிரபா

தோல்வியடைந்து விட்டால் என்ன செய்வது என்று எப்படிப் போராடாமல் இருக்க முடியும்? அதோடு பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினருக்கு ஆரம்பத்தில் ஆதரவு தராத நாடுகளெல்லாம் இப்போது ஆதரவு தரவில்லையா? இந்தியாவும் இப்போது அந்த இயக்கத்தை அங்கீகரிக்க வில்லையா?

கல்கி:

உங்கள் தனித் தமிழீழக் கோரிக்கையைத்தான் இந்தியா வெளிப்படையாகவே ஆதரிக்க முடியாதென்று சொல்லிவிட்டதே?

பிரபா:

உலக அரசியல் ஒருநாள் மாறும். அப்போது இந்தியா எங்களை ஆதரிக்கக் கூடும். சமீப காலங்களில் சர்வதேச நிலைமைகளைப் பார்த்தால் பல்வேறு விடுதலை இயக்கங்களுக்கு இந்தியா ஆதரவு அளித்து வருவது தெரியும். இன்னொரு விஷயமும் இருக்கிறது, ஈழ விடுதலைக்கு இந்தியா உதவுமா அல்லது உதவாதா என்பது சர்வதேச அரசியல் நிலைமைகளையும் பொறுத்தது.

கல்கி

உங்கள் ஆயுதங்களைப் பறிமுதல் செய்ததிலிருந்தே உங்கள் தனித் தமிழீழக் கொள்கையை இந்தியா ஆதரிக்காது என்பது வெட்ட வெளிச்சமாகி விட வில்லையா?

பிரபா:

அப்படி நாங்கள் நினைக்க வில்லை.

கல்கி:

ஆயுதங்களைப் பற்றி பேச்சு வருவதால் ஒன்று கேட்கிறோம். இந்தியாவில் ஒரு குடிமகன் சாதாரண துப்பாக்கி வைத்துக் கொள்வதற்குக்கூட அரசிடம் லைசென்ஸ் பெற வேண்டும். அப்படியிருக்க நீங்கள் நவீன ரக ஆயுதங்களை வைத்து இருப்பது சட்ட விரோதமல்லவா?

பிரபா:

(மௌனம்)...

கல்கி:

இது தவறென்று நீங்கள் நினைக்க வில்லையா? உங்களிடம் அவை எப்படி வந்து சேர்ந்தன?

பிரபா:

எங்களிடம் இருந்த ஆயுதங்களை யெல்லாம் பொலிஸார் பறிமுதல் செய்து விட்டார்களென்பது வெளியில் வந்த செய்தி. ஆக, பொலிஸாரிடம்தான் அந்த ஆயுதங்கள் இப்போது இருக்கின்றன. அந்த ஆயுதங்கள் எங்களிடம் எப்படி வந்தன என்பதை அவர்களைக் கேட்டால் தெரியும். அவர்களையே சொல்லச் சொல் லுங்கள்.

கல்கி:

இந்திய அரசின் சமரச முயற்சிக்கு நீங் கள் அத்தனை ஆர்வம் காட்டுவதாகத் தெரியவில்லையே. தமது பிடிவாதத்தி லிருந்து ஜெயவர்த்தனா இறங்கி வந்தா லும நீங்கள் வருவதில்லை என்றதொரு கருத்து நிலவுகிறதே?

பிரபா:

ஜயவர்த்தனா இறங்கி வந்திருக்கி றார் என்று பிரமாதப்படுத்துவது தவறு. கடந்த 57-ல் தமிழர்கள் வாழும் வடக்கு, கிழக்குப் பகுதிகளுக்கு மாநில சுயாட்சி அந்தஸ்து வழங்கப்படும் என்ற தோர் நிலை ஏற்பட்டபோது, அதை எதிர்த்து புத்த பிக்குகளுடன் ஊர்வலம் போனதே இந்த ஜெயவர்த்தனாதான் அதோடு அன்றைக்கு கொடுக்கப்பட விருந்த அந்தஸ்தைக்கூட இன்றைக்குக் கொடுக்கா மல் கிழக்கு மாகாணத்தையே மூன்றாகப் பிரிக்கும் ஜெயவர்த்தனாவின் சூழ்ச்சியை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? ஆக, இப் போது ஜெயவர்த்தனா இறங்கி வரவில்லை. அன்றைய திட்டத்தைவிட இன்றைகுப் பின்னோக்கியதொரு திட்டத்தைத்தான் அவர் சொல்லுகிறார் அதைக்கூட அவர் எழுத்து பூர்வமாகத் தர முன்வரவில்லை என்பதையும் நீங்கள் கவனிக்க வேண்டும்.

கல்கி:

அதாவது அன்றைக்குக் கொடுக்கப்பட் டதுபோல் அல்லது இந்தியாவில் இருப் பதுபோல் ஒரு மாநில அந்தஸ்து உங்க ளுக்குக் கொடுக்கப்பட்டால், உங்கள் தனித் தமிழீழக் கொள்கையை விட்டு விடுவீர்களா? அத்திட்டத்தை ஒப்புக் கொள்வீர்களா?

பிரபா:

தனித் தமிழீழ லட்சியத்தை விட்டு விட்டால் 'பிரபாகரன் ஒரு துரோகி' என்று தமிழ் மக்களே என்னைத் தொலைத்து விடுவார்கள்.

கல்கி:

தயவு செய்து, இதையே நீங்கள் ஜெய வர்த்தனாவுக்கும் திருப்பிப் போட்டுப் பாருங்கள். தனித் தமிழீழத்திற்கு ஒப் புக் கொண்டால் சிங்களவர்கள் அவரை மட்டும் விட்டு வைப்பார்களா என்ன? ஆக, பிரச்சினைக்கு ஒரு சுமுகமான தீர்வு வேண்டாமா? மாநில அந்தஸ்து கொடுத் தால் தனித் தமிழீழத்தை விட்டுவிடு வீர்களா, மாட்டீர்களா?

பிரபா:

அப்படியொரு திட்டம் வரும்போது தான் அது பற்றிச் சொல்ல முடி யும். இப்போது எப்படிச் சொல்ல முடி யும்?

கல்கி

அப்படியொரு திட்டம் வந்தால் என்ன செய்வீர்கள் என்பதுதான் கேள்வி!

பிரபா:

வரட்டும். அப்போது சொல்கிறோம்.

கல்கி:

நல்லது. நீங்கள் அந்தனை பேரும் எங் களிடம் அடைக்கலம் தேடி, ஈழத்திலி

ருந்து வந்திருக்கும் எங்கள் சகோதரர் கள். உங்களை நாங்கள் மிகவும் நேசிக் கிறோம். உங்கள் பிரச்சினைக்கு விரை வில் ஒரு சுமுகமான தீர்வு காணப்பட வேண்டும் என்பதிலும் நாங்கள் மிகவும் அக்கறை கொண்டுள்ளோம். இந்நிலை யில் இங்கு — எங்கள் அடைக்கல நிழ லில் இருக்கும் விடுதலைப் புலிகள் எங் களையே சுடுகிறீர்களே...?

**பிரபா:**

தயவு செய்து நீங்கள் ஒரு விஷ யத்தை ஆழமாகப் பார்க்க வேண் டும். தமிழகத்தில் நடந்த சம்பவங்களுக் கும் எங்களுக்கும் எந்தவிதமான சம்பந்த மும் கிடையாது. மற்ற இயக்கத்தினர்தான் அப்படிச் செய்கிறார்கள். ஆனால் தமிழ்த் தினசரிகளிலெல்லாம். 'விடுதலைப் புலிகள் சுட்டார்கள்!' என்று கொட்டை எழுத்தில் போடுவதுதான் வருத்தத்திற்குரிய விஷ யம். விடுதலைப் புலிகள் என்றால் அது எங்களைத்தான் குறிக்கும். காரணம், எங் கள் இயக்கத்தின் பெயரே தமிழீழ விடு தலைப் புலிகள் (LTTE). எங்கள் இயக்கம் தமிழகத்தில் இதுவரை எந்தச் சிறு சல சலப்பையும் ஏற்படுத்தியதே இல்லை. 'விடுதலைப் புலிகள்' என்ற போர்வையில் சில சமூக விரோதிகளும் ஊடுருவி இருக்கி றார்கள். அவர்களைக் கண்காணிப்பது அவ சியம் என்று நாங்களே ஆரம்பத்தில் தமி ழக அரசிடம் எடுத்துக் கூறியிருக்கிறோம்.

**கல்கி:**

கடைசியாக ஒன்று. தி. மு. க. தலைவர் கருணாநிதி நிதி திரட்டிக் கொடுத்த போது உங்கள் இயக்கம் மட்டும் அதை வாங்கிக் கொள்ளவில்லையே அது ஏன்? எதிர்க் கட்சிகளின் ஆதரவைப் பெறு வதைவிட ஆளுங் கட்சியின் ஆதரவை இழந்து விடக் கூடாது என்ற உங்களின் எண்ணம் தான் காரணமா?

**பிரபா:**

கலைஞரின் நிதியை வாங்கக் கூடாது என்ற எண்ணம் எங்களுக்கு ஒரு போதும் இருந்ததில்லை. சிறிது தாம தப் படுத்தினோம், அவ்வளவுதான். எங் களுக்கு இங்குள்ள அனைவரும் ஒன்றுதான். எனவே, தயவு செய்து இங்குள்ள அரசிய லோடு எங்களைத் தொடர்புபடுத்தாதீர் கள்!

□□□

# பாட்டாளி வர்க்கத்தின் பொருளாதார சுபீட்சம்



குறிப்பு:

**1987**, மே மாதம் முதலாம் திகதி,மே தினத்தை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் நிதர்சனம் ஒளிபரப்பு சேவையில் தமிழீழ மக்களுக்கு விடுத்த செய்தியை இங்கு தருகிறோம்,

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

மேதினம் ஒரு மகத்தான நாள். எமது விடுதலைப் பாதையில் ஓர் திருப்பு முனையான நாள். எமது சுதந்திர வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்த நாள்.

தொழிலாளர்கள் திருநாளாகிய இம் மே தினத்தில், உலக உழைப்பாளிகளின் உன்னதமான இத் தினத்தில் நாம் ஓர் மாபெரும் பேரணியை நடத்தி எமது ஒன்றுதிரண்ட சக்தியை, எமது உறுதிப்பாட்டை உலகிற்கு வெளிக்காட்டுவோம்.

இன்று உலகில் மிகவும் அநாகரிகமான, மிருகத்தனமான, அடக்குமுறைக்கு ஆளாகி உள்ள மக்கள் சமூகம் என்றால் அது தமிழீழ மக்கள்தான். உலகில் எங்குமே நடைபெறாத கொடுமைகள் தமிழீழ மண்ணில் நாளாந்தம் நடைபெறுகின்றன. எமது எதிரியோ ஈவிரக்கம் இல்லாதவன். மனித உயிருக்கு மதிப்பளிக்காதவன். மனித தர்மங்களைப் பேணாதவன். மிகவும் பயங்கரமான இனவெறி கொண்டவன். இன ரீதியாக எம்மை ஒழித்துக் கட்டுவதைவிட அவனுக்கு வேறு இலட்சியம் எதுவும் இல்லை. எம்மை இந்நாட்டுப் பிரஜைகளாகவோ அல்லது சாதாரண மனிதப் பிறவிகளாகவோ சிங்கள அரசு கருதவில்லை. எம்மை ஏதோ அன்னியர்களாக, அடிமைகளாக, வாழத்தகுதியற்ற பிராணிகளாகவே இந்த அரசு கருதுகின்றது. எம்மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் காட்டு மிராண்டித்தனமான அடக்குமுறை இதைத்தான் தெட்டத் தெளிவாகக் காட்டுகின்றது.

பொருளாதாரத்தடை, மீன்பிடித் தடை, எண்ணெய்த்தடை, தொலைபேசித் தடை, இப்படியாக அத்தியாவசியமான எல்லாவற்றுக்கும் தடைகளை விதித்து எமது சமூக பொருளாதார வாழ்வை, எமது நாளாந்த ஜீவாதார வாழ்வை சிதைக்க முயல்கின்றது இந்த அரசு. அத்துடன் மட்டுமே நின்று விடாது, ஆயுதப் படைகளை ஏவிவிட்டு அப்பாவி மக்களை அழித்தொழிக்கும் ஓர் அதர்மமான யுத்தத்தையும் எம்மீது தொடுத்திருக்கிறது. இந்த யுத்தமானது, அப்பாவித் தமிழர்மீது தொடுக்கப்பட்ட யுத்தம், நிராயுதபாணிகளாக நிற்கும் மக்களைச் சுட்டுக் கொல்வதும், வெட்டிக் கொல்வதும் போன்ற இராணுவ வெறியாட்டங்கள் ஒரு புறமிருக்க விமானக் குண்டுவீச்சு, பீரங்கி குண்டு வீச்சு மூலம் தமிழீழத்தை ரணகளமாக்கி வருகின்றது சிங்கள அரச பயங்கரவாத ஓநாய்.

சிங்கள முதலாளித்துவ ஆளும் வர்க்கத்தில், எமக்குத் துளிகூட நம்பிக்கையில்லை. இந்தப் பாஸிச இனவாதக் கும்பலுக்கு தமிழரின் பிரச்சினையைத் தீர்ப்பதில் எவ்வித ஆர்வமும் அக்கறையும் இல்லை. தமிழரை ஒழித்துக்கட்டி தமிழ்த் தாய்ப்பூமியை கபளீகரம் செய்வதுதான் சிங்கள ஆளும் வர்க்கத்தின் நோக்கம். ஆகவே, எனது அன்பார்ந்த மக்களே! சமாதானப்பேச்சுவார்த்தை, அரசியல் தீர்வு, என்று எழுப்பப்படும் சுலோகங்களில் எவ்வித நம்பிக்கைகளையும் எதிர்பார்ப்புக்களையும் வைத்திருக்காதீர்கள். இந்த வார்த்தை ஜாலங்களில் எவ்வித அர்த்தங்களும் இல்லை. இவை இராஜதந்திர நாடகத்திற்காக, ஓர் அரசு இன்னோர் அரசை ஏமாற்றுவதற்காக, உலகத்தின் கண் துடைப்பிற்காக, சிங்கள அரச பயங்கரவாதிகள் கையாளும் பிரச்சாரச் சொற்சாதனங்கள் அன்றி வேறொன்றும் அல்ல.

நாம் நாளாந்தம் எதிர்கொள்ளும் யதார்த்தம் வேறு. நாம் எதிர்கொள்வது சாவையும், கண்ணீரையும், இரத்தத்தையுமே. நாம் எதிர்கொள்வது ஷெல்களையும் குண்டுகளையும், துப்பாக்கி ரவைகளையுமே. இவையே நாம் தினம் எதிர்கொள்ளும் பயங்கரமான யதார்த்தம். எனவே ராஜதந்திரம் மூலமோ, போலித்தனமான பேச்சுவார்த்தைகள் மூலமோ ஜெயவர்த்தனாவின் மாவட்டங்கள் மூலமோ எமது பிரச்சினை தீர்ந்துவிடப் போவதில்லை.

நாம் போராடி, இரத்தம் சிந்தி, எமது விடுதலையை வென்றெடுக்க வேண்டும். எமக்கு வேறு வழியே இல்லை. ஒன்று

அடிமைகளாக, அழிந்தொழிய வேண்டும். அல்லது போராடிச் சுதந்திரமாக வாழ வேண்டும். இதுதான் எமது அரசியல் தலை விதி. இன்று இந்தத் தொழிலாளர் புனிதத் தினத்தில் நாம் ஒரு பிரதிக்ஞைசெய்துகொள் வோம். அதாவது, சுதந்திர தமிழீழ தனி அரசுதான் எமது பிரச்சினைக்கு ஒரேதீர்வு; இறுதியான தீர்வு. இந்தத் தனிஅரசை அமைக்க நாம் எமது உயிர், உடல், ஆன் மாவை அர்ப்பணித்துப் போராடுவோம். இது எமது மேதினப் பிரகடனமாக அமை யட்டும்.

நாம் உருவாக்க இருக்கும் தமிழீழம் பாட்டாளி வர்க்கத்திற்கு சுபீட்சமளிக்கும் சமதர்ம சமுதாயமாக அமையும். நாம் தேசிய விடுதலைக்காக மட்டும் போராட வில்லை. தொழிலாள விவசாய வர்க்கங் களுக்கு பொருளாதார விடுதலையை அளிக் கும், சோஷலிச சமுதாயத்தை கட்டி எழுப் பும் இலட்சியத்திற்காகவே நாம் போராடு கின்றோம். நாம் ஒடுக்கப்படும் மக்களாக சுரண்டப்படும் வர்க்கங்களாக போராடு கின்றோம். இந்தப் புரட்சிகரச் சக்திகளின் பிரதிநிதிகளாகவே நாம் எமது போராட் டத்தை முன்னெடுக்கின்றோம். ஆகவே, எமது புரட்சிகரப் போராட்டமானது உலகப் பட்டாளி வர்க்கப் புரட்சியின் ஒரு இணைபிரியாத அங்கமாக அமைகின்றது. இன்று எமது புரட்சிப் போராட்டம், முழு உலகத்தின் கவனத்தையும் ஈர்த்துள்ளது. சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்ததாக பிரசித்தி பெற்றுள்ளது.

எமது போராளிகளின் அற்புதமான தியாகங்களும், எமது மக்களாகிய உங்களின் அசைக்க முடியாத உறுதிப்பாடுமே எமது போராட்டத்தை உலக அரங்கில் பிரசித் தப்படுத்தியுள்ளது.

தமிழ் நாடு அரசும் தமிழ் நாட்டு மக் களும் இன்று பகிரங்கமாக எமது விடுதலை இயக்கத்திற்கு, விடுதலை இலட்சியத்திற்கு ஆதரவளிக்க முன் வந்திருப்பது எமது போராட்ட வரலாற்றில் ஒரு முக்கிய திருப் பம் என்றே நான் சொல்வேன்.இதே போல் இந்திய மத்திய அரசும், எமது மக்களின் சுதந்திரப் போராட்டத்தை ஆதரிக்கும் நாள் வெகுதூரத்தில் இல்லை.

நீதியையும், தர்மத்தையும் சுதந்திரத் தையும் இலட்சியமாகக் கருதிய எமது விடு தலைப் போராட்டம் நிச்சயம் வெற்றி அடைந்தே தீரும்.

□○□

PUBLIC LIBRARY, JAFFNA
CHUNDIKULI BRANCH LIBRARY

# வரலாற்று முக்கியம்பெற்ற சுதுமலைப் பிரகடனம்



**குறிப்பு:**

இந்திய - இலங்கை ஒப்பந்தம் சம்பந்தமாக விடுதலைப் புலிகள் இயக்கத்தின் நிலைப்பாட்டை தெளிவுபடுத்த தலைவர் பிரபாகரன் 4-8-87-ல் சுதுமலையில் நிகழ்த்திய உரையை இங்கு பிரசுரிக்கிறோம். இந்த ஒப்பந்தத்தால் தமிழரின் தேசிய பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு ஏற்படப்போவதில்லை என்பதையும் இந்த ஒப்பந்தத்தை சிங்கள இனவாதப் பூதம் விழுங்கிவிடும் காலம் தூரத்தில் இல்லை என்பதையும் தலைவர் தீர்க்கதரிசனத்துடன் - வரலாற்று முக்கியத்துவம் பெற்ற - இந்த உரையில் வலியுறுத்திக் கூறியுள்ளார்.

# வரலாற்று முக்கியம்பெற்ற சுதுமலைப் பிரகடனம்



எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

இன்று எமது விடுதலைப் போராட்ட வரலாற்றில் ஒரு மாபெரும் திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. திடீரென எமக்கு அதிர்ச்சியூட்டுவது போல, எமது சக்திக்கு அப்பாற்பட்டது போல, இந்தத் திருப்பம் ஏற்பட்டிருக்கிறது. இதன் விளைவுகள் எமக்கு சாதகமாக அமையுமா? என்பதை நாம் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும்.

திடீரென மிகவும் அவசரமாக, எமது மக்களையோ, எமது மக்களின் பிரதிநிதிகளாகிய எம்மையோ கலந்தாலோசிக்காமல், இந்தியாவும் இலங்கையும் செய்துகொண்ட ஒப்பந்தம் இப்பொழுது அவசர அவசரமாக அமுலாக்கப்பட்டு வருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். நான் டெல்லி செல்லும்வரை இந்த ஒப்பந்தம் பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. பாரதப் பிரதமர் என்னைச் சந்திக்க விரும்புவதாகச் சொல்லி என்னை டெல்லிக்கு அவசரமாக அழைத்துச் சென்றார்கள். அங்கு சென்றதும் இந்த ஒப்பந்தம் எமக்குக் காண்பிக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தில் பல சிக்கல்கள் இருந்தன. பல கேள்விக்குறிகள் இருந்தன. இந்த ஒப்பந்தத்தால் எமது மக்களின் பிரச்சினைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு ஏற்படுமா என்பது பற்றி எமக்கு சந்தேகம் எழுந்தது. ஆகவே இந்த ஒப்பந்தத்தை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை இந்திய அரசுக்குத் தெட்டத் தெளிவாக விளக்கினோம்.

ஆனால், நாம் ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்ளாது போனாலும் இந்த ஒப்பந்தத்தை அமுலாக்கியே தீருவோமென இந்திய அரசு கங்கணம் கட்டி நின்றது. இந்திய அரசின் நிலைப்பாடு குறித்து நாம் ஆச்சரியப்படவில்லை. இந்த ஒப்பந்தம் தமிழர் பிரச்சினையை மட்டும் தொட்டு நிற்கவில்லை. இது பிரதானமாக இந்திய - இலங்கை உறவு பற்றியது. இந்திய வல்லாதிக்க வியூகத்தின் கீழ் இலங்கையைக் கட்டுப்படுத்தும் விதிகளும் இதில் அடங்கியிருக்கின்றன. இலங்கையில் அந்நிய நாசகார சக்திகள் காலூன்றாமல் தடுக்கவும் இது வழிவகுக்கிறது. ஆகவேதான் இந்திய அரசு இந்த ஒப்பந்தத்தைச் செய்துகொள்வதில் அதிக அக்கறை காட்டியது. ஆனால், அதே சமயம், ஈழத் தமிழரின் அரசியல் தலைவிதியை நிர்ணயிப்பதாகவும் இந்த ஒப்பந்தம் அமைகிறது. ஆகவேதான், எமது மக்களைக் கலந்தாலோசிக்காது, எமது கருத்துக்களைக் கேளாது இந்த ஒப்பந்தம் செய்யப்பட்டதை நாம் கடுமையாக ஆட்சேபித்தோம். ஆனால் நாம் ஆட்சேபித்ததில் அர்த்தமில்லை. எமது அரசியல் தலைவிதியை எமது வல்லமைக்கு அப்பாற்பட்ட ஒரு மாபெரும் வல்லரசு நிச்சயிக்க முடிவு செய்திருக்கும் பொழுது நாம் என்ன செய்வது?

இந்த ஒப்பந்தம் நேரடியாக எமது இயக்கத்தைப் பாதிக்கிறது; எமது அரசியல் இலட்சியத்தைப் பாதிக்கிறது; எமது போராட்ட வடிவத்தைப் பாதிக்கிறது; எமது ஆயுதப் போராட்டத்திற்கு ஆப்பு வைப்பதாகவும் அமைகிறது. பதினைந்து வருடங்களாக, இரத்தம் சிந்தி, தியாகம் புரிந்து, சாதனைகள் ஈட்டி எத்தனையோ உயிர்ப்பலி கொடுத்து கட்டி எழுப்பப்பட்ட ஒரு போராட்ட வடிவம் ஒரு சில தினங்களில் கலைக்கப்படுவதென்றால் அதை நாம் ஜீரணிக்க முடியாமல் இருக்கிறது. திடீரென காலஅவகாசமின்றி எமது போராளிகளின் ஒப்புதலின்றி, எமது மக்களின் பாதுகாப்பிற்கு உத்தரவாதமின்றி இந்த ஒப்பந்தம் எம்மை நிராயுதபாணிகளாக்குகிறது. ஆகவே, நாம் ஆயுதங்களை ஒப்படைக்க மறுத்தோம். இந்தச் சூழ்நிலையில் பாரதப் பிரதமர் ராஜீவ்காந்தி அவர்கள் என்னை அழைத்துப் பேசினார். அவரிடம் எமது பிரச்சினைகளை மனந்திறந்து பேசினேன். சிங்கள இனவாத அரசில் எமக்குத் துளிகூட நம்பிக்கை இல்லையென்பதையும் இந்த ஒப்பந்தத்தை அவர்கள் நிறைவேற்றப் போவதில்லை என்பதையும் இந்தியப் பிரதமரிடம் எடுத்துரைத்தேன். எமது மக்களின் பாதுகாப்புப் பிரச்சினை பற்றியும் அதற்கான உத்தரவாதங்கள் பற்றியும் அவரிடம் பேசினேன். பாரதப் பிரதமர் எமக்கு சில வாக்குறுதிகளை அளித்தார். எமது மக்களின் பாதுகாப்பிற்கு உத்தரவாதம் அளித்தார். பாரதப் பிரதமரின் நேர்மையில் எமக்கு நம்பிக்கை இருக்கிறது. அவரது உறுதிமொழிகளில் நம்பிக்கை இருக்கிறது. சிங்கள இனவாத அரசு மீண்டும் தமிழர் இன அழிப்பு நடவடிக்கையில் இறங்க இந்தியா அனுமதிக்காது என நாம் நம்புகிறோம். இந்த நம்பிக்கையில் தான் நாம் இந்திய சமாதானப்

படையிடம் ஆயுதங்களை ஒப் படைக்க முடிவு செய்தோம்.

நாம் எமது மக்களின் பாது காப்பிற்காக எத்தனை அளப்பரிய தியாகங்களைப் புரிந்தோம் என்பதை நான் இங்கு விளக்கிக்கூறத் தேவை யில்லை. எமது இலட்சியப் பற்றும், தியாக உணர்வும் எத்தன்மை வாய்ந் தது என்பதை எமது மக்களாகிய நீங்கள் நன்கு அறிவீர்கள். உங்களது பாதுகாப்பிற்காக, உங்களது விடுத லைக்காக, உங்களது விமோசனத்திற் காக நாங்கள் ஏந்திய ஆயுதங்களை இந்திய அரசிடம் ஒப்படைக்கிறோம். நாம் இந்த ஆயுதங்களை ஒப்படைக் கும் கணத்திலிருந்து, எமது மக்க ளாகிய உங்களின் பாதுகாப்புப் பொறுப்பையும் இந்தியாவிடம் ஒப் படைக்கிறோம். ஈழத் தமிழரின் ஒரே பாதுகாப்பு சாதனமாக இருந்து வந்த இந்த ஆயுதங்களை இந்திய அரசு எம்மிடத்திலிருந்து பெற்றுக் கொள்வதிலிருந்து மக்களின் பாது காப்பு என்ற பெரும் பொறுப்பை யும் ஏற்றுக்கொள்கிறது. ஆயுதக் கையளிப்பு என்பது இந்தப் பொறுப்பு மாற்றத்தைத்தான் குறிக்கிறது.

நாம் ஆயுதங்களைக் கையளிக் காது போனால் இந்திய இராணுவத் துடன் மோதும் துர்ப்பாக்கிய சூழ் நிலை ஏற்படும். இதை நாம் விரும்ப வில்லை. இந்தியாவை நாம் நேசிக் கிறோம். இந்திய மக்களை நாம் நேசிக்கிறோம். இந்திய வீரனுக்கு எதிராக நாம் ஆயுதங்களை நீட்டத் தயாராக இல்லை. எமது எதிரியிட மிருந்து எம்மைப் பாதுகாக்கும் பொறுப்பை இந்திய இராணுவ வீரர் கள் ஏற்றுக்கொள்கிறார்கள். நாம் ஆயுதங்களை அவர்களிடம் கையளிப் பதிலிருந்து ஈழத் தமிழன் ஒவ்வொரு வனதும் உயிருக்கும் பாதுகாப்பிற் கும் இந்திய அரசுதான் பொறுப்பாக இருக்க வேண்டும் என்பதை நான் இங்கு இடித்துக்கூற விரும்புகிறேன்.

இந்தியாவின் இந்த முயற்சிக்கு நாம் ஒத்துழைப்பதைத் தவிர எமக்கு வேறு வழியில்லை. இந்தச் சந்தர்ப் பத்தை நாம் அவர்களுக்கு வழங்கு வோம். ஆனால் இந்த ஒப்பந்தத் தால் தமிழரின் பிரச்சினைக்கு நிரந் தரத் தீர்வு ஏற்படுமென நான் நினைக்கவில்லை: சிங்கள இனவாத பூதம் இந்த ஒப்பந்தத்தை விழுங்கி விடும் காலம் வெகுதூரத்தில் இல்லை.

தமிழீழத் தனியரசே தமிழீழ மக்களின் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வை அளிக்கும் என்பதில் எனக்கு அசையாத நம்பிக்கையுண்டு. தமி ழீழ இலட்சியத்திற்காகவே நான் தொடர்ந்து போராடுவேன் என் பதையும் நான் இங்கு திட்டவட்ட மாக உங்களுக்கு எடுத்துக்கூற விரும் புகிறேன். போராட்ட வடிவங்கள் மாறலாம். ஆனால் எமது போராட்ட இலட்சியம் மாறப்போவதில்லை. எமது இலட்சியம் வெற்றி பெறுவ தானால் எமது மக்களாகிய உங்களின் ஏகோபித்த ஆதரவு என்றும் எமக்கு இருக்கவேண்டும்.

தமிழீழ மக்களின் நலன் கருதி இடைக்கால அரசில் பங்குபற்ற அல் லது தேர்தலில் போட்டியிட வேண் டிய சூழ்நிலை எமது இயக்கத்திற்கு ஏற்படலாம். ஆனால் நான் எந்தக் காலகட்டத்திலும் தேர்தலில் பங்கு பற்றப் போவதில்லை. முதலமைச்சர் பதவியையும் ஏற்கப்போவதில்லை. இதை நான் மிகவும் உறுதியாகச் சொல்ல விரும்புகிறேன்.


Aug. 22-Sept. 4, 1987
Six Rupees
Frontline
INDIA'S NATIONAL MAGAZINE
from the publishers of THE HINDU
Sri Lanka—
making the
Agreement work

# தனது தேசிய நலனையே இந்திய அரசு பேணுகிறது



**குறிப்பு:**

**தமிழர் தேசிய பிரச்சினையின் அடிப்படைகள் எதையும் இந்திய - இலங்கை ஒப்பந்தம் தீர்த்துவைக்க தவறிவிட்டது என்றும். இந்த ஒப்பந்தம் வாயிலாக இந்திய அரசு தனது தேசிய நலன்களையே பேண விழைகிறது என்றும் தலைவர் பிரபாகரன் பிரபல இந்திய அரசியல் சஞ்சிகையான 'புரொண்ட்லை'யினுக்கு அளித்த பேட்டியில் குறிப்பிட்டுள்ளார். இந்தப் பேட்டி, 1987 ஆக. 22- செப். 4, இதழில் வெளியாகியது.**

கேள்வி:

**1987, மே, 26ந் திகதி சிறீலங்கா ஆயுதப் படைகள் வடமராட்சிமீது படையெடுப்பை மேற்கொண்டபோது நீங்கள் வல்வெட்டித்துறையில் சிக்கிக்கொண்டதாகவும் பின்னர் அங்கிருந்து தப்பிக் கொண்டதாகவும் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. இந்தச் செய்திகளில் உண்மையுண்டா?**

பதில்:

மே, 25ந் திகதி இரவே நான் யாழ்ப்பாணம் வந்துவிட்டேன். மறுதினம் காலையில்தான் ஆயுதப் படையினர் தாக்குதலை ஆரம்பித்தனர். நான் அங்கு இருப்பதாக நினைத்துக்கொண்டுதான் வல்வெட்டித்துறைமீது தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது.

கேள்வி:

**இந்திய - சிறீலங்கா ஒப்பந்தம்பற்றி உங்களது மதிப்பீடு என்ன? இது சம்பந்தமான உங்களது ஆதங்கம் என்ன? உங்களது எதிர்பார்ப்புக்களை இவ்வொப்பந்தம் பூர்த்தி செய்யவில்லை என கூறியிருக்கிறீர்கள். அப்படியென்றால் அதிலுள்ள குறைபாடுகள் என்ன?**

பதில்:

வடக்கு கிழக்கு மாகாணங்களை இணைப்பதானால் கிழக்கு மாகாண மக்கள் மத்தியில் ஒரு சர்வசன வாக்கெடுப்பு நடத்தப்படவேண்டுமென இவ்வொப்பந்தத்தில் கூறப்படுகிறது. ஒரு சாதாரண பெரும்பான்மை வாக்குகளின் அடிப்படையில் இந்த இணைப்பு தீர்மானிக்கப் படுமென்றும் கூறப்படுகிறது. வடக்கு கிழக்கு மாகாணங்கள் அடங்கிய நிலப்பரப்பானது எமது தாயகப் பூமி. இதில் இணைப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை.

இந்த ஒப்பந்தத்தில் வேறும் பல சிக்கல்கள் உள்ளன. இது இந்திய அரசாங்கத்திற்கும் சிறீலங்கா அரசாங்கத்திற்கும் மத்தியில் செய்துகொள்ளப்பட்ட ஒரு உடன்பாடு. இதுபற்றி எமது மக்களுடன் கலந்தாலோசிக்கப்படவில்லை.

1983ம் ஆண்டில் வடக்கு கிழக்கு மாகாணங்களில் ஒரு சில இராணுவ முகாம்களே இருந்தன. ஆனால் இப்பொழுது இப்பகுதியில் 200க்கும் மேற்பட்ட முகாம்கள் உள்ளன. தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றங்களைப் பாதுகாப்பதற்காகவே இந்த இராணுவ முகாம்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. இந்த இராணுவ முகாம்களை அகற்றாமல் சிங்களக் குடியேற்றங்களை அகற்றமுடியாது. தமிழ்ப் பிரதேசத்தை ஆக்கிரமித்துள்ள இந்தச் சிங்களக் குடியேற்றங்களை அகற்றுவது பற்றியோ அல்லது இராணுவ முகாம்களை வாபஸ்பெறுவதுபற்றியோ இந்த ஒப்பந்தத்தில் எதுவுமே குறிப்பிடப்படாதமை இந்த உடன்பாட்டிலுள்ள ஒரு பெரிய குறைபாடாகும்.

தமிழ்ப் பகுதிகளை ஊடுருவியுள்ள சிங்கள ஆயுதப்படைகள் தமிழ்மக்கள் மீது அட்டூழியங்களைப் புரிந்துவருகின்றன. இதைத் தடுத்து நிறுத்தும் நோக்கில்தான் இந்திய அமைதிப்படை இங்கு வந்துள்ளதாகக் கூறப்படுகிறது. ஆனால் இந்திய இராணுவம் இப் பகுதிகளுக்குச் செல்லவில்லை. இந்தியப் படையணிகள் பெரும்பாலும் யாழ்ப்பாணக் குடாநாட்டுக்கு உள்ளேயே முகாமடித்து இருக்கின்றன. இயக்கச்சி, பளை, கொடிகாமம், தாளையடி, பண்டத்தரிப்பு, காங்கேசன்துறை - இப்படியே யாழ்ப்பாணத்திற்குள்ளேயே இந்திய இராணுவம் முடங்கிக்கிடக்கிறது.

தமிழ்த் தாயகத்தை ஆக்கிரமித்து நிற்கும் 200க்கும் அதிகமான சிங்கள இராணுவ முகாம்களும் அகற்றப்படவேண்டுமென நாம் கோரி வருகிறோம். இதுபற்றி இந்திய அரசு எதுவித நடவடிக்கையும் எடுக்கவில்லை. பதிலாக, தமிழ் மக்கள் பாதுகாப்பாக வாழும் யாழ்ப்பாணப் பிரதேசத்தில் இந்திய இராணுவம் குவிக்கப்பட்டுவருகிறது. இதனால் எமது மக்கள் மத்தியில் சந்தேகமும் அச்சமும் தோன்றியுள்ளது.

தமிழர் தேசியப்பிரச்சினையில் இரண்டு அடிப்படையான அம்சங்கள் உள்ளன. ஒன்று, தமிழர் தாயகம். அதாவது, வட-கிழக்கு இணைந்த பூகோள முழுமையுடையதும் பிரிக்கமுடியாததுமான தமிழரின் தாயகப்பூமி. இரண்டாவது, தமிழரின் நில உரிமைப்பாடு. இந்த இரண்டு அடிப்படையான பிரச்சினைகளையும் இந்திய-சிறீலங்கா ஒப்பந்தம் தீர்த்துவைக்கத் தவறிவிட்டது என்றே சொல்லவேண்டும்.

கேள்வி:

இந்திய அரசுபற்றியும் இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்திபற்றியும் உங்களது நிலைப்பாடு என்ன?

பதில்:

இந்திய அரசு தனது சொந்த தேசிய நலனை மட்டும் கருத்தில்கொண்டு, அவசரப்பட்டு இந்த ஒப்பந்தத்தைச் செய்திருக்கிறது. நீண்ட காலமாக ஒடுக்கப்பட்டு வரும் தமிழ் மக்களின் அபிலாசைகளையும், பிரச்சினைகளையும் இந்தியா கருத்தில் கொண்டதாகத் தெரியவில்லை.

கேள்வி:

இது பற்றி விளக்குவீர்களா?

பதில்:

இன்று முல்லைத்தீவில் அகதிகள் குவிந்தவண்ணம் இருக்கிறார்கள். தமிழ்ப் பகுதிகளில் மக்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களை நடாத்திவருகிறார்கள். எமது மக்களது பிரச்சினைகள் எதுவுமே தீர்ந்தபாடில்லை. இதற்கிடையில், நாம் ஆயுதங்களைக் கையளிக்கவேண்டிய நிலைக்குள் தள்ளப்பட்டுவருகிறோம்.

மக்களது பிரச்சினைகள் முதலில் தீர்க்கப்படவேண்டும். அகதிகளாக இடம் பெயர்ந்துள்ள மக்கள் தமது சொந்தக் கிராமங்களுக்கு திரும்பிச்சென்று குடியமர வேண்டும். எமது மக்கள் தமது சொந்த இடங்களுக்குச் திரும்பிச்சென்று குடியமர்வதானால், அப்பகுதிகளை ஆக்கிரமித்துள்ள சிங்கள இராணுவ முகாம்கள் அகற்றப்படவேண்டும். ஆனால் சிங்கள இராணுவ முகாம்களை அகற்றிவிட இந்திய இராணுவம் தயாராக இல்லை. ஆகவே, இந்தப் பிரச்சினைக்கு தீர்வு ஏற்படப்போவதில்லை. ஒப்பந்தம் கைச்சாத்திடுவதற்கு முன்னராக எம்முடன் இந்தியா பேச்சுக்களை நடத்தியிருந்தால், சிங்கள இராணுவம் தமிழ்ப் பகுதியிலிருந்து அகற்றப்படவேண்டுமென நாம் நிபந்தனைகளை விதித்திருப்போம். ஆனால் அப்படிப் பேச்சுக்கள் நடைபெறவில்லை

கேள்வி:

ஆகஸ்ட் 4-ந் திகதி சுதுமலையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் உரையாற்றுகையில் ராஜீவ்காந்தியுடன் மனம்விட்டுப் பேசியதாக நீங்கள் கூறியிருக்கிறீர்கள். அவர் உங்களுக்கு சில வாக்குறுதிகளையும் தந்ததாகச் சொன்னீர்கள். அப்படி என்ன வாக்குறுதிகளைத் தந்தார்?

பதில்:

வடக்குக் கிழக்கிலுள்ள தமிழ் மக்களுக்கு தகுந்த பாதுகாப்பு அளிக்கப்படுமென ராஜீவ்காந்தி வாக்குறுதி அளித்தார். ஆனால் கிழக்கு மாகாணத்தில் இன்னமும் மக்கள் தங்களது சொந்தக் கிராமங்களுக்கு திரும்பிச்செல்ல முடியாத நிலைதான் உள்ளது.

கிழக்கு மாகாணத்திற்கு இந்திய இராணுவம் அனுப்பப்பட்டிருக்கிறது. ஆனாலும் தமிழ் மக்கள் அங்கு செல்லமுடியாத நிலைதான் உள்ளது. சிங்கள இராணுவத்தினர் சிங்கள ஊர்காவற்படையினர், சிங்களக் குடியேற்றவாசிகள் ஆகியோரின் கடும் எதிர்ப்பு காரணமாக தமிழ் மக்கள் தமது சொந்தக் கிராமங்களுக்கு திரும்பமுடியாமல் இருக்கிறது. வீடுகள், பாடசாலைகள், கூட்டுறவுக் கட்டடங்கள் இப்படியாக சிங்கள இராணுவம் எல்லா இடங்களிலும் குடிபுகுந்துள்ளது. இந்த இராணுவம் வெளியேற்றப்படாமல் மக்கள் எவ்விதம் தங்களது சொந்தக் கிராமங்களுக்கு திரும்புவது?

கேள்வி:

இந்த 200 இராணுவ முகாம்களையும் அகற்றுவதுபற்றி ராஜீவ் காந்தி என்ன சொன்னார்?

பதில்:

இந்த விடயம் குறித்துத்தான் நாம் ஒப்பந்தத்திற்கு ஆட்சேபம் தெரிவித்தோம். ஆனால் எமது கருத்திற்கு எவருமே செவிசாய்க்கவில்லை.

கேள்வி:

டில்லியில் இது நடந்ததா?

பதில்:

ஆம், டில்லியில்தான்.

கேள்வி:

ஆயுதங்கள் முழுதாக கையளிக்கப்பட்ட பின்னர் எதிர்கால அரசியல் வாழ்வில் விடுதலைப் புலிகளின் பங்கு எப்படி அமையும் என நினைக்கிறீர்கள்?

பதில்:

ஸ்தாபன ரீதியில் நாம் மக்களுடன் நெருங்கிய தொடர்பை வைத்திருக்கிறோம். மக்கள் உறவை எமது இயக்கம் மேலும் மேலும் பலப்படுத்தி வருகிறது. கிழக்கிலும் எமது அமைப்பு பலப்பட்டுவருகிறது. திருக்கோணமலை, மட்டக்களப்பு மாவட்டங்களில் நாம் இயக்க வேலைகளை விரிவாக்கி வருகிறோம்.

கேள்வி:

கிழக்கில் விடுதலைப் புலிகள் பலம் வாய்ந்த அமைப்பாக செயற்படுகிறதா?

பதில்:

ஆம். கிழக்கில் எமது இயக்க உறுப்பினர்கள் சிங்கள மக்கள் குடியேறியுள்ள பகுதிகளில்கூட இயங்கிவருகிறார்கள். மூதூரில், ஒரு தடவை விடுதலைப் புலிகளின் கொடியை ஏற்றிய பொதுமக்கள் சிலர் சுட்டுக்கொல்லப்பட்டார்கள். இதனையடுத்து இந்திய இராணுவமும், அப்பகுதி அரசாங்க அதிபரும் புலிக்கொடியை இறக்குமாறு மக்களை வற்புறுத்தியிருக்கிறார்கள். ஆனால் மக்கள் அதற்கு மறுத்துவிட்டார்கள். இப்படியாக கிழக்கிலங்கை மக்கள் அரசியல் விழிப்புணர்வு உள்ளவர்களாக எமது இயக்கத்தை ஆதரித்து வருகிறார்கள்.

கேள்வி:

பல கட்சிகள் அதிகாரத்திற்குப் போட்டியிடும் அரசியல் முறையை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா? ஒற்றைக் கட்சி ஆட்சி முறைதான் சிறந்தது என நீங்கள் முன்பு கூறியிருந்தீர்கள் அல்லவா?

பதில்:

தமிழீழத் தனியரசு அமையும் பட்சத்தில் உருவாக்கம் பெறக்கூடிய அரசியல் ஆட்சிமுறைபற்றி நான் முன்பு எனது கருத்துக்களை கூறியிருக்கலாம். ஆனால் இன்றைய எதார்த்தம் வேறு. தமிழீழத் தனிநாடு எதுவும் இன்னும் உருவாகவில்லை. எம்மீது ஒரு ஒப்பந்தம் திணிக்கப்பட்டிருக்கிறது இந்தியாவும் சிறீலங்காவும் ஒன்றுசேர்ந்து இந்த ஒப்பந்தத்தை உருவாக்கி எம்மீது திணித்துவிட முயல்கின்றன. இப்பொழுது இந்திய இராணுவம் எமது மண்ணில் காலூன்றி நின்றுகொண்டு, ஆயுதங்களைக் கீழே போடுமாறு வற்புறுத்துகிறது. நாம் ஆயுதங்களை கையளிக்காது போனால் இந்திய இராணுவத்துடன் மோதவேண்டி நேரிடும். இதனைத் தவிர்ப்பதற்காகவே இந்திய சமரச முயற்சிக்கு ஒத்துழைக்க நாம் முடிவுசெய்தோம். ஆயினும் நாம் எமது அரசியல் இலட்சியதைக் கைவிடவில்லை.

கேள்வி:

ஏனைய அரசியல் குழுக்களை தேர்தலில் பங்குபற்ற நீங்கள் அனுமதிப்பீர்களா? இது சம்பந்தமாக பத்திரிகைகளில் குழப்ப

மான செய்திகள் வெளிவருகின்றன. உங்களது உண்மையான நிலைப்பாடு என்ன?

பதில்:

தேர்தலில் பங்குபற்ற சகலரும் அனுமதிக்கப்படுவார்கள். மக்களிடம் நாம் எமது கருத்துக்களை முன்வைப்போம்.

கேள்வி:

தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் பங்கு என்னவாக இருக்கும்?

பதில்:

அவர்கள் முன்பு என்ன செய்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்களுக்கு தேர்தலில் போட்டியிட மட்டும் தெரியும். ஆகவே, அவர்கள் மீண்டும் தேர்தல் களத்தில் குதிப்பார்கள். இவர்களது கையில் மீண்டும் ஆட்சி அதிகாரம் செல்வதை நாம் விரும்பவில்லை. எனினும் இவர்களது அரசியல் தலைவிதியை எமது மக்களே தீர்மானிப்பார்கள்.

கேள்வி:

விடுதலைப் புலிகள் இயக்கம் தனது இலட்சியத்தை அடைய போராட்ட வடிவங்களை மாற்றிக்கொள்ளும் என நீங்கள் சுதுமலைக் கூட்டத்தில் கூறியிருக்கிறீர்கள். எந்த வடிவத்தில் போராட்டத்தை தொடர்வீர்கள்? ஆயுதப்போர் முறையிலா அல்லது அகிம்சை மார்க்கத்திலா அன்றி வெகுசனப் போராட்ட வடிவத்திலா உங்கள் இலட்சியப் பயணம் தொடர இருக்கிறது?

பதில்:

நாம் வெகுசனப் போராட்ட வடிவத்தில் எமது விடுதலைப் போராட்டத்தைத் தொடர்வோம்.

கேள்வி:

ஆனால் விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு இராணுவ அமைப்பு அல்லவா?

பதில்:

இன்று, விடுதலைப் புலிகள் இயக்கம் ஒரு வெகுசன அமைப்பாக உருவாக்கம் பெற்றுள்ளது. எமது மேதின எழுச்சிப் பேரணியிலிருந்து இந்த உண்மை உங்களுக்கு புரிந்திருக்கும். ஒரு போர்ச் சூழ்நிலையில், சிங்கள இராணுவ அச்சுறுத்தல்களையும் மீறி, கிட்டத்தட்ட இரண்டு லட்சம் மக்கள் கொடும் வெய்யிலையும் பாராது அணிதிரண்ட நிகழ்வு எதைக் காட்டுகிறது மக்கள் எமது இயக்கத்திற்குப் பின்னால் அணிதிரண்டு நிற்கிறார்கள் என்பதை அல்லவா காட்டுகிறது. நாம் ஒரு வெகுசன இயக்கமாக, மக்கள் இயக்கமாக பலம்பெற்று வளர்ந்துவருகிறோம். நாம் ஒரு இராணுவ அமைப்பாக மட்டும் இயங்கினால், இப்படிப் பெரும் திரளாக மக்கள் எமது மேதினக் கூட்டத்திற்கு அணிதிரள மாட்டார்கள் அல்லவா?

கேள்வி:

தேர்தல் நடைபெறப்போகிறது. அரசியல் கட்சிகள் மத்தியில் போட்டிகள் எழப் போகின்றன. இப்படியான ஒரு அரசியல் முறையில் எத்தகைய பிரச்சினைகள் உங்களுக்கு ஏற்படுமென நினைக்கிறீர்கள்.

பதில்:

அரசியல் போட்டிகளை எதிர்கொள்ளும் ஆற்றலும் அனுபவமும் எமக்குண்டு. தாம் விரும்பியவர்களை மக்களே தெரிவுசெய்யட்டும். தமக்கு உகந்த தலைவர்களையும் மக்களே தேர்ந்தெடுக்கட்டும்.

□□□

13980

# தியாகி திலீபன்
# ஒரு இலட்சிய நெருப்பு



**குறிப்பு:**

சாகும்வரை உண்ணாவிரதமிருந்து வீரச்சாவைத்தழு விக்கொண்ட தியாகி திலீபனின் மறைவு குறித்து தலை வர் பிரபாகரன் தமிழீழ மக்களுக்கு விடுத்த செய்தியை இங்கு தருகிறோம்.

"எமது விடுதலை இயக்கம் எத்தனையோ அற்புதமான தியாகங்களைப் புரிந்திருக்கிறது; வீரகாவியங்களைப் படைத்திருக்கிறது: அர்ப்பணிப்புக்களைச் செய்திருக்கிறது. இவை எல்லாம் எமது ஆயுதப் போராட்ட வரலாற்றில் நாம் ஈட்டிய வீரசாதனைகள். ஆனால், எனது அன்பான தோழன் திலீபனின் தியாகமோ வித்தியாசமானது; வியக்கத்தக்கது; எமது போராட்ட வரலாற்றில் புதுமையானது. சாத்வீகப் போராட்டக் களத்தில் தன்னைப் பலி கொடுத்து, ஈடு இணையற்ற ஒரு மகத்தான தியாகத்தைத் திலீபன் புரிந்தான். அவனது மரணம் ஒரு மாபெரும் வரலாற்று நிகழ்ச்சி; தமிழீழப் போராட்ட வரலாற்றில் ஒரு புரட்சிகரமான திருப்பத்தை ஏற்படுத்திய நிகழ்ச்சி. தமிழீழத் தேசிய ஆன்மாவைத் தட்டி எழுப்பிய நிகழ்ச்சி; பாரத நாட்டைத் தலைகுனியவைத்த நிகழ்ச்சி; உலகத்தின் மனச்சாட்சியைச் சீண்டிவிட்ட நிகழ்ச்சி.

திலீபன் யாருக்காக இறந்தான்? எதற்காக இறந்தான்? அவனது இறப்பின் அர்த்தமென்ன? அவனது இறப்பு ஏன் ஒரு மகத்தான நிகழ்ச்சியாக, மக்கள் எல்லோரையுமே எழுச்சிகொள்ளச் செய்த ஒரு புரட்சிகர நிகழ்ச்சியாக அமைந்தது?

திலீபன் உங்களுக்காக இறந்தான்; உங்கள் உரிமைக்காக இறந்தான்; உங்கள் மண்ணுக்காக இறந்தான்; உங்கள் பாதுகாப்பிற்காக, உங்கள் சுதந்திரத்திற்காக, உங்கள் கௌரவத்திற்காக இறந்தான்.

தான் நேசித்த மக்களுக்காக, தான் நேசித்த மண்ணுக்காக, ஒருவன் எத்தகைய உயர்ந்த - உன்னத - தியாகத்தைச் செய்ய முடியுமோ அந்த அற்புகமான அர்ப்பணிப்பைத்தான் அவன் செய்திருக்கிறான்.

ஒரு உயிர் உன்னதமானது என்பதை நான் அறிவேன். ஆனால், உயிரிலும் உன்னதமானது எமது உரிமை, எமது சுதந்திரம், எமது கௌரவம்.

நான் திலீபனை ஆழமாக நேசித்தேன். உறுதிவாய்ந்த ஒரு இலட்சியப் போராளி என்ற ரீதியில் அவன்மீது அளவுகடந்தபாசம் எனக்குண்டு. அவன் துடிதுடித்துச் செத்துக்கொண்டிருக்கும் பொழுதெல்லாம், என் ஆன்மா கலங்கும். ஆனால், நான் திலீபனை ஒரு சாதாரண மனிதப் பிறவியாகப் பார்க்கவில்லை. தன்னை எரித்துக்கொண்டிருக்கும் ஒரு இலட்சிய நெருப்பாகவே நான் அவனைக்கண்டேன்; அதில் நான் பெருமை கொண்டேன். இலட்சிய உறுதியின் உச்சக்கட்டமாக திலீபன் தன்னை அழித்துக்கொண்டான். அவன் உண்மையில் சாகவில்லை; காலத்தால் சாகாத வரலாற்றுப் புருஷனாக அவன் வாழ்ந்துகொண்டிருக்கிறான்.

திலீபனின் மரணம் குறித்து இந்தியா ஆழ்ந்த கவலை தெரிவித்திருக்கிறது. இது அர்த்தமற்ற சாவு என இந்தியத் தூதர் கூறியிருக்கிறார். தமது உறுதிமொழிகளை நம்பியிருந்தால் திலீபன் உயிர் தப்பியிருப்பான் என்று சொல்லியிருக்கிறார். ஆனால், உண்மையில் நடந்தது என்ன? நடந்துகொண்டிருப்பது என்ன? என்பதை மக்கள் அறிந்து கொள்ளவேண்டும்.

எமது உரிமைகள் வழங்கப்படும்; எமது மக்களுக்கும் எமது மண்ணுக்கும் பாதுகாப்பு அளிக்கப்படும்; தமிழ் மக்கள் தமது பாரம்பரிய தாய்ப்பூமியில் தம்மைத்தாமே ஆளும் வாய்ப்பு அளிக்கப்படும் - இப்படியெல்லாம் பாரத அரசு எமக்கு அளித்த வாக்குறுதிகளை நம்பி, நாம் எமது ஆயுதங்களைக் கையளித்தோம்; எமது மக்களினதும் மண்ணினதும் பாதுகாப்பை, இந்தியாவுக்குப் பொறுப்பளித்தோம்.

இதனையடுத்து என்ன நடைபெற்றது என்பதெல்லாம், எனது மக்களாகிய உங்களுக்குத் தெரியும்.

தமிழ் அகதிகள் தமது சொந்தக் கிராமங்களுக்குச் செல்ல முடியாது முகாம்களுக்குள் முடங்கிக் கிடக்க, சிங்களக் குடியேற்றம் துரிதகதியில் தமிழ் மண்ணைக் கபளீகரம் செய்தது. சிங்கள அரசின் பொலீஸ்

PUBLIC LIBRARY, JAFFNA
CHUNDIKULI BRANCH LIBRARY



நிர்வாகம் தமிழ்ப் பகுதிகளில் விஸ்தரிக்கப் பட்டது.

அவசர அவசரமாக சிங்கள இனவாத அரசயந்திரம் தமிழ்ப் பகுதிகளில் ஊடுருவியது. சமாதான ஒப்பந்தம் என்ற போர்வையில் சமாதானப் படையின் அனுசரணையுடன் சிங்கள அரச ஆதிக்கம் தமிழீழத்தில் நிலைகொள்ள முயன்றது.

இந்தப் பேராபத்தை உணர்ந்து கொண்ட திலீபன் இதற்கு ஒரு முற்றுப் புள்ளி காணத் திடசங்கற்பம் கொண்டான்.

சிங்கள அரசுடன் உரிமை கோரிப் போராடுவதில் அர்த்தமில்லை. பாரதம் தான் எமது இனப்பிரச்சினையில் தலையிட்டது. பாரதம்தான் எமது மக்களின் உரிமைக்கு உத்தரவாதமளித்தது. பாரதம் தான் எம்மிடம் ஆயுதங்களை வாங்கியது. பாரதம்தான்எமது ஆயுதப்போராட்டத்தை நிறுத்திவைத்தது. ஆகவே, பாரத அரசிடம் தான் நாம உரிமை கோரிப் போராட வேண்டும். எனவேதான் பாரதத்துடன் தர்மயுத்தம் ஒன்றைத் தொடுத்தான் திலீபன். அத்தோடு பாரதத்தின் ஆன்மீக மரபில் பெறப்பட்ட அகிம்சை வடிவத்தை ஆயுதமாக எடுத்துக் கொண்டான்.

நீராகாரம்கூட அருந்தாது மரண நோன்பைத் திலீபன் தழுவிக்கொள்வதற்கு 24 மணி நேரத்திற்கு முன்னரே, நாம் இந்தியத் தூதர் திரு. டிக்ஸிட்டுக்கு முன்னறிவித்தல் கொடுத்தோம். உண்ணாவிரதம் ஆரம்பமாகி எட்டு நாட்கள் வரை ஒன்றும் நடைபெறவில்லை. பதிலுக்கு இந்திய அரசின் ஆதிக்கத்தின் கீழுள்ள தொடர்புச் சாதனங்கள், குறிப்பாக அகில இந்திய வானொலி எம்மீது விசமத்தனமான பொய்ப் பிரச்சாரத்தைக் கட்டவிழ்த்துவிட்டது. திலீபனின் உண்ணாவிரதத்தை மிகவும் கேவலமாகக் கொச்சைப்படுத்தியது. ஒன்பதாவது நாள் இந்தியத் தூதர் இங்கு வந்தார்; உருப்படியில்லாத உறுதிமொழிகளைத் தந்தார். வெறும் உறுதிமொழிகளை நம்பி எமது இனம் காலங்காலமாக ஏமாற்றப்பட்டு வருகிறது. உருப்படியான திட்டங்களை முன்வையுங்கள்; எமது கோரிக்கைகளை நிறைவேற்றிவையுங்கள்; அதுவரை உண்ணாவிரதம் கைவிடப்படமாட்டாது என்றேன். உங்களுக்குத் திலீபனது உயிரில் அக்கறை இருந்தால், நீங்கள் அவனை வந்து பாருங்கள் - எமது மக்களுக்கு முன்பாக அவனிடம் உறுதிமொழிகளைக் கூறுங்கள் - நாம் உண்ணாவிரதத்தை வாபஸ் பெறுகிறோம் என்றேன்; அதற்கு இந்தியத் தூதர் மறுத்துவிட்டார்.

முல்லைத்தீவு, திருக்கோணமலை, மட்டக்களப்பு ஆகிய மாவட்டங்களிலும் விடுதலைப்புலி வீரர்கள் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கிறார்கள். வடக்கு, கிழக்கு அடங்கிலுமுள்ள தமிழ்பேசும் மக்கள் அனைவரும் புலிகள் முன்னெடுக்கும் இந்தச் சாத்வீகப் போராட்டத்தில் அணிதிரள வேண்டும் மக்களின் ஒன்றுதிரண்ட சக்தி மூலமே-மக்களின் ஒருமுகப்பட்ட எழுச்சி மூலமே நாம் - எமது உரிமைகளை வென்றெடுக்கலாம். திலீபனின் ஈடு இணையற்ற தியாகத்திற்கு நாம் செய்யும் பங்களிப்பு இது தான்''

□□□

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY

# தளபதிகளை கைதுசெய்தது ஒப்பந்தத்திற்கு முரணானது

குறிப்பு:

**1987**, அக்டோபர் மாதம், 3-ந் திகதி பருத்தித்துறை கடற்பரப்பில் விடுதலைப் புலிகளின் மூத்த தளபதிகள் இருவரும் மற்றும் 15 போராளிகளும் சிறீலங்கா கடற்படையினரால் கைதுசெய்யப்பட்டனர். இவர்கள் பின்னர் பலாலி இராணுவ முகாமிற்கு கொண்டுசெல்லப்பட்டு அங்கு இந்திய அமைதிப் படையினரதும் சிங்கள இராணுவத்தினரதும் கூட்டான கண்காணிப்பில் தடுத்துவைக்கப்பட்டனர். போர்நிறுத்த நேரத்தில், பொதுமன்னிப்பு வழங்கப்பட்ட சூழ்நிலையில் புலிகளின் தளபதிகளும், போராளிகளும் கைதுசெய்யப்பட்டது இந்திய - இலங்கை ஒப்பந்தத்திற்கு முற்றிலும் முரணானது என தலைவர் பிரபாகரன் இந்திய அரசுக்கு கடும் ஆட்சேபம் தெரிவித்தார். கைதாகிய விடுதலைப் போராளிகளை உடன் விடுதலை செய்யுமாறும் அவர் இந்திய, சிறீலங்கா அரசுகளைக் கேட்டுக் கொண்டார். இது சம்பந்தமாக அவர் 4-10-87-ல் பத்திரிகைகளுக்கு விடுத்த அறிக்கையை இங்கு தருகிறோம். இந்த அறிக்கையை தமிழீழப் பத்திரிகைகள் முக்கியத்துவம் கொடுத்து பிரசுரித்தன.

"நேற்று முன்தினம் அதிகாலை பருத்தித் துறை கடற்பரப்பில் வைத்து விடுதலைப் புலிகளின் தளபதிகளான திரு. குமரப்பா, திரு.புலேந்திரன் மற்றும் 15 போராளிகளை யும் சிறீலங்கா கடற்படை கைதுசெய்து சிங்கள இராணுவத்திடம் ஒப்படைத்திருக் கிறது. இவர்கள் இப்பொழுது பலாலி இராணுவ முகாமில் இந்திய, சிறீலங்கா இராணுவத்தினரால் தடுத்துவைக்கப்பட் டுள்ளனர்.

ஆயுதங்களைக் கையளித்த பின்னர் எமக்குப் பொதுமன்னிப்பு வழங்கப்பட்ட தாக பகிரங்கமாக அறிவிக்கப்பட்டது. இந் நிலையில் பொதுமன்னிப்பு வழங்கப்பட்ட போராளிகளைக் கைதுசெய்வதும் தடுத்து வைப்பதும் இந்திய - இலங்கை ஒப்பந்தத் திற்கு முற்றிலும் முரணானதாகும்.

எமது போராளிகள் எதுவித குற்ற மும் இழைக்கவில்லை. குற்றமிழைக்காத வர்களை கைதுசெய்வது அநீதியான செயல்.

எமது பிரதேசக் கடலில் நாம் சுதந் திரமாக நடமாடுவது தவறா? எமது இந் தச் சுதந்திரம் பறிக்கப்படக்கூடியதொன்று என்று நாம் கருதவில்லை.

இந்தியாவிலுள்ள எமது தலைமைச் செயலகத்தை மூடிவிட்டு அங்கிருந்த நூல் களையும் ஆவணங்களையும் இங்கு கொண்டு வர இந்திய கடற்படையிடம் பாதுகாப் பும் அனுமதியும் கேட்டோம். பல தடவை கள் கேட்டும், அனுமதி தரப்படவில்லை. எனவே, இப்பொருட்களை நாமாக எடுத்து வர முடிவுசெய்தோம். இதுபற்றி இந்திய அரசுக்கு அறிவித்திருந்தோம்.

இந்நிலையில் பொருட்களை இந்தியக் கரையில் எடுத்துவைத்த பின்னர் அவற் றில் ஒரு பகுதியை வள்ளத்தில் கொண்டு வந்து எமது பிரதேசத்தில் இறக்கிவிட்டு மீண்டும் மீதிப்பொருட்களை எடுத்துவர வள்ளத்தில் சென்றபொழுதே இந்த 'கைது' சம்பவம் இடம்பெற்றது.

தளபதிகள் தற்பாதுகாப்பிற்காக கைத் துப்பாக்கி வைத்திருக்க அனுமதிக்கப்பட் டது. இதனையே தளபதிகள் இருவரும் கொண்டுவந்தனர். ஆனால் சிறீலங்கா அர சின் வானொலியும் மற்றும் மக்கள் தொடர்பு சாதனங்களும் ஆயுதங்களை நாம் ஏற்றிவந்ததாக அபாண்டமான பொய்ப் பிரச்சாரம் செய்கின்றன.

ஆயுதங்களை நாம் ஒப்படைத்தபோது எமது பாதுகாப்பையும் இந்தியப் படை யிடம் ஒப்படைத்தோம். எம்மை யாரா வது கைதுசெய்வதைத் தடுக்கவேண்டிய வர்கள் அவர்களே. எமக்குப் பாதுகாப்பு வழங்கவேண்டியவர்களும் அவர்களே.

தமிழ் மக்களின் பிரதிநிதிகளாக இந் தியா எம்மை அங்கீகரித்துள்ளது. இவ்வாறு நிலைமை இருக்கும்பொழுது சிறீலங்கா அரசு எம்மைக் கைதுசெய்யும் கட்டத்தில் எம்மைப் பாதுகாக்கும் கடமைப்பாடு இந் தியாவினுடையதாகும். இந்தக் கடமைப் பாட்டிலிருந்து இந்தியா தவறினால் ஆபத் தான விளைவுகள் ஏற்படும்."

□▣□

# எமது மக்களுக்கு இழைத்த மன்னிக்கமுடியாத குற்றம்

குறிப்பு

**5-10-1987** அன்று, விடுதலைப் புலிகளின் மூத்த தளபதிகளான புலேந்திரன், குமரப்பா ஆகியோரையும் ஏனைய போராளிகளையும் சிங்கள இராணுவத்தினர் பலவந்தமாக கொழும்பிற்கு கொண்டுசெல்ல முற்பட்டபொழுது அவர்கள் 'சைனைட்' அருந்தி வீரச்சாவை தழுவிக்கொண்டனர். இந்த நிகழ்வு சம்பந்தமாக தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையில் "ஈடிணை செய்யமுடியாத இந்தப் பேரிழப்பிற்கு இந்தியாவே பொறுப்பேற்கவேண்டும்" எனக் குற்றம்சாட்டினார். புலிகளின் தளபதிகளை சாவின் பொறிக்குள் தள்ளிய இச்செயல், ''இந்திய அமைதிப் படையினர் எமது மக்களுக்கு இழைத்த மன்னிக்க முடியாத குற்றம்'' எனவும் கண்டனம் தெரிவித்தார். 7-10-1987இல் ஈழமுரசு பத்திரிகையில் வெளியாகிய தலைவரின் அறிக்கையை இங்கு தருகிறோம்.

"எமது முக்கிய தளபதிகளும், போராளிகளும் அநியாயமாக இறந்து போக அனுமதிக்கப்பட்டதால் இந்திய அரசுமீது எமக்கிருந்த நம்பிக்கை இழந்து போய்விட்டது. சமாதான சூழலில் போர் நிறுத்த காலத்தில், அதுவும் இந்திய அமைதிப்படையினரின் கண்காணிப்பில், பொது மன்னிப்பு வழங்கப்பட்ட எமது போராளிகள் தம்மைத் தாமே அழித்துக்கொள்ள நிர்ப்பந்திக்கப்பட்டனர். ஈடிணை செய்ய முடியாத இந்தப் பேரிழப்புக்கு இந்தியாவே பொறுப்பேற்க வேண்டும்.

எமது இயக்கத்தின் திருக்கோணமலை மாவட்டத் தளபதி புலேந்திரன், யாழ்ப்பாண மாவட்டத் தளபதி குமரப்பா ஆகியோரும் மற்றும் எமது பத்து சிரேஷ்ட உறுப்பினர்களும் நஞ்சருந்தி வீரத்தியாகம் செய்த இந்த மாபெரும் சோக நிகழ்ச்சியானது இன்று எமது மக்களை அதிர்ச்சியிலும் ஆழ்ந்த துயரத்திலும் ஆழ்த்தியுள்ளது. எமது இயக்கத் தலைவர்களை அழித்து விடுவதற்கு சிங்கள இனவாத அரசு மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்கு இந்தியாவும் துணை போகிறதா என்று கூட எமது மக்கள் மத்தியில் சந்தேகம் எழுந்துள்ளது.

எமது இயக்கப் போராளிகளினதும் எமது மக்களினதும் பாதுகாப்பிற்கு இந்திய அரசு உத்தரவாதம் அளித்த காரணத்தால் நாம் எமது ஆயுதங்களை ஒப்படைக்க முடிவெடுத்தோம். ஆயுதங்களைக் கையளிக்கும்போது எமது பாதுகாப்பின் பொறுப்பையும் இந்தியாவிடம் கையளித்தோம். இதனையடுத்துச் சகல போராளிகளுக்கும் பொதுமன்னிப்பு வழங்கப்பட்டதாக இலங்கை அரசு அறிவித்தது. அடுத்ததாக விடுதலைப் புலிகளின் பொறுப்பில் நிர்வாக ஆட்சியதிகாரம் கையளிக்கப்படுமெனவும் இந்திய அரசு உறுதியளித்து வந்தது. புலிகளைப் பெரும்பான்மையாகக் கொண்ட நிர்வாக சபையையும் ஜனாதிபதி ஜெயவர்த்தனா அறிவித்தார். இவ்வகையில் விடுதலைப் புலிகள் தமிழீழ மக்களின் உண்மையான பிரதிநிதிகள் என்பதை இந்திய - இலங்கை அரசுகள் ஒப்புக்கொண்டுள்ளன.

இந்த சூழ்நிலையில்தான் எமது தளபதிகளும், போராளிகளும் எமது கடல் பிராந்தியத்தில் வைத்துக் கைதுசெய்யப்பட்டார்கள். கைது செய்யப்பட்டவர்களை இந்திய சமாதானப் படை பாதுகாப்பிற்காக பலாலி முகாமிற்கு அழைத்து வந்தது. சிங்கள இராணுவம் ஒருபுறமும் இந்தியச் சமாதானப் படைகள் மறுபுறமுமாகச் சுற்றி வளைத்த சூழ்நிலையில் எமது போராளிகள் தடுப்பில் வைக்கப்பட்டனர். "அவர்களுக்கு எதுவித ஆபத்தும் ஏற்படாது. உடன் விடுதலை செய்யப்படுவார்கள். நீங்கள் பொறுமையாக இருக்கவேண்டும்." என்றெல்லாம் இந்திய சமாதானப் படைத் தளபதிகள் எமக்கு உறுதிமொழி தந்து கொண்டிருந்தார்கள்.

இந்திய சமாதானப் படைகளின் பாதுகாப்பில் இருக்கும்வரை எமது தோழர்களுக்கு எவ்வித தீங்கும் நேராது என நம்பி நாம் காத்திருந்தோம். ஆனால் நேற்று முன்தினம் காலை 7 மணியளவில் நிலைமை திடீரென மாறியது. கைதானவர்கள் கொழும்புக்கு அனுப்பப்பட இருக்கிறார்கள். எம்மால் தடுக்கமுடியாது என இந்தியசமாதானப்படை அறிவித்தது. அதே சமயம் இவர்களை விடுவிப்பது சம்பந்தமாக கொழும்பில் பேச்சுக்கள் நடைபெறுவதாகவும் சொன்னார்கள். முதலில் தென்பிராந்திய இந்தியத் தளபதி திபேந்தர் சிங் பின்பு இந்தியத் தூதுவர் டிக்ஸிற் ஜனாதிபதியுடன் பேசுவதாகவும் விரைவில் சுமூகமான முடிவு வருமென்றும் நம்பிக்கை அளித்தார்கள். 7 மணிக்கு கொடுக்கப்பட்ட காலக்கெடு பின்பு 10 மணியாகி பிற்பகல் 2 மணியாகி இறுதியில் மாலை 5 மணியாக நிச்சயிக்கப்பட்டது.

டிக்ஸிற் ஜெயவர்த்தனா பேச்சு தோல்வியடைந்து விட்டதாக மாலை 4.45 மணியளவில் எமக்கு அறிவிக்கப்பட்டது: அடுத்து என்ன நடந்ததென்பது மக்கள்

அறிவார்கள். ''நாங்கள் முயற்சித்தோம். ஜெயவர்த்தனா விட்டுக் கொடுக்கவில்லை'' என்று ஒரு நொண்டிச்சாட்டைச் சொல்கிறது இந்திய அரசு.

எமது போராளிகளை விடுவிக்க வேண்டுமென இந்திய அரசு ஜனாதிபதி ஜெயவர்த்தனாவிடம் உறுதியாகச் சொல்லியிருந்தால் இந்த அநியாயமான சாவுகள் நிகழ்ந்தே இருக்காது. இந்த வகையில் எமது போராளிகளுக்கும் மக்களுக்கும் பாதுகாப்பளிக்கும் பொறுப்பிலிருந்து இந்தியா தவறிவிட்டது. எமக்குப் பாதுகாப்பளிக்கும் அதிகாரமும், பொறுப்பும் தார்மீகக் கடமைப்பாடும் இந்தியாவுக்கு இல்லையென்றால் இந்திய சமாதானப் படைகள் இங்கிருப்பதில் அர்த்தமென்ன? ஜனாதிபதி ஜெயவர்த்தனாவுக்கும் சிங்கள இராணுவத்திற்கும், சமூக விரோத இயக்கங்களுக்கும் பாதுகாப்பளித்து விடுதலைப் புலிகளை ஒழித்துக்கட்டத் துணைபோவதுதான் இந்திய சமாதானப்படைகளின் நோக்கமா? எமது தலைவர்களுக்கும் போராளிகளுக்கும் பாதுகாப்பு அளிப்பதற்குப் பதில் அவர்களைச் சிங்கள இராணுவத்திடம் ஒப்படைக்கத் துணைபோனது இந்திய சமாதானப் படையினர் எமது மக்களுக்கு இழைத்த மன்னிக்க முடியாத குற்றம். இந்தச் சூழ்நிலையில்தான் நாம் இனி யுத்த நிறுத்தத்தைப் பேணுவதில்லை என முடிவெடுத்தோம்.

□□□

# இந்தியா தொடுத்த யுத்தம்
# எம். ஜி. ஆருக்கு தலைவர் கடிதம்



குறிப்பு:

தமிழீழ மக்களுக்கு எதிராக இந்தியா ஆரம்பித்துள்ள யுத்தம் பற்றியும், அதன் பின்னணி பற்றியும் விளக்கி, 11-10-1987 அன்று, முன்னாள் தமிழக முதல்வர் கனம் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களுக்கு தலைவர் பிரபாகரன் எழுதிய விபரமான கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம்.

11-10-1987

**கனம்**
**எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள்**
முதலமைச்சர்
தமிழ்நாடு

எனது அன்புக்குரிய அண்ணன்
அவர்களுக்கு,

தமிழீழத்தில் சமாதானத்தை நிலை நாட்டி யுத்தநிறுத்தத்தைப் பேணி, தமிழ் மக்களைப் பாதுகாக்கும் நோக்குடன் இங்கு வந்த இந்திய இராணுவம் இன்று சிறீ லங்கா ஆயுதப்படைகளுடன் ஒன்றுசேர்ந்து ஈழத்தமிழ் மக்களுக்கு எதிராக ஒரு யுத்தத்தை ஆரம்பித்துள்ளது. இனவெறி பிடித்த ஜெயவர்த்தனாவால் ஆரம்பிக்கப் பட்ட தமிழினப் படுகொலையை இந்திய இராணுவம் தொடர்ந்து செய்வதை தமிழினப் பற்றுடைய தமிழ்த் தலைவர்கள் எவரும் அனுமதிக்கமுடியாது. அமைதிகாக்க வந்த இந்திய இராணுவம் இன்று எமக்கெதிராக ஒரு யுத்தத்தைத் தொடுத்திருக்கின்றது. இனவெறியன் ஜெயவர்த்தனா விடமிருந்து தமிழ் மக்களைப் பாதுகாப்போம் என உறுதிமொழி கூறிவந்த இந்திய அரசு ஜெயவர்த்தனாவுடன் கை கோர்த்து நின்று தமிழ்மக்களின் பிரதிநிதிகளாகிய எம்மை வேட்டையாடி, அழித்து வருவதையும் இன்று ஈழத் தமிழ்மக்கள் எதிர்கொள்ளும் மிகவும் ஆபத்தான நெருக்கடியையும், இவற்றின் உண்மையான பின்னணியையும் உங்களுக்கு இங்கு எடுத்து விளக்க விரும்புகின்றேன். ஏனென்றால் இங்குள்ள உண்மைநிலையை இந்திய அரசு திட்டமிட்டு இருட்டடிப்புச் செய்கிறது.

இந்திய வெளிவிவகார அமைச்சு ஒரு புறம், இந்திய அரசின் கட்டுப்பாட்டுக்குள் இங்குள்ள மக்கள்தொடர்புச் சாதனங்கள் மறுபுறமுமாக மிகவும் கீழ்த்தரமான பொய்ப்பிரச்சாரத்தை தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு எதிராக கட்டவிழ்த்துவிடுகின்றன. இந்திய அரசு எமக்கெதிராக இவ்விதம் திட்டமிட்ட விசமத்தனமான பிரச்சாரம் செய்துவருவதால் தமிழ்நாட்டு மக்கள் பெரிதும் குழப்பம் அடைந்துள்ளார்கள். ஆகவேதான் உண்மைநிலையை தமிழகத் தலைவர்களுக்கும், தமிழக மக்களுக்கும் எடுத்துக்கூறும் நோக்குடன் இக்கடிதத்தை உங்களுக்கு எழுதுகிறேன்.

இந்திய - இலங்கை ஒப்பந்தம் அவசர அவசரமாக செய்துகொள்ளப்பட்டதும், அதுபற்றி ஈழத்தமிழ் மக்களையோ, அல்லது அவர்களது பிரதிநிதிகளாகிய எம்மையோ கலந்தாலோசிக்கவில்லையென்பதும் இன்று உலகறிந்த உண்மை. கபடத்தனமாக என்னை டெல்லிக்கு அழைத்துச் சென்று அழுத்தங்கள் போடப்பட்டன. ஆனால் நான் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ள மறுத்தேன். இந்தச் சூழ்நிலையில் தான் பாரதப் பிரதமர் அவர்கள் என்னை அழைத்து எமது சந்தேகங்களைக் கேட்டறிந்து எனக்கு சில உறுதிமொழிகளைத் தந்தார். குறிப்பாக எமது விடுதலைப் போராளிகளினதும், மக்களினதும் பாதுகாப்புச் சம்பந்தமாக உறுதிமொழிகள் தரப்பட்டன. நாம் இந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளாதபோதும் இந்த ஒப்பந்தம் ஈழத்தமிழ் மக்களின் நலன்களைப் பேணுவதாக அமையும் பட்சத்தில் அதன் அமுலுக்கு இடையூறாக இருக்கமாட்டோம் என இந்திய அரசுக்கு வாக்களித்தோம். இந்த வாக்குறுதிக்கேற்ப நாம் எமது ஆயுதங்களைக் கையளித்தோம்.

இந்த ஆயுதக்கையளிப்பு சம்பந்தமாக நான் ஒரு விசயத்தை இங்கு குறிப்பிட விரும்புகின்றேன். அதாவது வழமையாகப் போரில் ஈடுபட்டிருக்கும் இருசாராரும் பேச்சுக்களை நடத்தி, ஒரு தீர்வுத்திட்டத்தை உருவாக்கி அத்தீர்வுத்திட்டம் அமுலாகும்போதுதான் ஆயுதங்களை ஒப்படைப்பது உலகநாடுகள் ஏற்றுக்கொண்ட மரபு. ஆனால் எமது போராட்டத்திற்குப் பின் எந்தவொரு தீர்வுத்திட்டமும் உருவாவதற்கு முன்னர் ஆயுதங்களைக் கீழே போடுமாறு நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம். ஆகவேதான் நாம் எமது ஆயுதங்களைக் கையளித்தபோது எமது போராளிகளினதும், மக்களினதும் பாதுகாப்பு என்ற முக்கிய பொறுப்பை இந்தியாவிடம் கையளித்தோம்.

இந்த ஒப்பந்தம் கைச்சாத்தாகி ஆயுதங்கள் கையளிக்கப்பட்டு போர்நிறுத்தத்திற்கு நாம் இணங்கியதையடுத்து ஜெயவர்த்தனா அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளும், அதனைக்கண்டும் காணாதது போல் இருந்த இந்திய அரசின் மெத்தனப் போக்கும் தமிழ் மக்களின் நலனை வெகுவாகப் பாதிக்கின்றது.

பல்லாயிரக்கணக்கான தமிழ் அகதிகள் தமது சொந்தக் கிராமங்களுக்குத் திரும்ப இயலாமல் முகாமிற்குள் முடங்கிக்கிடக்க, அவ்வேளை சிங்கள மக்கள் தமிழ்க்கிராமங்களில் அவசர அவசரமாகக் குடியேற்றப்பட்டனர். ஒப்பந்தத்தின் பிரகாரம் முகாமுக்குள் இருக்க வேண்டிய சிங்கள இராணுவத்தினர் ரோந்தில் வெளிக்கிளம்பி தமிழ்மக்கள் மீது அட்டூழியங்கள் புரிந்து வந்தனர். இதற்கிடையில் சிங்களக் காவல் நிலையங்கள் தமிழ்ப்பகுதிகளில் அவசர அவசரமாக நிறுவப்பட்டன. இடைக்கால அரசு ஒன்றை நிறுவுவதை ஒத்திப்போட்டுவிட்டு சிங்கள அரசுநிர்வாகத்தை தமிழ்ப் பகுதிகளில் நடைமுறைக்கு கொண்டுவரும் நடவடிக்கைகளை ஜெயவர்த்தனா அரசு துரிதப்படுத்தியது. ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டதையடுத்து "றோ" எனப்படும் இந்திய உளவு ஸ்தாபனம் தமிழ்நாட்டில் இருந்து சமூகவிரோதச் செயல்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்த 'டெலோ, புளொட், ஈ.பி.ஆர்.எல்.எவ் மற்றும் ஈ.என்.டி.எல்.எவ். போன்ற அமைப்புக்களுக்கு அவசர அவசரமாக ஆயுதங்களைக் கொடுத்து தமிழீழத்திற்கு அனுப்பிவைத்தது. இந்த அமைப்புகள் இங்கு வந்ததும் எம்மோடு மோதி, தமக்குள்ளும் மோதி வன்முறையைக் கட்டவிழ்த்துவிட்டதுடன் சமூக விரோதச் செயல்களில் ஈடுபட்டு எமது மக்கள் மீது அட்டூழியங்கள் புரிந்தன.

ஒட்டுமொத்தமாக இந்த நடவடிக்கைகள் ஒப்பந்தத்தை மீறுவதாக அமைந்ததோடு ஈழத்தமிழர்களின் நலன்களையும் கடுமையாகப் பாதித்தது. இப்பிரச்சினைகளை ஒட்டி நாம் மீண்டும் மீண்டும் இந்திய அரசிற்கும், இந்திய அமைதிப்படைக்கும் சுட்டிக்காட்டியபோதும் எவ்வித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. இந்தச் சூழ்நிலையில்தான் நாம் சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டத்யையும், சாத்வீக அடிப்படையிலான வெகுஜனப்போராட்டத்தையும்ஆரம்பித்தோம். திலீபன் நீராகாரம் கூட அருந்தாது மரணநோன்பை ஆரம்பித்து 9வது நாள் அவன் சாவின் விளிம்பை நெருங்கிக் கொண்டிருந்த சமயம் கொழும்பிலுள்ள இந்தியத் தூதுவர் தீட்ஷித் யாழ்ப்பாணம் வந்து எம்முடன் பேச்சுக்களை ஆரம்பித்தார். இடைக்கால அரசை உடன் அமைத்தால்தான் தமிழர்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளைத் தீர்க்கலாம் என்று கூறி அவர் இடைக்கால நிர்வாகப் பிரதிநிதித்துவம் பற்றி எம்மோடு மீண்டும் பேச முயற்சித்தார். எமக்கு வாக்குறுதியளித்த திட்டத்திற்கு மாறாக திரு. தீட்ஷித் புதிய யோசனைகளைத் தெரிவித்தார். இது ஜெயவர்த்தனா அரசிற்கு சாதகமாகஅமைந்திருந்ததால் நாம் அதனை ஏற்க மறுத்தோம்.

இடைக்கால நிர்வாக அமைப்பு, அதன் பிரதிநிதித்துவம், அதன் அதிகாரங்கள் சம்பந்தமாக எமதுநிலைப்பாடு பற்றி இந்தியஅரசு எம்மீது மிகவும் விசமத்தனமான பொய்ப் பிரச்சாரத்தை முடுக்கிவிட்டு இந்திய வெகுஜன அபிப்பிராயத்தை எமக்கெதிராகத் திசைதிருப்பியது. ஆகவே இந்த விவகாரங்கள் பற்றிய முழு விபரங்களை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன்.

இடைக்கால நிர்வாக அரசு ஒன்று உருவாக்கப்படும் என்றும், அதன் நிர்வாக சபையில் எல்.ரி.ரி.ஈ.க்கு பெரும் பங்கு வழங்கப்படும் என்றும் பாரதப்பிரதமர் எனக்கு உறுதியளித்திருந்தார். நிர்வாக சபையின்பிரதிநிதித்துவம்பற்றிபிரதமரோடு பேசியபொழுது தமிழர் விடுதலைக் கூட்டணிக்கும், ஈரோஸ் இயக்கத்திற்கும் மட்டும் பங்களிப்புக் கொடுப்பதென முடிவாகியது. இந்தப் பேச்சுக்களின்போது தமிழ்நாட்டு உணவு அமைச்சர் திரு. பண்ருட்டி எஸ். இராமச்சந்திரனும் பிரசன்னமாக இருந்தார். புளொட், டெலோ, ஈ.பி. ஆர். எல். எவ்., ஈ. என். டி. எல். எவ். போன்ற அமைப்புக்கள் கிரிமினல் கோஷ்டிகள் என்

றும், தமிழ்நாட்டில் இவர்கள் புரிந்துவரும் மக்கள் விரோத செயல்கள் பற்றியும் திரு. இராமச்சந்திரன் பிரதமருக்கு விளக்கினார். இதனையடுத்து இடைக்கால அரசில் அவர்களுக்குப் பங்களிப்பு வழங்குவதில்லையென பிரதமர் இணங்கினார். சட்டம் ஒழுங்கு உட்பட சகல சிவில் நிறைவேற்று அதிகாரமும், இடைக்கால நிர்வாகசபைக்கு வழங்கப்படும் எனவும் எமக்கு உறுதியளிக்கப்பட்டது.

பாரதப்பிரதமர் உறுதியளித்ததற்கிணங்க இடைக்கால நிர்வாக அரசு அமையப்பெறுமென நாம் எதிர்பார்த்து இருந்தோம். ஆனால் அப்படி நடைபெறவில்லை. இடைக்கால நிர்வாகத்தின் அமைப்பு, பிரதிநிதித்துவம், அதிகாரம் சம்பந்தமாக இந்திய வெளிவிவகார அமைச்சு அதிகாரிகள், தமிழக அமைச்சர் திரு. எஸ். இராமச்சந்திரன், திரு. தீட்ஷித் ஆகியோர் காலத்திற்குக் காலம் மாறுபாடான கருத்துக்களைச் சொன்னார்கள். தமிழர் விடுதலைக் கூட்டணி, ஈரோஸ் தவிர ஏனைய நான்கு இயக்கங்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கப்படக்கூடாது என்று ஆரம்பத்திலேயே வாதாடிய திரு. எஸ். இராமச்சந்திரன் இறுதியில் ஈ. பி. ஆர். எல், எப். இற்கு இடம்கொடுக்கப்பட வேண்டுமெனக் கூறினார். முதலில் 10பேர் கொண்ட நிர்வாகசபை என்று கூறினார் திரு. எஸ்.இராமச்சந்திரன். பின்னர் ஒரு பிரதமநிர்வாகஅதிகாரி வடக்கிற்கும்கிழக்கிற்குமாக வேறு இரு உதவி நிர்வாக அதிகாரிகள் உட்பட 12 பேர்கொண்ட சபை எனத் திருத்திக்கூறினார். உடனடியாக **நிர்வாக அரசு** என்றவர்கள், பின்னர் அதை நிர்வாகசபை என்றும் இறுதியில் ஆலோசனைச்சபை என்றும் கூறினார்கள். அதிகாரங்கள் சம்பந்தப்பட்ட விசயத்தில் தெளிவான உருப்படியான திட்டங்கள் எதுவும் இவர்களால் முன்வைக்கப்படவில்லை

பின்னர் நிர்வாக உறுப்பினர் நியமனத்தில் எம்மிடம் ஒரு பெயரை மட்டும் கேட்டிருந்தால் சிக்கல்கள் எதுவும் ஏற்பட்டிருக்காது. ஆனால் நிர்வாக அதிகாரிக்கும், ஏனைய உறுப்பினர்களுக்குமான அதிக எண்ணிக்கை கொண்ட பெயர்ப் பட்டியலைக் கேட்டார்கள். நாம் வரிசைப்படுத்திய அடிப்படையில் பெயர்ப்பட்டியலைக் கொடுத்தபோதும், தான் விரும்பியவாறு நிர்வாக உறுப்பினர்களை தெரிவுசெய்யும் வாய்ப்பு ஜெயவர்த்தனாவிற்கு அளிக்கப்பட்டதே தவிர நாம் விரும்பியபடி உறுப்பினர்களைத் தெரிவுசெய்யும் உரிமை எமக்குத் தரப்படவில்லை. இதனால் பிரச்சினைகள் எழுந்தன.

இடைக்கால அமைச்சரவை அமைக்கும் விடயம் இழுபறிப்பட்டுவந்த காரணத்தால் மற்றும் இந்தியப் பிரதமர் கொடுத்த வாக்குறுதிக்கும் மாறாக திரு. இராமச்சந்திரனும், திரு. தீட்ஷித்தும் மாற்றுத்திட்டத்தைத் திணிக்கமுயற்சித்ததாலும், எமது பிரச்சினைகள் மேலும் விரிவடைந்தன. இந்தியா எமக்களித்த வாக்குறுதிகளைப் பேணி, காலந்தாழ்த்தாது காரியங்களைச் செய்திருந்தால் எமது திலீபன் உயிர்பிழைத்திருப்பான். அத்தோடு இன்றைய நெருக்கடியான நிலை உருவாகியிருந்திருக்காது. அடுத்ததாக, எமது இரு பிராந்தியத் தளபதிகள் உட்பட 12 போராளிகள் மரணிக்கநேர்ந்த சம்பவமானது இந்திய அரசிற்கு மாறாத வடுவை ஏற்படுத்தி விடுதலைப் புலிகளுக்கும் - இந்தியாவிற்கும் மத்தியில் ஒரு கூர்மையான வேறுபாட்டை உண்டுபண்ணியதாகச் சொல்லவேண்டும். இந்தியாவின் அசிரத்தையான போக்கினாலும், ஜெயவர்த்தனாவைத் திருப்திப்படுத்தினால் போதுமென்ற நிலைப்பாட்டினாலும், எமது முன்னணிப் போராளிகளின் உயிர்களைப் பலிகொடுத்தோம். இந்நேரத்தில் இந்தியாவை நம்மோடு மோதவைக்க வேண்டும் என்ற ஜெயவர்த்தனாவின் சூத்திரதார இராஜதந்திரம் வெற்றியளித்ததென்றே சொல்லவேண்டும்.

பொதுமன்னிப்பு அளிக்கப்பட்ட போராளிகளையும், தளபதிகளையும் சிங்கள இராணுவம் கைதுசெய்து தடுப்புக்காவலில் வைத்தது ஒப்பந்தத்திற்கு முரணான காரியமாகும். அதுவும் இல்லாமல் அவர்களை கொழும்பிற்குக் கொண்டுசென்று சித்திர

வதைசெய்து கொல்லுவதற்கு ஜெயவர்த்தனா அரசு திட்டம் தீட்டியது. இந்திய அமைதிப்படையின் முகாமில், இந்திய இராணுவத்தின் கண்காணிப்பில் இவர்கள் வைக்கப்பட்டிருந்தார்கள். தம்மைப் பலவந்தமாகக் கொழும்பிற்கு கொண்டுசென்றால் தாம் நஞ்சை அருந்தியே உயிரை மாய்த்துக் கொள்வோம் என அவர்கள் திட்டவட்டமாக கூறியிருந்தார்கள். இந்த இக்கட்டான சூழ்நிலையில் இந்தியா தலையிட்டு போராளிகளையும், தளபதிகளையும் விடுவித்திருக்க வேண்டும். தமிழீழ மக்களின் நலனில் உண்மையான அக்கறை இருந்திருந்தால் இந்தியா கட்டாயமாக இதைச் செய்திருக்க வேண்டும். ஆனால் நாம் முயற்சித்தோம் முடியவில்லையென்று திரு. தீட்ஷித் கூறினார். இந்தவிடயத்தில் இந்தியா உறுதியான கண்டிப்பான நிலைப்பாடு எடுத்து ஜெயவர்த்தனாவின் மீது அழுத்தம் போட்டிருந்தால் இந்த அநியாயமான சாவுகள் நிகழ்ந்திருக்காது. ஆனால் இந்திய அரசு அப்படிச் செய்யவில்லை. அதனால் எமது மக்களையோ, எமது போராளிகளையோ இந்திய அரசு பாதுகாக்கும் என்ற நம்பிக்கையை இந்தச் சோகச் சம்பவம் மாற்றி விட்டது.

எமது தளபதிகளும், போராளிகளும் அநியாயமாக கொலையுண்ட சம்பவத்தின் எதிரொலியாக தமிழீழம் எங்கும் வன்முறைச்சம்பவங்கள் தலைதூக்கின. இன மோதல்கள் வெடித்தன. இந்த வன்முறை முயற்சிகளுக்கு நாம்தான் காரணம் என்றும், நாம் ஒப்பந்தத்தை முறிக்க முயன்றதாகவும் இந்தியா எம்மீது அபாண்டமான பழிகளைச் சுமத்தியது. இதனைத் தொடர்ந்து கொழும்பில் இந்திய பாதுகாப்பு மந்திரி திரு. பந்த், இந்தியத் தூதுவர் திரு. தீட்ஷித், இந்திய இராணுவத் தளபதி திரு. சுந்தர்ஜி ஆகியோர் ஒருபுறமும், ஜெயவர்த்தனா, அத்துலத்முதலி மறுபுறமுமாக விடுதலைப் புலிகளை ஒழித்துக் கட்டும் ஒரு சதித்திட்டத்தை உருவாக்கினர். விடுதலைப் புலிகள் இயக்கத்தைத் தடைசெய்வது என்றும், எமது போராளிகளுக்கு பொதுமன்னிப்பு இல்லையென்றும் ஜெயவர்த்தனா அறிவித்தார். விடுதலைப் புலிகளுக்கு எதிராக கடும் இராணுவ நடவடிக்கை எடுக்க இந்தியா முடிவுசெய்திருப்பதாக திரு பந்த் அறிவித்தார். இதனைத் தொடர்ந்து இந்திய சமாதானப்படை விடுதலைப் புலிகள்மீது ஒரு விசமத்தனமான தாக்குதலைத் தொடங்கினார்கள். நேற்றுக்காலை அமைதிப்படையினர் யாழ்ப்பாண நகரிலுள்ள இரு தமிழ் தினசரிப் பத்திரிகைகள் (ஈழமுரசு, முரசொலி) காரியாலயங்களுக்குள் புகுந்தனர். பத்திரிகை ஊழியர்களைக் கைதுசெய்தனர். பின்னர் பத்திரிகை அச்சு இயந்திரத்திற்குள் வெடிகுண்டுகளை வைத்து அவற்றைத் தகர்த்தனர். பத்திரிகைச் சுதந்திரத்தை மீறும் இந்த அடாவடித்தனமான செயல் யாழ்ப்பாண மக்களைக் கொதித்தெழச்செய்தது. ஜனநாயகம், அகிம்சை பற்றிப் பேசும் பாரதநாடு ஈழத்தமிழ் மக்களின் உரிமைப் பொருளாக விளங்கிய இந்தப் பத்திரிகைகளை மிகவும் கீழ்த்தரமான வன்முறையைக் கையாண்டு, நாசம் செய்ய முயன்ற இந்நிகழ்ச்சியானது எமது மக்களுக்கு இந்தியாவின் மேல் இருந்த மதிப்பையும், நம்பிக்கையையும் முற்றாகத் தகர்த்தது. அதுவும் எமது மக்களின் சுதந்திரத்தையும், பாதுகாப்பையும் பேணவந்த இந்திய அமைதிப் படையினர் இந்த மனிதஉரிமை மீறல் சம்பவத்தைப் புரிந்து எமது மக்களுக்குப் பெரும் ஏமாற்றத்தையும் வேதனையையும் கொடுத்தனர்.

நேற்று நண்பகல் விடுதலைப் புலிகளை வேட்டையாடி அழிக்கும் நோக்குடன் கோட்டை இராணுவ முகாமில் இருந்து இந்திய அமைதிப்படையினர் யாழ் நகருக்குள் பிரவேசிக்கமுயன்றனர். அவர்களை நாம் தடுக்கமுயன்றோம், அவர்கள் எம்மைநோக்கிக் துப்பாக்கிப்பிரயோகம் செய்தனர். நாம் எமது தற்பாதுகாப்பிற்காகத் திருப்பிச்சுட்டோம். போர்மூண்டது. இந்திய இராணுவம் பீரங்கி, டாங்கி போன்ற கனரக ஆயுதங்கள் சகிதம் குடியிருப்புக்கள் நிறைந்த பகுதிகள் மீது மணிக்கணக்கான தாக்குதல்களை நடத்தினர். தொடர்ந்தும் நடத்திக்கொண்டிருக்கிறார்கள். இதனால் எமது போராளிகள் மட்டுமின்றி பொதுமக்கள் பலரும் பெருமளவில் செத்துக்கொண்டிருக்கிறார்கள்.

பொதுமக்கள் கொல்லப்பட்டாலும் பரவாயில்லை, விடுதலைப் புலிகளை அழித்துவிடவேண்டுமென்று கங்கணம் கட்டி நிற்கிறது இந்திய இராணுவம். நாலாபக்கமும் முற்றுகையிடப்பட்டநிலையில் நாம் எமது தற்பாதுகாப்பிற்காக போராடி வருகின்றோம். உயிருடன் கைதாகி அவமானப்பட்டு சாவதைவிட போராடி இறப்பதே மேலானது என்ற இலட்சியத்துடன் நாம் துப்பாக்கி ஏந்தியுள்ளோம்.

பாரதம் ஒரு வல்லரசு நாடு. உலகத்திலேயே மிகப்பெரிய இராணுவத்தை வைத்திருக்கிறது. பாரதத்துடன் போர் தொடுக்க நாம் பைத்தியக்காரர்கள் அல்ல. ஆனால் பாரதம் எம்மோடு போர்தொடுத்து எம்மை அழிக்க முயல்கிறது. ஆயிரக்கணக்கான எமது போராளிகளை அழிக்கவேண்டுமானால் பல்லாயிரக்கணக்கான பொதுமக்களைக் கொன்று குவிக்கவேண்டும். விடுதலைப் புலிகள் மக்களில் இருந்தும் வேறுபட்டவர்கள் அல்ல. விடுதலைப் புலிகள் ஒரு மக்கள் இயக்கம். புலிகள்தான் மக்கள். மக்கள்தான் புலிகள். ஆகவே பாரதம் எமது மக்களுக்கு எதிராகவே ஒரு அநீதியான யுத்தத்தைத் தொடுத்திருக்கிறது. ஜெயவர்த்தனா அரசு நடத்தி முடித்த யுத்தத்தை, இப்போது பாரதம் தொடர்கிறது. இனப்படுகொலையைத் தடுப்பதற்காக எந்த இராணுவம் இங்கு வந்ததோ அந்த இராணுவமே அந்த இன அழிப்பைச் செய்கிறது.

தமிழீழத்தில் நடைபெறும் இந்த அக்கிரமத்தை,அதர்மத்தை இந்திய மக்கள் குறிப்பாக தமிழ்நாட்டுமக்கள் புரிந்துகொண்டு எழுச்சிகொள்ளவேண்டும். கிளர்ந்தெழுந்து போராட வரவேண்டும். தமிழக மக்கள் பொறுப்போடு நடந்துகொண்டால் ஈழத் தமிழ் மக்களின் இனப்படுகொலையைத் தடுத்துநிறுத்த முடியும். ஆகவே உண்மை நிலையைத் தமிழ்மக்களுக்கு எடுத்துவிளக்க எமது மக்களுக்கு ஆதரவாக ஒரு வெகுஜனப் போராட்டத்தை தமிழ்நாட்டில் ஆரம்பிக்குமாறு வேண்டிக்கொள்கிறேன்.

**வே. பிரபாகரன்,**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்திக்கு தலைவர் எழுதிய கடிதங்கள்

குறிப்பு;

விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு எதிராக இந்திய அமைதிப்படை யுத்தத்தை ஆரம்பித்ததைத் தொடர்ந்து இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்திக்கு தலைவர் பிரபாகரன் 12-10-1987, 14-10-1987 ஆகிய திகதிகளில் அனுப்பி வைத்த கடிதங்களை இங்கு பிரசுரிக்கிறோம். இக் கடிதங்களில் இந்திய அமைதிப்படை புரிந்த அட்டூழி யங்களை எடுத்து விளக்கியுள்ள தலைவர், இந்திய அரசு, அநீதியான முறையில் புலிகளுக்கு எதிராகத் தொடுத்த போரை உடன் நிறுத்தி, பேச்சுக்களை ஆரம்பிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். ஆயினும் புலிகளின் வேண்டுகோளை இந்தியா நிரா கரித்து யுத்தத்தை தீவிரப்படுத்தியது.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்
யாழ்ப்பாணம்
12-10-1987

**கனம் ராஜீவ் காந்தி அவர்கள்**
இந்தியப் பிரதம மந்திரி
புதுடில்லி.

அன்பின் ஐயா,

யாழ்ப்பாணத்தில் உருவாகியுள்ள மிகவும் ஆபத்தான, பாரதூரமான நிலைமையை உங்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

இந்திய அமைதிகாக்கும் படைகள் விடுதலைப் புலிகள் இயக்கம்மீது போர்ப்பிரகடனம் செய்து இராணுவ நடவடிக்கைகளை ஆரம்பித்துள்ளன. தற்பாதுகாப்பிற்காக, எமது போராளிகளையும் பொதுமக்களையும் அழிவிலிருந்து காப்பதற்காக, நாம் இந்திய–சிறீலங்கா இராணுவங்களை எதிர்த்துப் போராட நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளோம்.

மக்கள் ஆதரவுபெற்ற விடுதலை இயக்கமான புலிகள் இயக்கம் மீது இந்தியஅரசு யுத்தம் தொடுத்துள்ளதால் எமது மக்கள் அதிர்ச்சியும் ஆழ்ந்த கவலையும் அடைந்துள்ளனர். விடுதலைப் புலிகள் இயக்கம்மீது பிரகடனப்படுத்தப்பட்டுள்ள இந்தப் போரானது இந்திய–இலங்கை ஒப்பந்தத்தின் அடிப்படைகளையே மீறுவதாக அமைந்துள்ளது. எமது மக்களின் கருத்தும் அதுவாகும்.

இந்தியப் படைகளும் சிறீலங்கா இராணுவமும் கூட்டாகச் சேர்ந்து மேற்கொண்டுள்ள இந்த இராணுவ நடவடிக்கைமூலம் பொது மக்களுக்கு பெருமளவு உயிர்ச்சேதம் ஏற்படும் பேராபத்து உருவாகியுள்ளது. இதனால் எழும் பாரதூரமான விளைவுகளுக்கு இந்திய அரசே பொறுப்பேற்கவேண்டும்.

இந்திய மக்கள்மீது எமக்குள்ள நல்லுறவின் அடிப்படையிலும், சமாதானமும் நல்லெண்ணமும் பேணப்படும் அவசியத்தை முன்னிட்டும், இராணுவ நடவடிக்கைகளை உடன் கைவிடும்படி இந்திய அமைதிப்படைக்குப் பணிக்குமாறு நான் உங்களை தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன்.

**வே. பிரபாகரன்**
தலைவர்
தமிழீழ விடுதலைப் புலிகள்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்,
14-10-1987.

**கனம் ராஜீவ் காந்தி அவர்கள்**
இந்தியப் பிரதம மந்திரி,
புதுடில்லி.

அன்பின் ஐயா,

தமிழ்ப் பகுதிகளில் சாவும் அழிவுமாக நிலைமை நாளுக்கு நாள் படுமோசமடைந்துவருவதால் நான் மீண்டும் உங்களுடன் தொடர்பு கொள்ள விரும்புகிறேன்.

இந்திய அமைதிகாக்கும் படையினர் மேற்கொண்டுவரும் இரா ணுவ நடவடிக்கைகளால் நெருக்கடிநிலை தீவிரமடைந்துவருவதுடன் யாழ்ப்பாணக் குடாநாட்டில் பொதுசன உயிரிழப்பும் பெருந்தொகை யில் அதிகரித்துள்ளது. கண்மூடித்தனமான பீரங்கித் தாக்குதல், மோட் டார் எறிகணை வீச்சு, விமானக் குண்டுவீச்சு காரணமாக இதுவரை 150 அப்பாவிப் பொதுமக்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டதுடன் 500 பேர்வரை காயமடைந்துள்ளனர். அத்துடன் விடுதலைப் புலிகள் இயக்கப் போராளிகள் பலரும் கொல்லப்பட்டுள்ளனர். போர்க் கைதி களாக 18 அமைதிப்படைச் சிப்பாய்கள் எமது பாதுகாப்பில் உள்ளனர்.

போர் மிகவும் உக்கிரமாக தீவிரமடைவதால் பல்லாயிரக்கணக் கான தமிழ் மக்கள் அகதிகளாக இடம்பெயர்ந்துள்ளனர். காலவரையற்ற ஊரடங்குச்சட்டம் அமுலில் இருந்துவருவதால் அத்தியாவசிய உணவுப் பொருள்களுக்கு பெரும் தட்டுப்பாடு எழுந்துள்ளது. இதனால் எமது மக்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு இலக்காகியுள்ளனர்.

எமது மக்களின் பாதுகாப்பைப் பேணி, சமாதானத்தையும் சகஜ நிலையையும் நிலைநாட்டுவதற்காக எமது தாயகம் வந்த இந்திய அமைதி காக்கும் படையினர் ஒரு முழு அளவிலான யுத்தத்தை ஆரம்பித்து எமது மக்கள்மீது மனிதாபிமானமற்ற கொடுமைகளை புரிவது மிகவும் வேத னைக்குரிய துன்பியல் நிகழ்வாகும்.

11 ந் திகதி காலை இந்திய அதிரடிப் படையினர் யாழ்ப்பாண நகருக்கு சமீபமாகவுள்ள பிரம்படியில், பல்கலைக்கழக மாணவர்கள், பெண்கள், குழந்தைகளாக 40 அப்பாவிப் பொதுமக்களை படுகொலை செய்துள்ளனர். மக்களுக்கு சேவைபுரியும் பொது நிறுவனங்கள்மீதும் இந்திய அமைதிப் படைகள் தாக்குதல் நடத்தியமை எமக்கு அதிர்ச்

சியைத் தந்திருக்கிறது. ஈழமுரசு, முரசொலி ஆகிய இரு தினசரி தமிழ்ப் பத்திரிகைகளின் காரியாலயத்தினுள் புகுந்த அமைதிப் படைச் சிப்பாய் கள் வெடிகுண்டுகளை வைத்து, அச்சியந்திரங்களை தகர்த்துள்ளனர். 12-ந் திகதியன்று வடமாகாணத்தின் ஒரேயொரு வைத்திய நிறுவன மான யாழ்ப்பாண ஆஸ்பத்திரிமீது கோட்டையிலுள்ள இந்தியப்படையினர் பீரங்கித் தாக்குதலை நடத்தி பெரும் சேதம் விளைவித்துள்ளனர். நேற்று, விமானக் குண்டுவீச்சு காரணமாக யாழ்ப்பாண பல்கலைக்கழ கக் கட்டடங்கள் பலத்த சேதத்திற்கு உள்ளாகியிருக்கின்றன,

இந்தப் போரில் கனரக ஆயுதங்களையோ, விமானங்களையோ பாவிக்கவில்லை என இந்திய அரசாங்கம் பிரச்சாரம் செய்துவருகிறது. ஆனால் அதேவேளை இந்திய-இலங்கை விமானங்களும், ஹெலிகப் டர்களும் குடியிருப்பு பகுதிகள்மீது கண்மூடித்தனமான தாக்குதல்களை நடத்திவருகின்றன. இந்தியாவின் இந்நடவடிக்கைகள் எமது மக்களுக்கு அதிர்ச்சியையும் ஆழ்ந்த கவலையையும் ஏற்படுத்தியுள்ளது.

இந்திய-இலங்கை ஒப்பந்த விதிகளின் பிரகாரம் அமைதிப் படையினர் அமைதியைப் பேணவேண்டும்; பொதுமக்களுக்கு பாதுகாப்பு வழங்கவேண்டும். இதுவே அவர்களுக்கு வழங்கப்பட்ட ஆணையாகும். மக்கள் ஆதரவுபெற்ற ஒரு அரசியல் இயக்கத்திற்கு எதிராக ஒரு முழு அளவிலான யுத்தத்தைத் தொடுப்பதற்கு அமைதிப்படைக்கு சட்டரீதி யான அதிகாரம் எதுவுமில்லை. அமைதிப் படையின் அட்டூழியங்கள் பற்றி நாம் முன்வைக்கும் குற்றச்சாட்டுகளை விசாரித்து அறிவதற்கும், உண்மையை உலகிற்கு எடுத்துச்சொல்வதற்கும் வழிசெய்யும் வகையில் சர்வதேசப் பத்திரிகையாளர்கள், மனித உரிமை நிறுவனப் பிரதிநிதி கள், இந்திய எதிர்க் கட்சிப் பிரமுகர்கள் ஆகியோரைக் கொண்ட ஒரு பார்வையாளர் குழு யாழ்ப்பாணம் வருகைதர அனுமதிக்குமாறு நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன்.

வட-கிழக்கு மாகாணத்தில் ஒரு இடைக்கால அரசை அமைக்கு மாறு இந்திய, சிறீலங்கா அரசுகள் எமது இயக்கத்தை கேட்டுக்கொண் டன என்பதை நீங்கள் அறிவீர்கள். தமிழ் மானிலத்தில் விடுதலைப் புலிகள் இயக்கமே மக்கள் ஆதரவுபெற்ற முதன்மையான அரசியல் அமைப்பு என்பதை இரு அரசுகளும் அங்கிகாரம் வழங்கியமைக்கு இது ஒப் பாகும். இடைக்கால அரசு அமைக்கப்பெற்றதும் எம்மிடம் எஞ்சியுள்ள ஆயுதங்களையும் கையளித்துவிடுவதாக நாம் வாக்குறுதியளித்திருந் தோம். ஆனால் கிழக்கு மாகாணத்தில் தலைதூக்கிய வன்முறைச் சம் பவங்களைச் சாக்காகக் காட்டி இந்திய அரசாங்கம் எம்மீது ஒரு யுத் தத்தை கட்டவிழ்த்துவிடத் தீர்மானித்துள்ளது. இது மிகவும் துரதிர்ஷ்ட வசமானதாகும். கிழக்கு மாகாணத்தில் தலைதூக்கிய வன்முறைச் சம்ப

வங்களுக்கும் எமக்கும் எவ்வித தொடர்புமில்லை. இதனை நாம் திட்ட மிட்டு செயற்படுத்தியதாகக் கூறுவதும் தவறானதாகும். எமது இயக் கத்தின் திருக்கோணமலைத் தளபதி புலேந்திரன், முன்னாள் மட்டக் களப்பு தளபதி குமரப்பா ஆகியோரின் மரணத்தின் விளைவாகவே தன்னிச்சையான இவ்வன்முறைச் சம்பவங்கள் தலைதூக்கின. எமது தளபதிகளின் மரணத்தால் பாரதூரமான எதிர்விளைவுகள் ஏற்படலா மென நாம் ஏற்கனவே இந்தியத் தூதர் திரு. டிக்ஸிட்டிடம் கூறியிருந் தோம். இந்த விளைவுகள்பற்றி திரு. டிக்ஸிட்டும், ஜனாதிபதி ஜெய வாத்தனாவுக்கு எச்சரிக்கை விடுத்திருந்தார்.

எமது மக்களுக்கு தமது அரசியல் தலைவிதியை தாமே நிர்ண யித்துக் கொள்ளும் சனநாயக உரிமை இருக்கிறது. இந்த உரிமையை மீறும் வகையில், இந்தியா போன்ற ஒரு சனநாயக நாடு தனது சொந்த அபிலாசைகளை ஆயுதமுனையில் எமது மக்கள்மீது திணித்துவிட முயல்வது நியாயம் ஆகாது இந்த ஒப்பந்தம்பற்றி எமக்கு தனித்த ஒரு நிலைப்பாடு இருந்தபோதும், எமது மக்களின் நலன் பேணப்படு மானால் அதனை அமுல்படுத்துவதில் இந்தியாவுக்கு ஒத்துழைப்பு வழங்க நாம் முன்வந்தோம். அப்படியிருந்தும், தமிழ் மக்களின் உண் மையான பிரதிநிதிகளான எம்மை பூண்டோடு அழித்துவிடுவதற்கு நீங் கள் மேற்கொண்டுள்ள இராணுவ நடவடிக்கை நியாயமற்றது, அநீதி யானது, சட்டத்திற்கு மாறானது. ஆகவே, இந்த இராணுவ நடவடிக்கை களை நிறுத்தி சமாதானத்தையும் சகஜநிலையையும், இன ஐக்கியத்தையும் உருவாக்க வழிகோலும் வகையில் விடுதலைப் புலிகள் இயக்கத் துடன் பேச்சுவார்த்தைகளை நடத்துமாறு நான் உங்களை பணிவுடன் வேண்டிக்கொள்கிறேன்.

**வே. பிரபாகரன்**

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

# இந்திய இராணுவ அட்டூழியங்கள்: ஐ. நா. சபைக்கு தலைவர் கடிதம்



பொது நூலகம்
யாழ்ப்பாணம்.

**குறிப்பு:**

தமிழீழத்தில் இந்திய அமைதிப் படையினர் புரிந்த அட்டூழியங்களை விபரித்து தலைவர் பிரபாகரன் ஐ. நா. சபை செயலாளர் நாயகத்திற்கு 16.11.1987-ல் எழுதிய கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம். இந்திய இராணுவத் தின் கொடுமைகள் ஐ. நா சாசன மனித உரிமைப் பிர மாணங்களை மீறுவதாக குற்றம் சாட்டியுள்ள தலைவர், ஐ நா. சபை இந்திய அரசுமீது அழுத்தம் பிரயோகித்து சமாதானத்திற்கு வழிகோலுமாறு வேண்டுகோள் விடுத் துள்ளார்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்,
16-11-1987.

**செயலாளர் நாயகம்,**
ஐக்கிய நாடுகள் சபை,
நியூயோர்க்,
ஐக்கிய அமெரிக்கா.

அதி உத்தம செயலாளர் நாயகம் அவர்களே,

ஈழத் தமிழ் மக்களுக்கு எதிராக இந்தியாவின் அமைதி காக்கும் படைகள் இழைத்துவரும் மனிதாபிமானமற்ற கொடுமைகளையும் மனித உரிமை மீறல்களையும் சர்வதேச சமூகத்தின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறோம். இந்திய இராணுவத்தால் பெரும்தொகையில் அப்பாவிப் பொதுமக்கள் கொலைசெய்யப்பட்டுவருவதால் தமிழ்ப் பகுதிகளில் நிலைமை மிகவும் பாரதூரமான, ஆபத்தான கட்டத்தை அடைந்துள்ளது. இந்தப் பிரச்சினையை உலக சமுதாயம் தனது உடனடியான அவசர கவனத்திற்கு எடுத்துக்கொள்ளவேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இந்திய-இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டதை அடுத்து இந்திய அமைதி காக்கும் படையினர் தமிழ்ப் பகுதிகளுக்கு அனுப்பப்பட்டனர் என்பதையும், தமிழ்ப் போராளிகளுக்கும் சிறீலங்கா ஆயுதப் படையினருக்கும் மத்தியில் போர்நிறுத்தத்தைப் பேணுவதே இவர்களது முக்கிய கடப்பாடாக இருந்தது என்பதையும் நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஆரம்பத்தில் அமைதிப் படையை எமது மக்கள் மிகவும் நம்பிக்கையோடு வரவேற்றார்கள். தமது நீண்டகால துன்ப துயரங்களுக்கு ஒரு முடிவு வரும் என்றும், தமது தாயகத்தில் ஒரு நிரந்தரமான சமாதானம் ஏற்படுமெனவும் தமிழ் மக்கள் எதிர்பார்த்தார்கள். ஆனால் அவர்களது எதிர்பார்ப்பிற்கு மாறாக நிலைமை ஒரு புதிய திருப்பத்தை எடுத்தது. எமது விடுதலை இயக்கத்தை முற்று முழுதாக நசுக்கிவிடும் நோக்கத்தோடு இந்திய அரசாங்கம் எமக்கு எதிராக ஒரு முழு அளவிலான இராணுவ நடவடிக்கையை கட்டவிழ்த்துவிட்டிருக்கிறது.

அமைதியைப் பேணி, மக்களைப் பாதுகாக்கும் மனுவுடன் இந்திய இராணுவம் இங்கு வந்தது. ஆனால் இப்பொழுது இந்த இராணுவம் ஒரு ஆக்கிரமிப்புப் படையாக மாறி எமது மக்களுக்கு எதிராக தயவு தாட்சண்யமற்ற ஒரு கொடூர யுத்தத்தை ஏவிவிட்டிருக்கிறது.

பொதுசனக் குடியிருப்புகள்மீது கண்மூடித்தனமாக எறிகணைகளை ஏவியும், பீரங்கித் தாக்குதல்களை நடத்தியும், விமானக் குண்டுவீச்சுக் களை மேற்கொண்டும், கண்டபடி துப்பாக்கிப் பிரயோகங்களைச் செய் தும் பெருந்தொகையான மக்களை இந்திய இராணுவம் கொன்று குவித் துள்ளது. இதுவரைக்கும் ஆயிரத்திற்கும் மேற்பட்ட அப்பாவித் தமிழ் மக்கள் கொல்லப்பட்டுள்ளனர். 2000 திற்கு மேற்பட்டவர்கள் காய மடைந்துள்ளனர். 200க்கும் மேற்பட்ட தமிழ்ப் பெண்கள்மீது பாலியல் வன்முறை புரியப்பட்டுள்ளது. இத்தகைய சட்டவிரோதக் கொலைகள் ஒருபுறமிருக்க, யாழ்ப்பாணக் குடாநாட்டில் மின்சாரத்தையும், குடிநீர் விநியோகத்தையும் துண்டித்துவிட்ட இந்திய இராணுவம் மக்களைப் பாரிய கஷ்டங்களுக்கு ஆளாக்கியுள்ளது. யாழ்ப்பாணத்தின் பிரதான போதனா வைத்தியசாலையில் இப்பொழுது இந்தியப் படைகள் குடி புகுந்துள்ளன. இதனால் எமது மக்கள் வைத்திய வசதியின்றி அவதிப் படுகின்றனர். கடந்த ஒரு மாதத்திற்கு மேலாக இந்திய இராணுவ நட வடிக்கைகள் தொடர்வதாலும், ஊரடங்குச் சட்டம் காலவரையற்று நீடிக்கப்படுவதாலும் எமது மக்கள் தாங்கொணாத்துன்பங்களை எதிர் நோக்கியுள்ளனர். போக்குவரத்து தடைசெய்யப்பட்டுள்ளதால் உணவு விநியோகம் பாதிக்கப்பட்டு அத்தியாவசிய உணவுப் பொருட்களுக்கு பெரும் தட்டுப்பாடு நிலவுகிறது. மக்கள் பட்டினியின் விளிம்பிற்கு தள் ளப்பட்டுள்ளனர்.

எமது மக்கள் எதிர்கொள்ளும் அவலநிலைபற்றி நாம் இந்தியப் பிரதம மந்திரியின் கவனத்திற்கு கொண்டுவந்ததுடன் இந்த இராணுவ நடவடிக்கைகளையும் நிறுத்துமாறும் பல தடவைகள் வேண்டுகோள் விடுத்தோம். ஆனால் எமது கோரிக்கைகளுக்கு சார்பாக இந்திய அரசு இன்னும் பதிலளிக்காதது எமக்கு ஏமாற்றத்தையும் கவலையையும் கொடுக்கிறது.

இந்திய அரசாங்கமும் சிறீலங்கா அரசாங்கமும் கூட்டாகச் சேர்ந்து தமிழ்ப் பகுதிகளில் நடைபெறும் இராணுவ நடவடிக்கைகள் பற்றிய செய்திகளுக்கு முழுதாக இருட்டடிப்புச் செய்துள்ளன. இந்திய இராணுவம் தனது ஆயுத பலத்தைப் பிரயோகித்து உள்ளூர் பத்திரிகை களுக்கும் மற்றும் மக்கள் தொடர்பு நிறுவனங்களுக்கும் வாய்ப்பூட்டு இட்டுள்ளது. தனது இராணுவ அட்டூழியங்களை மூடிமறைப்பதற்காக இந்திய அரசு சர்வதேசப் பத்திரிகையாளர்களுக்கும் தடையை விதித்தி ருக்கிறது. இவ்விதம் மனித உரிமைகளை இந்திய அரசு மீறிவருவது டன் எமது இயக்கத்தை களங்கப்படுத்தும்வகையில் மிகவும் கீழ்த்தர மான பொய்ப் பிரச்சாரத்தையும் முடுக்கிவிட்டிருக்கிறது. தமிழ்ப் பகுதி களில் மிகவும் வியக்கத்தக்க முறையில் மனிதாபிமான செயல்களில் ஈடுபட்டு சமாதானத்தைப் பேணிவருவதாகவும் இந்திய அரசு பொய்ப் பிரச்சாரம் வாயிலாக உலக சமுதாயத்தையும் ஏமாற்றிவருகிறது.

இந்திய அமைதிப்படை புரிந்துள்ள பாரதூரமான அட்டூழியங்கள் சிலவற்றை நாம் ஐ.நா. சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறோம்.

1987 அக்டோபர் 21-ந் திகதியன்று, யாழ்ப்பாண போதனா வைத்தியசாலைக்குள் புகுந்து வெறியாட்டம் ஆடிய இந்திய இராணுவத்தினர் மூன்று வைத்தியர்களையும், கிட்டத்தட்ட 100 நோயாளர்களையும் சுட்டுக்கொன்றனர். தாதிமார் 10 பேர் மிருகத்தனமாக கற்பழிக்கப்பட்டு கொலையுண்டனர். வைத்திய மாணவர்கள் சிலரும் கைதாகி பின்னர் கொலைசெய்யப்பட்டனர்.

1987 அக்டோபர் 22-ந் திகதியன்று அராலித் துறையில் குவிந்து நின்ற பயணிகள்மீது இந்திய ஹெலிகாப்டர் ஒன்று ஏவுகணைத் தாக்குதலை நடத்தியதால் 35 பயணிகள் மிகவும் கொடூரமாக கொல்லப்பட்டனர்.

1987 அக்டோபர் 24-ந் திகதியன்று கொக்குவில் இந்துக் கல்லூரியில் தஞ்சம் அடைந்திருந்த அகதிகள்மீது இந்திய இராணுவம் பீரங்கித் தாக்குதலை நடத்தியதில் 40 பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன் 80 பேர் காயமடைந்தனர். அன்றைய தினம் சங்குப்பிட்டி என்னுமிடத்தில் 13 இந்திய சிப்பாய்கள் ஒரு தாயின் முன்பாக, அவரது புதல்விகள் இருவரை மிருகத்தனமாகக் கற்பழித்து பின்பு அவர்களைக் கொலைசெய்தனர்.

1987 அக்டோபர் 26-ந் திகதி, அளவெட்டியில் ஒரு இந்து ஆச்சிரமம்மீது இந்திய இராணுவத்தினர் நடத்திய ஹெலிகாப்டர் தாக்குதலில் 14 பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன் 12 பேர் காயமடைந்தனர். அன்றைய தினம் பொன்னாலை என்னுமிடத்தில் நடைபெற்ற இன்னொரு வான் தாக்குதலில் 5 பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன் 15 பேர் காயமடைந்தனர்.

1987 அக்டோபர் 27-ந் திகதியன்று சாவகச்சேரி சந்தையில் பொதுமக்கள் குழுமி நின்ற வேளையில் இந்திய ஹெலிகாப்டர் ஒன்று ரொக்கட்டுகளை ஏவித் தாக்குதல்நடத்திய கோர சம்பவத்தில் 68 அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன் 75 பேர் படுகாயமடைந்தனர்.

1987,அக்டோபர் 28-ந் திகதி, இந்து மகளிர் கல்லூரியில் அமைந்திருந்த அகதிமுகாம்மீது இந்திய இராணுவத்தினர் நடத்திய பீரங்கித் தாக்குதலில் 3 குழந்தைகள் கொல்லப்பட்டதுடன் 8 பொதுமக்கள் படுகாயமடைந்தனர்.

1987 நவம்பர் 3–ந் திகதியன்று இந்திய இராணுவம் பொன்னாலைக் கிராமம்மீது தாக்குதலை நடத்தியது. இத் தாக்குதலின்போது அங்கிருந்த கிருஷ்ணர் கோவில் பெரும் சேதத்திற்கு இலக்காகியது. கோவிலில் தஞ்சம்பெற்றிருந்த நூற்றுக்கணக்கான அகதிகள் அங்கிருந்து பலவந்தமாக விரட்டியடிக்கப்பட்டனர்.

1987 நவம்பர் 4–ந் திகதியன்று இந்திய இராணுவத்தினரால் மேற்கொள்ளப்பட்ட அகோர விமானத் தாக்குதலில் மூளாய் வைத்தியசாலையும் அதன் சுற்றுப்புறங்களும் பலத்த சேதத்திற்கு இலக்காகின.

1987 நவம்பர் 5–ந் திகதியன்று இந்திய இராணுவம் மேற்கொண்ட பீரங்கித் தாக்குதலில் மூளாய் வைத்தியசாலை பலத்த சேதத்திற்கு இலக்காகியது. 5 பொதுமக்கள் இத் தாக்குதலில் கொல்லப்பட்டனர். இப்பகுதியில் காயமடைந்தோர் வைத்திய வசதிகள் எதுவுமின்றி அவதிக்கு இலக்காகியுள்ளனர்.

1987 நவம்பர் 11–ந் திகதியன்று, நெடுங்கேணியில் குடியிருப்புகள்மீது இந்திய ஹெலிகாப்டர்கள் நடத்திய ஏவுகணைத் தாக்குதலில் 15 பொதுமக்கள் கொல்லப்பட்டதுடன், 25 பேர் காயமடைந்தனர். இப்பகுதியிலிருந்த வைத்தியசாலை ஒன்றும் கடும் சேதத்திற்கு இலக்காகியதுடன் வைத்தியசாலையிலிருந்த நோயாளர் சிலரும் காயமடைந்தனர்.

இப்படியாக இந்திய இராணுவம் எமது மக்கள்மீது மிகவும் கொடுமையான அட்டூழியங்களைப் புரிந்துவருகிறது. அப்பாவிப் பொதுமக்கள்மீது இத்தகைய அட்டூழியங்கள் இழைக்கப்படுவதை தடுத்து நிறுத்துவது உலக சமூகத்தின் மனிதாபிமான, தார்மீக கடப்பாடாகும். இந்திய அரசின் இத்தகைய நடவடிக்கைகள் ஐ. நா. சாசனத்து மனித உரிமைப் பிரமாணங்களை மீறுவதாக அமைந்துள்ளன என்பதையும் நாம் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

இந்த சூழ்நிலையில், இராணுவத் தாக்குதல் நடவடிக்கைகளை கைவிட்டு சமாதான வழியில் பேச்சுக்கள் மூலம் இப் பிரச்சினைக்கு தீர்வுகாண இந்திய அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுமாறு நாம் உங்களைப் பணிவுடன் கோருகிறோம்.

**வே. பிரபாகரன்**
*தலைவர்,*
*தமிழீழ விடுதலைப் புலிகள்.*

# இந்திய - புலிகள் யுத்தம்: தலைவர் அளித்த விளக்கம்



குறிப்பு:

இந்திய அரசுக்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் எழுந்த முரண்பாடுகள் பற்றியும், யுத்தத்தின் பின்னணி, காரணிகள் பற்றியும் இந்திய அரசு இழைத்த தவறுகள் பற்றியும் தெளிவாக விளக்கி தலைவர் பிரபாகரன் பாரத மக்களுக்கும் சர்வதேச சமூகத்திற்கும் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம். 18-11-1987 அன்று வெளியிடப்பட்ட இந்த அறிக்கை எமது சர்வதேச கிளைகள் மூலம் உலகெங்கும் விநியோகிக்கப்பட்டது.

பொதுசன நூலகம் யாழ்ப்பாணம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
18-11-1987

தமிழர் தாயகத்தில் அமைதியைப் பேணவும், எமது மக்களின் உயிரையும் உடமையையும் பாதுகாக்கவும், எமது போராளிகளுக்கும் சிங்கள ஆயுதப்படைகளுக்கும் மத்தியில் போர் நிறுத்தத்தை நிலை நாட்டவும் இங்கு வந்த இந்திய அமைதிகாக்கும் படையினர் இப்பொழுது தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு எதிராக முழு அளவிலான ஒரு யுத்தத்தில் ஈடுபட்டிருப்பது துரதிர்ஷ்டவசமானது. இதனை ஒரு புதிரான முரண்பாடு என வர்ணிக்கலாம்.

இந்த யுத்தமானது மிகவும் கோரமான விளைவுகளை ஏற்படுத்தியிருக்கிறது. இந்த யுத்தத்தின் விளைவாக பெருந் தொகையில் அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டுள்ளனர். எமது மக்களின் சமூக, பொருளாதார வாழ்வு மிகவும் மோசமாக சீர்குலைந்துள்ளது. எமது மக்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு ஆளாகியுள்ளனர். மிருகத்தனமான வன்முறைவடிவில் ஒரு முழுமையான யுத்தத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டதால், இந்திய அமைதிப்படையானது சமாதானத்தின் கருவி என்ற தகமையை இழந்து, ஒரு அடக்குமுறை ஆக்கிரமிப்பு இராணுவமாக மாறியுள்ளது. இந்திய இராணுவத் தலையீட்டால் தமிழர் தாயகத்தில் சமாதானமும் சகஜநிலையும் ஏற்படும் வாய்ப்புகள் அற்றுப் போய்விட்டன. மக்களின் நம்பிக்கைகள் எல்லாம் இடிந்துபோய்விட்டன.

இந்திய அரசு, எமக்கு எதிராக ஒரு கொடிய போரைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு, அதை நியாயப்படுத்துவதற்காக ஒரு பிரச்சார யுத்தத்தையும் கட்டவிழ்த்து விட்டிருக்கிறது. இந்தியாவிலும், சர்வதேச உலகிலும் எமது இயக்கத்தை களங்கப் படுத்தும் நோக்கில் மிகவும் விசமத்தனமான, உண்மைக்கு மாறான பிரச்சாரம் முடுக்கிவிடப்பட்டுள்ளது. இந்தச் சூழ்நிலையில், தமிழீழத்தில் நிலவும் உண்மை நிலைமையையும், எமது இயக்கத்தின் நிலைப்பாட்டையும் எடுத்துவிளக்க நாம் கடமைப் பட்டுள்ளோம்.

இந்திய - இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்திடப்படுவதற்கு முந்திய தினம் நாம் இந்தியப் பிரதமரை சந்தித்தபோது ஒப்பந்தத்திலுள்ள குறைபாடுகளை எடுத்துவிளக்கினோம். ஆயினும், இந்த ஒப்பந்தம் தமிழீழ மக்களின் நலன்களைப் பேணும் பட்சத்தில் அதன் அமுலாக்கத்திற்கு ஒத்துழைப்பு வழங்குவதாகவும் கூறினோம். இந்தியப்பிரதமர் எமக்கு அளித்த வாக்குறுதிகள், உத்தரவாதங்களின் அடிப்படையில் எமது ஆயுதங்களையும் கையளிப்பதற்கு நாம் இணங்கினோம். தென்னாசியப் பிராந்தியத்தில் இந்தியாவின் முக்கியத்துவத்தை அங்கீகரித்தும் இந்தியாவின் பூகோள - அரசியல் நிர்ப்பந்தங்களை கருத்தில்கொண்டும் இந்தியாவுடன் முரண்பட நாம் விரும்பவில்லை. அதேவேளை எமது மக்களின் நலன்களும், அரசியல் அபிலாசைகளும் எந்தவகையிலும் பாதிக்கப்படாதவாறு பார்த்துக்கொள்வதும் எமது கடப்பாடாகும். எனவேதான், இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் தெரிவிக்கப்பட்ட மாகாண சபைத் திட்டம் தமிழ்மக்களின் அபிலாசைகளைப் பூர்த்திசெய்யத் தவறிவிட்டது என நாம் கருத்துத்தெரிவித்தோம். எமது நிலைப்பாட்டை இந்திய அரசு புரிந்திருக்கும் எனவும் நாம் நம்பினோம்.

## இந்திய - புலிகள் உறவில் எழுந்த முரண்பாடு

தமிழ்ப் பிரதேசத்தில் இடைக்கால நிர்வாக அரசு ஒன்று அமைக்கப்படும் என்றும் அதில் விடுதலைப் புலிகளுக்கு பிரதான பங்கு அளிக்கப்படுமென்றும் பார

தப் பிரதமர் எமக்கு வாக்குறுதி அளித்தார். இந்த வாக்குறுதியை செயல்படுத்துவதில் தாமதம் ஏற்பட்டது. இதற்கிடையில் சிறீலங்கா அரசாங்கம் முல்லைத்தீவு, திருக்கோணமலை மாவட்டங்களில் ஒரு பாரிய சிங்களக் குடியேற்றத் திட்டத்தை அவசர அவசரமாக அமுல்படுத்தியது. அத்துடன் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் சிங்கள அரச நிர்வாகத்தை பலப்படுத்தும் நோக்கில் காவல்துறைப் பணிமனைகளை நிறுவியது. சிறீலங்கா அரசின் இந்த ஆபத்தான நகர்வுகள் குறித்து நாம் இந்திய அரசிடம் கடும் ஆட்சேபனையை தெரிவித்தபோதும் எவ்வித நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. இது இவ்விதமிருக்க, எமக்கு அதிர்ச்சியைத் தந்த இன்னொரு சம்பவமும் நிகழ்ந்தது. தமிழ்நாட்டில் பயிற்சி பெற்ற தமிழ் ஆயுதக் குழுக்கள் இங்கு வந்து, இந்திய அமைதிப் படையினர் ஆதரவுடன் முகாம்களை அமைத்து, எமது போராளிகளுக்கும், பொதுமக்களுக்கும் எதிராக அட்டூழியங்கள் புரியத்தொடங்கின. அமைதியான நிலைமை உருவாகி, நாம் ஆயுதங்களை கையளித்துக்கொண்டிருந்த நல்லெண்ண சூழ்நிலையில் இந்தியப் புலனாய்வுத் துறையினர் (றோ) தமிழ்க் குழுக்களுக்கு ஆயுதமளித்து அவர்களை இங்கு அழைத்துவந்த விவகாரம் எமக்கு அதிர்ச்சியையும், கவலையையும் கொடுத்தது. இந்தியாவின் கொள்கையில் எமக்கு நம்பிக்கையீனத்தையும், ஏமாற்றத்தையும் கொடுத்த நிகழ்வு இதுவாகும். இவ்விதமாக இந்திய, இலங்கை அரசுகள் கூட்டாக மேற்கொண்ட சூழ்ச்சிகர நடவடிக்கைகளை ஆட்சேபிக்கும் முகமாகவே திலீபன் சாகும் வரை உண்ணாவிரதத்தை மேற்கொண்டான். திலீபன் தலைமையில் ஆரம்பிக்கப்பட்ட இந்த சாத்வீகப் போராட்டம் மக்களின் பங்களிப்புடன் ஒரு தேசிய எழுச்சிப் போராட்டமாக விஸ்வரூபம் பெற்றது. உண்ணாவிரதம் ஆரம்பிக்கப்பட்ட ஒன்பதாம் நாள், திலீபன் சாவின் விளிம்பை சமீபித்துச்கொண்டிருந்த வேளையில், எமது கோரிக்கைகளை கேட்டறிவதற்காக இந்தியத் தூதர் திரு. டிக்ஸிட் யாழ்ப்பாணம் வந்தார். திரு. டிக்ஸிட் எமக்களித்த வாக்குறுதிகள் எமது கோரிக்கைகள் எதையுமே நிறைவேற்றுவதாக அமையவில்லை. ஆகவே, உண்ணாவிரதம் தொடர்ந்தது. இறுதியில் திலீபன் வீரமரணத்தைத் தழுவிக்கொண்டான். திலீபனின் மரணத்திற்குப் பின்னரே திரு. டிக்ஸிட் இடைக்கால நிர்வாகம் சம்பந்தமாக சில யோசனைகளை முன்வைத்தார். இந்திய அரசு காலம்தாமதிக்காது உடன் நடவடிக்கைகளை எடுத்திருந்தால் திலீபனின் உயிரைக் காப்பாற்றியிருக்கலாம். திலீபனின் சாவு எமது இயக்கத்திற்கு மட்டுமன்றி எமது மக்களுக்கும் ஒரு பேரிழப்பாகும். இந்த துயர நிகழ்வானது எமது இயக்கத்திற்கும் இந்தியாவுக்கும் மத்தியில் முரண்பாட்டை மேலும் கூர்மைப்படுத்தியது.

## இந்தியா இழைத்த மாபெரும் தவறு

இதைத் தொடர்ந்து, எமது பிராந்திய தளபதிகள் இருவரும், மற்றும் பத்துப் போராளிகளும் இந்திய - இலங்கை கூட்டுச் சதியால் மரணத்தை தழுவிக்கொள்ள நிர்ப்பந்திக்கப்பட்ட சம்பவமானது இந்திய-புலிகள் உறவில் என்றுமில்லாத ஒரு பெரிய உடைவை ஏற்படுத்தியது. இவர்கள் சிறீலங்கா கடற்படையால் கைது செய்யப்பட்டு பின்னர் பலாலியில் இந்திய அமைதிப்படையினரின் காவலில் தடுத்து வைக்கப்பட்டனர். சிறீலங்கா அரசாங்கம் இவர்களை கொழும்பிற்கு கொண்டு சென்று விசாரணைக்கு உட்படுத்த விரும்பியது. ஆயினும் இவர்களை விடுதலை செய்வதாக இந்தியா எமக்கு உறுதியளித்தது, கொழும்பிற்கு சென்று, சித்திரவதைக்கு ஆளாகி, எதிரியின் கையால் கொல்லப்படுவதைவிட தாம் ‘சைனைட்’ அருந்தி சாவதற்கு தயாராக இருப்பதாக கைதாகிய எமது போராளிகள் இந்திய - சிறீலங்கா அரசுகளுக்கு முன்னெச்சரிக்கை விடுத்திருந்தனர். பொதுமன்னிப்பு வழங்கியிருந்த எமது போராளிகளை கைதுசெய்த சம்பவமானது இந்திய - இலங்கை ஒப்பந்த விதிகளுக்கு முரணானதென நாம் இந்திய அரசிடம் சுட்டிக்காட்டினோம். சிறீலங்கா ஆயுதப் படைகளுக்கும், விடுதலைப் புலி வீரர்களுக்கும் மத்தியில் போர்நிறுத்தத்

13980.

தைப் பேணும் முக்கிய பணியை இந்திய அமைதிப் படையினர் மேற்கொண்டிருப்ப தால் எமது போராளிகளின் உயிரைப் பாது காப்பது இந்தியாவின் கடப்பாடு என் பதையும் நாம் வலியுறுத்தினோம். எமது போராளிகள் கொல்லப்பட்டால், அதன் விளைவாக பெரும் வன்முறைக் கலவரம் வெடிப்பதும் தவிர்க்கமுடியாததென நாம் இந்திய அரசுக்கு எச்சரிக்கையும் விடுத்தி ருந்தோம்.

இனப்பிரச்சினைக்கு தீர்வுகாணும் நோக் கில், ஒரு முக்கிய ஒப்பந்தம் செய்து கொள் ளப்பட்ட சூழ்நிலையில், நாம் எமது தள பதிகளை விடுதலை செய்யுமாறு இந்தியா விடமும்,சிறீலங்காவிடமும் விடுத்த கோரிக் கையானது ஒரு சிறிய சலுகையேயன்றி வேறொன்றுமல்ல. ஆனால் ஜெயவர்த் தனா இவ்விவகாரத்தில் விட்டுக்கொடாமல் மிகவும் பிடிவாதமாக இருந்தார். சிங்கள அரசின் பிடிவாதம் எத்தகைய பாரதூர மான விளைவுகளை உண்டுபண்ணலாம் என்பது இந்தியத்தூதர் டிக்ஸிட்டிற்கு தெரி யாதது அல்ல. அப்படியிருந்தும் இந்தக் கோரமான நிகழ்வுக்கு இவர்கள் இடமளித் தனர். எமது தேசிய போராட்டத்தின் தலைசிறந்த வீரர்கள் உயிரிழந்த நிகழ் வானது, தமிழ்த் தேசத்தையே உலுப்பிவிட் டது. திருக்கோணமலை மாவட்டத் தளபதி புலேந்திரனும், முன்னாள் மட்டக்களப்பு மாவட்டத் தளபதி குமரப்பாவும் மக்களின் அன்பையும் மதிப்பையும் பெற்ற தலை வர்கள். அவர்களது அவலமான சாவானது பெரும் வன்முறைப் புயலைத்தோற்றுவித் தது. இந்தக் கலவரங்களின்போது பல சிங்களப்பொதுமக்கள் கொல்லப்பட்டனர் என்பது உண்மை. இந்த வன்முறை எழுச் சிக்கு புலிகளே காரணகர்த்தாக்கள் என சிறீலங்கா அரசாங்கம் எம்மீது குற்றம் சாட்டியது. சிங்கள அரசுடன் சேர்ந்து இந்தியாவும் எம் மீது பழி சுமத்தியது. இதனையடுத்து இந்திய சிறீலங்கா உயர் மட்ட மந்திராலோசனை கொழும்பில் இடம்பெற்றது. விடுதலைப்புலிகள் இயக் கத்திற்கு எதிராக யுத்தப் பிரகடனம் செய் வதென்றும், மற்றும் கடும் நடவடிக்கை களை மேற்கொள்வதென்றும் தீர்மானிக் கப்பட்டது.

## ஜே. ஆரின் பொறிக்குள் சிக்கிய ராஜீவ்

விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு எதிராக இந்தியாவை ஒரு யுத்தத்தில் ஈடுபடச்செய்தமை ஜெயவர்த்தனா ஈட்டிய மாபெரும் ராஜதந்திர சாதனை என்று தான் சொல்ல வேண்டும். தமிழரின் சுதந் திர இயக்கத்திற்கு ஆயுத உதவி வழங்கிய இந்தியா, அந்த சுதந்திர இயக்கத்தையே ஒழித்துக்கட்ட முன்வந்தது. இதுவரை காலமும் சிங்கள அரசு செய்துவந்த அழிப்பு வேலைகளை தான் பொறுப்பேற்று நடத்த இந்தியா முன்வந்தது. ஒரு வாரத் திற்கு முன்னர்தான், இந்திய, சிறீலங்கா அரசுகள் விடுதலைப் புலிகளை தமிழ் மக் களின் ஏகபோக பிரதிநிதிகளாக ஏற்று, அவர்களிடம் இடைக்கால அரசை ஒப்ப டைக்க தீர்மானித்தன. ஆயினும், இப் பொழுது புலிகளைத் தடைசெய்து, அவர் களுக்கு அளித்த பொதுமன்னிப்பையும் வாபஸ்பெற இரு அரசுகளும் முடிவெடுத் தன. இதுவரையும் சமாதானத் தூதுவன், மக்களின் பாதுகாவலன் என்ற பொறுப்பை ஏற்றிருந்த இந்திய அமைதிப் படை திடீரென ஒரு யுத்தத்தின் பயங்கர ஆயுத மாக மாற்றப்பட்டது. சிங்கள ஆளும் வர்க் கத்தின் ராஜதந்திரப் பொறிக்குள் சிக்கிக் கொண்ட இந்தியா, இறுதியில் தமிழ் மக் களுக்கு எதிராக தனது ஆயுதத்தை நீட் டியது.

அவமானத்துடன் சரணடைந்து சாகா மல், தற்பாதுகாப்பிற்காக போராடுவ தைத் தவிர விடுதலைப் புலிகளுக்கு வேறு வழியிருக்கவில்லை.இந்தியாவுடன் போர்புரி யும் சூழ்நிலை தோன்றுமென நாம் கன வில்கூட எண்ணவில்லை. இந்திய இராணு வம்மீது நாம் அன்பும், மதிப்பும் வைத்திருந் தோம். நாம் அவர்களுடன் சண்டையிட விரும்பவில்லை. ஆனால் இந்தியத் தலைவர் கள் எம்மீது ஒரு யுத்தத்தை திணித்துவிட் டார்கள். செத்து மடிவதா, அன்றிப் போராடி வாழ்வதா, அவமானப்பட்டு அழிவதா அன்றி கௌரவமாகச்சீவிப்பதா என்ற வகையில் ஒரு முடிவை எடுக்க நாம் நிர்ப்பந்திக்கப்பட்டோம். இறுதியில்

போராடுவதென நாம் முடிவெடுத்தோம். எனினும் எமக்கு எதிராகத் தொடுக்கப்பட்ட இந்த அநீதியான யுத்தத்தை நிறுத்திவிடுமாறு நாம் இந்தியாவை பலதடவை கேட்டுக்கொண்டோம்.

## சனநாயகமும் சர்வாதிகாரமும்

நீண்டகாலமாக, சிங்கள இராணுவ ஒடுக்குமுறை காரணமாக தாங்கொணாத் துன்பத்தை சுமந்துவந்த ஒரு சமூகம்மீது, ஈவிரக்கமற்ற முறையில், மிருகத்தனமாக இந்திய இராணுவம் புரிந்த கொடுமைகள் எமது மக்களை பெரும் அதிர்ச்சிக்கு ஆளாக்கியிருக்கிறது. இந்த யுத்தமானது விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கு எதிரானதென வரையறுக்க முடியாது. பரந்துபட்ட வெகுசனம் முழுவதுமே இந்த யுத்த பயங்கரத்திற்கு ஆளாக்கப்பட்டுள்ளது. 1987, அக்டோபர் 10ந் திகதி, யுத்தம் ஆரம்பமாகிய தினத்தன்று இந்திய இராணுவத்தினர் முரசொலி, ஈழமுரசு ஆகிய தினசரிப் பத்திரிகைகளின் செயலகத்தினுள் புகுந்து, பத்திரிகை அச்சியந்திரங்களை வெடிகுண்டுவைத்து தகர்த்தது மாத்திரமின்றி, அங்கிருந்த பத்திரிகையாளர்களையும், தொழிலாளர்களையும் கைதுசெய்தனர். அன்றையதினம் விடுதலைப் புலிகளின் தொலைக்காட்சி நிறுவனமான நிதர்சனமும் இந்திய இராணுவத்தினால் மூடப்பட்டது. தமிழ் மக்களின் குரலாக இயங்கிவந்த இந்த மக்கள் தொடர்பு சாதனங்கள் நசுக்கப்பட்ட இந்த நிகழ்வானது பத்திரிகைச் சுதந்திரத்தையும் கருத்துச் சுதந்திரத்தையும் மீறிய பாரதூரமான செயலாகும். சனநாயக சுதந்திரத்தின் பாதுகாவலன் எனக்கூறிக்கொள்ளும் பாரதநாடு இத்தகைய சர்வாதிகார நடவடிக்கையை மேற்கொண்டமை எமது மக்களை பெரும் திகைப்பில் ஆழ்த்திவிட்டது.

இந்திய அமைதிப் படையானது தமிழரின் உயிரையும் உடமையையும் துச்சமாக மதித்து, மனிதாபிமானமற்ற முறையில் தனது இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டது. கண்மூடித்தனமான ஆகாயத் தாக்குதல்கள், மோட்டார், பீரங்கி குண்டு வீச்சுக்கள் பெருந்தொகையில் உயிரழிவுக்கும். உடமை நாசத்திற்கும் காரணமாக அமைந்தன. பல இடங்களில், கிராமங்களுக்குள் புகுந்த இந்திய இராணுவம் ஈவிரக்கமின்றி அப்பாவிப் பொதுமக்களைச் சுட்டுக்கொன்றது. தமிழ்ப் பெண்கள் மிருகத்தனமாக பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்பட்டனர். தமிழரின் வீடுகளும், கடைகளும் சூறையாடப்பட்டன. வைத்தியசாலைகள், பாடசாலைகள், கோவில்கள் குண்டுத்தாக்குதல்களுக்கு இலக்காகின. யாழ்ப்பாண போதனா வைத்தியசாலைக்குள் அத்துமீறிப் பிரவேசித்த இந்திய இராணுவம் பெருந்தொகையான நோயாளர்களைக் கொன்று குவித்தது. இந்திய இராணுவத்தின் யுத்த நடவடிக்கைகளால் இதுவரை பல நூற்றுக்கணக்கான அப்பாவிப் பொதுமக்கள் படுகொலைசெய்யப்பட்டுள்ளனர். பல நூற்றுக்கணக்கானோர் படுகாயமடைந்துள்ளனர். இவர்களில் பலர் வைத்திய வசதியின்றி மடிந்துள்ளனர்.

## திட்டமிட்ட பொய்ப் பிரச்சாரம்

அமைதிப் படையினரின் இராணுவ அட்டூழியங்கள் சம்பந்தமாக நாம் முன்வைத்த குற்றச்சாட்டுகளை எல்லாம் இந்தியஅரசு நிராகரித்துவிட்டது. ஆயினும், பாதிக்கப்பட்ட இடங்களுக்கு இந்திய, சர்வதேசப் பத்திரிகையாளர்கள் விஜயம் செய்வதற்கும் தடைவிதித்துள்ளது. தொலைபேசித் தொடர்புகள் துண்டிக்கப்பட்டுள்ளதால் செய்திகள் முற்றாக இருட்டடிப்பு செய்யப்படுகிறது. ஆனால், அதே சமயம் இந்திய அரசாங்கம் தனது கட்டுப்பாட்டின்கீழுள்ள மக்கள் தொடர்பு சாதனங்களைப் பயன்படுத்தி, உண்மைக்கு மாறான செய்திகளை வெளியிட்டு உலகத்தை ஏமாற்றிவருகிறது. எமது இயக்கத்தை களங்கப்படுத்தும் நோக்கில் திட்டமிட்ட பொய்ப் பிரச்சாரம் மேற்கொள்ளப்படுகிறது. இங்கு நடைபெறும் மனித உரிமை மீறல்களை விசாரணைசெய்யும் பொருட்டு சர்வதேச மன்னிப்புச் சபை அல்லது சர்வதேச ஜூரர்கள் ஆணைக்குழு

ஆகியவற்றின் பார்வையாளர்களை அனுப்புமாறு நாம் விடுத்த வேண்டுகோளையும் இந்திய அரசு நிராகரித்துள்ளது.

இந்த அர்த்தமற்ற யுத்தத்தினால் ஏற்படும் மனித அவலங்களை ஒரு முடிவுக்கு கொண்டுவரவேண்டும் என்ற நோக்கில் ஒரு போர்நிறுத்தம் பிரகடனம்செய்து பேச்சுக்கள்மூலம் சமாதானமும் சகஜநிலையும் உருவாக்கவேண்டும் என நாம் இந்திய அரசுக்கு வேண்டுகோள் விடுத்தோம். ஆனால் இந்திய அரசோ ஏற்றுக்கொள்ள முடியாத நிபந்தனைகளை விதித்துவருகிறது. நாம் ஆயுதங்களைக் கையளித்து சரணடையவேண்டும் என்றும், இந்திய - இலங்கை ஒப்பந்தத்தை நிபந்தனையின்றி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்தி வருகிறது.

## கருத்துச் சுதந்திரம் எமக்கு இல்லையா?

இராணுவத் தீர்வு மூலம் அரசியல் பிரச்சினைக்கு தீர்வுகாணமுடியாதென்றும் பேச்சுவார்த்தை மூலமே பிணக்குகளுக்கு தீர்வுகாணவேண்டுமென்றும் நீண்ட காலமாக சிறீலங்கா அரசிற்கு ஆலோசனை வழங்கிவந்த இந்திய அரசு, தனது நிலைப்பாட்டை மாற்றி, சிங்கள அரசு கடைப்பிடித்துவந்த இராணுவப் பயங்கரவாத அணுகுமுறையைக் கையாளுவது எமக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. இந்தியாவின் இந்த அணுகுமுறை அநீதியானது மட்டுமன்றி சனநாயகத்திற்கு விரோதமானதுமாகும். தமிழீழ மக்களை பிரதிநிதித்துவப்படுத்தும் அரசியல் இயக்கம் என்ற ரீதியில் எமது கருத்துக்களை வெளியிடும் சுதந்திரம் எமக்குண்டு. இந்த வகையில்தான் இந்திய - இலங்கை ஒப்பந்தம் சம்பந்தமாக எமது கருத்துக்களை நாம் வெளியிட்டோம். இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் தெரிவிக்கப்பட்ட யோசனைகளில் நிறைய குறைபாடுகள் உள்ளனவென்றும், இத் தீர்வுத்திட்டம் தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்திசெய்யத் தவறிவிட்டது என்றும் எமது நிலைப்பாட்டை எடுத்துக் கூறினோம். ஆயினும், இந்த ஒப்பந்தம் எமது மக்களின் நலன்களையும் உரிமைகளையும் பேணுமானால் அதன் அமுலாக்கத்திற்கு ஒத்துழைப்பதாகவும் நாம் இந்திய அரசுக்கு வாக்குறுதி அளித்தோம். ஆகையால் ஒரு சனநாயக நாடான இந்தியா, இந்த ஒப்பந்தத்தை நிபந்தனையின்றி ஏற்றுக்கொள்ளுமாறு ஆயுத முனையில் எம்மை நிர்ப்பந்திப்பது நியாயமானதல்ல. எனவே, இந்த விவகாரத்தில் இந்திய மக்கள் எமது நிலைப்பாட்டை புரிந்துகொள்வார்கள் என நம்புகிறோம்.

## ஆயுதங்கள் அல்ல பாதுகாப்பே முக்கியம்

எமது ஆயுதங்களை ஒப்படைப்போம் என இந்தியாவுக்கு நாம் வாக்குறுதி அளித்தோம். அதன் பிரகாரம், முதன்முதலாக பெருந்தொகையில் ஆயுதங்களை கையளித்த அமைப்பு எமது இயக்கமாகும். ஒப்பந்த அமுலுக்கு ஒத்துழைக்கும் ஒரு நல்லெண்ண முயற்சியாகவே நாம் ஆயுதங்களைக் கையளித்தோம். இந்திய தூதராலயம் வகுத்த கால ஒழுங்குத் திட்டத்தின்படி மிகுதியான ஆயுதங்களையும் கையளிப்பதற்கு தீர்மானித்திருந்தோம். ஆயுதக் கையளிப்பு விவகாரத்தில் நாம் இந்தியாவுடன் முழுமையாக ஒத்துழைக்க விரும்பினோம். தமிழரின் இனப் பிரச்சினை சமரசமான முறையில் தீர்வு காணப்பட்டு, எமது மக்களின் பாதுகாப்பிற்கு தகுந்த உத்தரவாதங்கள் அளிக்கப்படும்பட்சத்தில் நாம் ஆயுதங்கள் வைத்திருப்பதில் அர்த்தமுமில்லை, அவசியமுமில்லை. உண்மையில், ஆயுதங்கள் பிரச்சினைக்குரிய விசயமல்ல. எமது மக்களின் உயிருக்கும், அவர்களின் நலனுக்கும் பாதுகாப்பு தேடிக்கொள்வதுதான் உண்மையான பிரச்சினை. ஆயுதம் சம்பந்தமாகவும் ஏனைய விவகாரங்கள் குறித்தும் இந்தியா எம்முடன் பேசிப்பிணக்குகளை தீர்த்துக்கொள்ளலாம்.

எம்வசம் போர்க் கைதிகளாக இருந்த 18 இந்திய இராணுவ வீரர்களையும், எவ்வித நிபந்தனையுமின்றி பத்திரிகையாளர் முன்னிலையில் வைத்து விடுதலை செய்தோம். மனிதாபிமானத்தின் அடிப்படையிலும், இந்திய மக்களுக்கு எமது நல்லெண்ணத்தை தெரிவிக்கும் முகமாகவும் நாம் இந்த நடவடிக்கையை எடுத்தோம். சமாதானத்தை விரும்பும் எமது நல்லெண்ண சமிக்ஞையைப் புரிந்துகொண்டு இராணுவ நடவடிக்கைகளை நிறுத்தி சமரசப் பேச்சுக்களுக்கான கதவுகளை இந்திய அரசு திறந்துவிடுமென நாம் நம்புகிறோம்.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# ஐ. நா. மனித உரிமைக்குழுவை தமிழீழம் அனுப்பி வையுங்கள்

குறிப்பு:

இந்திய அமைதிப் படையினர் புரிந்துவரும் அட்டூழியங்கள், மனித உரிமை மீறல்களை விசாரணைசெய்வதற்கு ஐ. நா. மனித உரிமைக்குழு ஒன்றை தமிழீழம் அனுப்பிவைக்குமாறு தலைவர் பிரபாகரன் ஐ. நா. சபை செயலாளர்நாயகத்திடம் வேண்டுகோள் விடுத்தார். 27.11.1987-ல் ஐ. நா. செயலாளருக்கு அனுப்பிவைக்கப் பட்டஇரண்டாவது கடிதத்தில் தலைவரால் இந்த வேண்டுகோள் விடுக்கப்பட்டது. தமிழ்ப் பகுதிகளில் இந்திய இராணுவம் தொடர்ந்து இழைத்துவரும் அட்டூழியங்களையும் இக் கடிதத்தில் தலைவர் எடுத்து விளக்குகிறார்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்,
27. நவ. 1987.

**செயலாளர் நாயகம்,**
ஐக்கிய நாடுகள் சபை,
நியூயோர்க்.

அதிஉத்தம செயலாளர் நாயகம் அவர்களுக்கு,

இந்திய அமைதிப் படையின் அட்டூழியங்கள் சம்பந்தமாக நாம் சமர்ப்பித்த குற்றச்சாட்டுகளை ஐ. நா. மனித உரிமை ஆணைக் குழுவிற்கு அனுப்பிவைத்துள்ளதாக நீங்கள் எழுதிய பதில் கடிதத்திற்கு நன்றி கூறுகிறேன்.

தமிழர் தாயகமான வடக்கு-கிழக்கு மாகாணங்களில் இந்திய அமைதிப் படைகளின் அட்டூழியங்கள் மிகவும் தீவிரமாகத் தொடர்கிறது. சிங்கள தமிழ் மக்களின் உள்நாட்டு விவகாரத்தில் மத்தியஸ்துவம் என்ற போர்வையில் தலையிட்ட இந்திய அரசாங்கம் எமது மண்ணில் தனது ஆக்கிரமிப்பு பாதங்களைப் பதித்துவருகிறது. இந்திய நிர்வாக அதிகாரிகள் இங்கு வந்து சிவில் நிர்வாகத்தைப் பொறுப்பேற்று வருகிறார்கள். இந்திய காவல்துறையினர் இங்கு சட்ட ஒழுங்குப் பொறுப்புகளை ஏற்றுள்ளனர். இந்திய இராணுவ முகாம்களும், காவல் அரண்களும் மூலைக்கு மூலை எல்லா இடங்களிலும் நிறுவப்பட்டு வருகின்றன.

யாழ்ப்பாணக் குடாநாட்டிலுள்ள முக்கிய கல்வி நிறுவனங்கள் எல்லாம் இராணுவ முகாம்களாக மாற்றப்பட்டுள்ளன. வட்டுக்கோட்டையிலுள்ள யாழ்ப்பாணக்கல்லூரி, காரைநகரிலுள்ள பரி. யோவான் கல்லூரி, பண்டத்தரிப்பிலுள்ள மகளிர் கல்லூரி, தெல்லிப்பளையிலுள்ள யூனியன் கல்லூரி, மருதனாமடத்திலுள்ள இராமநாதன் கல்லூரி, உடுவிலிலுள்ள மகளிர் கல்லூரி, சுழிபுரத்திலுள்ள ஆறுமுகம் வித்தியாசாலை, மல்லாகத்திலுள்ள மகாவித்தியாலயம், சண்டிலிப்பாயிலுள்ள மகாவித்தியாலயம், சுதுமலையிலுள்ள முருகமூர்த்தி வித்தியாலயம், கோண்டாவிலிலுள்ள இராமகிருஷ்ணர் வித்தியாலயம், சித்தங்கேணியிலுள்ள சைவப்பிரகாச வித்தியாசாலை, திருவடிநிலையிலுள்ள மகாவித்தியாலயம் ஆகியனவற்றிலும் வேறு பல கல்வி நிறுவனங்களிலும் இந்திய அமைதிப்படை குடிபுகுந்துள்ளது.

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.



ஒரு சில மணித்தியாலங்கள்வரை, ஒரு சில இடங்களில் தளர்த்தப்பட்டபோதும் கடந்த ஒன்றரை மாதங்களாக வடக்கு, கிழக்கு மாகாணங்களில் தொடர்ச்சியாக ஊரடங்குச் சட்டம் அமுலில் இருந்து வருகிறது. மின்சாரம் துண்டிக்கப்பட்டுள்ளதால் யாழ்ப்பாணம் இருளில் மூழ்கிக்கிடக்கிறது. சகலதொழில்துறைகளும் ஸ்தம்பிதம் அடைந் துள்ளன. குடிநீர் விநியோகமும் துண்டிக்கப்பட்டுள்ளது. போக்கு வரத்தும் முடங்கிக்கிடக்கிறது. இந்திய இராணுவம் வழங்கும் அனு மதிப்பத்திரங்களுடன் ஒரு சில வாகனங்கள் மட்டும் போக்கு வரத்தை நடத்துகின்றன. அத்தியாவசிய உணவுப் பொருள்களுக்கு பெரும் தட்டுப்பாடு நிலவுகிறது. குடாநாட்டில் வாழும் எட்டு லட்சம் மக்கள் பட்டினிச் சாவின் விளிம்பிற்கு தள்ளப்பட்டு வருகின்றனர். விவசாயமும், மீன்பிடியும் முற்றாகச் செயலிழந்து கிடக்கின்றன. இத னால் பொருளாதார வாழ்வு சீரழிந்துள்ளது. அரசாங்க வைத்திய சாலைகளும் தனியார் வைத்திய நிறுவனங்களும் மூடப்பட்டுக்கிடக் கின்றன. வைத்திய வசதிகள் இல்லாததால் தொற்றுநோய்கள் பரவி வருகின்றன. கண்மூடித்தனமான எறிகணை வீச்சுக்கள், பீரங்கி குண் டுத்தாக்குதல்கள் காரணமாக பொதுமக்கள் இறந்தும், காயமடைந்தும் வருகின்றனர். இந்திய அமைதிப் படையினரின் இராணுவ தாக்குதல்கள் காரணமாக இதுவரை 2000-க்கும் மேற்பட்ட அப்பாவிப் பொதுமக்கள் கொல்லப்பட்டுள்ளனர். இந்திய இராணுவத்தின் அட்டூழியத்தை எடுத் துக்காட்ட உதாரணத்திற்கு ஒரு சம்பவத்தை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 9. 11. 1987 அன்று, சண்டிலிப்பாயில் இந்திய இராணு வத்தின் பீரங்கிக் குண்டுவீச்சில் நான்கு பொதுமக்கள் காயமடைந்த னர் காயமடைந்தவர்கள் ஒரு காரில் ஏற்றப்பட்டு யாழ்ப்பாண வைத் தியசாலைக்கு அனுப்பிவைக்கப்பட்டனர். நவாலி என்னுமிடத்தில் இந் திய இராணுவத்தினர் அந்தக்காரை இடைமறித்து, காயமடைந்த நால் வரையும் அவர்களை ஏற்றிவந்த இருவரையும் சுட்டுக்கொலைசெய்து விட்டு, பிணங்களுடன் சேர்த்து காரையும் தீ மூட்டி எரித்து விட்டனர். இந்தக் கொடுமைகள் ஒருபுறமிருக்க தமிழ்ப் பெண்கள் பாலியல் வன் முறைக்கு ஆளாக்கப்படுவதும் நாளாந்த நிகழ்ச்சியாகிவிட்டது. இது பற்றி பொதுமக்கள் இந்திய இராணுவ அதிகாரிகளுக்கு முறையிட்ட போது யுத்த காலங்களில் இச்செயல்கள் தவிர்க்கமுடியாதவை என அவர்கள் பதிலளித்துள்ளனர். உடுவில் என்னுமிடத்தில் நான்கு இளம்பெண்கள் இந்திய இராணுவ சிப்பாய்களால் மிருகத்தனமாக பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்பட்டனர். இதனால் ஆவேச மடைந்த பெற்றோர்கள் அப்பகுதி இந்திய இராணுவ அதிகாரிகளாக செயற்பட்ட மேஜர் பரமேஸ்வரனுக்கும், கப்டன் சர்மாவுக்கும் முறை யிட்டனர். இப்படியான சம்பவம் நிகழ்ந்ததை ஒப்புக்கொண்ட இரா ணுவ அதிகாரிகள் இது குறித்து எவ்வித நடவடிக்கையும் எடுக்க வில்லை. 5. 11. 1987-ல் உரும்பராயில் நடைபெற்ற இன்னொரு சம் பவத்தில் பண்டசாலை ஒன்றினுள் கொள்ளையிட்ட இந்திய இரா ணுவத்தினர் பல பெண்களை அந்தக் கடைக்குள் இழுத்துச்சென்று அவர்கள்மீது பாலியல் வன்முறை புரிந்தனர். இவர்களுள் ஒரு சிறுமி யும் ஒரு கர்ப்பவதியான பெண்ணும் அடங்குவர். இது இவ்வாறி

ருக்க, இந்திய அமைதிப்படையினர் திட்டமிட்ட முறையில் தமிழ் மக்களின் வீடுகளையும், வர்த்தக நிலையங்களையும் சூறையாடிவருகின்றனர். யாழ்ப்பாண நகரத்திலும், திருநெல்வேலி, உரும்பராய்ச் சந்தியிலும் இடிந்து தகர்ந்துகிடக்கும் கடைகள் இதற்கு சான்று பகர்கின்றன.

21. 11. 1987-ல் இந்திய அரசு, 48 மணிநேர போர் நிறுத்தத்தைப் பிரகடனம் செய்தது. ஆனால் இந்தப் போர்நிறுத்தத்தை இந்திய அமைதிப் படையினர் பேணவில்லை. இந்தப் போர்நிறுத்த காலத்தில் இந்திய அமைதிப்படையினர் தமிழ்ப்பகுதிகளில் பாரிய தேடுதல் அழிப்பு நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். இந் நடவடிக்கைகளின்போது பெருந்தொகையில் தமிழ்மக்கள் கைதுசெய்யப்பட்டனர். திருக்கோணமலையில் இந்திய இராணுவம் மேற்கொண்ட துப்பாக்கிப் பிரயோகத்தில் இரு தமிழர்கள் கொல்லப்பட்டனர். ஐவர் காயமடைந்தனர்.

தமிழ்ப்பகுதிகளில் சகஜநிலைமை தோன்றியுள்ளதென்றும், உணவு விநியோகம் சீராக நடப்பதாகவும், நிவாரண உதவி வழங்கப்படுவதாகவும் இந்திய அரசு மேற்கொண்டுவரும் பிரச்சாரத்தில் எவ்வித உண்மையும் இல்லை. இது உலகத்தை ஏமாற்றுவதற்கு இந்தியா மேற்கொள்ளும் பொய்ப்பிரச்சாரம். இந்தியா இங்குள்ள உள்ளூர்ப் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு போட்டிருக்கிறது. வெளியுலகத்திலிருந்து பத்திரிகையாளர்களையும் இங்கு அனுமதிப்பதில்லை. தமிழ்ப் பகுதிகளில் தொலைபேசித் தொடர்புகளும் துண்டிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள உண்மை நிலையை உலகத்திற்கு மூடிமறைப்பதற்காக இந்தியா திட்டமிட்டவகையில் செய்திகளுக்கு இருட்டடிப்புச் செய்துள்ளது.

தமிழ்ப் பிரதேசத்தில் தொடர்ந்து நடைபெறும் இந்திய இராணுவ அட்டூழியங்களையும், மனித உரிமை மீறல்களையும் விசாரணைசெய்யும் பொருட்டு ஐ. நா. மனித உரிமை கமிஷன் பிரதிநிதிகள் அடங்கிய குழு ஒன்றை இங்கு அனுப்பிவைக்குமாறு உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். போர் நடவடிக்கைகளை நிறுத்தி, சமாதானப் பேச்சுக்கள் மூலம் பிரச்சினைகளை தீர்த்துவைக்குமாறு இந்திய அரசை வற்புறுத்தும்படியும் உங்களை வேண்டிக்கொள்கிறேன். இந்திய இராணுவத்தின் அட்டூழியங்களை ஒரு முடிவுக்கு கொண்டுவந்து எமது மக்கள் அமைதியாக, நிம்மதியாக, கௌரவமாக வாழ வழிசெய்யுமாறும் உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

**வே. பிரபாகரன்**

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

# பிரதமர் ராஜீவ் காந்திக்கு தலைவரின் மூன்றாவது கடிதம்

குறிப்பு:

இந்திய அமைதிப் படையின் இராணுவ அட்டூழியங்கள் காரணமாக தமிழீழ மக்கள் தாங்கொணாத் துன்பங்களை அனுபவித்துவருவதாகச் சுட்டிக்காட்டி, சமாதான சூழ்நிலையை உருவாக்க ஆக்கபூர்வமான சமரசமுயற்சிகளை மேற்கொள்ளுமாறு வேண்டுகோள் விடுத்து, தலைவர் பிரபாகரன் பாரதப் பிரதமர் ராஜீவ் காந்திக்கு எழுதிய மூன்றாவது கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம். 13. 1. 1988-ல் எழுதிய இக் கடிதத்தில், விடுதலைப் புலிகளுக்கு வாக்குறுதி அளித்ததுபோல, தமிழர் தாயகத்தில் ஓர் இடைக்கால நிர்வாக அரசு அமையப்பெற்று, தமிழ் மக்களின் நலன்கள் பேணப்படும்பட்சத்தில் இந்திய–இலங்கை ஒப்பந்தத்திற்கு ஒத்துழைப்பு வழங்கத் தயாராக இருப்பதாகவும் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்,
13. 1. 1988.

கனம் ராஜீவ் காந்தி அவர்கள்,
இந்திய பிரதம மந்திரி,
புதுடில்லி.

அன்பின் ஐயா,

தமிழ்ப் பகுதிகளில் தொடர்ந்தும் சமாதானம் சீர்குலைந்து வன்முறை தாண்டவமாடுவதாலும், எமது மக்கள் தாங்கொணாத் துன்பத்திற்கு இலக்காகி இன்னல் படுவதாலும் இராணுவ நடவடிக்கைகளைக் கைவிட்டு, சமாதானமும் சகஜ நிலையும் திரும்பும் வகையில் சமரஸ முயற்சிகளை மேற்கொள்ளுமாறு நான் மீண்டும் உங்களை அன்புடன் வேண்டிக்கொள்கிறேன்.

போர்நிறுத்தம் செய்துகொள்ளப்பட்டு, யுத்தம் ஆரம்பமாவதற்கு முந்திய நிலைகளுக்கு இந்திய சமாதானப் படையினர் திரும்புவதே சமாதானத்திற்கும் சகஜநிலைக்கும் வழிகோலுமென நாம் கருதுகிறோம். தமிழீழ மக்களும் இந்தக் கருத்தையே கொண்டுள்ளனர். சமாதான முயற்சியின் ஆரம்ப நடவடிக்கையாக தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு பொதுமன்னிப்பு வழங்கும்படி இலங்கை அரசைக் கேட்டுக் கொள்ளுமாறு நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன். அத்துடன் இந்திய சமாதானப் படையினரால் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கும் எமது இயக்க உறுப்பினர்களையும், ஆதரவாளர்களையும் விடுதலை செய்யுமாறும் கேட்டுக்கொள்கிறேன்.

ஏற்கனவே இணக்கம் காணப்பட்டதன் பிரகாரம், அதாவது இந்திய அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்கும் மத்தியில் கைச்சாத்திடப்பட்ட உடன்பாட்டின் பிரகாரம் விடுதலைப் புலிகளை பெரும்பான்மையாகக் கொண்ட இடைக்கால நிர்வாக அரசு அமையப்பெற்றதும் நாம் எமது ஆயுதங்களை ஒப்படைப்போமென உறுதி தருகிறோம்.

நாம் உங்களுக்கு மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கூறியது போல தமிழ் மக்களின் உயிருக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டு, தமிழ் மக்களின் நலன்கள் பேணப்படுமாயின் இந்திய–இலங்கை ஒப்பந்த அமுலுக்கு எமது இயக்கம் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறது என் பதையும் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறோம். இந்த ஒப்பந்தம் குறிக்கும் மாகாணசபைத் திட்டமானது இப்போதுள்ள அமைப்பில் தமிழ் மக்களின் அபிலாசைகளை பூர்த்திசெய்யவில்லை என்பதே எமது நிலைப்பாடாகும். ஆகவே, தமிழ் மக்களின் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் அதிகாரம் கொண்டதான தமிழ்ப் பிரதேச மானில ஆட்சிய மைப்பை உருவாக்கும் எதிர்காலப் பேச்சுக்களில் விடுதலைப் புலிக ளுக்கு முக்கிய பங்களிக்கப்படவேண்டும் என்பதையும் நாம் இங்கு வலியுறுத்த விரும்புகிறோம்.

எமது யோசனைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, சீரிய முறை யில் பரிசீலனை செய்து தமிழீழத்தில் சமாதானம் நிலவவும், எமது மக் களின் துயரைத் துடைக்கவும் போர்நிறுத்தம் செய்து பேச்சுக்களைத் தொடங்க உடன் நடவடிக்கைகளை எடுப்பீர்களென நான் மனதார நம்புகிறேன்.

**வே. பிரபாகரன்**
*தலைவர்,*
*தமிழீழ விடுதலைப் புலிகள்,*

# உலகத் தமிழர் மாநாட்டிற்கு தலைவர் விடுத்த அறிக்கை



13980

**குறிப்பு:**

**1988-ம்** ஆண்டு, ஏப்ரல் 30, மே 1 ஆகிய தினங்களில் லண்டன் மாநகரில் நடைபெற்ற சர்வதேச தமிழர் மாநாட்டிற்கு தலைவர் அனுப்பிவைத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்.
30 - 04 - 1988

**தலைவர்,**
உலகத் தமிழர் பேரவை,
லண்டன்.

அன்புடையீர்,

தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டம் பற்றியும், இந்திய - இலங்கை ஒப்பந்தத்தின் விளைவுகள் பற்றியும் ஆய்வுசெய்யும் நோக்குடன் உலகத் தமிழர் பேரவை லண்டன் மாநகரில் சர்வதேச தமிழர் மாநாடு ஒன்றை ஒழுங்குசெய்திருப்பதையிட்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இந்திய-இலங்கை ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்டதை அடுத்து தமிழீழத்தில் தலைதூக்கியுள்ள மிகவும் ஆபத்தான, நெருக்கடியான இச் சூழ்நிலையில், உலகெங்குமுள்ள தமிழ்த் தேசாபிமானிகள் பங்குபற்றும் இம்மாநாடு கூட்டப்பட்டிருப்பது முக்கியம் வாய்ந்ததும் காலத்திற்கு பொருத்தமானதுமாகும்.

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தின் அடிப்படையில் தமிழீழத்தில் சமாதானத்தைப் பேணவும் தமிழ் மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கவும் இங்குவந்த இந்திய அமைதிப் படை, ஒப்பந்தம் கைச்சாத்தாகிய குறுகிய காலத்திற்குள் எமது விடுதலை இயக்கத்திற்கு எதிராக ஒரு கொடிய யுத்தத்தை ஆரம்பித்துள்ளதுபற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். கடந்த அக்டோபர் 10- ந் திகதி ஆரம்பமாகிய இந்த யுத்தம் மிகவும் உக்கிரமான முறையில் தீவிரமடைந்துவருகிறது. இதனால் தமிழீழ தேசம் என்றுமில்லாதவாறு இரத்தம் சிந்திக்கொண்டிருக்கிறது. கோரமான வன்முறையும் இரத்தக் களரியும் நிறைந்ததாகத்தொடரும் இந்த யுத்தம் ஒரு உண்மையைத் தெட்டத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது. அதாவது, இந்த ஒப்பந்தம் எமது மக்களுக்கு அமைதியையும் நிம்மதியான வாழ்வையும் பெற்றுத்தரத் தவறிவிட்டது என்பதுதான். இதனால் இந்த ஒப்பந்தம் தனது இலட்சியத்தில் தோல்வியடைந்துள்ளது என்றே சொல்லவேண்டும். இதனை ஒரு சமாதான உடன்பாடு என இனிமேல் வர்ணிக்கமுடியாது. இது ஒரு யுத்த உடன்பாடு. இந்தியாவுக்கும் சிறீலங்காவுக்கும் மத்தியிலான ஒரு இராணுவ ஒப்பந்தம், தமிழரின் சுதந்திர இயக்கத்தையும், அதற்குத் தலைமைதாங்கும் முன்னணிப் படையான விடுதலைப் புலிகளையும் ஒழித்துக்கட்டுவதுதான் இந்த இராணுவ ஒப்பந்தத்தின் இலட்சியம்.

போர்த்தொழில்நுட்பத்திலும் ஆட்பலத்திலும் எம்மைவிட எத்தனையோமடங்கு சக்திபெற்ற ஒரு ராட்சத இராணுவ இயந்திரத்திற்கு எதிராக, நாம் கடந்த ஏழு மாதங்களாக ஒரு தற்காப்புப் போரில் ஈடுபட்டுள்ளோம். அவமானத்துடன் சரணடைந்து சாகாமல் தன்மானத்துடன் நாம் போராடி வருகிறோம். எமது போராளிகளின் வீரமும், உறுதியும், அதற்கு மேலாக எமது மக்களின் ஆதரவும் ஒரு பெரும் வல்லரசை எதிர்த்து நிற்கும் துணிவை எமக்குத் தந்திருக்கிறது. நீண்டுசெல்லும் இந்த யுத்தத்தில் நாம் ஒரு போராட்ட சக்தியாக நிலைத்துநிற்பதிலிருந்து இந்தியா ஒரு பாடத்தைக் கற்றுக்கொள்ளும் என நினைக்கிறோம். அதாவது, உறுதிபூண்ட ஒரு மக்கள் இனத்தை எத்தகைய பலம்வாய்ந்த சக்திகளாலும் ஒடுக்கிவிட முடியாது என்பதுதான்.

ஆழமான துயரத்தோடும், வேதனை யுடனுமே நாம் இந்தியாவுக்கு எதிராக ஆயுதம் ஏந்தினோம். செத்துமடிவது அல் லது தற்பாதுகாப்பிற்குப் போராடுவது என்ற நிர்ப்பந்தங்களைத் தவிர மாற்று வழி எதையும் இந்தியா எமக்கு காட்டி விடவில்லை. இந்தியாவை நண்பனாக, தோழமை சக்தியாக நாம் கருதுவதால் இந்தப் போரை நாம் வெறுக்கிறோம். சமாதானம் கோரி, போர்நிறுத்தம் கோரி, பேச்சுக்கள் மூலம் சமரசம் கோரி, நான் இந்தியப் பிரதமருக்கு பல கடிதங்கள் எழு தியும் பதில் கிடைக்கவில்லை. சமாதானம் வேண்டி நாம் விடுத்த கோரிக்கைகளை இந்திய அரசு நிராகரித்துள்ளது. விடுத லைப் புலிகள் இயக்கத்தை பூண்டோடு அழிக்கவேண்டும் என்பதில் இந்தியா மிக வும் பிடிவாதமாகவும் உறுதியாகவும் இருக் கிறது. புலிகள் இயக்கத்தை அழித்து விட்டு, தமிழீழத்தில் துப்பாக்கிமுனையில் ஒரு தேர்தலை நடத்தி, ஒரு குறைந்தபட்ச தீர்வுத் திட்டத்தை தமிழ் மக்கள் மீது திணித்துவிடுவதுதான் இந்திய அரசின் நோக்கம். சிறீலங்கா ஆட்சியாளருடன் நட்பை வளர்த்து, தனது பூகோள - அரசி யல் நலன்களைப் பேணுவதுதான் இந் தியாவின் குறிக்கோள். இந்தக் குறிக் கோளை அடைவதற்காக தமிழீழ மக்க ளின் நலன்களை மறுதலிக்க இந்தியா தயாராக உள்ளது.

ஒப்பந்தம் என்ற ஊடகம் மூலம் தமி ழரின் தேசிய பிரச்சினையில் இந்திய அரசு நேரடியாக, இராணுவ வன்முறை மூலம் தலையிட்டுள்ளதால், தமிழ் மக்களின் அர சியல் எதிர்காலமும் அவர்களது சமூக பொருளாதார வாழ்வும் ஒரு இருண்ட, நிச்சயமற்ற, நெருக்கடி நிறைந்த சூழ் நிலைக்குள் தள்ளப்பட்டுள்ளது. நான்கு தசாப்தங்களாக பல்வேறு படிமுறைகளில், பல்வேறு போராட்ட வடிவங்களாக பரி ணாம வளர்ச்சிகண்ட எமது மக்களின் சுயநிர்ணய உரிமைப் போராட்டம் இன்று பெரும் ஆபத்தை எதிர்கொண்டு நிற்கி றது. இந்தியாவின் இந்த இராணுவத் தலையீடு காரணமாக எமது மக்கள் மீண் டும் சிங்களப் பேரினவாத ஆதிக்கத்திற் கும் இனக் கொலைக்கும் ஆளாகவேண் டிய பேராபத்தும் எழுந்திருக்கிறது.

தமிழீழ மக்கள் இத்தகைய இக்கட் டான, நெருக்கடியான சூழ்நிலையை எதிர்கொண்டு நிற்பதால் அவர்களுக் காக குரல்கொடுக்கவேண்டியது வெளி நாடுகளில் வதியும் தமிழ்த் தேச பக்தர் களின் தார்மீகக் கடப்பாடாகும். ஒரு பலம் வாய்ந்த சர்வதேச சக்தியாக அணி திரண்டு எமது மக்களின் விடிவிற்காக உல கத் தமிழினம் உரிமைக் குரல் எழுப்ப வேண்டும். அநீதியான ஒடுக்குமுறைக்கு ஆளாகியிருக்கும் எமது மக்களுக்காக உலக சமுதாயத்திடம் நீதி கேட்கவேண்டும்.

ஒடுக்கப்படும் எமது மக்களின் சுபீட் சத்திற்காக போராடிவரும் எமது தேசிய விடுதலை இயக்கத்திற்கு சர்வதேச தமிழ் சமூகம் தொடர்ந்தும் தனது ஆதரவை யும் ஒத்துழைப்பையும் வழங்குமென உறு தியாக நம்புகிறேன்.

சர்வதேச தமிழர் மாநாடு வெற்றி பெற எனது நல்லாசிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**வே. பிரபாகரன்**

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

# ஆபிரிக்க ஐக்கிய நாடுகளுக்கு தலைவர் விடுத்த வேண்டுகோள்

குறிப்பு:

ஆபிரிக்க ஐக்கிய சபை நாடுகளின் 25-வது வருடாந்த மகாநாட்டிற்கு தலைவர் பிரபாகரன் அனுப்பி வைத்த வாழ்த்துச் செய்தியை இங்கு தருகிறோம். 27-5-1988-ல் அனுப்பப்பட்ட இச் செய்தியில், இந்திய அரசு அநீதியான முறையில் விடுதலைப் புலிகளுக்கும் தமிழ் மக்களுக்கும் எதிராக ஒரு யுத்தத்தை தொடுத்திருப்பதாக குற்றம்சாட்டியுள்ள தலைவர், இராணுவ அணுகுமுறையைக் கைவிட்டு புலிகளுடன் சமாதானப் பேச்சுக்களை நடத்தி, தமிழர் பிரச்சினைக்கு தீர்வுகாணுமாறு இந்தியாவை வற்புறுத்தும்படி ஆபிரிக்க தலைவர்களிடம் வேண்டுகோள் விடுத்தார்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்,
27 - 5 - 1988.

செயலாளர் நாயகம்,
ஆபிரிக்க ஐக்கிய நாடுகள்.

அன்புடையீர்,

இலங்கை வாழ் தமிழ் மக்களை எதிர்நோக்கியுள்ள, மிகவும் பாரதூரமான ஆபத்தானநெருக்கடி நிலையை உங்களின் உடனடிக் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன்.

கடந்த நான்கு தசாப்தங்களாக அடுத்தடுத்து ஆட்சிக்கு வந்த சிங்கள அரசுகள், இனக்கொலை மூலம் தமிழ் மக்களை ஒழித்துக்கட்டுவதற்கு கடைப்பிடித்துவந்த கொடிய ஒடுக்குமுறைகளின் விளைவாக சுயநிர்ணய உரிமை கோரி தமிழ் மக்கள் போராடி வருவது நீங்கள் அறிந்ததே. தமிழரின் இனப்பிரச்சினையை முடிவுக்குக் கொண்டு வரும் நோக்குடன் இந்திய அரசு, ஜெயவர்த்தனா அரசுடன் செய்து கொண்ட சமாதான ஒப்பந்தத்தைப் பற்றியும் நீங்கள் அறிவீர்கள். இந்த சமாதான உடன்பாடு கைச்சாத்தாகி இன்று பத்து மாதங்கள் கடந்துவிட்டன. இந்த உடன்பாடு இன இணக்கத்தை ஏற்படுத்தி அமைதியை நிலைநாட்டும் என இந்திய, இலங்கை அரசுகள் கூறி வந்தபோதும் தமிழர் தாயகத்தில் இன்னமும் போர் மிகவும் தீவிரமாகத் தொடர்கிறது.

ஒடுக்கப்பட்ட தமிழ் மக்களுக்கு அமைதியையும், நீதியையும், பெற்றுத்தருமென ஒப்பந்தத்தில் உறுதியளிக்கப்பட்டபோதும், தமிழ் மக்கள் தொடர்ந்தும் அளப்பரிய துன்பத்திற்கு உள்ளாகிவருகின்றனர். அன்று தமிழ் மக்களின் நியாயமான போராட்டத்திற்கு ஆதரவாகக் குரல் கொடுத்துவந்த இந்தியா, இன்று தமிழ் மக்களின் ஒடுக்குமுறையாளனாக மாறியுள்ளதையிட்டு தமிழ் மக்கள் மிகவும் அதிர்ச்சியடைந்துள்ளனர். அமைதியை நிலைநாட்டவும், இனங்களிடையே சௌஜன்யத்தை உறுதிப்படுத்தவும், தமிழ் மக்களுக்கு பாதுகாப்பை வழங்குவதற்காகவும் தமிழர் தாயத்திற்கு அனுப்பிவைக்கப்பட்ட இந்திய அமைதிகாப்புப்படை, இன்று, ஒரு ஆக்கிரமிப்புப் படையாக உருமாறி, விடுதலைப் புலிகளுக்கும், தமிழ் மக்களுக்கும் எதிராக ஒரு குரூரமான போரை நடத்திவருகிறது.

நாம் ஒருபோதுமே விரும்பாத ஒரு போரை இந்தியா எம்மீது திணித்துள்ளது. சமாதானத்தையும் இணக்கத்தையும் ஏற்படுத்த மீண்டும் மீண்டும் நாம் வேண்டுகோள்களை விடுத்துவந்த போதிலும் இந்திய அரசு பிடிவாதமாக இந்தப்போரை தொடர்கிறது. இந்தியாவின் இந்த அணுகுமுறை அநீதியானது. ஜனநாயகத்திற்கு விரோதமானது.

இராணுவ அணுகுமுறையை கைவிட்டு, சமாதான வழிமூலம் தமிழர் பிரச்சினைக்கு தீர்வொன்றை காண்பதற்கு விடுதலைப் புலிகளுடன் பேச்சுவார்த்தைகளை ஆரம்பிக்குமாறு இந்திய அரசை வற்புறுத்தும் படி ஆபிரிக்க ஐக்கிய சபைக்கும், அதன் அங்கத்துவ நாடுகளின் தலைவர்களுக்கும் வேண்டுகோள் விடுக்கின்றோம். அத்துடன், தமிழ் மக்களின் நியாயமான சுயநிர்ணய உரிமைப் போராட்டத்திற்கு ஆதரவு வழங்குமாறும் இச்சபையை கேட்டுக்கொள்கின்றோம்.

**வே. பிரபாகரன்**

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

PUBLIC LIBRARY
CHUNDIKULI BRANCH LIBRARY



# ஒடுக்கப்பட்ட மக்கள்தான் இறுதியில் வெற்றிபெறுவர்

**குறிப்பு:**

**ஆபிரிக்க தேசிய காங்கிரஸ் தலைவர் திரு. ஒலிவர் தம்போவிற்கு தலைவர் பிரபாகரன் எழுதிய கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம். 16-7-1988-ல் எழுதப்பட்ட இக் கடிதத்தில் சிறைவாசமிருந்த நெல்சன் மண்டேலாவின் 70-வது பிறந்த தினத்திற்கு தலைவர் வாழ்த்து தெரிவித்துள்ளதுடன், ஆபிரிக்க மக்களின் தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு ஆதரவும் நல்கியுள்ளார். இக் கடிதத்தில் தென்னாபிரிக்க இனவாத அடக்குமுறை ஆட்சியாளரை வன்மையாக கண்டிக்கும் தலைவர் பிரபாகரன் ஒடுக்கப்பட்ட மக்கள்தான் இறுதியில் வெற்றி பெறுவார்களென எடுத்துக்கூறியுள்ளார்.**

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
யாழ்ப்பாணம்.
16. 7. 1988.

**தோழர் ஒலிவர் தம்போ**
ஆபிரிக்க தேசிய காங்கிரஸ்,
த. பெ. இல. 31791
லுசாக்கா, சாம்பியா.

அன்பின் தோழர்,

சுயநிர்ணய உரிமைக்காகப் போராடும் தமிழீழ மக்களும் அவர்களின் முன்னணி இயக்கமாகிய தமிழீழ விடுதலைப் புலிகளும், ஒடுக்கப்பட்ட அசானிய மக்களின் வீரத் தலைவரான நெல்சன் மண்டேலாவுக்கு தமது அன்பையும் மதிப்பையும் தெரிவித்துக்கொள்கின்றனர். யூலை 18-ல் வரும் அவரின் எழுபதாவது பிறந்த தினத்தில் எமது புரட்சிகர வாழ்த்துக்களை அந்த உயர்ந்த மனிதருக்குத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தனது மக்கள் விடுதலை அடையவேண்டும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையுடனும், அர்ப்பணிப்புடனும் "உலகத்துக்கு நன்கு அறிமுகமான அரசியல் கைதி" நெல்சன் மண்டேலா தனது நீண்ட சிறை வாழ்வை நெஞ்சுரத்துடன் தாங்கிவருகிறார். இருபத்தி ஆறு வருடங்களுக்கு முன்னர், அவரை றோபன்தீவு வெஞ்சிறையில் தள்ளியபோது, அசானியாவின் கறுப்பு மக்களின் விடுதலைக் குரலை நெரித்துவிடலாம் என சகல ஒடுக்குமுறையாளர்களையும் போலவே பிரிட்டோரிய ஆட்சியாளர்களும் தவறாக எண்ணிக்கொண்டனர். ஆனால் தமது புனிதமான விடுதலைப் போராட்டத்தை ஒருபோதும் நசுக்கிவிட முடியாதென தீரமிகு அசானிய மக்கள் உலகுக்கு எடுத்துக்காட்டி வருகின்றனர்.

மனித குலத்துக்கு எதிரான குற்றவாளிகளாக, உலகத்தின் மனச்சாட்சியின் முன் இன்று தென்னாபிரிக்க இனவாத ஆட்சியாளர்கள் நிறுத்தப்பட்டு உள்ளனர். பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட கறுப்புச் சிறுவர்கள் போதாவின் நரகுழிகளில் சித்திரவதைகளுக்கும், இம்சைகளுக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள் என்று அண்மையில் அம்பலப்படுத்தப்பட்ட செய்தியைக்கேட்டு, அமைதியை விரும்பும் மக்கள் அதிர்ந்து போயுள்ளனர். உலகின் முற்போக்காளர்களும், ஒடுக்கப்பட்ட மக்களும், அசானிய மக்களின் பின்னே அணிதிரண்டு நெல்சன் மண்டேலாவை விடுதலை செய்யக் கோரி உலகளாவிய போராட்டத்தை நடாத்திக் கொண்டிருக்கின்றனர். இவ்வேளையில் அசானிய மக்களை நசுக்கும் நோக்குடன் ஹிட்லரின் ''இறுதித் தீர்வு'' போன்ற ஒடுக்குமுறைத் திட்டத்தை பிரிட்டோரியாவில் உள்ள காட்டுமிராண்டித்தனமான ஆட்சியாளர்கள் துரிதமாக அமுல்படுத்தி வருகின்றனர்.

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY



அசானிய மக்களின் நியாயபூர்வ சனநாயகப் போராட்டத்தை நசுக்குவதற்கு போதா ஆட்சி கைக்கொள்ளும் இத்தகைய பாசிசத் திட்டத்தை ஒடுக்கப்பட்ட தமிழீழ மக்களின் சார்பில் விடுதலைப் புலிகள் வன்மையாகக் கண்டிக்கின்றனர். மனிதாபிமானமற்ற காட்டுமிராண்டித் தனமான இனவாத ஆட்சிமுறையைத் தகர்ப்பதற்கு அசானிய மக்களும் அவர்களின் நியாயபூர்வ பிரதிநிதிகளாகிய ஆபிரிக்க தேசிய காங்கிரசும் நடாத்தும் போராட்டத்துக்கு எமது ஒருமைப்பாட்டையும் ஆதரவையும் தெரிவித்துக்கொள்கிறோம். ஒடுக்கப்பட்ட மக்கள்தான் இறுதியில் வெற்றி பெறுவர்.

புரட்சிகர வாழ்த்துக்களுடன்,
உங்கள் தோழமையுள்ள

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# இந்தியப்படையை வெளியேற்ற ஐ. நா. சபை முயலவேண்டும்

குறிப்பு:

தலைவர் பிரபாகரன் 7.2.1989–ல் ஐ. நா. மனித உரிமை ஆணைக் குழுவிற்கு அனுப்பிவைத்த கடிதத்தை இங்கு பிரசுரிக்கிறோம். இந்திய அரசு, தமிழீழத்தில், பாரதூரமான முறையில் மனித உரிமைகளை மீறி வருவதாக குற்றம்சாட்டியுள்ள தலைவர் பிரபாகரன், இந்திய ஆக்கிரமிப்புப் படைகளை தமிழீழத்திலிருந்து வெளியேற்றி, சமாதானமும் இயல்புநிலையும் தோன்ற ஐ.நா. நிறுவனம் ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்.

தலைமைச் செயலகம்.
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
7-2-1989

**தலைவர்.**
ஐ. நா. மனித உரிமை ஆணைக்குழு,
ஜெனீவா,

அன்புடையீர்,

தமிழர் தாயகத்தில் நிலைமை படுமோசமாகிவருகிறது. அமைதி காக்கும் பணி என்ற போர்வையில் இந்திய இராணுவம் அப்பாவித் தமிழ் மக்கள்மீது ஈவிரக்கமற்ற ஒரு கொடிய யுத்தத்தைத் தொடர்ந்து வருகிறது.

ஐ.நா.சாசனத்தின் பிரமாணங்களுக்கும்,நியமங்களுக்கும் முற்றிலும் மாறான முறையில் இந்திய இராணுவம் மனித உரிமைகளை மீறிவருகிறது. சட்டவிரோத கொலைகள், பாலியல் வன்முறைகள், சிறையடைப்புகள், சித்திரவதைகள் என்ற வகையில் தமிழ் மக்கள்மீது பயங்கரவாதம் கட்டவிழ்த்துவிடப்பட்டுள்ளது. கடந்த சில மாதங்களில் மட்டும் நூற்றுக்கணக்கான அப்பாவிப் பொதுமக்கள் கொலைசெய்யப்பட்டுள்ளனர். தமிழ்க் கிராமங்கள் சுற்றிவளைக்கப்பட்டு பல நூற்றுக்கணக்கானோர் சிறையில் தள்ளப்பட்டு சித்திரவதை அனுபவித்துவருகின்றனர்.

தமிழர் தாயகத்தில் இந்திய இராணுவத்தின் கொடுமைகள் ஒருபுறமிருக்க, இந்தியாவுக்கு ஆதரவான தமிழ் ஆயுதக் குழுக்களின் அட்டூழியங்களும் அதிகரித்துள்ளன. இந்திய இராணுவத்துடன் கூட்டுச் சேர்ந்த இந்தக் குழுக்கள் தமிழ்ப் பகுதிகளில் மிகவும் மிருகத்தனமான வன்முறையிலும் பயங்கரவாத நடவடிக்கைகளிலும் ஈடுபட்டுவருகின்றன. இந்திய இராணுவத்திற்கு தகவல் கொடுத்து அவர்களின் கொலைப்படையாக செயற்பட்டுவரும் இக் குழுக்கள் இதுவரை 200க்கும் மேற்பட்ட முக்கிய தமிழ்ப் பிரஜைகளை படுகொலை செய்துள்ளன.

இந்திய இராணுவமும், அதற்கு அடிவருடிகளாக செயற்பட்டுவரும் தமிழ்க் குழுக்களும் புரிந்துவரும் அட்டூழியங்களை உலகிற்கு மூடிமறைக்கும் நோக்கத்துடன் இந்திய, இலங்கை அரசுகள் கூட்டாகச் சேர்ந்து தகவல்களை இருட்டடிப்புச் செய்துவருகின்றன. இரு அரசுகளும் ஒன்றாகச் சேர்ந்து உள்ளூர்ப் பத்திரிகைகளுக்கு

வாய்ப்பூட்டு இட்டிருப்பதுடன் சர்வதேச மனித உரிமை ஸ்தாபனங்கள் இங்குவந்து விசாரணை நடத்துவதற்கும் தடைவிதித்துள்ளன.

இந்திய – இலங்கை ஒப்பந்தம் செயலிழந்து செத்துப்போகாமல் பாதுகாப்பதற்காக இந்திய அரசு தனது இராணுவ இயந்திரத்தைப் பயன்படுத்தி பல்வேறு நாசகார வேலைகளில் ஈடுபட்டுவருகிறது. சமீபத்தில், தமிழ்ப் பகுதிகளில் ஆயுத முனையில் மக்களை பயமுறுத்தி, நிர்ப்பந்தித்து தேர்தல் நாடகம் ஒன்றை இந்திய அரசு அரங்கேற்றியது. தமிழ் மக்களின் சனநாயக உரிமைகளையும் அரசியல் அபிலாசைகளையும் உதாசீனம்செய்து தனது அடிவருடிகளுக்கு மாகாண சபை நிர்வாக அதிகாரத்தைப் பெற்றுக்கொடுக்கும் நோக்கில் இந்தியா இந்தப் போலித் தேர்தலை நடத்தி, உலகத்தின் கண்களில் மண்ணைத் தூவியிருக்கிறது.

இந்தியாவின் கொள்கையிலும் ராஜீவ் காந்தியின் ஆட்சி நிர்வாகத்திலும் எமது மக்கள் நம்பிக்கையிழந்து வெறுப்படைந்துள்ளனர். இந்திய அரசு எமது மக்களின் நலனில் அக்கறை காட்டுவதுபோல நடித்து, தனது பூகோள – கேந்திர அபிலாசைகளைப் பேணுவதிலும் தனது வல்லாதிக்க வியூகத்தை விஸ்தரிப்பதிலுமே நாட்டம்கொண்டு செயற்படுகிறது. இதனை எமது மக்கள் நன்குணர்ந்துள்ளனர்.

தமிழர் தாயகத்தில் இந்திய இராணுவத் தலையீட்டை தமிழர்கள் மட்டுமன்றி சிங்கள தேசமும் எதிர்த்துவருகிறது. இந்திய இராணுவத்தின் தலையீட்டால் தமிழரின் நலன்கள் பேணப்படப் போவதில்லை என்பதே இலங்கைத் தீவில் வாழும் மக்கள் அனைவரினதும் ஏகோபித்த கருத்தாகும். இந்தச் சூழ்நிலையில், இந்திய இராணுவ ஆக்கிரமிப்பிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்து, இந்தியப் படைகளை எமது மண்ணிலிருந்து விலகிச்செல்ல ஐ.நா. சபை ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டுமென நாம் விரும்புகிறோம். இவ் விவகாரத்தில் ஐ.நா. சபை குறுக்கிட்டு, இந்திய இராணுவத்தை இங்கிருந்து வெளியேற்றி, தமிழர் தாயகத்தில் சமாதானத்தையும் சகஜ நிலையையும் உருவாக்க முயற்சி எடுக்கவேண்டும் என்பதே எமது மக்களின் விருப்பமுமாகும்.

**வே. பிரபாகரன்**

*தலைவர்,*

*தமிழீழ விடுதலைப் புலிகள்.*

# அணிசேரா நாடுகளின் மாநாட்டிற்கு தலைவர் விடுத்த வேண்டுகோள்



பொதுசன நூலகம்.
யாழ்ப்பாணம்.

**குறிப்பு:**

**4.09.1989-ல்** பெல்கிரேட், யூகோஸ்லா வியாவில் நடைபெற்ற அணிசேரா நாடுகளின் உச்சி மாநாட்டிற்கு தலைவர் பிரபாகரன் அனுப்பிவைத்த கடிதத்தில், இந்திய இராணுவத் தலையீட்டிற்கு தமிழர் தாயகத்தில் மட்டுமன்றி சிங்கள தேசத்திலும் பெரும் எதிர்ப்பு கிளம்பியுள்ளதைச் சுட்டிக்காட்டியதுடன், தனது படைகளை உடன் வாபஸ்பெற அணிசேரா நாடுகள் இந்தியாமீது அழுத்தம்போடவேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
4-9-1989

**தலைவர்,**
அணிசேரா நாடுகளின் உச்சிமாநாடு,
பெல்கிரேட், யூகோஸ்லாவியா.

அன்புடையீர்,

சிறீலங்காவின் வடக்கு,கிழக்கு பிராந்தியங்களைக் கொண்ட தமிழர் மானிலத்தில் இந்திய இராணுவத்தின் ஆக்கிரமிப்பு தொடர்வதால் எழுந்துள்ள மிகவும் பாரதூரமான ஆபத்தான நிலைமையை உங்களது உடன் கவனத்திற்கும் அவசர பரிசீலனைக்கும் கொண்டுவர விரும்பு கிறேன்.

1987, ஜூலையில், இந்திய – இலங்கை ஒப்பந்தம் கைச்சாத்திடப் பட்டமையும், அதனைத்தொடர்ந்து இந்திய இராணுவம் தமிழர் தாய கத்தை ஆக்கிரமித்துக் கொண்டமையும் இலங்கைத் தீவு அடங்கிலுமாக பெரும் வன்முறைப் புயலை தோற்றுவித்துள்ளது. இலங்கை வாழ் மக் களைக் கலந்தாலோசிக்காது, அவர்களது அனுமதியைப் பெறாது, இரு அரசுகளும் அவசர அவசரமாக செய்துகொண்ட இந்த ஒப்பந் தம் இன ஒற்றுமைக்கு வழிகோலவில்லை. சமாதானத்தையும் இயல்பு நிலைமையையும் தோற்றுவிக்கவில்லை. எந்தக் குறிக்கோளுடன் இந்த ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்டதாகக் கூறப்பட்டதோ அந்தக்குறிக்கோள் களை அடைய இந்த ஒப்பந்தம் தவறிவிட்டது. இந்த ஒப்பந்தமும் அதன் பெறுபேறாக விளைந்த இந்திய இராணுவத் தலையீடும் சிங்கள தேசத் திலும் தமிழர் தாயகத்திலும் ஒரு பயங்கரமான உள்நாட்டு யுத்தத்தை தோற்றுவித்திருப்பதுடன், முழு இலங்கைத் தீவையுமே ஒரு பெரும் வன் முறைப் பிரளயத்தினுள் தள்ளிவிட்டிருக்கிறது.

அமைதியைக் காக்கும் போர்வையில் தமிழர் பிரதேசத்தில் வந் திறங்கிய இந்திய ஆயுதப்படையினர், எந்த மக்களின் பாதுகாப்பைப் பேணுவதாகச் சொல்லிக்கொண்டார்களோ அந்த மக்களுக்கு எதிராக ஒரு முழு அளவிலான யுத்தத்தைக் கட்டவிழ்த்துவிட்டிருக்கிறார்கள். கடந்த இரண்டு ஆண்டுகளாகத் தொடர்ந்துவரும் இந்தக் கொடிய யுத் தத்தில் ஆறாயிரத்திற்கு மேற்பட்ட தமிழர்களும் முஸ்லிம்களும் இந்திய ஆக்கிரமிப்பு இராணுவத்தினரின் கைகளினால் படுகொலைசெய்யப்பட் டுள்ளனர். எமது விடுதலை இயக்கத்தின் தீர்க்கமான கெரில்லாப்போர் முறைக்கு முகம்கொடுக்கமுடியாது திணறிவரும் இந்திய இராணுவம் அப் பாவிப் பொதுமக்களின் உயிரையும் உடமைகளையும் நாசம் செய்து வருகிறது. அண்மையில் வல்வெட்டித்துறையில் 71 அப்பாவித் தமிழ் மக்கள் அநியாயமாகப் படுகொலை செய்யப்பட்ட சம்பவம் இந்திய இராணுவத்தின் கட்டுப்பாடற்ற வெறியாட்டத்திற்கு ஒரு சிறந்த உதாரணம்.

கொலை, கொள்ளை, சிறைவைப்பு, சித்திரவதை, பாலியல் வன் முறை போன்று இந்திய இராணுவம் புரிந்த அட்டூழியங்களை எல்லாம் உலக மனிதஉரிமை நிறுவனங்கள் ஆதாரபூர்வமாக ஆவணப்படுத்தி யுள்ளன. இந்திய இராணுவம் தமிழர் தாயகத்தில் ஒரு அழிவுசக்தியாகச் செயற்பட்டு ஒரு அப்பட்டமான இனக்கொலையை புரிந்துவருகிறதே தவிர, இந்திய அரசு கூறிவருவதுபோல அமைதியைப் பேணவில்லை.

இந்திய ஆக்கிரமிப்பு இராணுவம் தமிழர் தாயகத்திலிருந்து வெளி யேற்றப்படுவதையே தமிழ் முஸ்லீம் மக்கள் விரும்புகிறார்கள். இந்திய இராணுவத்தலையீடு நிறுத்தப்பட்டு, இந்திய ஆக்கிரமிப்புப்படைகள் வெளியேற்றப்பட்டால்தான் சமாதானத்திற்கும் சகஜ நிலைக்கும் வழி பிறக்குமென எமது மக்கள் கருதுகிறார்கள், பெரும்பான்மையான சிங் கள மக்களும் இதே கருத்தைக் கொண்டுள்ளார்கள். சிங்கள தேசத் திலும் இந்திய ஆக்கிரமிப்பு இராணுவம் வெளியேறவேண்டுமென பெரும் கிளர்ச்சிகள் வெடித்துள்ளன.

மிகவும் விரைவாக, ஒரு குறுகியகால வரம்பிற்குள் இந்திய இரா ணுவம் வெளியேறவேண்டும் என சிறீலங்கா அரசாங்கம் இந்தியாவிடம் பல தடவைகள் வேண்டுகோள் விடுத்திருக்கிறது. ஆனால் இந்திய அரசோ இவ்விவகாரத்தில் சாக்குப் போக்குகள் சொல்லி, முன்நிபந் தனைகள் விதித்து, இழுத்தடிப்புக் கொள்கையைக் கடைப்பிடித்து வரு கிறது. தனது இராணுவ ஆக்கிரமிப்பிற்கு நியாயங்களைக் கற்பிக்க முயல்கிறது. இதிலிருந்து, இந்தியாவுக்கு இப் பிரதேசத்தில் வல்லாதிக்க நலன்கள் இருக்கிறது என்பது தெட்டத்தெளிவாகிறது.

இந்தியாவின் இராணுவத் தலையீடும், ஆதிக்க விஸ்தரிப்புக் கொள்கையும், பயமுறுத்தல்களும் தென்னாசியாவின் சிறிய, பலம் குன் றிய நாடுகளின் சமாதானத்திற்கும் ஸ்திர நிலைக்கும் பங்கம் விளைவிப் பதாக அமைந்துள்ளது. இந்தியாவின் இந்த வல்லாதிக்க அணுகுமுறை யானது அணிசேரா இயக்கத்தின் அடிப்படை இலட்சியங்களுக்கு முர ணானதாகும்.

நிபந்தனையற்ற முறையில் தனது இராணுவ நடவடிக்கைகளை நிறுத்தி படைகளை உடன் வாபஸ்பெறுமாறு அணிசேரா நாடுகளின் சார்பில் இந்தியாவை வற்புறுத்துமாறு உங்களைக் கேட்டுக்கொள் கிறேன்.

வே. பிரபாகரன்
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்

# இந்திய அரசாங்கம் புரிந்த மிகப்பெரிய வரலாற்றுத் தவறு

**குறிப்பு:**

**இந்திய இராணுவம் தமிழீழ மண்ணிலிருந்து வெளியேறியதை அடுத்து, 1-4-1990-ல் தலைவர் பிரபாகரன் யாழ்ப்பாணத்தில் பத்திரிகையாளர்களைச் சந்தித்தபோது வெளியிட்ட அறிக்கையை இங்கு தருகிறோம். இந்த அறிக்கையில் இந்திய இராணுவத்தலையீடு பற்றி எடுத்து விளக்கியிருக்கும் தலைவர், "எமது மக்கள் எந்த அந்நிய சக்தியிலும் தங்கியிராது தமது உரிமைகளைத் தாமே போராடி வென்றெடுக்கவேண்டும்" என வலியுறுத்தியுள்ளார். தமிழரின் தேசிய பிரச்சினைக்கு உருப்படியான தீர்வு எதையும் முன்வைக்காமல் விடுதலைப் புலிகளிடம் ஆயுதங்களைக் களைய முனைந்தமை இந்தியா புரிந்த மிகப்பெரிய வரலாற்றுத் தவறு என்பதையும் அவர் சுட்டிக் காட்டினார்.**

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்,
1 - 4 - 1990.

அன்புடையீர்,

இன்று எமது விடுதலைப் போராட்டம் ஒரு புதிய வரலாற்றுத் திருப்பத்தை எதிர்கொண்டு நிற்கிறது.

இந்திய இராணுவத் தலையீட்டை நாம் வெற்றிகரமாக முறியடித்துள்ளோம். இந்திய ஆக்கிரமிப்பு இராணுவம் எமது தாய் மண்ணிலிருந்து முற்றாக வெளியேறிவிட்டது. இந்திய வல்லாதிக்க தலையீட்டிற்கு ஒரு முடிவு காணப்பட்டமை எமது விடுதலைப் போராட்டத்திற்குக் கிட்டிய ஒரு மகத்தான வெற்றியாகும். ஏனென்றால், எமது விடுதலைப்போராட்டத்தை நசுக்கி, அப்போராட்டத்தின் எழுச்சி வடிவமான எமது இயக்கத்தை அழித்து விடவே இந்திய இராணுவம் இங்கு அனுப்பப்பட்டது. இந்த நோக்கத்தை நிறைவேற்றும் முகமாகவே இந்தியா எம்மீது முழு அளவிலான ஒரு யுத்தத்தைக் கட்டவிழ்த்து விட்டது.

இந்த யுத்தமானது உலக வரலாற்றிலேயே ஒரு முக்கியம் வாய்ந்த நிகழ்வு. ஆசியாவின் ஒரு பெரிய வல்லரசை எதிர்த்து, ஒரு பாரிய இராணுவ சக்தியை எதிர்த்து இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக நாம் இரத்தம் சிந்திப் போராடினோம். இந்த யுத்தத்தில் எமது போராளிகளும் பொது மக்களும் செய்துள்ள அற்புதமான தியாகங்கள் உலக வரலாற்றில் ஓர் ஒப்பற்ற வீர காவியமாகப் பொறிக்கப்பட்டுவிட்டது. ஒடுக்கப்படும் மக்களின் நியாயபூர்வமான போராட்டத்தை, அவர்களின் சுதந்திர தாகத்தை எந்தவொரு சக்தியாலும் அடக்கிவிடவோ, அழித்துவிடவோ முடியாது என்பதை இந்த யுத்தத்தில் நாம் ஈட்டிய வெற்றி உலகிற்கு ஓர் உன்னத உதாரணமாக அமைந்துவிட்டது.

இந்தியாவின் இராணுவத் தலையீடும், அதன் விளைவாக ஏற்பட்ட பேரழிவுகளும் தமிழீழ மக்களுக்கு ஒரு நல்ல பாடத்தைப் புகட்டியிருக்கிறது. அதாவது நாம் எந்த அந்நிய சக்திகளிலும் தங்கியிராது, எமது உரிமைகளை நாமே போராடி வென்றெடுக்க வேண்டும் என்பதுதான் இந்தப் பாடம். இந்திய அரசுக்குத் துணைபோன துரோகக் கும்பல்களும் இந்த அரசியல் உண்மையை இப்பொழுது உணர்ந்திருப்பார்கள் என நம்புகிறேன்.

நாம் இந்திய அரசுக்கோ, இந்திய மக்களுக்கோ விரோதிகள் அல்லர். முந்திய இந்திய அரசின் தவறான கொள்கையையும், இராணுவத் தலையீட்டையுமே நாம் எதிர்த்தோம். எமது பிரச்சினையில் இந்திய அரசு இராணுவ ரீதியாகவோ அல்லது அரசியல் ரீதியாகவோ தலையிடுவதை நாம் விரும்பவில்லை. எமது மக்களின் நியாயபூர்வமான போராட்டம் இந்தியாவின் அரசியல் பூகோள நலன்களுக்கோ அல்லது உள்நாட்டு ஸ்திரநிலைக்கோ பங்கம் விளைவிக்காது என்பதை டில்லி ஆட்சிபீடம் உணரவேண்டும். இந்தப் புரிந்துணர்வின் அடிப்படையில் புதிய இந்திய அரசு எமது இயக்கத்துடன் நல்லுறவை வளர்த்துக்கொள்ள முன்வரவேண்டும். எமது மக்களின் நியாயபூர்வமான போராட்டத்திற்கு இந்திய அரசும், இந்திய மக்களும் ஆதரவையும் அங்கீகாரத்தையும் வழங்கவேண்டும் என்பதே எமது விருப்பம்.

சுமார் ஒருவருட காலமாக சிறீலங்கா அரசுடன் நாம் சமாதானப் பேச்சுக்களை நடத்திவருகிறோம். இந்தப் பேச்சுக்கள் பரஸ்பர நம்பிக்கையுடன் ஆக்கபூர்வமான முறையில் முன்னேற்றம் கண்டுவருவதை

யிட்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். இந்த சமாதானப் பேச்சுக்களின் பயனாக இன்று தமிழீழத்தில் அமைதியும் சகஜ நிலையும் தோன்றியிருக்கின்றன. இனவொடுக்குமுறை யாலும், இராணுவ அடக்குமுறையாலும் தமிழ் பேசும் மக்களின் பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியாது என்பதனை இன்றைய சிறீலங்கா அரசு உணர்ந்திருப்பது போலத் தெரிகிறது.

ஜனாதிபதி பிரேமதாசாவின் துணிச்சலான புதிய அணுகுமுறை காரணமாகவே இன்று இந்த நல்ல சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்த அமைதிநிலை நீடித்து எமது மக்கள் சுதந்திரமாக, கௌரவமாக, பாதுகாப்பாக வாழவேண்டும் என்பதே எமது விருப்பம். இது சிங்கள அரசியல் தலைவர்களதும், சிங்கள மக்களதும் பார்வையையும், அணுகு முறையையும் பொறுத்திருக்கிறது. வரலாற்று ரீதியாக எமது மக்களுக்கு இழைக்கப்பட்ட பாரிய அநீதிகளையும் தவறுகளையும் சிங்கள மக்கள் நன்குணர்ந்து மனித நீதியின் அடிப்படையில், மனித தர்மத்தின் அடிப்படையில் எமதுபிரச்சினைக்குத் தீர்வுகாண முயற்சிக்கவேண்டும்.

எமது மக்களுக்கு நீதிவழங்க மறுத்து மீண்டும் எம்மீது அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்படுமானால் நாம் எமது மக்களின் சுதந்திரத்தையும் பாதுகாப்பையும் நிலைநாட்ட ஆயுதம் ஏந்திப் போராடுவதற்கு சிறிதேனும் தயங்கமாட்டோம். நாம் நீண்ட காலமாக ஆயுதப்போர் வடிவத்தில் எமது போராட்டத்தை முன்னெடுத்து வந்திருக்கிறோம். ஆயினும் வரலாற்று சூழ்நிலைக்கும், காலத்தின் கட்டாயத்திற்கும் ஏற்ப எமது போராட்ட வடிவங்களில் மாறுதல்கள் ஏற்பட்டும் வந்தன. எமது இலட்சியப் பாதையில் இப்படியான வடிவ மாற்றங்கள் எழுவது சகஜம். இன்று எமது கட்சியமைப்பைக் கட்டி எழுப்பி சனநாயக அரசியல் வடிவத்தை தழுவிக் கொள்ள நாம் தீர்மானித்திருக்கிறோம். எமது விடுதலை இயக்கத்தை மக்கள் இயக்கமாக விரிவுபடுத்தி புலிகளே தமிழீழ மக்களின் உண்மையான பிரதிநிதிகள் என்பதை நாம் உலகிற்கு எடுத்துக் காட்டுவோம்,

சனநாயக அரசியல் மரபுக்கு நாம் விரோதமானவர்கள் அல்லர். எமது மக்களின் அடிப்படையான சனநாயக அரசியல் உரிமைகளுக்காகவே நாம் போராடி வருகிறோம். சமூகநீதியும் சனநாயக சுதந்திரங்களும் தழைத்தோங்கும் ஓர் உன்னத சமுதாயத்தை கட்டியெழுப்புவதே எமது அரசியல் இலட்சியமாகும். இந்த இலட்சியத்திற்கு இடை யூறாகவுள்ள ஒடுக்குமுறை வடிவங்களை முற்றாகக் களைந்தெறிய சிறீலங்கா அரசு முன்வரவேண்டும். அப்பொழுதுதான் அரசியல் நீரோட்டத்தில் உண்மையான சனநாயக தர்மம் மலர முடியும்.

எமது மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் ஒரு உருப்படியான நிரந்தரமான அரசியல் தீர்வை முன்வைக்காமல் ஆயுதங்களை கையளிக்குமாறு இந்திய அரசு எம்மை நிர்ப்பந்தித்தது. இதனால் ஒரு பெரிய யுத்தமே வெடித்தது. முழு அளவிலான இராணுவ பலத்தைப் பிரயோகித்தும் ஆயுதங்களை களைந்துவிடும் நோக்கில் இந்திய வல்லரசானது பெரிய தோல்வியைத்தான் சந்தித்தது. நீண்ட காலமாக ஒடுக்கப்பட்டு இன அழிவை எதிர் கொண்டு வந்த எமது மக்களின் உரிமைகள் பற்றியோ, நலன்கள் பற்றியோ, பாதுகாப்பு பற்றியோ எந்த வித அக்கறையும் காட்டாமல் எமது மக்களின் பாதுகாப்பு அரணாக விளங்கிய ஆயுதங்களைப் பறித்தெடுக்க வேண்டும் என்பதில் மட்டும் இந்திய அரசு கண்ணும் கருத்துமாக இருந்தது. இந்திய அரசு இழைத்த இமாலயத் தவறு இது. இந்தத் தவறுக்கான கசப்பான வரலாற்று அனுபவத்தை இந்திய அரசு பெற்று விட்டது. இந்தியா இழைத்த இந்தப் பெரும் தவறை சிறீலங்கா அரசும் செய்யமாட்டாது என்றே நாம் நம்புகிறோம்.

சிறீலங்கா ஆயுதப் படைகளுக்கும் விடுதலைப் புலிவீரர்களுக்கும் மத்தியில் இப்பொழுது போர்நிறுத்தம் நிலவுகிறது. எனினும் எமது மக்களின் அடிப்படைப் பிரச்சினைகளுக்கு இன்னும் தீர்வு ஏற்படவில்லை. எமது மக்களின் பொருளாதார

வாழ்வு சீர்குலைந்த நிலையில் இருக்கிறது. யுத்த அழிவுகளால் எமது கிராமங்களும், பட்டினங்களும் சுடுகாடுபோல் காட்சி அளிக்கின்றன. எமது மக்களுக்கு எதிராக ஏவப்பட்ட ஒடுக்குமுறை வடிவங்கள் முற்றாக இன்னும் நீங்கிய பாடில்லை. அரச பயங்கரவாதத்தால் ஏற்பட்ட இவ்வடுக்கள் இன்னும் மாறிவிடவில்லை. எமது மக்கள் தமது பாதுகாப்புக் குறித்து இன்னும் அஞ்சிய நிலையில் வாழ்ந்து வருகிறார்கள். இந்தச் சூழ்நிலையில் விடுதலைப் புலிகள் ஆயுதங்களைக் கையளிக்கவேண்டும் என சிங்கள இனவாதப் பத்திரிகைகள் குரல் எழுப்பி வருவதைக் காண வேதனையாக இருக்கிறது.

ஆயுதங்களைக் கையளிக்க வேண்டும் என்ற கோரிக்கை எழுப்பாமல், எதற்காக எமது விடுதலை இயக்கம் ஆயுதங்களை ஏந்தியது, எதற்காக நாம் பதினைந்து ஆண்டுகாலத்திற்கு மேலாக ஆயுதப் போராட்டத்தை நடத்தினோம். இதற்கான காரணிகள் என்ன என்பதை சிங்கள மக்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆயுதப் போராட்டம் தோன்றி வளர்ந்த எதார்த்தப் புறநிலைகளை ஆராய்ந்து பார்த்து அதன் காரணிகளை நீக்கிவிட உருப்படியான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டால் ஆயுதப் பிரச்சினை தானாகத் தீர்ந்துவிடும்.

அதனைவிடுத்து ஆயுதங்களைப் போட்டதும் இனப்பிரச்சினை தீர்ந்துவிடும் எனக் கருதுவது மிகத் தவறான கண்ணோட்டமாகும். பூதாகாரமாக வளர்ந்துவிட்ட இனப்பிரச்சினையும், அதனால் எழுந்த சுதந்திர வேட்கையின் புரட்சிகர வெளிப்பாடாகவே ஆயுதப் போர்வடிவம் தோற்றங்கண்டது. ஆகவே இனப்பிரச்சினை சுமுகமாகத் தீர்க்கப்படாதவரை ஆயுதப் பிரச்சினை தீரப்போவதில்லை. இதனை சிறீலங்கா ஆட்சியாளர்களும் சிங்கள மக்களும் தெளிவாகப் புரிந்துகொள்வார்கள் என நம்புகிறேன்.

எமது மக்களுக்கு ஒரு சுபீட்சமான எதிர்காலத்தையும், நிரந்தரமான அமைதியையும், சுதந்திரமான வாழ்க்கையையும் பெற்றுக் கொடுப்பதற்கு எமது விடுதலை இயக்கம் தொடர்ந்து போராடும்.

இன்று எமது மக்களின் நம்பிக்கை நட்சத்திரமாகத் திகழ்வது எமது இயக்கம்தான். எமது இயக்கத்தை ஒரு பலம் பொருந்திய தேசியசக்தியாக கட்டியெழுப்புவதற்கு தமிழ் மக்கள் எமது இயக்கத்தின் பின்னால் அணிதிரள வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறேன்.

□□□

# எமது விடுதலைப் போராட்டத்தின் ஓர் இருண்ட அத்தியாயம்



குறிப்பு:

கொழும்பில் வெளியாகும் ஆங்கில வார இதழான ''சண்டே ரைம்ஸ்'' ஏட்டிற்கு தலைவர் பிரபாகரன் அளித்த பேட்டியை இங்கு பிரசுரிக்கிறோம். இந்தப் பேட்டி 8-04-1990 இதழில் வெளியாகியது.

கேள்வி:

இந்த யுத்தத்தில் நீங்கள் வெற்றி பெற்றுவிட்டீர்கள் என்றுதான் கருத வேண்டும். இந்த வெற்றிபற்றி உங்களது உணர்வலைகளை விபரிக்க முடியுமா?

பதில்:

எனது மக்கள்பற்றியும், எனது தேசம் பற்றியும், எனது இயக்கம் பற்றியும் நான் பெருமிதம் கொள்கிறேன்.

கேள்வி:

இனியும் தனியரசு அமைக்கும் இலட்சியத்திற்காகத் தொடர்ந்து போராடுவீர்களா? அல்லது அதிலும் குறைந்த மாற்றுத் திட்டம் ஒன்றை ஏற்றுக்கொள்வீர்களா?

பதில்:

அரசின் திட்டமிட்ட ஒடுக்குமுறை காரணமாகவே நாம் சுயநிர்ணய உரிமைக்காகவும், அரசியல் சுதந்திரத்திற்காகவும் போராட்டத்தில் குதித்தோம். நாம் எமது சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத்தை கைவிடவில்லை. எமது இயக்கத்துடன் நிபந்தனையற்ற முறையில் பேச்சுக்களை நடத்துவதற்கு ஜனாதிபதி முன்வந்தார். இந்தப் புதிய அணுகுமுறை காரணமாக நாம் பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டுள்ளோம். ஆயினும் எமது மக்களுக்கு எதிராக ஒடுக்குமுறை தொடருமானால் நாம் எமது சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத்தை தொடர ஆயத்தமாயிருக்கிறோம்.

கேள்வி:

நீங்கள் தேர்தலில் பங்கு கொள்வீர்களா?

பதில்:

இல்லை நான் தேர்தலில் பங்கு கொள்ளப்போவதுமில்லை. நிர்வாக அமைப்பில் பதவி, பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளப்போவதுமில்லை,

கேள்வி:

அப்படியானால் உங்களது பங்கு என்னவாக இருக்கும்?

பதில்:

நான் எமது இராணுவ அமைப்பின் தளபதியாகவும், இயக்கத்தின் தலைவராகவும் செயற்படுவேன்.

கேள்வி:

அரசாங்கத்துடன் நீங்கள் நடத்தும் பேச்சுக்கள் எப்படி நகர்கிறது?

பதில்:

இதுவரையும் பேச்சுக்கள் நல்லெண்ணத்துடன் ஆக்கபூர்வமான முறையில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இதுவரையும் பேச்சுக்களில் எவ்வித முரண்பாடுகளும் தோன்றவில்லை,

கேள்வி:

அரசியல் அமைப்பின் ஆறாவது சட்டத் திருத்தம் நீக்கப்படவேண்டும் என்ற உங்களது கோரிக்கையை வலியுறுத்துவீர்களா?

பதில்:

ஆறாவது சட்டத் திருத்தம் அகற்றப்படவேண்டியதன் அவசியம்பற்றி நாம் ஜனாதிபதியிடம் எடுத்துக்கூறியுள்ளோம். இதுகுறித்து அரசாங்கம் ஒரு அரசியல் சட்டத்திருத்தத்தை கொண்டுவருமென நாம் எதிர்பார்க்கிறோம்.

கேள்வி:

இந்த சட்டத் திருத்தத்தை கொண்டு வர அரசாங்கத்திற்கு மூன்றில் இரண்டு பெரும்பான்மை பலம் வேண்டும் அல்லவா?

பதில்:

தமிழ்க் கட்சிகளதும் முஸ்லிம் காங்கிரஸினதும் ஆதரவுடன் ஆறாவது சட்டத் திருத்தத்தை நீக்கிவிடலாமென அரசு நம்புகிறது.

கேள்வி:

ஜே.வி.பி.யினருக்கு என்ன நடந்தது என்பதை நீங்கள் அறிவீர்கள். இந்த நிலையில், நீங்கள் கொழும்புக்கு பாது காப்பாக செல்வது சாத்தியமாகுமா?

பதில்;

நான் கொழும்புக்கு செல்வதுபற்றி இன்னும் முடிவு எதுவும் எடுக்க வில்லை. என்னைக் கொழும்புக்கு செல்ல வேண்டாமென ஆலோசனை வழங்கி பொதுமக்களிடமிருந்து ஏராளமாக கடி தங்கள் வந்துகொண்டிருக்கின்றன.

கேள்வி:

உங்களது போராட்ட வரலாற்றில் ஒரு இருண்ட நாளாக எதைக் கருதுகிறீர் கள்?

பதில்:

இந்திய இராணுவம் எமது தாயக மண்ணில் காலடி எடுத்துவைத்த தினத்தையே எமது போராட்டத்தின் இருண்ட நாளாக நான் கருதுகிறேன். எமது போராட்டத்தில் இந்திய இராணு வம் தலையீடு செய்தது ஒரு இருண்ட அத்தியாயம் என்றே சொல்லவேண்டும்.

கேள்வி:

இந்தியத் தலையீட்டிற்கு நீங்கள் தயா ராக இருந்தீர்களா? அல்லது அதனால் அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தீர் களா?

பதில்:

இந்திய இராணுவத் தலையீடு குறித்து நாம் அதிர்ச்சியும் அடைய வில்லை, ஆச்சரியமும் கொள்ளவில்லை. இந்தியா இப்படியான தலையீட்டில் இறங்குமென நாம் எதிர்பார்த்தோம். இந் தியாவின் பூகோள-கேந்திர குறிக்கோள்கள் என்னவென்பதை நாம் நன்கு அறிவோம். இந்தியாவின் நோக்குகள்பற்றி நாம் முன்பே அறிந்துகொண்டதால்தான் இந்தியாவின் சவாலை நாம் எதிர்கொள்ளமுடிந்தது.

கேள்வி:

இந்தியாவின் குறிக்கோள் என்ன வென்று கருதுகிறீர்கள்?

பதில்:

தமிழரின் தேசியப் பிரச்சினையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி சிறீலங்காவைத் தனது ஆதிக்க வியூகத்திற் குள் கொண்டுவருவதுதான் இந்தியாவின் குறிக்கோள்.

கேள்வி:

இந்தியாவிற்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் மத்தியில் முரண்பாடு எழுந்ததற்கான பின்னணியை விளக்கு வீர்களா?

பதில்:

விடுதலைப் புலிகளை நிராயுதபாணி கள் ஆக்குவதே இந்தியாவின் உட னடியான இராணுவ நோக்காக அமைந் தது. இதனை நாம் அறிவோம். தமிழர் பிரச்சினைக்கு ஒரு நியாயமான உருப்படி யான தீர்வை முன்வைக்காமல் புலிகளிட மிருந்து பலாத்காரமாக ஆயுதங்களைக் களைவதற்கு முனைந்தமைதான் இந்தியா செய்த பெரும் தவறு.

இரண்டாவதாக, நாம் ஆயுதங்களைக் கையளித்துக்கொண்டிருந்த வேளையில் இந் தியாவின் புலனாய்வுத் துறையினர்(றோ) எமக்கு விரோதமான தமிழ்க் குழுக்களுக்கு பயிற்சியும் அளித்து ஆயுதங்களையும் வழங் கினர். இது இந்தியா எமக்குப் புரிந்த துரோ கச்செயல் என்றே நாம் கருதுகிறோம்.

மூன்றாவதாக, சிறீலங்கா அரசு தமிழ்ப் பகுதிகளில் சிங்களக் குடியேற்றத் திட்டங் களை விஸ்த்தரிக்கவும், அரச நிர்வாக அமைப்புகளை கட்டவும் இந்திய இராணு வம் ஒத்துழைத்தது. தமிழர் பிரதேசத்தில் புதிதாக சிங்கள காவல்துறைப் பணிமனை

களைத் திறந்து குடியேற்றத் திட்டங்களை அரசு ஆரம்பித்ததை ஆட்சேபித்தே திலீபன் தனது சாகும்வரை உண்ணாவிரதப் போராட்டத்தை தொடங்கினான். திலீபனது சாவைத் தடுப்பதற்கு இந்தியா ஒன்றுமே செய்யவில்லை.

இறுதியாக, எமது தளபதிகளும் போராளிகளுமாக 17 பேர் கைதாகிய போது, அவர்களை விடுதலை செய்வதற்குப் பதிலாக சிங்கள அரசிடம் கையளிக்க இந்தியா முன்வந்தது. இவ் விவகாரத்தில், தமிழ் மக்களின் நலனில் இந்தியஅரசு எவ்வித அக்கறையும் காட்டவில்லை.

கேள்வி:

இந்தியாவின் தலையீட்டினால்தான் நீங்கள் இன்றைய உன்னத நிலையை அடைந்தீர்கள் என்று சொல்லலாம் அல்லவா? இந்திய படைகள்இங்கு வந்ததால் தான் தென்னிலங்கையில் ஜே. வி. பி யின் எளர்ச்சி தலைதூக்கியது. அதனால் தான் அரசாங்கம் புலிகளுடன் பேச்சுக்களை நடத்தவேண்டிய நிர்ப்பந்தத்திற்குள் தள்ளப்பட்டது.

பதில்:

நாம் அப்படிக் கருதவில்லை. இந்தியாவினதும் சிறீலங்காவினதும் மூல உபாயத்தின் நோக்குகள் வேறு. ஆனால் நடந்தது வேறு. எல்லாமே பிழைத்துப் போனது. திட்டங்கள் தகர்ந்து போயின. இந்தத் தோல்விகளின் விளைவாகவே இன்றைய வரலாற்று சூழ்நிலை உருவாக்கம் பெற்றது.

கேள்வி:

எது எப்படி இருந்தபோதும் இந்தியத் தலையீடு புலிகளுக்கு உதவியது என்று சொல்லலாம் அல்லவா?

பதில்:

இந்தியாவினதும், சிறீலங்காவினதும் நோக்குகளும் குறிக்கோள்களும் வித்தியாசமானவை. எமது விடுதலை இயக்கத்தின் சொந்த முயற்சிகள் காரணமாகவே இத்திட்டம் செயலிழந்தது. இந்திய - புலிகள் யுத்தத்தின் முதல்நாள் அன்றே என்னைக் கொலைசெய்துவிட இந்தியா முயற்சி செய்தது. எனது வசிப்பிடத்தைச் சுற்றி வளைக்க ஒரு விசேட சிக்கிய அதிரடிப் படையணியை இந்தியா ஏவிவிட்டது. இந்தியர்களின் இத்திட்டம் வெற்றிபெற்று நான் கொலைசெய்யப்பட்டிருந்தால் என்ன நடந்திருக்கும்? அப்படி நிகழ்ந்திருந்தால் இந்தியாவின் மூலத்திட்டம் வெற்றிபெற்றிருக்கும் அல்லவா?

கேள்வி:

இந்திய அமைதிப்படை இங்கு வராது போனால் வட - கிழக்கில் நீங்கள் இத்தகைய கட்டுப்பாட்டுப் பலத்தைப் பெற்றிருக்க முடியுமா?

பதில்:

இந்திய இராணுவத் தலையீட்டிற்கு முன்னரே நாம் வட - கிழக்கின் பல் வேறு பகுதிகளை எமது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருந்தோம். யாழ்ப்பாண நகருக்குள் நுழைவதற்கு உலகின் மிகப்பெரிய இந்திய இராணுவத்திற்கு இரு வாரங்கள் பிடித்தது. யாழ்ப்பாணக் குடாநாட்டைக் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டுவர ஒருமாத காலம் பிடித்தது.

கேள்வி:

ஆயினும் கிழக்கு மாகாணம், குறிப்பாக திருக்கோணமலை முன்பில்லாதவாறு இப்பொழுது உங்களது கட்டுப்பாட்டின்கீழ் உள்ளது அல்லவா?

பதில்:

கிழக்கின் பல பகுதிகள் நீண்ட காலமாகவே எமது கட்டுப்பாட்டின்கீழ் இருந்து வந்திருக்கிறது.

கேள்வி:

இந்த யுத்தத்தில் ஏற்பட்ட உயிரிழப்புக்கள்பற்றி என்ன கருதுகிறீர்கள்?

பதில்:

விடுதலைப் போராட்டங்களில் உலக கடங்கிலுமுள்ள ஒடுக்கப்படும் மக்கள் பேரழிவுகளைச் சந்தித்து வருகிறார்கள் என்பது வரலாற்று உண்மை. அதேபோலவே ஒடுக்கப்பட்ட எமது மக்களும் இழப்புகளையும் அழிவுகளையும் சந்தித்தார்கள். விடுதலைப் போரில் இது தவிர்க்கமுடியாதது. எமது போராட்டம் அர்த்தமுடையது. வரலாற்று முக்கியத்துவம்கொண்டது. நீண்டகாலமாக நாம் போராடிய காரணத்தினால் தான் இப்பொழுது சிறீலங்கா அரசு எமது போராட்டத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்திருக்கிறது.

கேள்வி:

தமிழ்த் தீவிரவாதக் குழுக்கள் மத்தியில் ஒற்றுமை நிலவியிருந்தால் தமிழரது இலட்சியம் முன்னேற்றம் கண்டிருக்கும் அல்லவா? உங்கள் மத்தியில் ஏன் ஒற்றுமை நிலவவில்லை?

பதில்:

எம்மத்தியில் ஒற்றுமை நிலவியிருந்தால் எமது போராட்டம் பெரிய அளவில் முன்னேற்றம் கண்டிருக்கும் என்பது உண்மைதான். எமக்கு மத்தியில் ஒற்றுமையீனம் எழுந்தது துரதிர்ஷ்டமானது. ஒரு சாபக்கேடு என்றே சொல்லலாம். இதனை ஒரு வேதனைக்குரிய விடயமாகவே நான் கருதுகிறேன். முரண்பாடும், ஒற்றுமையீனமும் காரணமாக நாம் எமது சகோதரர்களை அழிக்க நிர்ப்பந்திக்கப்படுகிறோம். சில தமிழ்க் குழுக்கள் எமது போராட்ட இலட்சியத்திற்கு துரோகம் இழைத்த காரணத்தாலேயே இந்த முரண்பாடும் மோதலும் எழுந்தன.

கேள்வி:

இந்த ஒற்றுமையீனம் காரணமாக மீண்டும் பிரச்சினைகள் தலைதூக்கலாம் அல்லவா?

பதில்:

அது சாத்தியம் என்று சொல்லலாம். சில தமிழ்க் குழுக்கள் எம்மத்தியில் ஊடுருவல்செய்து பிரச்சினைகளை உருவாக்கலாம். எனினும் இப்பிரச்சினைகளைத் தடுத்து நிறுத்தலாம் என நாம் நம்புகிறோம். உலகடங்கிலும் இத்தகைய பிரச்சினைகள் எழத்தான் செய்கின்றன. எல்லா அரசுகளும் எதிர்ப்பைச் சந்திக்கவேண்டித்தான் இருக்கிறது. சிறீலங்காவில் ஜே.வி.பியின் பிரச்சினை தோன்றவில்லையா?

கேள்வி:

உங்களது போராட்ட வரலாற்றை பின் நோக்கிப் பார்க்கும்பொழுது, 1983 ஜூலையில், திருநெல்வேலியில் 13 இராணுவத்தினர் கொல்லப்பட்டதன் விளைவாக இலங்கை பூராகவும் பெரும் கலவரம் வெடிக்குமென எதிர்பார்த்தீர்களா?

பதில்:

இல்லை அப்படியானதொரு பூகம்பமான இனக்கலவரம் வெடித்துப் பரவும் என நாம் எதிர்பார்க்கவில்லை.

கேள்வி:

உங்களது போராட்டப் பாதையில் பல தமிழ் அரசியல்வாதிகள் அழிக்கப்பட்டுவிட்டனர். இப்பொழுது மிகவும் பலம் வாய்ந்த சக்தியாக உருப்பெற்றுள்ள உங்களது இயக்கத்துடன் அரசாங்கம் பேச்சுக்களை நடத்துகிறது. இதுதான் சமாதானத்திற்கு கிடைத்த இறுதி சந்தர்ப்பம் என நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில்:

நீண்டகாலமாக சிறீலங்கா அரசாங்கத்துடன் நாம் நேரடிப் பேச்சுக்களை நடத்தவில்லை. மத்தியஸ்தர்கள் மூலமாகவே பேச்சுக்கள் நடந்தன. இப்பொழுது தான் முதல்தடவையாக விடுதலைப் புலிகள் இயக்கத்திற்கும் சிறீலங்கா அரசுக்கும் மத்தியில் நேரடிப் பேச்சுக்கள் நடக்கின்றன, எனவே, எம்முடன் பேசி பிரச்சினைகளைத்

தீர்ப்பதற்கு நல்லதொரு சந்தர்ப்பம் அரசுக்குக் கிடைத்திருக்கிறது. இது ஒரு இறுதியான சந்தர்ப்பமாகவும் அமையலாம்.

கேள்வி:

மிகவும் இறுக்கமான, மிகவும் கட்டுப்பாடான இராணுவ அமைப்பாக இயங்கி வந்த உங்களது இயக்கம் நெகிழ்ச்சியுடைய அரசியல் இயக்கமாக மாற்றமடையப் போவதில் ஏதாவது பிரச்சினைகள் எழலாம் என நீங்கள் கருதுகிறீர்களா?

பதில்:

எமது இராணுவ அமைப்பு உருவாக்கம் பெற்றதற்கு அரசியல் புறநிலைகள்தான் காரணம். நாம் ஒரு அரசியல் இலட்சியத்திற்காகவே ஆயுதம் ஏந்திப் போராடுகிறோம். எனவே, அரசியலுக்கும் இராணுவத்திற்கும் மத்தியில் வேறுபாட்டை நாம் காண்பதில்லை. எமது அரசியல் இலட்சியத்தை நாம் அடைந்தபின்னர் இராணுவப் போராட்டம் ஒரு முடிவுக்குவரும். அதனையடுத்து இராணுவ அமைப்பு தன்னிச்சையாகவே செயலிழந்து கலைந்துவிடும்.

கேள்வி:

எந்த முறையிலான அரசியல் ஆட்சியமைப்பு உங்கள் தேசத்தில் உருவாக வேண்டுமென நீங்கள் விரும்புகிறீர்கள்?

பதில்:

சுயநிறைவான, தன்னில்தானே தங்கி நிற்கும் பொருளாதார வாழ்வுடைய சமூகமாக எமது தேசம் உருவாகவேண்டும் என்பதே எனது விருப்பம். மக்கள் தம்மைத் தாமே ஆளும் உரிமையுடைய சனநாயக ஆட்சிமுறையையே நான் விரும்புகிறேன். இந்தப் புதிய சமூகத்தில் உழைக்கும் மக்கள் மத்தியில் பொருளாதார சமத்துவம் நிலவவேண்டும்.

கேள்வி:

வட - கிழக்கில், உங்கள் மக்கள் மத்தியிலும், போராளிகள் மத்தியிலும் நீங்கள் ஒரு வீர புருஷனாக மதிக்கப்படுகிறீர்கள். உங்களைப்பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்:

நான் எனது மக்களுக்காகப் போராடும் ஒரு விடுதலைப் போராளி.

□ □ □

# அபாரமான தன்னம்பிக்கையே எம்மிடமுள்ள பலமும் பலவீனமும்



குறிப்பு:

பிரபல சர்வதேச அரசியல் சஞ்சிகையான 'டைம்ஸ்' இதழுக்கு தலைவர் பிரபாகரன் அளித்த பேட்டியை இங்கு தருகிறோம். 9.4.1990 இதழில் இப் பேட்டி வெளியாகியது. பிரபல இந்தியப் பத்திரிகையாளரான அனிதா பிரதாப் முல்லைத்தீவுக்காட்டில் தலைவரைச் சந்தித்து இப் பேட்டியைக் கண்டார்.

கேள்வி:

இந்தியாவுடன் நீங்கள் மோதவேண்டி ஏற்பட்டதற்குக் காரணம் என்ன என்பதை விளக்குவீர்களா?

பதில்:

தமிழ் மக்களின் நலனைப் பேணுவதற்காக சிறீலங்காவில் தான் தலையிட நேர்ந்ததுஎன இந்தியா கூறிக்கொள்கிறது. ஆனால் உண்மையில் இந்தியா தனது சொந்தநலனைப் பேணுவதற்காகவே எமது பிரச்சினையில் குறுக்கிட்டது. தமிழர் பிரச்சினையைப் புரிந்துகொண்டு அதற்குத் தீர்வு காண இந்தியா முயற்சிக்கவில்லை.

இலங்கையின் இனப்பிரச்சினையை நெருக்கடி மிகுந்ததாக உருவாக்குவதற்கு இந்தியஅரசு திட்டமிட்டுச் செயற்பட்டது. விடுதலைப் புலிகள் உட்பட தமிழ் அமைப்புகளுக்கு பயிற்சியும் அளித்து ஆயுதங்களையும் வழங்கியது. இதன்மூலம் ஆயுதப் போரைத் தீவிரப்படுத்தி சிறீலங்கா அரசை நிலைகுலையச்செய்தது. இலங்கையைத் தனது வல்லாதிக்க வியூகத்தினுள் கொண்டு வரும் நோக்கில் இந்தியா இத்தகைய நடவடிக்கைகளை மேற்கொண்டது. தமிழ் மக்களைப் பாதுகாப்பதாகக் கூறிக்கொண்டு, தமிழரின் பிரச்சினையில் தலையிட்டு, பின்னர் தமிழருக்கு எதிராக ஒரு யுத்தத்தை ஏவிவிட்ட இந்தியாவின் இந்த நயவஞ்சக நடவடிக்கையை நாம் மன்னிக்க முடியாது. யுத்தம் ஆரம்பமாகி மூன்றாவது நாள் நான் இந்தியஅரசிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தேன். தமிழ் மக்களுக்கு பெரும் உயிர்ச்சேதம் ஏற்பட்டதால் இந்த யுத்தத்தை நிறுத்துமாறு கோரினேன். இந்த சமாதான சமிக்கையை இந்தியா தவறாகப் புரிந்துகொண்டது. எமது பலவீனத்தின் அறிகுறி எனக் கருதியது. இந்தத் தப்பான மதிப்பீட்டின் அடிப்படையில் யுத்தத்தை மேலும் தீவிரப்படுத்தி எம்மை நசுக்கிவிட முனைந்தது.

கேள்வி:

இலங்கையின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் ஒரு உறுதியான கொள்கையை இந்தியா நீண்டகாலமாகவே கடைப்பிடித்துவந்தது உங்களுக்கு தெரியும் அல்லவா?

பதில்:

இந்தக் கொள்கையை இந்தியா கடைப்பிடித்தற்கு காரணமுண்டு. தானே இலங்கையின் பாதுகாவலன் என உலகத்திற்கு எடுத்துக்காட்டி, இந்தப் பிராந்தியத்தில் அந்நிய வல்லரசுகளின் தலையீட்டை தடுத்துநிறுத்துவதற்காக இந்தியா இந்த நிலைப்பாட்டை எடுத்தது.

கேள்வி:

இலங்கைத் தமிழரின் பிரச்சினையை பயன்படுத்தி தனது நலனை முன்னெடுக்க இந்தியா முனைந்தது என நீங்கள் உணர்த்திருக்கலாம். ஆனால் அதே வேளை, நீங்களும் இந்தியாவிடம் இருந்து பயிற்சியையும் ஆயுதங்களையும்பெற்று இந்தியாவை உங்கள் நலனுக்காக பயன்படுத்தவில்லையா?

பதில்:

ஆம். நாங்களும் இந்தியாவை பயன்படுத்தினோம். இந்தியாவின் தந்திரோபாயம் என்னவென்பது எமக்கு நன்கு தெரியும். நாமும் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி எம்மை இராணுவ ரீதியில் பலப்படுத்தினோம்.

கேள்வி:

உலகத்தின் மூன்றாவது மிகப் பெரிய இராணுவத்தை எதிர்கொண்டு போராட உங்களுக்கு துணிவு பிறந்தது எப்படி?

பதில்:

சிங்கள ஆயுதப் படைகள் கைது செய்த எமது தளபதிகளை விடுதலைசெய்ய இந்தியா தவறிவிட்டதால் அவர்கள் தற்கொலைசெய்து மரணித்தார்கள். அவர்களது சாவால் பிறந்த வைராக்கியமே என்னிடம் இந்தியா இராணுவத்துடன் மோதும் துணிவை பிறப்பித்தது.

மூத்த உறுப்பினரான தோழர்கள் சிலர் என்னை எச்சரிக்கை செய்தார்கள். எவ்வளவு காலம்தான் இந்திய இராணுவத்துடன் தாக்குப்பிடிக்க முடியுமென சந்தேகம் கிளப்பினார்கள். நான் அவர்களிடம் வியட்னாம் போராட்டத்தை உதாரணமாகக் காட்டினேன். உறுதியும் இலட்சியப் பற்றும் இருந்ததால் ஒரு சிறிய நாடு ஒரு பெரிய வல்லரசை எதிர்த்துப் போராடி வெற்றிகொள்ள முடிந்தது என்பதைச் சுட்டிக்காட்டினேன்.

இந்திய இராணுவத்துடன் மோதுவதற்கு முடிவெடுத்த வேளையில் வெற்றி தோல்வி என்ற பிரச்சினைபற்றி நான் அலட்டிக்கொள்ளவில்லை. இந்த யுத்தத்தை எதிர்கொள்ளும் உறுதியும் துணிவும் எம்மிடம் உண்டா என்பதுபற்றியே சிந்தித்தேன். தோல்வி ஏற்படலாம் என்ற அச்சத்தில் ஒரு மக்கள் இனம் தனது இலட்சியத்தையும் உரிமைகளையும் விட்டுக் கொடுப்பதில்லை.

**கேள்வி:**

இதிலிருந்து இந்தியா ஏதாவது பாடத்தைக் கற்றுக்கொண்டுள்ளது என நினைக்கிறீர்களா?

**பதில்:**

எந்தவொரு பலம்வாய்ந்த இராணுவ சக்தியாக இருப்பினும், ஒரு மக்கள் இனத்தின் விருப்பிற்கு மாறாக எதையும் பலவந்தமாக திணித்துவிடமுடியாது என்ற பாடத்தை இந்தியா கற்றிருக்கலாம்.

**கேள்வி:**

இந்த யுத்தத்தில் எவ்வகையான கெரில்லா யுக்திகள் உங்களுக்கு மிகவும் பயனை அளித்தது என்று சொல்ல முடியுமா?

**பதில்:**

நாம் பாவித்த நிலக்கண்ணிகள் பெரும் வெற்றிகளைத் தந்தன. இதனால் இந்திய இராணுவம் பெரும் உயிர்ச் சேதத்தை சந்தித்தது.

**கேள்வி:**

உங்களது கணிப்பீட்டில் இந்திய இராணுவத்தின் பலம் என்ன? பலவீனம் என்ன?

**பதில்:**

அவர்களது பிரமாண்டமான ஆட்பலம்தான் அவர்களது பலமாகவும், பலவீனமாகவும் அமைந்தது. இந்திய இராணுவத்தின் ஆட் பலத்தால் எமக்கு பல சிக்கல்கள் எழுந்தன. எமது நடமாட்டம் பெரிதும் கட்டுப்படுத்தப்பட்டது. ஆனால் அதேவேளை, அவர்கள் பெரும்தொகையில் நகர்ந்ததால் அவர்களுக்கு பெரிய அளவில் உயிர்ச்சேதம் ஏற்பட்டது. அத்துடன் பெரும் தொகையான படையினருக்கு விநியோகம் செய்வதில் அவர்களுக்கு பெருமளவு நேரமும், பணமும், சக்தியும் விரயமாகியது. அத்துடன் இந்திய இராணுவத்திற்கு போராடும் உறுதி இருக்கவில்லை. இதுவே அவர்களது இன்னொரு பெரிய பலவீனம். எதற்காக சண்டையிடுகிறோம் என இந்திய சிப்பாய்களுக்குப் புரியவில்லை. இவ்விடயத்தில் அவர்களுக்குப் பெருங்குழப்பம் இருந்தது. அவர்கள் தமிழர்களைப் பாதுகாக்க வந்தார்கள். பின்னர் தமிழர்களையே கொல்லும்படி பணிக்கப்பட்டார்கள். இது அவர்களுக்கு குழப்பத்தை ஏற்படுத்தியது.

**கேள்வி:**

விடுதலைப் புலிகள் இயக்கத்தின் பலம், பலவீனம்பற்றி உங்களது மதிப்பீடு என்ன?

**பதில்:**

அதீத தன்னம்பிக்கைதான் எமது பலமும் பலவீனமாகவும் அமைந்தது. எமது போராளிகள் அதீத துணிச்சலுடன் மிகவும் ஆபத்தான செயற்பாடுகளில் இறங்கினார்கள். உதாரணமாக, தப்பிச்செல்ல வழிகள்

இல்லாதபோதும் இந்தியப் படையணிகளை ஒழித்திருந்து தாக்கினார்கள். இத்தகைய நடவடிக்கைகளால் எமக்குப் பெரிய உயிர்ச் சேதம் ஏற்பட்டது. ஆனால் அதேவேளை, மிகவும் அபாரமான தன்னம்பிக்கையுடன் எமது போராளிகள் வியக்கத்தக்க வீர சாதனைகளையும் புரிந்திருக்கிறார்கள்.

கேள்வி:

பொதுமக்களுக்கு உயிர்ச்சேதம் ஏற்படு வதைத் தடுக்கும் நோக்கில், இந்திய இராணுவம் ஒரு கையை பின்னால் கட்டியபடி போராடியது என இந்தியா கூறுகிறதே.

பதில்:

ஒரு கையை பின்னால் கட்டியபடி, இந்திய இராணுவம் எமது மக்கள் மீது இத்தகைய கொடுமைகளைச் செய் தார்கள் என்றால், இருகைகளாலும் எத் தகைய அட்டூழியங்களைப் புரிந்திருப்பார் கள் என்பதை நினைத்துப்பார்க்கவே நெஞ்சு நடுங்குகிறது.

தோற்றுப்போன ஒரு இராணுவத்தின் விதண்டாவாதம் இது. இந்திய இராணுவம் தன்னால்முடிந்த சகல யுக்திகளையும் கையாண்டது என்பதுதான் உண்மை. 250 கிலோ குண்டுகளைவீசி ஆகாயப்படை அனர்த்தம் செய்தது. அத்துடன் கண்மூடித் தனமாகப் பீரங்கித் தாக்குதலையும் நடத் தியது. மிருகத்தனமான முறையில் மக்கள் இம்சைப்படுத்தப்பட்டார்கள்.

கேள்வி:

இந்திய இராணுவத்துடன் நீங்கள் புரிந்த போரில் 6,000 அப்பாவித் தமிழ்மக்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள். இதனால் என்ன பயன் ஏற்பட்டது?

பதில்:

எமது மக்களின் சுதந்திரத்தில் எந்த ஒரு சக்தியையும் தலையிட அனுமதி யோம் என்பதை நாம் நீரூபித்துக் காட்ட வில்லையா?

கேள்வி:

இதனால் நீங்கள் என்ன நன்மை அடைந்தீர்கள்?

பதில்:

எமக்கு தன்னம்பிக்கையும் துணிவும் ஏற்பட்டிருக்கிறது. மக்களின் ஆதர வும் பெருகியிருக்கிறது.

கேள்வி:

சிறீலங்கா ஜனாதிபதி பிரேமதாசாவுடன் ஏன் பேச்சுவார்த்தைகளை ஆரம்பித்தீர் கள்?

பதில்:

இந்தியா தமக்கு ஒரு தனியரசு பெற் றுத்தரும் என எமது மக்கள் நம்பி யிருந்தார்கள். ஆனால் இந்தியா எமது மக் களின் அபிலாசைகளுக்கு மாறாக, அவர் களைக் கலந்தாலோசிக்காமல் சிறீலங்கா வுடன் சேர்ந்து ஒரு ஒப்பந்தத்தைச் செய் தது. எனவே, நாம் சிறீலங்கா அரசுடன் நேரடியாகப் பேச முடிவெடுத்தோம். தமி ழர் பிரச்சினைக்கு ஏதாவது உருப்படியான தீர்வு காண முடியுமா என முயற்சித்துப் பார்க்கிறோம். எமது மக்கள்மீது ஒரு அந் நிய வல்லரசு ஆதிக்கம் செலுத்துவதை நாம் விரும்பவில்லை. பிரேமதாசாவும் இதே நிலைப்பாட்டைக் கொண்டிருந்தார். அந் நிய சக்திகளின் தலையீட்டை ஒரு முடி வுக்குக் கொண்டுவருவதே அவரது நோக்க மாக இருந்தது.

கேள்வி:

இப்பொழுது இந்திய இராணுவம் உங்க ளது மண்ணிலிருந்து வெளியேறிவிட் டது. ஆகவே மீண்டும் உங்களது வர லாற்று எதிரியான சிங்கள அரசுடன் நீங்கள் மோதுவது தவிர்க்கமுடியாதது எனப் பலர் கருதுகிறார்கள். உங்கள் கருத்து என்ன?

பதில்;

எமது மக்களுக்கு எதிரான அரச ஒடுக்குமுறையானது நீண்ட வரலாற் றைக் கொண்டது. முன்பு தமிழர்கள் பேச்

சுக்களை நடத்தினார்கள். ஆனால் தொடர்ச்சியாக ஏமாற்றப்பட்டார்கள். இந்த துரோகத்தனத்தின் விளைவாகவே தமிழரின் ஆயுதப் போராட்டம் பிறந்தது. தமிழ் மக்களுக்கு எதிராக சிறீலங்கா அரசு மீண்டும் ஒடுக்குமுறையை ஆரம்பித்தால் நாம் மீண்டும் போராடத் தயங்கமாட்டோம். ஆயினும் இன்றைய சமாதான சூழ்நிலை தொடரும் என்றே நாம் நம்புகிறோம்.

கேள்வி:

தமிழ் மக்களின் பிரச்சினைக்கு பிரேமதாசா தீர்வு காண்பார் என நீங்கள் நம்புகிறீர்களா?

பதில்:

அந்த நம்பிக்கையின் அடிப்படையில் தான் பேச்சுக்களை நடத்துகிறோம்.

கேள்வி:

மாகாண சபைத் தேர்தலில் பங்கு கொள்ள உங்களுக்கு உண்மையான அக்கறையுண்டா?

பதில்:

எமக்கு உண்மையான அக்கறையுண்டு. நாமே எமது மக்களின் உண்மையான பிரதிநிதிகள் என்பதை உலகத்திற்கும் குறிப்பாக இந்தியாவுக்கும் எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

கேள்வி:

அப்படியானால் தமிழீழத் தனியரசுக் கோரிக்கையைக் கைவிட்டுள்ளீர்களா?

பதில்:

நாம் கைவிடவில்லை.

கேள்வி:

அப்படி என்றால் பிரேமதாசாவுடன் எது பற்றிப் பேசுகிறீர்கள். பிரிவினைவாதக் கோரிக்கையை இறுகப் பற்றியபடி சனநாயக அரசியல் நீரோட்டத்தில் உங்களால் எப்படி இறங்கமுடியும்?

பதில்:

நாம் அரசியல் நீரோட்டத்தில் இறங்கப்போவது உண்மை. இந்த அரசியல் நீரோட்டத்தில் இறங்குவதற்கு எமது சுயநிர்ணய உரிமைக் கோரிக்கை ஒரு முட்டுக்கட்டையாக இருக்குமென நான் கருதவில்லை.

கேள்வி:

ஒரு அரசியல் யுக்தியாகவே நீங்கள் பிரேமதாசாவுடன் பேசுவதாகப் பலர் சந்தேகிக்கிறார்கள்.

பதில்:

நாம் ஒருவரையும் ஏமாற்றவும் இல்லை. துரோகம் இழைக்கவும் இல்லை. ஆனால் அதேவேளை எம்மை யாரும் ஏமாற்றினால் அல்லது துரோகம் இழைத்தால் நாம் பதிலடி கொடுக்கத் தயங்கமாட்டோம். எம்மை யாராவது நம்பினால், நாமும் நம்பிக்கையாக நடப்போம்.

□□□

# அன்னை பூபதியின் தியாகம் உலக வரலாற்றில் ஒப்பற்றது

குறிப்பு:

அன்னை பூபதியின் நினைவு தினத்தை முன்னிட்டு தலைவர் விடுத்த அறிக்கை.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.
தமிழீழம்,
*19 - 04 - 1990*

எனது அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய தமிழீழ மக்களே!

இன்று நாம் ஒரு மகத்தான தியாகியை, அந்தத்தியாகியின் அற்புதமானஅர்ப்பணிப்பை நினைவு கூர்ந்து, எமது இதய அஞ்சலியைச் செலுத்தி நிற்கின்றோம்.

எமது புனித விடுதலைப்போராட்டத்தில் வரலாற்றுக் காவியமாகிவிட்ட எமது தியாகிகளில் அன்னை பூபதி ஓர் உன்னத இடத்தைப் பெறுகிறார்.

ஒரு பெண்ணாக, ஒரு தாயாக, ஒரு குடும்பத்தின் தலைவியாக, வாழ்ந்து வந்த சாதாரண வாழ்க்கையைத் துறந்து, சாதாரண பற்று உறவுகளைத்துறந்து, தனது சமூகத்தின் சுபீட்சத்திற்காக, தனது இனத்தின் விடுதலைக்காக அவர் தனது உயிரை அர்ப்பணித்தார்.

அவரது தியாகம் ஒப்பற்றது, உலக வரலாற்றிலேயே புதுமையானது.

இந்திய இராணுவ அடக்குமுறைக்கு எதிராக அவர் தொடுத்த அறப்போர் காந்திய தேசத்தைத் தலைகுனியவைத்தது. தனிமனிதப் பிறவியாக அவர் சாகவில்லை, தமிழீழத் தாய்க்குலத்தின் எழுச்சி வடிவமாக அவரது தியாகம் உன்னதம் அடைந்தது.

அதனாலேதான் இன்றைய தினத்தை, அன்னை பூபதியின் இரண்டாவது ஆண்டு நிறைவு தினத்தை, தேசிய எழுச்சி நாளாக, இந்திய ஆக்கிரமிப்பு இராணுவம் எமது மண்ணிலிருந்து விரட்டப்பட்ட வெற்றி நாளாகக் கொண்டாடுகிறோம்.

எமது தேசிய விடுதலைப் போராட்டம் எத்தனையோ சோதனைகளைச் சந்தித்து, எத்தனையோ நெருக்கடிகளை எதிர்கொண்டு, எத்தனையோ திருப்பு முனைகளுக்கு முகம் கொடுத்து, வெற்றிகரமாக முன்னேற்றம் கண்டு வருகிறது, வரலாற்று ரீதியாகப் பார்க்கும் பொழுது நாம் சந்தித்த நெருக்கடிகளில் மிகவும் பார

தூரமானதென்றால், மிகவும் ஆபத்தான தென்றால் அது இந்திய இராணுவ ஆக்கிரமிப்பு என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்தியத் தலையீடானது எமது சுதந்திரப் போராட்டத்திற்கு எதிராக எழுந்த மிகப் பெரிய சவாலாக அமைந்தது. முதன் முதலாக எமது போராட்ட வரலாற்றில் ஒரு வல்லரசின் நேரடி இராணுவத் தலையீட்டைச் சந்தித்தோம். ஒரு அந்நிய தேசத்து ஆக்கிரமிப்புப் படையைச் சந்தித்தோம்.

எமது மண் ஆக்கிரமிக்கப்பட்டபோது, எமது மக்கள்மீது ஒரு முழு அளவிலான யுத்தம் ஏவி விடப்பட்டபோது, எமக்காகக் குரல் கொடுக்கவோ அல்லது எமக்கு உதவி அளிக்கவோ எந்த ஒரு உலக நாடும் முன் வரவில்லை. உலக வல்லரசுகளும் மூன்றாம் உலக நாடுகளும் இந்திய தலையீட்டை ஆதரித்து நின்றன. ஜெயவர்த்தனா தலைமையிலான அன்றைய சிங்கள அரசும் இந்தியாவுடன் இணைந்து செயற்பட்டது. எமது சகோதர இயக்கங்களும் எட்டப்பர்களாக மாறி இந்தியாவுக்குத் துணை போயின.

நாம் தனித்து நின்று இந்தியத் தலையீட்டை எதிர்த்தோம். நாம் தனித்து நின்று உலகின் மிகப்பெரிய இராணுவத்தை எதிர்த்தோம். நாம் தனித்து நின்று எமது தேசிய சுதந்திரத்தீயை அணைய விடாது போராடினோம், இறுதியில் நாம் வெற்றி கண்டோம். இந்த வெற்றிக்குக் காரணம் எமது மனம்தளராத உறுதி, சாவுக்கும் அஞ்சாத எமது வீரம், சத்தியத்திலும் தர்மத்திலும் எமக்குள்ள நம்பிக்கை.

இந்த வெற்றியானது தமிழீழ மக்களாகிய உங்கள் வெற்றி, உங்கள் குழந்தைகளாகிய எமது போராளிகளின் வெற்றி, உங்கள் இயக்கமாகிய விடுதலைப்புலிகள் இயக்கத்தின் வெற்றி.

இந்திய வல்லாதிக்கம் விடுத்த சவாலை வெற்றி கொண்டு இன்று எமது விடுதலை இயக்கம் ஒரு புதிய வரலாற்றுத்திருப்பத்தில் நின்றுகொண்டிருக்கிறது. மலைபோல மக்கள் சக்தி எமக்குப் பின்னால் இருக்கும் வரை எந்தப் புதிய சவாலையும் நாம் சந்திக்கத் தயார்.

இலட்சியத்தால் ஒன்றுபட்ட எழுச்சி கொண்ட மக்களை எந்த ஒரு சக்தியாலும் ஒடுக்கிவிட முடியாது.

இன்றைய எழுச்சி தினத்தில் இந்திய இராணுவ அரக்கனை எதிர்த்துப் போராடி உயிர்நீத்த எமது தியாகிகளையும் மக்களையும் நினைவில்நிறுத்தி அவர்களுக்கு எமது வீர அஞ்சலியைத் செலுத்துவோமாக.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# இந்திய வல்லரசை எதிர்க்கும் ஆன்ம திடத்தைத் தந்த நிகழ்வு

**குறிப்பு:**

**தளபதிகள் புலேந்திரன், குமரப்பா உட்பட பன்னிரண்டு மாவீரர்களின் மூன்றாம் ஆண்டு நினைவு தினத்தை முன்னிட்டு தலைவர் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.**

**தலைமைச் செயலகம்,**
**தமிழீழ விடுதலைப் புலிகள்,**
**தமிழீழம்.**
**6-10-1990**

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

இன்றைய தினம் எமது சுதந்திரப் போராட்ட வரலாற்றில் ஒரு முக்கிய தினம். மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இன்றைய தினத்தில் தமிழீழத் தேசம் என்றுமில்லாத ஒரு பேரிழப்பைச் சந்தித்தது. அன்று எமது விடுதலை இயக்கத்தின் வீரத் தளபதிகளான குமரப்பா, புலேந்திரன் உட்பட பன்னிரண்டு மாவீரர்களை இழந்து நாம் இரத்தக் கண்ணீர் வடித்தோம்.

இவர்களது இழப்பால் தமிழீழத் தேசமே சோகத்தில் மூழ்கியது. ஆயினும் இவர்களது மரணம் எமது மனதைப் பீடித்திருந்த மாயைகளைச் சாகடித்தது. போலி நம்பிக்கைகளைக் கொன்றது. எமது மக்களின் நியாயபூர்வமான போராட்டத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்த விரோத சக்திகள் யார் என்ற உண்மையையும் எமக்கு உணர்த்திக் காட்டியது. எனவே இந்தப் பேரிழப்பு என்றுமில்லாதபடி ஒரு புதிய விழிப்புணர்வையும், சுதந்திர வேட்கையையும் எமக்குத் தந்தது. நாம் எந்த அந்நிய சக்தியிலும் தங்கியிருக்கக்கூடாது, எமது சுதந்திரத்தை நாமே போராடி வென்றெடுக்க வேண்டும் என்ற அபாரமான சுயநம்பிக்கையை இவர்களது சாவு எமக்குக் கொடுத்தது. இந்த வகையில் இம் மாவீரர்களின் உயிர்த்தியாகம் எமது விடுதலைப் போராட்ட வரலாற்றில் பெரியதொரு திருப்புமுனையாக அமைந்தது என்றுதான் சொல்ல வேண்டும். இந்த மாவீரர்களின் மரணத்தை அடுத்து இந்திய இராணுவம் எமது இயக்கம்மீது போர் தொடுத்தது. உலகத்தின் மிகப்பெரிய இராணுவம் ஒன்றை நாம் எதிர்த்து நின்று போராடினோம். பெரியதொரு வல்லரசை எதிர்த்து நின்று போராடும் அளவிற்கு ஆன்மீக திடத்தையும், அசையாத நம்பிக்கையையும்

எமக்குப் பெற்றுக் கொடுத்தது இந்தப் பன்னிரண்டு மாவீரர்களின் அற்புதமான தியாகமாகும்.

இந்திய - இலங்கை அரசுகளின் கூட்டுச் சதிக்கு இந்த இளம்புலி வீரர்கள் மரணமானார்கள். ஆனால் அவர்களது மரணம் சாதாரண சோக நிகழ்வு அல்ல. தமிழீழத் தேசிய இனத்தின் சுதந்திர எழுச்சியைத் தூண்டிவிட்ட ஒரு வரலாற்று நிகழ்வாகவே அமைந்தது.

இழப்புகளும் அழிவுகளும் ஒரு விடுதலைப் போராட்டத்தில் சர்வ சாதாரண நிகழ்வுகள்.

நாம் எத்தனையோ இழப்புகளையும் அழிவுகளையும் சந்தித்துள்ளோம்; சந்தித்தும் வருகிறோம். ஆனால் இந்த இழப்புகளும், அழிவுகளும் எமது ஆன்ம உறுதிக்கு உரமாக அமைந்து விட்டால் உலகத்தில் எந்தவொரு சக்தியாலும் எம்மை அடக்கிவிட முடியாது.

இன்று நாம் எமது வரலாற்று எதிரியை யுத்தகளத்தில் சந்தித்து நிற்கிறோம். எமது எதிரியானவன் தனது முழு ஆயுத பலத்தையும் பிரயோகித்து ஓர் இனக் கொலை யுத்தம் நடத்திவருகிறான்.

எதிரியிடம் ஆயுத பலமுண்டு. ஆட்பலமுண்டு, ஆதரவளிக்க நாடுகளுண்டு. நாம் தனித்து நின்று போராடுகிறோம். எமக்கு எந்த நாட்டின் உதவியுமில்லை. ஆனால் எமக்குள்ள ஒரேயொரு பலம் எமது ஆத்ம பலம்தான்.

ஆகாயத்திலிருந்து விழும் குண்டுகள் எமது கட்டடங்களை அழிக்கலாம், வீடுகளை அழிக்கலாம், கோவில்கள், பாடசாலைகளை அழிக்கலாம். ஆனால் எத்தகைய குண்டு வீச்சும் எமது மனோ பலத்தை அழித்துவிட முடியாது.

இன்று எதிரி ஆட்டம்காண்கிறான். பல யுத்த அரங்குகளிலிருந்து பின்வாங்கி ஓடுகிறான். எமது போராளிகளின் உருக்குப் போன்ற உறுதியும், வீரமும், தியாகமும், இலட்சியப்பற்றும் எதிரியின் மனோ பலத்தை உடைத்துவருகிறது.

நாம் உறுதியுடன் தொடர்ந்து போராடுவோம். எமது தாயகப்பூமியை, எதிரியிடமிருந்து மீட்டெடுத்து, சுதந்திரத் தமிழீழம் அமைக்கும்வரை நாம் தொடர்ந்து போராடுவோம். எமது மடிந்த மாவீரர்களின் கனவை நனவாக்க நாம் தொடர்ந்து போராடுவோம்.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY

# மாவீரர்களின் இரத்தத்தால் எமது வரலாறு எழுதப்படுகிறது

குறிப்பு:

மாவீரர்கள் தினத்தை முன்னிட்டு 27-11-1990 அன்று தலைவரால் விடுக்கப்பட்ட அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

*தலைமைச் செயலகம்,*
*தமிழீழ விடுதலைப் புலிகள்,*
*தமிழீழம்.*
*27 - 11 - 1990*

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

தமிழீழ தேசிய சுதந்திரப்போரில் வீர மரணத்தைத் தழுவிக்கொண்ட எமது விடு தலை வீரர்களின் இரண்டாம் ஆண்டு நினைவு நாளாக கார்த்திகை 27 ஆம் நாள் நினைவு கூரப்படுகின்றது. இதுவே எமது தேசிய நாளுமாகும்.

எமது வீர சுதந்திர வரலாறு இந்த மாவீரர்களின் இரத்தத்தால் எழுதப்பட் டிருக்கிறது. இவர்களது இறப்புக்கள் அர்த் தமற்ற இழப்புக்கள் அல்ல. இந்த வீரர் களின் சாவுகள் எமது சரித்திரத்தையே இயக்கும் உந்து சக்தியாக, எமது போராட் டத்தின் உயிர்மூச்சாக, எமது போராளி களின் உறுதிக்கு உத்வேகமளிக்கும் ஊக்கு சக்தியாக அமைந்துவிட்டது இந்த மாவீரர் கள் காலத்தால் சாகாத சிரஞ்சீவிகள்; சுதந்திரச் சிற்பிகள்; எமது மண்ணிலே ஒரு மாபெரும் விடுதலை எழுச்சிக்கு வித்திட் டுச் சென்ற வீரமறவர்கள். எமது இனத் தின் சுதந்திரத்திற்காக, பாதுகாப்பிற்காக தமது இன்னுயிரை அர்ப்பணித்துள்ள இந்த மகத்தான தியாகிகள் காலம் கால மாக எமது இதயக்கோவிலில் பூசிக்கப்பட வேண்டியவர்கள்.

ஒரு விடுதலை வீரன் சாதாரண வாழ்க்கையை வாழும் ஒரு சாதாரண மனிதப்பிறவி அல்ல. அவன் ஒரு இலட்சிய வாதி. ஒரு உயரிய இலட்சியத்திற்காக வாழ் பவன், தனக்காக வாழாமல் மற்றவர்களுக் காக வாழ்பவன். மற்றவர்களின் விடிவுக் காக, விமோசனத்திற்காக வாழ்பவன். சுய நலமற்ற, பற்றற்ற அவனது வாழ்க்கை உன்னதமானது, அர்த்தமானது, சுதந்திரம் என்ற உன்னத இலட்சியத்திற்காக அவன் தனது உயிரையும் அர்ப்பணிக்கத் துணிகி றான். எனவே, விடுதலைவீரர்கள் அபூர்வ மான மனிதப் பிறவிகள். அசாதாரண மான பிறவிகள்.

ஒரு விடுதலை வீரனின் சாவு, ஒரு சாதாரண மரண நிகழ்வு அல்ல. அந்தச் சாவு, ஒரு சரித்திர நிகழ்வு. ஒரு உன்னத இலட்சியம் உயிர்பெறும் அற்புதமான நிகழ்வு. உண்மையில் ஒரு விடுதலைவீரன் சாவதில்லை. அவனது உயிராக இயங்கி வந்த இலட்சியநெருப்பு என்றுமே அணைந்துவிடுவதில்லை. அந்த இலட்சிய

13980.

நெருப்பு ஒரு வரலாற்றுச் சக்தியாக மற்ற வர்களைப் பற்றிக்கொள்கிறது. ஒரு இனத் தின் தேசிய ஆன்மாவை தட்டி எழுப்பி விடுகிறது.

தமிழீழ சுதந்திரப்போர் இன்று ஆசி யாக் கண்டத்தில் முதன்மையான விடுத லைப் போராட்டமாக சர்வதேசப் புகழ் அடைந்திருக்கிறது. மூன்றாம் உலகில் ஒடுக் கப்படும் இனங்களுக்கும், அடக்கப்படும் மக்களுக்கும் எமது புரட்சிகர ஆயுதப் போராட்டம் ஒரு முன்னுதாரணமாக, வழி காட்டியாக அமைந்திருக்கிறது. சிங்கள ஆயுதப் படைகளையும் உலகின் மிகப் பெரிய இந்தியப் படைகளையும் தனித்து நின்று போராடி எமது மாவீரர்கள் படைத்த மகத்தான சாதனைகள் இன்று உலக வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கிறது. நீண்டதும், கடினமான தும், அபாயகரமானதுமான இந்த யுத்தங் களில் எமது விடுதலை வீரர்கள் சந்தித்த இன்னல்களை இடையூறுகளை, துன்பங் களை எழுத்தில் விபரிக்க முடியாது. இரும்பையொத்த இலட்சிய உறுதியுடன், எதையும் தாங்கும் இதயத்துடன், சாவுக்கு அஞ்சாவீரத்துடன் எமது வீரர்கள் போரா டினார்கள். போர்க்களத்தில் வீரமரணத் தைத் தழுவினார்கள்.

நான் உயிருக்கு உயிராக நேசித்த தோழர்கள், என்னுடன் தோளோடு தோள் நின்று போராடிய தளபதிகள், நான் பல் லாண்டு காலமாக வளர்த்தெடுத்த போராளி கள் களத்தில் வீழ்ந்த போதெல்லாம் எனது இதயம் வெடிக்கும். ஆயினும் சோகத்தால் நான் சோர்ந்துபோவதில்லை. இந்த இழப் புக்கள் எனது இலட்சிய உறுதிக்கு மேலும் மேலும் உரமூட்டியிருக்கின்றது.

இந்த மாவீரர்களை நான் கௌரவிக் கிறேன். அவர்களுக்கு சிரம் தாழ்த்தி வணக் கம் செலுத்துகிறேன். அவர்களது தியாகத் தையும், வீரத்தையும், விடுதலைப்பற்றை யும் எண்ணிப் பார்க்கும்போது எனது உள் ளம் பெருமை கொள்கிறது.

இந்த மண்ணின் மைந்தர்களைப் பெற் றெடுத்த பெற்றோர்களையும்நான் போற்று கிறேன். உங்களது குழந்தைகள் தமது உயி ருக்கும் மேலாக தமது தாய் நாட்டின் சுதந் திரத்தை நேசித்தார்கள். இந்த உத்தமமான வர்களை ஒரு புனித இலட்சியத்துக்கு உவந் தளித்த பெற்றோராகிய நீங்கள் நிச்சயம் பெருமை கொள்ள வேண்டும். உங்களது குழந்தைகள் சாகவில்லை, சரித்திரமாகி விட்டார்கள்.

எமது தாய்நாடு விடுதலை பெறவேண் டும். எம்மைப் பிணைத்திருக்கும் அடிமை விலங்குகள் உடைத்தெறியப்பட வேண்டும். எமது மக்கள் சுதந்திரமாக, கௌரவமாக பாதுகாப்பாக வாழவேண்டும். இந்த இலட் சியம் ஈடேற வேண்டுமாயின் நாம் போரா டித்தான் ஆகவேண்டும். இரத்தம் சிந்தித் தான் ஆகவேண்டும்.

நாம் ஒரு இலட்சிய விதையை விதைத் திருக்கிறோம். அதற்கு எமது வீரர்களின் இரத்தத்தால் நீர்பாய்ச்சி வளர்க்கிறோம். இந்த விதை வளர்ந்து விருட்சமாகி எமது மாவீரர்களின் கனவை நனவாக்கும்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# பெண்ணினம் புரட்சி சக்தியாக எழுச்சிகொண்டு நிற்கிறது

குறிப்பு:

அனைத்துலக மகளிர் தினத்தை முன்னிட்டு 8-3-1991 அன்று தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையை இங்கு தருகிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
08-03-1991

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

இன்று அனைத்துலக மகளிர் தினம். முழு உலகமுமே இன்றைய தினத்தை பெண்ணினத்தின் எழுச்சி நாளாகக் கொண்டாடுகிறது. யுகம் யுகமாக ஆணாதிக்க அடக்குமுறையின் கீழ் ஒடுக்கப்பட்டுவந்த பெண்குலம் சம உரிமைக்காக, சமத்துவத்திற்காக, சமூக நீதிக்காக, குரலெழுப்பும் புரட்சிகர தினம் இது. பெண் விடுதலையின் வரலாற்றுத் தேவையையும் அவசியத்தையும் இன்றைய தினம் குறித்து நிற்கிறது.

இந்தப் பெண் எழுச்சி தினம் இன்று தமிழீழம் எங்கும் கொண்டாடப்படுவதையிட்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

எமது சுதந்திர இயக்கத்தின் ஆரம்ப காலம் தொட்டே பெண் விடுதலையை ஒரு பிரதான இலட்சியமாக நாம் வரித்துக் கொண்டோம். பெண்கள் விழிப்புற்று, எழுச்சிகொண்டு, தமது சொந்த விடுதலைக்காகவும் தேசத்தின் விடுதலைக்காகவும் போராட முன்வரும்போதுதான் அந்தப் போராட்டம் ஒரு தேசியப் போராட்டமாக முழு வடிவத்தைப் பெறும் என்ற உண்மையை நாம் அன்று தொட்டே உணர்ந்திருந்தோம்.

நாம் ஒடுக்கப்பட்டுவரும் ஒரு மக்கள் இனம். அந்நியனின் அடக்குமுறையால் நாம் அழிக்கப்பட்டு வந்தபோதும் எமக்குள்ளே, எமது சமூக வாழ்வில் நாம் எம்மவர்களை மோசமான முறையில் அடக்கியொடுக்கி வருகிறோம். இப்படியாக எம் மத்தியில் நிலவிவரும் ஒரு ஒடுக்குமுறை வடிவம்தான் பெண் ஒடுக்குமுறை. பழைமைவாதத்திலும் மூட நம்பிக்கைகளிலும் ஊறிப்போன எமது சமூக அமைப்பில்

நீண்ட நெடுங்காலமாக பெண்ணினம் ஒடுக்கப்பட்டு வருகிறது. எமது வேதாந்தங்களும், மத சித்தாந்தங்களும், மனுநீதி சாஸ்திரங்களும் அந்தக்காலம் தொட்டே பெண்அடிமைத்துவத்தை நியாயப்படுத்தி வந்திருக்கின்றன. ஆணாதிக்கம், சாதியம், சீதனம் என்ற பல்வேறு பரிமாணங்களில் இந்த ஒடுக்கு முறையானது பெண்களின் வாழ்க்கையை ஊடுருவி நிற்கிறது; அவர்களது வாழ்க்கையைச் சிதைத்து வருகிறது.

எமது சமூகத்தின் சனத்தொகையில் பெரும்பான்மை இடத்தை வகிக்கும் பெண்கள் தொடர்ந்தும் அடிமைத்தனத்தில் வாழ்ந்து வந்தால் எமது விடுதலைப் போராட்டத்தை ஒரு தேசிய போராட்டமாக முன்னெடுப்பது கடினம். இதனை உணர்ந்துதான் எமது இயக்கம் பெண் விடுதலையை முதன்மைப்படுத்தியது. பெண்களை அரசியல்மயப்படுத்தி போராட்டத்திற்கு அவர்களை அணி திரட்டியது. இவ்வகையில் நாம் தமிழீழ பெண் சமூகம் மத்தியில் ஒரு பெரிய புரட்சியை நிகழ்த்தியிருக்கின்றோம். தமிழர் வரலாற்றிலேயே நடைபெறாத புரட்சி ஒன்று தமிழீழத்தில் நடைபெற்றிருக்கிறது.

காலம் காலமாக அடுக்களையில் அடங்கிப் போயிருந்த தமிழீழப் பெண்ணினம் இன்று ஆயுதம் ஏந்தி நிற்கிறது. சீருடை தரித்து நிற்கிறது. எதிரியை களத்தில் சந்தித்து நிற்கிறது.

காலம் காலமாக தூங்கிக்கிடந்த பெண்ணினம் இன்று விழிப்படைந்து, எமது போராட்டத்தின் ஒரு புரட்சிகர சக்தியாக எழுச்சிகொண்டு நிற்கிறது.

வீரத்திலும் தியாகத்திலும் விடுதலையுணர்விலும் ஆண்களுக்கு எவ்வகையிலும் சளைத்தவர்கள் இல்லை என்பதை எமது பெண் போராளிகள் தமது வீரசாதனைகள் மூலம் நிரூபித்துக்காட்டியுள்ளனர்.

ஒரு புதுமைப் பெண்ணை, ஒரு புரட்சிகரப் பெண்ணை எமது விடுதலை இயக்கம் படைத்திருக்கிறது.

தமிழீழத்தில் இந்தப் பெண்புரட்சி தொடர வேண்டும். மேலும் மேலும் புரட்சிப் பெண்கள் எமது விடுதலை இயக்கத்தின் பின்னால் அணிதிரள வேண்டும், போராட்டம் மூலமாகவே நாம் தேச விடுதலையையும் பெண் விடுதலையையும் வென்றெடுக்க முடியும்.

நாம் ஒரு சாதாரண சூழலில் ஒரு சாதாரண வாழ்க்கையை வாழவில்லை. நாம் ஒரு போராட்ட சூழலில் வாழ்கிறோம். போராடினால்தான்எமக்கு வாழ்வுண்டு,விடிவுண்டு, வருங்காலம் உண்டு என்ற ஒரு நெருக்கடியான நிர்ப்பந்தத்திற்குள் வாழ்கிறோம். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் போராட்டமே எமது வாழ்க்கையாகவும், வாழ்க்கையே எமது போராட்டமாகவும் மாறிவிட்டது. இந்த எதார்த்தமான வரலாற்று நிர்ப்பந்தத்திலிருந்து யாருமே தப்பிக் கொள்ளமுடியாது. அப்படித் தப்பிக்கொள்ள முனைபவர்கள் தேசாபிமானம் கொண்டவர்கள் அல்லர்.

இன்றைய யுத்தத்தின் தீச் சுவாலைகள் எல்லோரையும் தீண்டிவருகிறது. ஆண் பெண் என்ற வேறுபாடின்றி, சாதிவர்க்க வேறுபாடின்றி, சிறியோர் முதியோர் என்ற வேறுபாடின்றி எல்லோரையும் தீண்டியிருக்கிறது. இது எமது இனத்திற்கு எதிராக, எமது இனத்தை அழிக்கும் நோக்கத்துடன் நடத்தப்படும் யுத்தம். இந்த யுத்தத்தை நாம் அசட்டை செய்ய முடியாது. இந்த யுத்தத்திலிருந்து நாம் ஒதுங்கிக் கொள்ளவும் முடியாது. இந்த யுத்தத்தை நாம் துணிவுடன் எதிர் கொள்வதைத் தவிர எமக்கு வேறு வழி இல்லை.

நாம் ஒன்றுபட்ட மக்களாக ஒரே தேசிய சக்தியாக அணிதிரண்டு எமது எதிரியின் சவாலை எதிர்கொள்ள வேண்டும். மலைபோல உறுதியுடன் நாம் ஒன்று குவிந்து நின்றால் எம்மை எத்தகைய சக்தியாலும் அழித்து விட முடியாது.

இந்த தேசிய ஒற்றுமையையும் இன ஒருமைப்பாட்டையும் ஒரு வலுவான அத்திவாரத்தில் கட்டி எழுப்புவதென்றால் எம்

மத்தியில் நிலவும் ஏற்றத் தாழ்வுகள் ஒழிக்கப்பட வேண்டும். சமூக முரண்பாடு கள் நீக்கப்பட வேண்டும். சமூக அநீதிகள் அழிக்கப்பட வேண்டும். ஆண்- பெண் என்ற பாலியல் அடிப்படையில் தோற்றம் கொண்ட பாரபட்சங்கள் அகற்றப்பட வேண்டும்.

அனைத்து தமிழ் மக்களும் ஒரே இனம் என்ற தேசாபிமான உணர்வுடன் போராட் டத்தில் பங்கு கொண்டால் எமது விடு தலை இலட்சியம் வெற்றி பெறுவது நிச் சயம்.

சமத்துவத்தின் அடிப்படையில் ஒரு சமதர்ம சமுதாயத்தைக்கட்டி எழுப்புவதே எமது போராட்ட இலட்சியம். பெண்கள் சம உரிமை பெற்று, சகல அடக்குமுறைகளி லிருந்தும் விடுதலை பெற்று, ஆண்களுடன் சமத்துவமாக, கௌரவமாக வாழக்கூடிய புரட்சிகரமான சமுதாயமாக தமிழீழம் அமைய வேண்டுமென்பதே எனது ஆவல்.

பெண்களின் எழுச்சி தினமாகிய இன்று உலகப் பெண் இனத்தின் உரிமைப் போராட்டங்களுக்கு எனது ஆதரவையும் ஆசியையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# தன்னிறைவான பொருளாதாரம் தனியரசுக்கு அத்திவாரமானது

**குறிப்பு:**

தமிழீழ பொருண்மிய மேம்பாட்டுக் கழகத்தின் உணவு பதனிடல் பிரிவான 'அர்ச்சயா'வின் முதலாண்டு நிறைவுநாளை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் வழங்கிய வாழ்த்துச்செய்தியை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்.
தமிழீழ விடுதலைப் புலிகள்.
தமிழீழம்.
20-5-1991

அன்புடையீர்,

இன்று தமிழீழ தேசம் 'இரு முனைகளில், இரு வகையான யுத்தங்களைச் சந்தித்து நிற்கின்றது.

ஒன்று, இராணுவ ரீதியான யுத்தம், எதிரியின் ஆக்கிரமிப்பிலிருந்து எமது தாய் மண்ணை மீட்டெடுக்க நாம் நடத்திவரும் தேசிய சுதந்திரப்போர்.

மற்றது, பொருளாதார ரீதியிலான யுத்தம். எதிரியின் பொருளாதாரத் தடைகளையும் அழுத்தங்களையும் உடைத்தெறிந்து சுயசார்பான, தன்னிறைவான பொருளாதார வாழ்வைக் கட்டிஎழுப்ப நாம் நடத்திவரும் உற்பத்திப்போர்.

இந்த இரு முனைப் போராட்டங்களையும் வெற்றிகரமாக முன்னெடுத்தால்தான் நாம் எமது அரசியல் இலட்சியத்தை அடைய முடியும்.

தன்னிறைவான பொருளாதாரம் எமது தேசியவாழ்வுக்கு மூலாதாரமானது. தனியரசு நிர்மாணத்திற்கு அத்திவாரமானது, உணவுப்பொருள்களுக்கும் மற்றும் அத்தியாவசிய தேவைகளுக்கும் சிங்கள தேசத்தில் தங்கியிருந்தபடி தனியரசுகோரிப் போராடுவதில் அர்த்தமில்லை.

நீண்ட நெடுங்காலமாக எமது தாயகப் பூமி ஒரு தன்னிறைவான, தங்குநிலையற்ற பொருளாதார வாழ்வுடைய செழிப்பான நாடாகவிளங்கிவந்தது. அந்நிய காலனித்துவ ஊடுருவல்கள் எமது சுதேசியப் பொருளாதாரக் கட்டுக்கோப்பைச் சீர்குலைத்தன. வெளிநாட்டுப் பண்டங்களும் எமது அந்நிய நுகர்வுப் பழக்கங்களும் எமது மக்கள்மீது திணிக்கப்பட்டன. ஆங்கில ஏகாதிபத்தியம் பெருந் தோட்டப்பொருளாதார அமைப்பை உருவாக்கி, ஒற்றையாட்சி நிர்வாகத்தை

வலுப்படுத்தி, கொழும்புச் சந்தையை மையப்படுத்தியது.

இதனால் தமிழீழ பொருளாதாரம் தனது தனித்துவத்தை இழந்து சீர்குலைந்தது. கொழும்புச் சந்தைக்கு அடிமைப்பட்ட தங்குநிலையான பொருளாதார வாழ்வில் தமிழீழ மக்கள் சிக்குப்பட்டனர். சிங்கள ஆளும் வர்க்கம் இந்த தங்குநிலையான பொருளாதாரத்தை ஊக்குவித்துவந்தது. பொருளாதார ரீதியில் தமிழர்கள் தென்னிலங்கையில் தங்கியிருக்கும்வரை தன்னாட்சி உரிமைப்போராட்டம் வெற்றி பெறாது என்பது சிங்களப் பேரினவாதிகளின் கணிப்பீடு. இதனால்தான் காலத்திற்குக்காலம், விடுதலைப்போராட்டம் கூர்மையடையும்போது தமிழர்கள்மீது பொருளாதார நெருக்குதல்களை உண்டுபண்ண சிங்கள அரசு தயங்குவது இல்லை. இம்முறை இந்தப் பொருளாதார நெருக்குதல் என்றுமில்லாதபடி தீவிரமாக்கப்பட்டது.

சிங்களப் பேரினவாதத்தின் இந்தப் பொருளாதார அச்சுறுத்தல் எமது விடுதலைப் போராட்டத்திற்கு ஏற்பட்ட மாபெரும் சவாலாகும். இந்தச் சவாலை நாம் எதிர்கொண்டு முறியடிக்க வேண்டும். எமது மண்ணில், எமது கால்களில் தங்கி நிற்கும் தன்னிறைவான வாழ்வை நாம் கட்டியெழுப்பவேண்டும். இது இன்றைய வரலாற்றுத் தேவையும்கூட.

சுயசார்புடைய பொருளாதார இலட்சியத்தை நோக்காகக்கொண்டு தமிழீழ ஆய்வு நிறுவனம் உற்பத்திப் போர்க்களத்தில் உருப்படியான, ஆக்கபூர்வமான, திட்டங்களை செயற்படுத்திவருவதையிட்டு நான் மகிழ்ச்சியடைகின்றேன். தமிழீழம் இயற்கைவளங்கள் நிறைந்த பூமி. இந்த வளங்களை இனங்கண்டு, உள்ளூர் உற்பத்தியை விருத்திசெய்து, மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்யும் பொருளாதாரப் பணியில் தமிழீழ ஆய்வு நிறுவனம் பெரும் பங்காற்றும் என்பதில் எனக்கு நிறைய நம்பிக்கை உண்டு. இந்த நிறுவனத்தின் உணவு பதனிடல் பிரிவான ''அர்ச்சயா'' கடந்த ஓர் ஆண்டுகாலத்தில் வியக்கத்தக்க முறையில் பழப்பானங்களைத் தயாரித்து எமது மக்களின் நல்லாசியைப் பெற்றுள்ளது,

முதலாண்டு நிறைவு நாளைக் கொண்டாடும் ''அர்ச்சயா''வின் உற்பத்தி முயற்சிகள் வெற்றிபெற எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# விடுதலைப் போருக்கு உரமூட்டும் புரட்சிகரப் படைப்புகள் தேவை



குறிப்பு:

விடுதலைப் புலிகளின் கலை, பண்பாட்டுக் கழகத்தினர் ஒழுங்குசெய்த முத்தமிழ் விழாவிற்கு வாழ்த்துத் தெரிவித்து 6-6-1991 அன்று தலைவர் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
*6 - 6 - 1991*

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய
தமிழீழ மக்களே,

மொழி, கலை, கலாசாரம் என்பன ஒரு தேசிய இனத்தின் கட்டமைப்பிற்கு தூண்களாக விளங்குகின்றன; ஒரு தேசியத்தின் ஆன்மாவாகத் திகழ்கின்றன; ஒரு தேசிய நாகரிகத்திற்கு அத்திவாரமாக அமைகின்றன.

மொழியும், கலையும், கலாசாரமும் வளம் பெற்று, வளர்ச்சியும் உயர்ச்சியும் அடையும் பொழுதே, தேசிய இனக்கட்டமைப்பு இறுக்கம் பெறுகிறது; பலம் பெறுகிறது. மனித வாழ்வும் சமூக உறவுகளும் மேன்மை பெறுகின்றன; தேசிய நாகரிகம் உன்னதம் பெறுகிறது.

எமது தேசிய இனக் கட்டமைப்பை சிதைத்து, இனரீதியாக எம்மை அழித்துவிட நீண்ட காலமாகவே எமது எதிரியான சிங்கள இனவாத அரசு திட்டமிட்டு செயற்பட்டு வருகிறது. எமது மொழியை அழித்து, எமது கலை, கலாசாரத்தை சீரழித்து, எமது வரலாற்றைத் திரித்து, எமது பொருளாதார வாழ்வை சீர்குலைத்து, காலம் காலமாக நாம் வாழ்ந்து வந்த எமது தாயகப் பூமியை ஆக்கிரமித்து ஒட்டு மொத்தத்தில், எமது தேசிய கட்டமைப்பை சிதைத்துவிட எமது எதிரி கங்கணம் கட்டி நிற்கிறான். இந்த இன ஒழிப்புத்திட்டத்தின் பூதாகாரமான வடிவமாகவே இன்றைய யுத்தம் எமது மக்களுக்கு எதிராக ஏவப்பட்டிருக்கிறது

இந்த இக்கட்டான கால கட்டத்தில் எமது இனத்தின் தேசிய கட்டமைப்பு சீர்குலையாது பாதுகாப்பது எமது விடுதலைப் போராட்டத்தின் பிரதான இலட்சியமாக அமைய வேண்டும். இந்த நோக்கில், எமது தேசியத்தின் ஒற்றுமைக்கும், ஒருமைப்பாட்டுக்கும், கட்டுக்கோப்பிற்கும் முதுகெலும்பாகவுள்ள எமது மொழி, கலை, கலாசாரம் பாதுகாக்கப்பட வேண்டும்; பேணி வளர்க்கப்பட வேண்டும்.

இந்த வரலாற்றுத் தேவையை நன்குணர்ந்து விடுதலைப் புலிகள் இயக்கத்தின் கலை கலாசாரப் பிரிவினர் முத்தமிழ் விழா ஒன்றை பெரிய அளவில் அரங்கேற்ற இருப்பது எனக்கு பெருமகிழ்ச்சியைத் தருகிறது. இந்த முத்தமிழ்விழா எமது தாயகத்தின் வளர்ச்சிக்கும், எமது தேசியத்தின் எழுச்சிக்கும் முனைப்பூட்டுவதாக அமையுமென நம்புகிறேன். இந்தக் கலை நிகழ்வு எமது தேசிய கலாசாரத்தில் ஒரு புரட்சிகரமான மறுமலர்ச்சியை உருவாக்க வேண்டும் என்பதே எனது விருப்பம்.

நான் கலை இலக்கியங்களை மதிப்பவன்; ரசிப்பவன்; கலை இலக்கியப் படைப்பாளிகளை கௌரவிப்பவன்; கலை கலைக்காக அல்லாமல், மக்களுக்காகவே படைக்கப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொண்டவன்.

கலை இலக்கியப் படைப்புகள் மக்களைச் சிந்திக்கத் தூண்டவேண்டும். பழைமையிலும், பொய்மையிலும், பல்வேறு மாயைகளிலும் சிறைப்பட்டுக் கிடக்கும் மக்கள் மனதில் புரட்சிகரப் பார்வையை தோற்றுவிக்க வேண்டும். மாறி வரும் சமூக விழிப்புணர்வை உருவாக்க வேண்டும்.

நாம் இன்று ஒரு புரட்சிகரமான யுகத்தில் வாழ்கிறோம். பூகம்பமான மாற்றங்கள் உருவாகிவரும் புதியதொரு சகாப்தத்தில் வாழ்கிறோம். தமிழீழ மக்கள் இன்று விடுதலை வேண்டிப் போர்க்கோலம்

பூண்டு நிற்கிறார்கள். எமது தேசிய வாழ்வின் சகல பரிமாணங்களிலும் வியாபித்து நிற்கும் ஒரு வரலாற்று இயக்கத்திலிருந்து கலைஞர்களும், அறிஞர்களும் அந்நியப்பட்டு நிற்க முடியாது. அப்படி அந்நியப்படுவது மக்களில் இருந்தும் வாழ்க்கையின் நிதர்சனத்திலிருந்தும் அந்நியப்படுவதாக முடியும்.

இந்தக் காலகட்டத்தில், கலைஞர்கள், எழுத்தாளர்கள், அறிஞர்கள் ஆகியோரிடமிருந்து நான் கூடிய அளவு பங்களிப்பை எதிர்பார்க்கிறேன். ஒரு தாயகத்தைக் கட்டியெழுப்பும் பணி புனிதமானது. இந்தப் புனிதப் பணியில் பங்குகொள்வது எல்லோரதும் தேசியக்கடன். ஆயிரமாயிரம் போராளிகளின் அற்புதமான தியாகத்தில் உருவாகிவரும் எமது தாயகத்தை ஒரு உன்னதமான, மேன்மையான சமுதாயமாக மாற்றியமைக்க வேண்டும். இந்த சமூக மாற்றத்திற்கு வழிகோலும் வகையில் சிந்தனையாளர்களும், சிருஷ்டி கர்த்தாக்களும் எமது இயக்கத்திற்குப் பக்கபலமாக நின்று பணியாற்ற வேண்டும்.

இன்றைய காலத்தின் தேவைக்கேற்ப, வரலாற்று ஓட்டத்திற்கு அமைய, கலை, இலக்கிய கர்த்தாக்கள் புதுமையான புரட்சிகரமான படைப்புக்களை சிருஷ்டிக்க வேண்டும். இந்தப் படைப்புக்கள் எமது புனித விடுதலைப் போராட்டத்திற்கு உரமூட்டுவதாக அமையவேண்டும். சமூகப் புரட்சிக்கு வித்திடுவதாக அமைய வேண்டும்.

சமூகப் புரட்சி என்பது கலாசார மறுமலர்ச்சியை உள்ளடக்கியதாக முன்னெடுக்கப்பட வேண்டும் என்பதே எனது கருத்து. சமூகப் புறநிலையில் மாற்றம் ஏற்படும் பொழுது அக நிலையிலும் மாற்றம் ஏற்படுவது அவசியமானது. பழைய முரண்பாடுகள் நிறைந்த சமூக உறவுகளை உடைத்தெறிந்து, புதிய சமூக உறவுகளைக் கட்டியெழுப்பும்போது இந்த சமூக மாற்றத்திற்கு ஏற்ப, மக்களின் மனவுலகிலும் ஒரு புரட்சி நிகழ வேண்டும். புதிய சமுதாயத்தில், புதிய உறவுகளைக் கொண்ட ஒரு புதிய வாழ்க்கையைத் தழுவும் மக்கள் ஒரு புரட்சிகரமான உலகப் பார்வையைக் கொண்டவர்களாக இருக்கவேண்டும். இங்குதான் கலாசார மறுமலர்ச்சி முக்கியமாகிறது.

கலாசாரம் உயர்நிலை எய்தும் பொழுதே ஒரு இனம் மகிமை பெறுகிறது; மனித வாழ்வு உன்னதம் பெறுகிறது; மனிதம் வளர்ச்சி பெறுகிறது. கலாசாரம் உயர்நிலை பெறுவதாயின் கலாசார மறுமலர்ச்சி அவசியம்; கலாசாரப் புரட்சி அவசியம்.

மிகத் தொன்மை வாய்ந்த நீண்ட வரலாறுடைய எந்தவொரு கலாசாரத்திலும் பழைமைவாதக் கருத்துக்களும், பார்வைகளும், காலத்துக்கு ஒவ்வாத வழக்குகளும், சம்பிரதாயங்களும், மூடநம்பிக்கைகளும் வேரூன்றியிருப்பது இயல்பு. எமது கலாசாரமும் இதற்கு விதிவிலக்கல்ல. கலாசாரம் என்ற கோலத்தில் எமது சமூக வாழ்வில் ஊடுருவி நிற்கும் பிற்போக்கான பண்புகளை, வழக்குகளை, கருத்தோட்டங்களை நாம் இனம்கண்டு களைதல் அவசியம்.

பழையன கழிந்து புதியன சேர்ந்து செழுமைப்படும் கலை, கலாசாரம், பண்பாடு எமது இனத்திற்குப் பெருமை சேர்க்கும்; எமது மக்கள் மனவுலகில் ஒரு புரட்சிகரமான விழிப்புணர்வைத் தோற்றுவிக்கும்.

இந்தப் புரட்சிகரமான கலாசாரப் பணிக்கு முத்தமிழ்விழா ஒரு முன்னோடியாக அமையுமென நம்புகின்றேன்.

விழா சிறக்கவும், விடுதலைப் புலிகள் கலை, கலாசாரப் பிரிவினரின் பணிகள் வளரவும் என் ஆசியும் ஆதரவும் என்றும் உண்டு.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# விடுதலைப் போராட்டத்தில் பங்களித்த மக்கள் அனைவரும் மாமனிதர்களே



குறிப்பு:

10-6-1991 அன்று, சாவகச்சேரியில் நடைபெற்ற முத்தமிழ் விழா ஐந்தாம் நாள் நிகழ்ச்சியில் பங்குபற்றி தலைவர் நிகழ்த்திய உரையை இங்கு தருகிறோம்.

தலைமைச் செயலகம்.
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
*10-6-1991*

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய
தமிழீழ மக்களே,

நான், இன்று இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தேசிய நிகழ்வில் நேரடியாகப் பங்குகொள்வதையிட்டு பெரு மகிழ்ச்சியடைகிறேன். தமிழீழ மண்ணின் விடிவிற்காக, தமிழீழ மக்களின் விமோசனத்திற்காக, தமிழீழ தேசிய பண்பாட்டின் மறுமலர்ச்சிக்காக உழைத்தோரும், உழைத்துவருபவர்களுமான உன்னத மனிதர்களை, உண்மையான மண்ணின் மைந்தர்களை மதிப்பளித்துக் கௌரவிப்பதற்கு எனக்கு இந்தச் சந்தர்ப்பம் கிடைத்ததை யிட்டு நான் பெருமைப்படுகிறேன்.

நற்பணி ஆற்றும் நல்ல மனிதர்களுக்கு மதிப்பளிப்பதும், கௌரவம் செலுத்துவதும் தமிழனின் பண்பாடு. இந்தச் சீரிய மரபுக்கு ஏற்ப இந்தச் சிறப்பு வைபவத்தை ஒழுங்கு செய்த எமது இயக்கத்தின் கலை பண்பாட்டுக் கழகத்தினருக்கு எனது பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழீழ தேசத்தின் அதியுயர்ந்த கௌரவமாக தேசிய விருது வழங்கி இங்கு கௌரவிக்கப்படுபவர்களை நாம் மாமனிதர்கள் என மதிப்பளிக்கிறோம். ஏனென்றால் இவர்கள் அனைவரும் அற்புதமான இலட்சியவாதிகள். இனப்பற்றும் நாட்டுப் பற்றுமுடைய தேசாபிமானிகள், சுயநலவாழ்வின் குறுகிய வட்டத்திற்கு அப்பால் நின்று, சமூக நலத்திற்காக, தேசிய நலத்திற்காக, மக்கள் நலத்திற்காக சேவை ஆற்றிய அபூர்வ மனிதர்கள். இவர்களது அறிவாற்றல், படைப்பாற்றல், செயலாற்றல் அனைத்துமே தமிழீழ சமூகத்தின் மேன்மைக்கு உரமூட்டுவதாக அமைந்திருக்கிறது. இவர்களது பணி மேலும் தொடரவேண்டும். இவர்களது தொண்டு மேலும் சிறக்கவேண்டும். இதனால்தான் இவர்களுக்குப் பெரும் மதிப்பளித்து, தேசியவிருது வழங்கி கௌரவிக்கத் தீர்மானித்தோம்.

இந்தக் கௌரவப் பரிசளிப்பை 'தேசிய விருது' என நாம் அழைப்பதில் அர்த்தமும் முக்கியத்துவமும் இருக்கத்ததான் செய்கிறது.

தமிழீழ மக்களாகிய நாம் ஒரு தேசிய கட்டமைப்பைக் கொண்டவர்கள். வரலாற்று ரீதியாக நாம் ஒரு தேசியமாகவே வாழ்ந்து வந்தோம்; தேசியமாகவே வாழ்ந்து வருகிறோம்; தேசியமாகவே வாழப்போகிறோம்.

எமது தேசியத்தை எதிரியானவன் ஏற்றுக்கொண்டாலும் சரி, ஏற்றுக்கொள்ள மறுத்தாலும் சரி எமது தேசிய தனித்துவமானது என்றும் அழிக்கமுடியாத, எதார்த்தமான அரசியல் உண்மை என்பதை நாம் உலகிற்கு சதா பிரகடனம் செய்துகொண்டே இருப்போம். தேசிய விருது என நாம் பட்டமளிப்பதும் இப்படியான ஒரு பிரகடனமே.

பிரத்தியேக தேசிய தொண்டு ஆற்றிய சிலருக்கு இன்று தேசிய விருது வழங்கிக் கௌரவிக்கிறோம். ஆண்டுதோறும், முத்தமிழ் விழாவில் முக்கிய நிகழ்வாக இந்த தேசிய பரிசளிப்பு வைபவம் இடம் பெறும். ஆண்டுதோறும் மாமனிதர்கள் தெரிவு செய்யப்பட்டு கௌரவிக்கப்படுவார்கள். இந்தத் தேசிய விருது அளிப்பிற்கு ஒரு சில தேசபக்தர்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டாலும், ஒட்டுமொத்

தத்தில், இந்தப் பரிசளிப்பு எமது மக்கள் அனைவருக்கும் வழங்கப்படும் கௌரவ மாகவே கருதப்பட வேண்டும்.

எமது மக்கள் போற்றப்பட வேண்டியவர்கள், கௌரவிக்கப்பட வேண்டியவர்கள், தேசிய போராட்டத்தில் எமது மக்களின் பங்களிப்பு சாதாரணமானதல்ல. அவர்களது பங்களிப்பு அளப்பரியது என்றுதான் சொல்வேன். இலைமறை காயாக இருந்த விடுதலைப் போராட்டத்திற்கு தோள் கொடுத்துவரும் எமது எண்ணற்ற ஆதரவாளர்களையும் அனுதாபிகளையும் மனவுறுதிபடைத்த மாமனிதர்கள் என்றுதான் அழைக்க வேண்டும்.

நீண்ட காலமாகவே போராட்டத்தின் பெரும் பழுவைப் பொதுமக்களே சுமந்து வருகிறார்கள். சாவும், அழிவும், பசியும், பட்டினியும், இரத்தமும், கண்ணீருமாக எமது மக்கள் எதிர்கொண்ட தாங்கொணாத் துன்பத்தைச் சொற்களில் சித்திரிக்க முடியாது.

உலகில், எல்லா விடுதலைப் போராட்டங்களிலும் ஒடுக்கு முறையின் நெருப்பில் குளிப்பது பொதுசனங்களே. ஏனென்றால் அடக்குமுறையாளர்கள் போராளிகளை அழிப்பதில் காட்டும் தீவிரத்தை விடப் பொதுமக்களின் ஆன்மீக உறுதியை உடைக்கவேண்டும் என்பதில்தான் அதிக அக்கறை காட்டுகிறார்கள். ஆனால் இந்த முயற்சிகள் ஒரு பொழுதும் வெற்றியளிப்பதில்லை.

மக்களின் விடுதலை உணர்வை அடக்குமுறையால் அழித்துவிட முடியாது. உலக வரலாறு பகரும் உண்மை இது. ஏனென்றால், விடுதலை உணர்வே மனித ஆன்மாவின் சாரமாக, உயிர் மூச்சாக இயங்குகிறது. மனித வரலாற்றை இயக்கும் மகத்தான சக்தியும் அதுவே.

சிங்களப் பேரினவாத அடக்குமுறையானது எமது மக்களுக்குச் சாவையும் அழிவையும் தாங்கொணாத் துயரையும் கொடுத்தபோதும் என்றுமில்லாதவகையில் தேசியப் பற்றுணர்வையும், சுதந்திர தாகத்தையும் தூண்டிவிட்டிருக்கிறது. தமிழரின் தேசிய ஆன்மாவை விழித்தெழச் செய்திருக்கின்றது.

இன்று நாம் கொண்டாடிவரும் முத்தமிழ் விழா எமது மக்களது தேசிய எழுச்சிகளின் அபாரமான வெளிப்பாடு என்றே சொல்ல வேண்டும். போராட்டச் சூழலில், எல்லைகளில் எதிரியின் போர் முரசு கேட்கும் யுத்தகாலத்தில் சமுத்திரம் போல் திரண்டு வந்து பல்லாயிரம் மக்கள் முத்தமிழ் விழாவில் பங்கு கொள்கிறார்கள் என்றால் அது எமது மக்களின் திடசங்கற்பத்தை, உறுதிப்பாட்டை, சுதந்திர அறைகூவலைத் தெட்டத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

இந்தச் சுதந்திர அறைகூவல் எமது எதிரியின் காதுகளுக்கு எட்டாமல் இல்லை. சீற்றம் கொண்ட பூகம்பத்தின் குமுறலாக எழும் எமது இனத்தின் எழுச்சிக் குரலை சிங்கள தேசமும், சர்வதேச சமூகமும், அசட்டை செய்யமுடியாது.

இலட்சியத்தால் ஒன்றுபட்டு உறுதி பூண்ட மக்களே வரலாற்றைப் படைப்பார்கள்.

இந்த வரலாற்றின் படைப்பாக, எமதுதேசிய மண், ஒரு சுதந்திர பூமியாக பிறப்பெடுக்கும் என்பது திண்ணம்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# இழப்புகளுக்கு அஞ்சினால் யுத்தம் நடத்த முடியாது



குறிப்பு:

தலைவர் பிரபாகரன், 31-8-1991 அன்று, யாழ்ப்பாணத்தில் உள்ளூர்ப் பத்திரிகையாளரைச் சந்தித்து அன்றைய அரசியல், இராணுவ நிலைமைபற்றி எடுத்து விளக்கினார். 1-9-1991-ல் ஈழநாதத்தில் வெளியாகிய தலைவரின் பேட்டியை இங்கு பிரசுரிக்கிறோம்.

கேள்வி:

கடந்த ஒருவருட காலமாக நடந்துவரும் போரின் பெறுபேறுகள் சம்பந்தமாக என்ன சொல்ல விழைகிறீர்கள்?

பதில்:

பெறுபேறு சம்பந்தமாக கூறுவதானால், தற்போது கூடிய பிரதேசம் வெற்றிகொள்ளப்பட்டுள்ளது என நம்புகின்றேன். போர் தொடங்கும்போது இருந்த பல சிறீலங்கா இராணுவ முகாம்கள் தற்போது இல்லை. கொக்காவில், மாங்குளம் போன்ற இடங்களில் இருந்த இராணுவ முகாம்கள் அழிக்கப்பட்டதால் வன்னிப் பிரதேசத்தின் பெரும்பகுதி வெற்றி கொள்ளப்பட்டுள்ளது. கோட்டை முகாம் அழிக்கப்பட்டதால் யாழ்ப்பாணத்தின் நகரப் பகுதியும் விடுவிக்கப்பட்டது. அதாவது கரந்தடிப்படையாக இருந்த நாம் தற்போது பெரியளவில் இராணுவத்தை எதிர்த்து அழிக்கும் நிலையில் இருக்கிறோம்.

கேள்வி:

ஆனையிறவுப் போர் பற்றி......?

பதில்:

மரபுரீதியான இராணுவ அணியாக எதிரிகளுடன் நேரடியாக மோதி அழிக்கும் நிலையின் முதற்படி இது எனலாம். பெரிய அளவில் இறங்கிய இராணுவத்தை நீண்டநாட்கள் தடுத்துள்ளோம். இராணுவ ரீதியில் பெருமளவு முன்னேறி இருக்கிறோம் என்பதையே இது எடுத்துக் காட்டுகிறது.

கேள்வி:

ஆனையிறவுப்போரில் ஏற்பட்ட இழப்புகள் குறித்து என்ன சொல்ல நினைக்கிறீர்கள்?

பதில்:

இழப்புகளுக்கு அஞ்சினால் யுத்தம் நடத்த முடியாது. இழப்புகளை வளர்ச்சியின் ஊன்றுகோலாகக் கருதவேண்டும். இத்தகைய இழப்புகள் பொதுமக்களினதும் போராளிகளினதும் மனவுறுதியை வளர்க்கக்கூடியவை. ஆனையிறவுப் போர் தொடங்கமுன்பே 300 பேர் உயிர் இழக்க வேண்டிவரலாம் என்பதும் 900 பேர் வரையில் காயமேற்படலாம் என்பதும் எதிர்பார்க்கப்பட்டதே. ஆனையிறவுப் போர் ஆரம்பத்தில் இருந்து 23-8-91 திகதி வரையிலான 43 நாட்களில் 564 போராளிகளை இழந்திருக்கிறோம். எதிர்பார்த்ததைவிடவும் பெரியளவில் படையினர் இறக்கப்பட்டு நீண்டநாட்கள் இடம்பெற்ற யுத்தத்தைப் பார்த்தால் எமது தரப்பிலான இழப்பு பெரிதெனச் சொல்லமுடியாது.

கேள்வி:

ஆனையிறவுப்போரின் நோக்கம் நிறைவேறாதது குறித்து...

பதில்:

தரையிறக்கப்பட்ட இராணுவத்தினரை, எதிரியின் எறிகணைத் தாக்குதல், வான்வழித் தாக்குதல்கள் என்பனவற்றிற்கு மத்தியில், எமது வீரர்கள் நீண்ட நாட்கள் எதிரிப்படைகளைத் தடுத்துத் தாக்குதல்களை நடாத்தியுள்ளனர் என்பதை அவதானிக்கவேண்டும்.

கேள்வி:

ஆனையிறவுப் போரின்போது மக்கள் மத்தியில் காணப்பட்ட விழிப்புணர்ச்சி பற்றி......

பதில்:

மக்கள் காட்டிய விழிப்புணர்ச்சி போராட்டத்திற்கும் புலிகளுக்கும் ஆதரவான விழிப்புணர்ச்சி என்பதை மறுக்க முடியாது. மக்கள் பலத்த கஷ்டங்களை எதிர்நோக்கி வருவதால் ஏக்கம் இருப்பது இயல்பு. எனினும் பொருளாதார நெருக்கடி, கஷ்டம் என்பவற்றிற்கு மத்தியிலும் ஆனையிறவுப் போரின்போது மக்கள் உணவுப் பொருள்கள் வழங்குவதில் காட்டிய ஆர்வம் மற்றும் ஈடுபாடு என்பவற்றை நாம் மறந்துவிட முடியாது. மக்

கள் மத்தியில் கஷ்டம் இருப்பதை நாம் நன்கு உணர்கின்றோம். இவற்றிற்கு ஊடாக போராட்டத்தை முன்னெடுத்துச் செல்ல வேண்டியது அவசியம் என்பதையும் மக்கள் புரிந்து கொண்டுள்ளார்கள் என்றே நம்புகிறேன்.

கேள்வி:

மக்கள் மத்தியில் பரவலாக அடுத்தது என்ன என்ற கேள்வி எழுந்து வருவது பற்றி ...

பதில்:

துன்பங்களை அனுபவிக்கும் மக்களிடம் அடுத்து என்ன என்ற ஏக்கம் இருக்கத்தான் செய்யும். எனினும் பெரிய அளவில் அணிதிரள வேண்டும். போராட்டத்தில் ஏற்படும் இழப்புக்களை உடனுக்குடன் ஈடுசெய்ய வேண்டும். மக்கள் முழுமையாக எம்மோடிணைந்து எமது கஷ்ட துன்பங்களையும் புரிந்து கொள்ளவேண்டும்.

## நிபந்தனையற்ற பேச்சுக்குத் தயார்

கேள்வி:

ஐரோப்பிய நாடுகள் சில எடுத்த பேச்சுவார்த்தை முயற்சிகள் பற்றி......

பதில்:

நிபந்தனையற்ற வகையில் பேசுவதற்கு எப்போதும் தயாராக இருக்கின்றோம் என்பதைப் பல தடவைகளில் எடுத்துச் சொல்லியுள்ளோம்.

கேள்வி:

நோர்வே, சுவீடன் ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் சிலர் விடுதலைப் புலிகளுக்கும் சிறீலங்கா அரசுக்கும் இடையே பேச்சுவார்த்தை தொடங்க முயற்சித்ததாக அறிகிறோம். அதுபற்றி......

பதில்:

பேச்சு வார்த்தைக்கான முயற்சிகள் தொடங்கப்பட்டன. ஆனால் அது தொடரப்படவில்லை.

கேள்வி:

பேச்சுவார்த்தை எங்கு நடைபெறும்?

பதில்:

பேச்சுவார்த்தைக்குரிய சூழ்நிலையே இன்னமும் உருவாகிவிடவில்லை. ஆனால் நடுநிலைமை வகிக்கக்கூடிய நாடொன்றில் பேச்சுவார்த்தை நடைபெறுமானால், அப்பேச்சுகளுக்கு ஒரு பெறுமதி இருக்கும். எனினும் இந்தியா மட்டும் பங்கு கொள்ளும் ஒரு பேச்சுவார்த்தையில் தமிழ் மக்களின் சுதந்திரமான சிந்தனைகளுக்கு கட்டுப்பாடு இருக்கும் என்றுதான் கருதுகிறேன்.

கேள்வி:

தென்னிலங்கையில் தற்போது ஏற்பட்டுள்ள அரசியல் நெருக்கடி பற்றியும் இனப்பிரச்சினையில் ஏற்படக்கூடிய மாற்றங்கள் பற்றியும் என்ன கருதுகிறீர்கள்?

பதில்:

பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும் என்பதைமட்டுமே இப்போதைக்குச் சொல்லமுடியும். ஆயினும் கொழும்பில் ஏற்படும் அரசியல் நெருக்கடிகளால் அரசின் கொள்கை ரீதியான நிலைப்பாடுகளில் மாற்றங்கள் வருமென எதிர்பார்க்க முடியாது. எனினும் நெருக்கடிகள் சற்றுத் தணிந்து மக்கள் மூச்சுவிடக்கூடியதொரு நிலை வரலாம். சமாதான முயற்சிகூட தொடங்கப்படலாம். ஆனால் தற்போது அரசுக்கு எதிராகக் குரல் எழுப்பும் லலித் அத்துலத் முதலிதான் முதலில் தேசிய பந்தோபஸ்து அமைச்சர் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும். ஆதலினால் தெற்கில் யார் ஆளுகிறார்கள் என்பதல்ல எமது பிரச்சினை, கொழும்பில் நடக்கும் அதிகாரப் போட்டி அரசியல் இழுபறிகள்பற்றி நாம் அதிகம் அக்கறைப்பட வேண்டியதில்லை.

## கொழும்பில் எழுந்த நெருக்கடி நிலை

கேள்வி:

கொழும்பில் ஏற்பட்டுள்ள நெருக்கடிகள் எமது தாயகப்பகுதியில் இராணுவம் நட

13980

வடிக்கைகளில் ஈடுபடுவது தடைப்பட லாம். அல்லது இராணுவ நடவடிக்கை களில் முட்டுக்கட்டை நிலை ஏற்படலாம் எனக் கருதுகிறீர்களா?

பதில்:

கொழும்பில் ஏற்படும் நெருக்கடி களால் இங்கு இராணுவ நடவடிக் கைகளில் தளர்வு ஏற்படலாம். பொருளா தார ரீதியான கெடுபிடிகள் சற்றுத் தணிய லாம். எனினும் கொள்கை ரீதியான மாறு தல் ஏதும் உடனடியாக ஏற்படும் என்று கூறமுடியாது.

கேள்வி:

பாராளுமன்றத்தில் காலியாக இருக்கும் சுயேச்சைக் குழு உறுப்பினர்களின் ஆச னங்களைப் பயன்படுத்தி தற்போதைய சூழலைப் பாவிக்க முனைவீர்களா?

பதில்:

இதற்கு இப்போது கருத்துக்கூற விரும்பவில்லை.

கேள்வி:

கொழும்பில் தற்போது ஏற்பட்டுள்ள நெருக்கடியோடு புதுடில்லி அரசுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்கும் எனக் கருதுகிறீர்களா?

பதில்:

இத்தகைய சந்தேகத்தை உறுதிப் படுத்த முடியாது, எனினும் இச் சந்தேகத்தை ஊகங்களை அடிப்படையாக வைத்துப் பேசுவது நல்லதல்ல என்றே கருதுகிறேன்.

## கிட்டுமீது தவறான குற்றச்சாட்டுகள்

கேள்வி:

விடுதலைப் புலிகளின் சர்வதேச செய லகத்தின் பொறுப்பாளராகச் செயற்படும் திரு. கிட்டுவை பிரிட்டன் வெளியேறச் சொல்லியிருப்பது பற்றி......

பதில்;

திரு. கிட்டு மீது சுமத்தப்பட்டவை தவறான குற்றச்சாட்டுக்களாகும். தூதுவராலயத்தின் அனுமதியைப் பெற்று முறைப்படியாகவே - வைத்திய காரணங் களுக்காகவே - அவர் பிரிட்டன் சென்றிருந் தார். அவர் சென்ற ஆறுமாத காலத்தில் அவரது விசா காலாவதியான போதே விசாவைப் புதுப்பிக்காமல் பிரிட்டன் திருப்பி அனுப்பியிருக்கலாம். அதைவிட்டு தற்போது கொழும்பு அரசுடன் யுத்தம் நடந்து கொண்டிருக்கும் நிலையில், உடல் ஊனமுள்ள அவரை கொழும்புக்கு ஊடாக அனுப்பி வைக்க எடுத்த முயற்சி பொருத்த மற்றது என்றே கொள்ள வேண்டும்.

கேள்வி:

இந்திய அரசின் தூண்டுதலினால்தான் திரு. கிட்டு நாட்டைவிட்டு வெளியேற பிரிட்டன் நிர்ப்பந்தித்ததாக கூறப்படு வது பற்றி......

பதில்:

விடுதலைப் புலிகள் இலங்கையில் - இலங்கை அரசுக்கு எதிராகத்தான் போராடுகிறார்கள். இந்திய அரசு விடு தலைப் புலிகள் பற்றி கவலைப்பட வேண் டியதில்லை என்றே கருதுகிறேன்.

கேள்வி:

இந்தியா மீண்டும் இலங்கைப் பிரச் சினையில் தீவிர கவனம் செலுத்தும் நிலை வருமா?

பதில்:

இந்தியஅரசுஏற்கெனவேசிறுபான்மை அரசாக பலவீனமான நிலையிலுள் ளது. அத்துடன் எல்லைப்பிரச்சினைகளும், அது தொடர்பான மோதல்களும் நீடிக் கின்றன. அதற்கு நிறையப் பிரச்சினைகள் உண்டு. ஆதலினால் இப்போதைக்கு எமது

பிரச்சினையில் பெரியளவில் கவனம் எடுக்கும் என எதிர்பார்க்கமுடியாது.

கேள்வி:

**சென்னையிலும், புதுடில்லியிலும் நெருக்கடிகள் ஏற்படுத்தப்படுவதுபற்றி...**

## இந்திய அரசின் துரோகச் செயல்

பதில்:

வீணான குற்றச்சாட்டுகளின் பேரில் வீண்பழி சுமத்தப்பட்டு வருகின்றது. இத்தகைய குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரமில்லை என்பதை உணர்ந்து ஒரு காலத்தில் இந்தநிலை நீங்கும் என்றும் நம்பலாம்.

கேள்வி:

**தமிழகத்திற்குச் சென்றிருக்கும் இலங்கைத் தமிழ் அகதிகளைத் திருப்பி அனுப்ப தமிழக அரசும், இந்திய அரசும் முயற்சிப்பது பற்றி...**

பதில்:

தன்னுடைய அரசியல் விருப்பங்களுக்கு ஏற்ப அகதிகளை இந்தியா வரவேற்றது. தமிழகத்தில் இருக்கும் இலங்கைத் தமிழ் அகதிகள் விவகாரத்தை அரசியல் அழுத்தங்களுக்கு பயன்படுத்திக் கொண்டது இந்தியஅரசு. இப்போது அவர்களுக்கு இவ் விவகாரம் தேவையற்றதாகிப் போனதால் இலங்கைத்தமிழ் அகதிகளைத் கைவிடுகின்றது. அதுமட்டுமல்லாமல் எதிரியிடம் கொடுப்பது போன்றதான துரோகச்செயலில் ஈடுபட முனைகிறது. இந்த விவகாரத்தில் இந்தியா தனது பொறுப்பை ஏற்கவேண்டும். அத்துடன் இன்னல்களுக்கும் மத்தியில் சொந்த மண்ணில் தங்கி நிற்பதுமேல் என்பதை அகதிகளாகப் போனவர்கள்தான் புரிந்து கொள்ளவேண்டும்.

கேள்வி:

**சிறிமாவோ-சாஸ்திரி ஒப்பந்தப்படி இந்தியா திரும்பிய தமிழர்களும் இலங்கைத் தமிழர்களாகக் கருதப்பட்டு நடவடிக்கைகள் எடுக்கப்படுவது பற்றி......**

பதில்:

மலையகத் தமிழ் மக்களின் தொடரும் துன்பங்களுக்கு மலையகத் தலைமைகளின் தொடர்ந்த துரோகமே காரணம் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

கேள்வி:

**அமைச்சர் தொண்டமான் யாழ்ப்பாணம் வந்து பேச்சுவார்த்தை நடாத்தவிருப்பதாக வெளிவந்த செய்திகள் பற்றி ...**

பதில்:

அவர் வருவதானால் வரட்டும் என்பதைத் தெரிவித்துள்ளோம்.

கேள்வி:

**சிறீலங்கா அரசாங்கம் புதியரக ஆயுதங்கள் கொள்வனவு செய்வதாக கூறப்படுவது பற்றி...**

பதில்:

எல்லாவிதமான ஆயுதங்களும் ஒரே மாதிரியே செயற்படும். எமது மக்களின் உடைமைகளை, சொத்துக்களை அழிக்கலாம். பெருமளவில் அவை அழிக்கப்படலாம் என்பதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்? எந்த ஆயுதத்தாலும், எத்தகைய குண்டு வீச்சுக்களாலும் போராட்டத்தை அழித்துவிட முடியாது.

கேள்வி:

**ஈழம் வங்கி அமைக்கப்பட்டிருப்பதாக இராணுவ அதிகாரி கொப்பேகடுவ கூறியிருப்பது பற்றி...**

பதில்:

அது கொப்பேகடுவவிற்கு யாரோ கொடுத்த தவறான தகவல் என்றே கூறமுடியும். □

# அரசியல் தீர்வுக்கான வழி: தலைவர் அளித்த விளக்கம்

குறிப்பு:

"தமிழீழ மக்களின் தேசிய பிரச்சினையின் அடிப் படைகளான தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழர் தன்னாட்சி உரிமை ஆகியவற்றை முதலில் சிங்கள மக் கள் அங்கீகரிக்கவேண்டும். இந்த அங்கீகாரத்தின் அடிப் படையிலேயே இன ஒற்றுமை சாத்தியமாகும். அரசியல் தீர்வுக்கும் வழி பிறக்கும்". இவ்வாறு தலைவர் பிரபா கரன் பி.பி.ஸிக்கு அளித்த பேட்டியில் தெரிவித்தார். யாழ்ப் பாணம் வருகைதந்த பி.பி.ஸி. நிருபர் திரு. கிறிஸ் மொறிஸ், தலைவர் பிரபாகரனிடம் எடுத்த பேட்டி 4.9.1991 அன்று பி.பி.ஸியின் ஆசிய சேவையிலும், தமிழோசையிலும் ஒலிபரப்பாகியது. இந்தப் பேட்டியை இங்கு தருகிறோம்.

கேள்வி:

**கிழக்கு மாகாணத்தின் இராணுவ நிலைமைபற்றி விளக்குவீர்களா? கிழக்கு மாகாணத்தை இராணுவக்கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்துள்ளதாக அரசு கூறு கிறதே?**

பதில்:

கிழக்கு மாகாணத்தில் உள்ள இரா ணுவ நிலைமை மிகவும் சிக்கலானது. இப்பகுதியில் பெரும்பான்மையாக தமிழ் மக் களும் மற்றும் சிங்கள முஸ்லிம் மக்களும் வாழ்கிறார்கள். திருமலையிலும், அம் பாறையிலும் நிறைய சிங்களக் குடியேற் றங்கள் இருக்கின்றன. இவற்றைப் பாது காக்கும் நோக்கத்தோடு இப்பகுதிகளில் பெருந்தொகையில் இராணுவமும், பொலி சும் குவிக்கப்பட்டிருக்கின்றன. கிழக்கில் கட லோரமாக பெருமளவில் இராணுவமுகாம் கள் அமைக்கப்பட்டுள்ளன. அப்படியிருந் தும் கிழக்கு மாகாணம் அரசின் கட்டுப் பாட்டில் இருப்பதாகக் கூறமுடியாது. கிழக் கில் எமது ஆயுத நடவடிக்கைகள் தொடர்ந்து நடக்கின்றன. எமது போராளி கள் எல்லா இடங்களிலும் நடமாடித்திரி கிறார்கள். கிராமப்புறங்களும், காட்டுப் பகுதிகளும் எமது கட்டுப்பாட்டில் இருக் கின்றன. எனவே கிழக்கில் இருந்து புலி களை விரட்டிவிட்டோம் என்று அரசு கூறு வது முற்றிலும் தவறானது.

கேள்வி:

**1990 ஜூன் மாதம் இருந்த நிலையிலும் பார்க்க நீங்கள் இப்போது மோசமாண நிலையில் இருக்கிறீர்கள் என்பது உண்மை யல்லவா?**

பதில்:

யுத்தம் ஆரம்பமாவதற்கு முன்னர் கிழக்கு மாகாணம் புலிகளின் கட்டுப் பாட்டில் இருந்தது என்பது தவறு. யுத்தத் திற்கு முன்னர் நீண்டகாலமாகக் கிழக்கு மாகாணம் இந்தியத்துருப்புக்களின் கட்டுப் பாட்டில் இருந்தது. இந்தியத்துருப்புக்கள் வெளியேறியதன்பின்னர் சிங்கள இராணு வமும், பொலிசும் அப்பகுதியில் நிலை கொண்டிருந்தன. எனவே கிழக்கு மாகா ணம் புலிகளின் முழுக்கட்டுப்பாட்டில் இருந் தது என்று சொல்லமுடியாது.

## மரபுவழிப் போரை எதிர்கொண்டோம்

கேள்வி

**ஆனையிறவில் தமக்குப்பெரும் வெற்றி கிடைத்திருப்பதாக இராணுவம் கூறு கிறதே. போர் உத்தி என்ற முறையில் பிழையான உத்தி ஒன்றைக் கையாண்டு விட்டதாகக் கருதுகிறீர்களா?**

பதில்:

ஆனையிறவுப்போர் ஒரு பெரிய வெற்றியென சிங்கள அரசு கூறுவது வெறும் பொய்ப்பிரசாரம். எமது வெற்றி கரமான தாக்குதல்களால் ஆனையிறவுத் தளம் வீழ்ச்சியடையும்நிலை இருந்தது. 800 இராணுவத்தினர் எமது முற்றுகைக் குள் சிக்கிக்கொண்டனர். இவர்களை மீட் பதற்காக 8000 பேர் கொண்டு பெரிய தாக் குதலை நடத்த சிங்கள அரசு நிர்ப்பந்திக் கப்பட்டது. இந்தத்தாக்குதலில் சிங்கள அரசுக்கு என்றுமில்லாத பெரிய இழப்புக் கள் ஏற்பட்டது. ஐந்துமைல் தூரம் படை களை நகர்த்த 24 நாட்கள் தேவைப்பட் டன. இதனை வெற்றியென எக்காள மிடுவது சிறுபிள்ளைத்தனமானது. ஒரு பெரிய மரபுவழிப்போரை நேருக்குநேர் எதிர்கொள்ளும் பெரும் வளர்ச்சியை புலி கள் இயக்கம் அடைந்துள்ளது. ஆனையிற வுப்போர் இதற்கு நல்லதொரு எடுத்துக் காட்டு.

கேள்வி:

**புலிப்படையை மரபுவழி இராணுவமாக மாற்ற நீங்கள் எடுத்துவரும் முயற்சி பற்றிக் கூறுவீர்களா? இது புலிப்படை யின் முன்னேற்றத்திற்கு எந்தளவிற்கு முக்கியமானது?**

பதில்:

சிங்கள அரசிற்கு எதிரான எமது ஆயுதப் போராட்டம் பதினைந்து ஆண்டுகளுக்கு மேலான நீண்ட வரலாற்றைக் கொண்டது. இந்த நீண்ட வரலாற்றுப் போக்கில் நாம் படிப்படியாக பெரும் வளர்ச்சியடைந்திருக்கின்றோம். நீண்ட காலமாக கெரில்லாப் போர்முறையைக் கையாண்டுவந்த நாம் இப்போது மரபுவழி இராணுவமாக மாறி வருகின்றோம்.

இராணுவ ரீதியில் இது ஒருபெரிய வளர்ச்சியைக் குறிக்கிறது. இந்த வளர்ச்சி எமது விடுதலைப்போராட்டத்தின் வளர்ச்சிதான். இந்த வளர்ச்சி எமது விடுதலைப்போராட்டத்தின் பெரும் திருப்புமுனையாகவும் அமைகிறது. இந்த வளர்ச்சிமூலம் சிங்கள அரசு ஒரு பாடத்தைக்கற்றுக்கொள்ள வேண்டும். அதாவது இராணுவ நடவடிக்கை மூலம் தமிழ்மக்களின் தேசிய பிரச்சினைக்கு தீர்வுகாணமுடியாது என்பது தான் அது.

கேள்வி:

**படையின் அளவு விரிவுபட்டுக்கொண்டு போகும் அதேவேளை சிறுவர்களையும் சிறுமியர்களையும் சேர்த்துக்கொள்வதாக கண்டனங்களும், குற்றச்சாட்டுக்களும் எழுந்துள்ளன. இந்த அளவு இளம் வயதில் ஏன் ஆட்களைச் சேர்த்துக் கொள்கிறீர்கள்? இப்படிச் சேர்த்துக் கொள்ளப்படுபவர்கள் எத்தனை வயதில் உங்கள் படையில் செயல்படத் தொடங்குகிறார்கள்? அதாவது சண்டைக்கு அனுப்பப்படுகிறார்கள்?**

பதில்:

நாம் பலவந்தமாக எவரையும் இராணுவத்தில் சேர்த்துக்கொள்வதில்லை. அரச பயங்கரவாத ஒடுக்குமுறையினாலும், அதனால் எமது சமுதாயத்தில் ஏற்படும் தாக்கங்களினாலும் சிறுவர்கள் எமது இயக்கத்தில் சேர்ந்து கொள்கிறார்கள் என்பதுதான் உண்மை. அதுமட்டுமல்ல பல பெற்றோர்கள் பகிரங்கமாக எமது கூட்ட மேடைகளிலேயே தமது புதல்வர்களையும், புதல்விகளையும் எம்மிடம் ஒப்படைக்கிறார்கள். அப்படி ஒப்படைக்கப் படும் சிறுவர்களுக்கு நாம் கல்வி வசதி செய்து கொடுக்கிறோம். பல்வேறு துறைகளில் பயிற்றுவிக்கிறோம். தொழிலறிவை வளர்த்து விடுகிறோம். சிறுவயதானவர்களை நாம் போர்க்களத்திற்கு அனுப்புவதில்லை.

கேள்வி:

**இந்தியாவுக்கும் உங்களுக்குமான உறவு மோசமாக இருக்கிறதே, இது உங்களுக்குக் கவலையைத் தரவில்லையா?**

பதில்:

நீண்டகாலமாகவே இந்தியாவுக்கும், எமக்கும் மத்தியிலான உறவில் பிரச்சினை ஏற்பட்டுவந்துள்ளது. 1983-ல் இந்திய அரசு எமது பிரச்சினையில் தலையிட்டது ஆயுதப்பயிற்சிகொடுத்து பல குழுக்களை உருவாக்கியது. பின்னர் 1987-ல் சிறீலங்கா அரசுடன் ஒரு ஒப்பந்தம்செய்து அதை எமது மக்கள்மீது திணிக்கமுயன்றது அதற்கு நாம் எதிர்ப்புத்தெரிவித்ததும், எம்மீது ஒரு யுத்தத்தை ஏவிவிட்டது. இப்படியாக இந்திய அரசு தனது சொந்த நலனைப்பேணமுயன்றது, நாம் எமது மக்களின் நலனை முதன்மைப்படுத்தியபோது எமக்கும் இந்திய அரசுக்கும் இடையே முரண்பாடும் பகைமையும் ஏற்பட்டது. இந்த நீண்ட கசப்பான வரலாற்றுத்தொடர்ச்சியாகவே எமது இயக்கத்திற்கு எதிராக இந்திய அரசு செயற்படுகின்றது. இந்தியாவின் இந்த அணுகுமுறை எமக்கு கவலையையும், ஏமாற்றத்தையும் கொடுக்கத்தான் செய்கிறது.

கேள்வி:

**தமிழ் நாட்டில் புலிகளின் நடவடிக்கைகள் நசுக்கப்பட்டு வருவதுபற்றி தங்களால் குறிப்பாக கூறமுடியுமா? இலங்கையில் நடத்தும் போராட்டத்தை தமிழ் நாட்டில் எடுக்கப்படும் நடவடிக்கைகள் எந்த வகையில் மோசமாகப் பாதிக்கிறது?**

பதில்:

நீண்டகாலமாகவே தமிழ்நாட்டிலும் புலிகளைப்பகடைக் காய்களாகவைத்தே அரசியல் சதுரங்க ஆட்டம் நடைபெறுகிறது தமிழ்நாட்டு மக்களை எமது இயக்கத்திற்கு எதிராகவும், எமது சுதந்திர போராட்டத்திற்கு எதிராகவும் திருப்பிவிட இந்தியமத்திய அரசும் தமிழக அரசும் திட்டமிட்டு செயற்படுகின்றன. எமது இயக்கத்திற்கு அவப்பெயரை ஏற்படுத்தி திட்டமிட்டமுறையில் விஷமப்பிரசாரம் மேற்கொள்ளப்படுகின்றது. எனினும் தமிழ்நாட்டில் பரந்துபட்ட மக்கள் எமது இயக்கத்திற்கும் போராட்டத்திற்கும் ஆதரவாகவே இருக்கிறார்கள். இந்தமக்களின் ஆதரவு இருக்கும்வரை எமது போராட்டத்திற்கு பாதிப்பு ஏற்படப்போவதில்லை.

## மனிதாபிமானமற்ற நடவடிக்கை

கேள்வி:

ராஜீவ்காந்தி கொலையுடன் புலிகளுக்குத் தொடர்பில்லை எனக்கூறப்படுவதை நாம் அறிவோம். என்றாலும் இந்தியப் புலனாய்வுக்குழு நீங்கள்தான் இதற்குப்பொறுப்பு எனத் திடமாக நம்புவதுபோல் தெரிகிறது. திரு. கிட்டு பிரிட்டனைவிட்டு வெளியேற்றப்பட்டுள்ளார். அனைத்துலக அரங்கின் உணர்வலைகள், கருத்துக்கள் உங்களுக்கு எதிராக மாறுவதாக கவலைப்படுகிறீர்களா?

பதில்:

ராஜீவ்காந்தியின் கொலைக்கும் எமது இயக்கத்திற்கும் எதுவித சம்பந்தமுமில்லை. இந்தக் குற்றச்சாட்டு இன்னும் நிரூபிக்கப்படவில்லை. இந்தக் கொலைக் குற்றச்சாட்டை எம்மீது சுமத்தி சர்வதேச ரீதியாக எம்மைக் களங்கப்படுத்த இந்திய அரசு முயற்சிக்கின்றது. கிட்டுவின் விவகாரத்தில் பிரிட்டன் அரசு நடந்துகொண்டவிதம் எமது மக்களுக்கு பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்துள்ளது. வைத்திய சிகிச்சைக்காக லண்டன் செல்ல பிரித்தானிய தூதுவரகமே அனுமதி அளித்திருந்தது. கிட்டு ஒரு அங்கவீனர், ஒடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதி என்று தெரிந்தும் இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டமை மிகவும் பொறுப்பு அற்றதும் மனிதாபிமானமற்றதுமான செயலாகும்.

கேள்வி:

விடுதலைப் புலிகள் அரசியல் கட்சியொன்றை அமைத்திருந்தும்கூடப் புலிப்படையினர் முக்கியமாக ஈவிரக்கமற்ற இராணுவ அமைப்பு என எதிர்த்துக் குரல் எழுப்புவோர் கூறுகின்றனர். உங்கள் இயக்கத்தின் அரசியல் பங்கு பணிபற்றிக் கூறமுடியுமா?

பதில்:

அப்படிச்சொல்வது முற்றிலும் தவறு. நாம் பிரமாண்டமான அரசியலமைப்பைக் கட்டி எழுப்பியுள்ளோம். எமது மக்களிடையே சிவில் நிர்வாகம், உணவுற்பத்தி, நிவாரணம், சமூகசேவை, அகதிகள்சேவை போன்ற விடயங்களை எமது அரசியல்பிரிவே கவனித்து வருகின்றது. எமது பகுதிகளிலுள்ள மக்களின் அன்றாட வாழ்வில் எங்களுடைய இயக்கம் பெருமளவு பங்கு வகித்து வருகிறது என்பது உண்மை.

## நிபந்தனையற்ற பேச்சுக்குத் தயார்

கேள்வி:

கொழும்பில் பிரேமதாசா ஆட்சிக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடிபற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்:

நிலைமையை நாம் அவதானித்து வருகிறோம். இப்போது இதுபற்றி அபிப்பிராயம் எதுவும் கூறமுடியாது.

கேள்வி:

விடுதலைப் புலிகளுக்கும், இலங்கை அரசுக்கும் இடையே மீண்டும்பேச்சுவார்த்தை ஆரம்பிக்க முயற்சிகள் கடந்த சில மாதங்களாக நடந்து வருகின்றன. அடுத்த சில மாதங்களில் இப்படியான முயற்சிகள் வெற்றி அடைவதற்கான வாய்ப்புகள் உண்டு என நீங்கள் கருதுகிறீர்களா?

பதில்:

நாம் எப்போதும் சமாதானப் பேச்சுகளுக்கு தயாராக இருக்கிறோம் என்பதை கூறிவருகிறோம். பேச்சுக்கள் நிபந்தனையற்றதாக இருக்கவேண்டும் என்பதைத்தான் நாம் வலியுறுத்தி வருகிறோம்.

கேள்வி:

பேச்சுக்கள் மூலம் அரசியல்தீர்வு ஏற்பட வழி பிறக்குமா?

பதில்:

தமிழ் மக்களின் தேசிய பிரச்சினையின் அடிப்படைகளான தமிழர் தாயகம், தமிழர் தேசியம், தமிழரின் தன்னாட்சி உரிமை ஆகியவற்றை முதலில் சிங்கள மக்கள் அங்கீகரிக்கவேண்டும். இந்த அங்கீகாரத்தின் அடிப்படையிலேயே இன ஒற்றுமை சாத்தியமாகும். அரசியல் தீர்வுக்கும் வழி பிறக்கும்.

□□□

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.

# செஞ்சோலை சிறுவர் இல்லம்: தலைவரின் வாழ்த்துச் செய்தி

குறிப்பு:

செஞ்சோலை சிறுவர் இல்லத்தின் திறப்பு விழா விற்கு தலைவர் பிரபாகரன் அனுப்பிய வாழ்த்துச் செய் தியை கீழே பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
23-10-1991

அன்புடையீர்,

தமிழீழத்தின் எதிர்காலச் சிற்பிகளை உருவாக்கும் உன்னத பணியை இலட்சிய மாகக்கொண்ட செஞ்சோலைச் சிறுவர் இல் லம் இன்று திறக்கப்படுவதையிட்டு நான் பெருமகிழ்ச்சி கொள்கிறேன்.

செஞ்சோலைஇல்லம் ஒரு புதிய புரட்சிகரக் கல்வியின் பரிசோதனைக் கள மாக அமையவேண்டும். மண் பற்றும் மக் கள் பற்றும் கொண்ட ஒரு புதிய அறிவு சார் பரம்பரையை உருவாக்கித்தர வேண் டும். சுபீட்சகரமான தமிழீழ சமுதாயத் தைப் படைக்கும் தேசநிர்மாணிகளைத் தோற்றுவிக்கவேண்டும்.

வரலாற்றுப் பெருமை மிக்க சுதந்திரப் போராட்ட சூழலில் இந்தச் செஞ்சோலை வளாகத்தில் நாம் இன்று இந்த இளம் விதைகளைப் பயிரிடுகிறோம். இவை வேர் விட்டு வளர்ந்து, விழுதுகள் பரப்பி விருட் சங்களாக மாறி ஒரு காலம் தமிழீழ தேசத் தின் சிந்தனைச் சோலையாகச் செழிப்புற வேண்டும் என்பதே எனது ஆவல்.

இந்த புரட்சிகரமான பணி வெற்றிகர மாக முன்னெடுக்கப்பட எனது நல்லாசிகள்.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# ஒரு சத்திய யுத்தத்தின் போர்முரசாக ஒலிக்கட்டும்

குறிப்பு:

புலிகளின் குரல் ஓராண்டு பூர்த்தி தினத்தை முன்னிட்டு தலைவர் வழங்கிய வாழ்த்துச் செய்தியை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.
தமிழீழம்.
20-11-1991

அன்புடையீர்,

எமது விடுதலை இயக்கத்தின் புரட்சிக் குரலாக ஒலித்துவரும் 'புலிகளின் குரல்' இன்றுடன் தனது ஓராண்டு சேவையை பூர்த்திசெய்து கொள்கிறது.

ஒரு யுத்த சூழலில், எத்தனையோ நெருக்கடிகள், இடையூறுகள் மத்தியில், போராட்டத்தின் எழுச்சிக் குரலாக தினமும் மக்களுக்கு ஒரு தரமான ஒலிபரப்புச் சேவையை நடத்திவருவது ஒரு சாதாரண சாதனையல்ல. எமது வானொலியின் ஓராண்டு நிறைவானது இந்த சாதனையைத் தான் எடுத்தியம்புகிறது.

ஒரு விடுதலைப் போராட்டத்தை முன்னேற்றப் பாதையில் இட்டுச் செல்வதில் மக்கள் தொடர்பு சாதனங்கள் வகிக்கும் பங்கு எத்தனை முக்கியத்துவம்வாய்ந்தது என்பதனை நான் விளக்கிக் கூறத்தேவையில்லை. போராட்டத்தின் எதார்த்த நிலையை, புறநிலை உண்மைகளை மக்களுக்கு எடுத்துக்கூறுவதுடன், மக்களிடையே தேசிய விழிப்புணர்வையும், விடுதலையுணர்வையும் ஊட்டி வளர்த்து மக்களின் கருத்துலகத்தை கட்டி வளர்ப்பதில் மக்கள் தொடர்புசாதனங்கள் அரிய சேவை ஆற்ற முடியும். இந்த வழியில் எமது தேசிய பத்திரிகைகளும், எமது வானொலியும் மக்களின் விடுதலைக்கு பணியாற்றுவது அவசியம்.

எமது எதிரியான சிங்கள அரசு, தனது கட்டுப்பாட்டிலுள்ள மக்கள் தொடர்பு சாதனங்களை எமது போராட்டத்திற்கு எதிராக முழுமையாக முடுக்கிவிட்டிருக்கிறது. உண்மையைத் திரித்து, பொய்களைப் புனைந்து மக்களைக்குழப்பி எமது போராட்டத்தை மழுங்கடிக்கும் நோக்கில் ஒரு பிரச்சாரப் போரை நடத்திவருகிறது. எதிரியுடன் கைகோர்த்து நின்று தமிழ்த் துரோக

சக்திகளும் எமக்கு எதிராக மிகவும் கேவல மான விசமப் பிரச்சாரத்தை நடாத்திவரு கின்றன. இந்தச் சூழலில், எமது தேசியப் போராட்டத்தின் ஓசையாக குரலெழுப்பும் எமது வானொலியின் சேவை முக்கிய மாகிறது.

எதிரியின் பொய்மையான கருத்துப் போருக்கு எதிராக, உண்மையின் ஆயுத மாக எமது வானொலியின் குரல் ஒலிக்க வேண்டும். ஒரு சத்திய யுத்தத்தின் போர் முரசாக 'புலிகளின் குரல்' ஒலிக்க வேண் டும்.

'புலிகளின் குரல்' வானோசை தனது புரட்சிகரப் பணியில் வெற்றிபெற எனது நல்லாசிகள்.

வே. பிரபாகரன்
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

□ ■ ■

# வீர சுதந்திரம் வேண்டுவோருக்கு உறுதிதான் வலுமிக்க ஆயுதம்



குறிப்பு:

**27-11-1991** அன்று, மாவீரர் தினத்தை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
27-11-1991

எமது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய
தமிழீழ மக்களே,

இன்றைய தினத்தை மாவீரர் நாளாக, தியாகிகளின் திருநாளாக, எமது தேசத்தின் பெருநாளாக நாம் கொண்டாடுகிறோம்.

எமது மண்ணுக்காக, எமது மக்களுக்காக, தமது இன்னுயிரை அர்ப்பணித்த தியாகிகளை, இன்று நாம் எமது இதயத்து ஆலயங்களில் நினைவு கூர்ந்து கௌரவிக்கின்றோம்.

ஒரு புனித இலட்சியத்துக்காக வாழ்ந்து, அந்த இலட்சியத்திற்காகப் போராடி, அந்த இலட்சியத்தை அடைவதற்காக, தமது வாழ்வைத் தியாகம் செய்த இந்த மாவீரர்கள் மகத்துவமானவர்கள்.

இந்த மாவீரர்களது அற்புதமான இலட்சிய வாழ்க்கை, அவர்களது தியாகங்கள், அவர்கள் அனுபவித்த துன்ப துயரங்கள், ஏக்கங்கள், அவர்கள் கண்ட கனவுகள் இவை எல்லாவற்றினதும் ஒட்டுமொத்த வெளிப்பாடாகவே எமது போராட்ட வரலாறு முன்னேறிச் செல்கின்றது. எமது வீர சுதந்திரவரலாறு இந்த மாவீரர்களின் இரத்தத்தால், வியர்வையால், கண்ணீரால் எழுதப்பட்டது.

எமது விடுதலைஇயக்கம் மிகவும் நீண்ட கடினமான நெருக்கடிகள் நிறைந்த ஒரு வரலாற்றுப் பயணத்தைத் தொடர்ந்து வருகின்றது. உலகின் எந்த ஒரு விடுதலை இயக்கமுமே சந்தித்திராத சவால்களை, சோதனைகளை, எதிர்பாராததிருப்பங்களை இந்த வரலாற்று ஓட்டத்தில் நாம் எதிர்கொண்டோம்.

எமது போராட்டத்திற்கு எதிராகப் பல்வேறு விரோத சக்திகளும், துரோகசக்திகளும் இணைந்து செயற்பட்டன. எமது வரலாற்று எதிரியுடன் வலிமை மிகுந்த வல்லரசுகளும் எமக்கு எதிராக அணிசேர்ந்து கொண்டன. சதிகளாக, நாசச்செயல்களாக, நம்பிக்கைத் துரோகங்களாக, ஏமாற்றுப் படலங்களாக எமது இயக்கம் பல நெருக்கடிகளை எதிர்கொண்டது அலையலையாக எழுந்த எதிரியின் படையெடுப்புக்களை ஒரு புறமும், அந்நிய இராணுவ ஆக்கிரமிப்பை மறுபுறமாகவும் நாம் தனித்து நின்று எதிர்கொண்டோம். பல சட்டங்களில் எமது இயக்கம் அழிவின் விளிம்பிற்குத் தள்ளப்பட்டது.

புயலாக எழுந்த இந்தப் பேராபத்துக்களை எல்லாம் மலையாக நின்று எதிர்கொள்ள இரும்பை ஒத்த மனஉறுதி தேவைப்பட்டது. இந்தச் சோதனை மிகுந்த நெருக்கடியான வரலாற்றுக் கட்டங்களில் எனக்குப் பக்கபலமாக, மனித மலைகளாக உறுதியோடு நின்ற மாவீரர்களை நான் என்றும் மறக்கமுடியாது. இந்த இலட்சிய வேங்கைகளின் தளராத உறுதிதான் எமது சுதந்திர இயக்கத்தின் தூண்களாக நிற்கின்றன.

எமது போராட்டம் எத்தனையோ சவால்களுக்கு ஈடுகொடுத்து தனது விடுதலைப் பயணத்தில் வெற்றிநடை போட முடிந்தது என்றால், அதற்கான அடிப்படைக்காரணம் எமது இலட்சிய உறுதி தான் என்பதை நான் திட்டவட்டமாகக் கூறுவேன். நீண்ட வரலாற்று அனுபவதில் நான் கண்டு உணர்ந்த உண்மை இது.

ஒரு விடுதலைப் போராட்டம் பல சூறாவளிகளைச் சந்திக்கிறது. பல நெருக்கடிகளை எதிர்கொள்கின்றது. கொந்தளிப்

பான பல சூழ்நிலைகளுக்கு முகம் கொடுக்கின்றது. விடுதலைப் போராட்டம் என்பது இரத்தம் சிந்தும் ஒரு ரணகளம். சாவையும், அழிவையும், துன்பத்தையும் பரிசாகக் கொடுத்துத்தான் நாம் சுதந்திரம் எனும் சுவர்க்கத்தைக் காணமுடியும். கரடு முரடான பாதைகள் நிறைந்த இந்த இலட்சியப் பயணத்தில் எமக்கு ஒரேயொரு ஊன்றுகோலாக இருப்பது எமது உறுதி தான்.

இன்று ஒரு புதிய நெருக்கடியான வரலாற்றுத் திருப்பத்தை நாம் சந்தித்து நிற்கின்றோம்.

எதிரிப் படைகள் யாழ்ப்பாணக் குடாநாட்டை முற்றுகையிட்டு நிற்கின்றன. பொருளாதாரத்தடைகளை இறுக்கி உணவுப் பஞ்சத்தை உண்டுபண்ண எதிரி முனைகின்றான். இராணுவ அழுத்தம், பொருளாதார நெருக்குதல் என்ற ரீதியில் இருமுனைகளில் எமது மக்கள் மீது யுத்தம் ஒன்று ஏவப்பட்டிருக்கிறது. எமது போராட்டத்தின் அசைக்கமுடியாத அரணாக நிற்கும் எமது மக்களின் மனப் பலத்தை உடைத்துவிட எதிரியானவன் எல்லாவித தந்திரோபாயங்களையும் கடைப் பிடிக்கலாம் என்பது எமக்குத் தெரியாதது அல்ல.

எமது மக்கள் சிங்கள இனவாத அடக்கு முறையின் அக்கினிப் பட்டறையில் புடம் போடப்பட்டவர்கள். அரச பயங்கரவாதத்தின் அகோரங்களைச் சந்தித்தவர்கள் துன்பச் சிலுவையைச் சதா சுமந்து பழகியவர்கள். மரணத்தின் நிழலில் படுத்துறங்கி வாழ்பவர்கள்.

களைத்துப்போனவனின் இறுதி ஆயுதமாக உணவுப்போர் எமது மக்கள் மீது தொடுக்கப்படலாம். பட்டினித் தீயால் மக்களின் மன உறுதியைச் சுட்டெரிக்க எதிரி முயற்சிக்கலாம். ஆனால் சுதந்திரப் பசியில் உறுதி பூண்ட மக்களை சோற்றுப்பசி தீண்டிவிடப் போவதில்லை.

எனது அன்பார்ந்த மக்களே!

இன்று நாம் எதிர்கொள்ளும் இந்த நெருக்கடியான சூழ்நிலையில் எதிரியின் எந்தச் சவாலுக்கும் நாம் முகம் கொடுக் தயாராக இருக்கவேண்டும்.

எமது மன உறுதிக்கு எதிரி சவால் விடுகின்றான். இந்தச் சவாலை ஏற்பதற்கு எமக்கு ஆன்ம உறுதியைத் தவிர வேறு ஆயுதங்கள் தேவையில்லை.

சிங்கள அரசானது ஒருபுறம் போர்க் கொடியை உயர்த்திக் கொண்டு மறுபுறம் சமாதானச் சமிக்ஞைகளைக் காட்டுகிறது.

நாம் சமாதானத்திற்கும் தயார், போருக்கும் தயார். நாம் சமாதானத்தின் வழியைத் திறப்பதா? அல்லது யுத்தத்தின் பாதையில் செல்வதா? என்பதனை எதிரி தான் தீர்மானிக்க வேண்டும்.

நாம் சமாதானத்தின் கதவுகளைத் திறந்து விட்டிருக்கின்றோம். சமாதான வழிமுறையில் சமரசப் பேச்சுக்களை நடாத்த நாம் தயார்.

எந்தவித அழுத்தங்களுமின்றி, எந்த வித ஆதிக்கமுமின்றி, சமத்துவத்தின் அடிப்படையில், நீதியின் அடிப்படையில் நிபந்தனையின்றிப் பேச்சுக்களில் பங்கு கொள்ள நாம் என்றும் தயார்.

எமது கொள்கையை, எமது நிலைப் பாட்டை, எமது தேசியப்போராட்டத்திற்கு ஆதாரமான அடிப்படைகளை சிங்கள அரசிற்கும், உலகிற்கும் எடுத்து விளக்கப் பேச்சுவார்த்தைகள் வாய்ப்பளிக்கும்.

நாம் இனத்துவேஷிகள் அல்லர். போர் வெறிகொண்ட வன்முறையாளர்களும் அல்லர். நாம் சிங்கள மக்களை எதிரிகளாகவோ விரோதிகளாகவோ கருதவில்லை. நாம் சிங்கள தேசத்தை அங்கீகரிக்கின்றோம். சிங்களப் பண்பாட்டை கௌரவிக்கின்றோம். சிங்கள மக்களின் தேசிய வாழ்வில் அவர்களது சுதந்திரத்தில் நாம் எவ்விதமும் தலையிட விரும்பவில்லை.

நாம் எமது வரலாற்று தாயகத்தில் ஒரு தேசிய மக்கள்இனம் என்ற அந்தஸ்துடன் நிம்மதியாக, சுதந்திரமாக, கௌரவத்துடன் வாழ விரும்புகின்றோம்.

''எம்மை நிம்மதியாக வாழவிடுங்கள்'' என்பதுதான் எமது மக்களின் எளிமையான அரசியல் அபிலாசை. இந்த நியாயமான நீதியான, நாகரிகமான எமது மக்களின் வேண்டுகோளை சிங்கள அரசு எப்பொழுது அங்கீகரிக்கின்றதோ அப்பொழுது தான் ஒரு நிரந்தர சமாதானமும் தீர்வும் ஏற்பட வாய்ப்பு உண்டு.

இராணுவ அடக்குமுறை என்ற அணுகுமுறை மூலம் தமிழ்மக்களின் தேசிய பிரச்சினையைத் தீர்க்க முடியாது என்பதை சிங்கள அரசு இன்னும் தெரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இராணுவ மேலாதிக்கத்தை எட்டிப்பிடிக்க வேண்டும், தமிழர் தாயகத்தை ஆக்கிரமிக்க வேண்டும் என்ற ஆதிக்கவெறி இன்னும் சிங்கள ஆளும் வர்க்கத்திடமிருந்து அகன்று போனதாகத் தெரியவில்லை.

இராணுவ ஆதிக்கத்திற்கும், அழுத்தத்திற்கும் புலிகள் இயக்கம் என்றுமே விட்டுக் கொடுத்ததேயில்லை. கொண்ட கொள்கையில் நாம் என்றுமே வளைந்து கொடுத்தது இல்லை. எமது இயக்கத்தின் இந்த உறுதிப்பாட்டை உலகத்தின் மிகப் பெரிய இராணுவமே பரீட்சித்துப் பார்த்துத் தோல்வி கண்டது. சிங்கள இராணுவமும் இந்த வரலாற்றுத் தவறை சந்திக்கத்தான் நேரிடும்.

எனது அன்பார்ந்த தமிழீழ மக்களே,

நீண்ட விடுதலைப் பயணத்தில் சோர்வுகள் எம்மை ஆட்கொள்ளலாம், போராட்ட வாழ்வின் பெரும் சுமைகள் எம்மை அழுத்திப் பிடிக்கலாம். மேலும் பளுக்கள் எம் மீது சுமத்தப்படலாம்.

ஆனால், நாம் ஒரு சத்திய இலட்சியத்தில் பற்றுக்கொண்டு உறுதி கொண்ட மக்களாக ஒன்று திரண்டு நின்றால் எந்தவொரு சக்தியாலும் எம்மை அசைக்கவோ, அழிக்கவோ முடியாது.

வீர சுதந்திரம் வேண்டி நிற்கும் மக்களுக்கு உறுதிதான் வலுமிக்க ஆயுதம்.

இன்று எமது மாவீரர்களின் கல்லறைகளிலிருந்து ஒலிக்கும் சுதந்திர கீதமும் உறுதியின் உன்னதத்தைத்தான் பாடுகின்றது.

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# பெண் விடுதலை என்றால் என்ன? தலைவர் அளித்த விளக்கம்

குறிப்பு:

அனைத்துலக பெண்கள் தினத்தை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் 8-3-1992 அன்று விடுத்த அறிக்கையை இங்கு வெளியிடுகிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
08-03-1992

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

இன்று அனைத்துலக பெண்கள் நாள், உலகப் பெண்ணினத்தின் உரிமைக்குரல் உலகெங்கும் முழங்கும் ஒரு எழுச்சி நாள். மனித இனத்தின் சரிபாதி சனத்தொகையினர் சமநீதி கேட்டு நிற்கும் ஒரு புரட்சி நாள். இந்தப் பெண் எழுச்சி தினம் இன்று தமிழீழம் எங்கும் கொண்டாடப்படுவதையிட்டு நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

பெண் ஒடுக்குமுறை என்பது யுகம் யுகமாக எல்லா நாடுகளிலும், எல்லா சமூகங்களிலும், எல்லாப் பண்பாடுகளிலும் நிலவி வந்த ஒரு சமூக அநீதி, இந்த சமூக அநீதி முறை இன்னும் இந்தப் பூமியிலிருந்து அகன்றுவிடவில்லை.

நீண்ட காலமாக, வளர்ச்சி கண்ட நாடுகளில், தொடர்ச்சியாக நடந்துவந்த உரிமைப் போராட்டங்களின் பலாபலனாக, பெண்ணினம் குறிப்பிடத்தக்க சில வெற்றிகளை மட்டும் ஈட்டிக்கொள்ள முடிந்தது அடிப்படையான மனித உரிமைகளையும் அரசியல் சுதந்திரங்களையும் பெண்கள் வென்றெடுக்கமுடிந்தது, கல்வி வாய்ப்பும் தொழில் வாய்ப்பும் பெற்றுக் கொள்ள முடிந்தது. எனினும் இந்த நாடுகளில் பெண்ணின் பிரச்சினைகள் தீர்ந்தபாடில்லை, இங்கு பழைய பிரச்சினைகள் புதிய வடிவங்களில் தோற்றம்கண்டு வருகின்றன.

அன்றொரு காலம், மேற்குலகில், முதலாளித்துவம் எழுச்சி கொண்டு, வளர்ச்சி கண்ட சகாப்தத்தில் பெண்ணினம் மிகவும்

ஈவிரக்கமற்ற சுரண்டல் முறைக்கு ஆளாகியது. அப்பொழுது பெண் ஒடுக்குமுறையின் மூலகாரணி முதலாளித்துவம் எனக் கூறப்பட்டது. தனியார் சொத்துடமை நீக்கப்பட்டால், சமத்துவமற்ற பொருளாதார அமைப்பு ஒழிக்கப்பட்டால், பொருளுற்பத்தியில் பெண்கள் ஈடுபட்டால் பெண்ணினத்திற்கு விடிவுகாலம் பிறக்கும் என வாதங்களும் முன்வைக்கப்பட்டன. இதனால் விடுதலை வேண்டிநின்ற பெண்ணினம் சமூகப் புரட்சிப் போராட்டங்களில் அணிசேர்ந்துகொண்டது. பெண்களின் பங்களிப்புடன் பல நாடுகளில் சமூகப் புரட்சிகள் நிகழ்ந்தன. சமுதாய மாற்றம் மூலம் பொருளாதார சமத்துவத்தைக் கட்டி எழுப்பிய நாடுகளில் பெண்களின் வாழ்க்கை நிலை உயர்ந்தது. சமூக அந்தஸ்து மேம்பட்டது. ஆயினும் இந்நாடுகளில் பெண் ஒடுக்குமுறை முற்றாக நீங்கியபாடில்லை. சமதர்ம சமூக உலகத்திலும் பெண்ணுக்குச் சமநீதி கிடைத்ததாகக் கூறிவிடமுடியாது.

இந்த சமூகப் பரிசோதனை அனுபவங்களிலிருந்து நாம் ஒரு உண்மையைக் கண்டுகொள்ளலாம். அதாவது பொருளுலகத்தை எந்தெந்த வடிவங்களில் சீரமைத்தாலும் ஆண்களின் மனோவுலகில், பெண்மை பற்றிய அவர்களது கருத்துலகில், ஆழமான மாற்றங்கள் நிகழாமல் பெண் சமத்துவம் சாத்தியமாகப்போவதில்லை.

பெண்ணினத்தின் விடுதலை நோக்கிய பாதையில், அவர்களது சமூக பொருளாதார வாழ்வு மேம்படுவது அவசியம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. ஆயினும், அதேவேளை, ஆண்-பெண் உறவிலும், அந்த மானசீக உலகிலும் மாற்றங்கள் தேவை. உண்மையான சமத்துவம் என்பது ஆண்-பெண் உறவில் எழும் ஆழமான புரிந்துணர்வில்தான் சாத்தியமாகிறது.

எமது சமூகக் கட்டமைப்பில் பெண்ணினம் மிகவும் மோசமான ஒடுக்குமுறை வடிவங்களை எதிர்கொண்டு நிற்கிறது. மிகவும் பின்தங்கிய சமூக, பொருளாதார வாழ்வு ஒரு புறமும், அரச அடக்குமுறை அழுத்தங்கள் மறுபுறமும், ஆணாதிக்க கொடுமைகள் இன்னொரு புறமுமாக பல பரிமாணங்களில் எமது பெண்கள் ஒடுக்குமுறையைச் சந்திக்கின்றார்கள். இங்கு பெண் விடுதலை என்பது ஒரே காலத்தில் பல்வேறு முனைகளில் தொடுக்கப்பட வேண்டிய ஒரு போராட்டமாக அமைந்துவிட்டது.

எமது தேசிய சுதந்திர இயக்கம் பெண் விடுதலையைத் தனது அடிப்படை அரசியல் குறிக்கோள்களில் ஒன்றாக வரித்துக் கொண்டு செயற்பட்டு வருகிறது.

பெண் விடுதலை எனும் பொழுது அரச அடக்குமுறையிலிருந்தும், சமூக ஒடுக்குமுறையிலிருந்தும், பொருளாதார சுரண்டல் முறையிலிருந்தும் பெண்ணினம் விடுதலை பெறுவதையே குறிக்கிறோம். எனவே, எமது இயக்கம் வடிவமைத்துள்ள பெண் விடுதலைப் போராட்டமானது தேச விடுதலை, சமூக விடுதலை, பொருளாதார விடுதலை என்ற குறிக்கோள்களைக் கொண்ட மும்முனை விடுதலைப் போராட்டமாக முன்னெடுக்கப்படுகிறது.

இந்த மும்முனைப் போராட்டங்களில் தேசிய விடுதலை, அதாவது எமது மண்ணின் விடுதலை முக்கியமானது. எதிரியால் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கும் எமது மண்ணை முதலில் மீட்டெடுப்பது இன்றைய வரலாற்றின் தேவை. இந்த வரலாற்று நிர்ப்பந்தத்தை நாம் அசட்டை செய்ய முடியாது. எமது மண்ணின் விடுதலை பெண்ணின் விடுதலைக்கு மட்டு

மன்றி எமது இனத்தின் விடுதலைக்கும் அத்திவாரமானது.

இந்த மண்மீட்புப் போர்க்களத்தில் இன்று தமிழ் இளம்பெண்கள் ஆயுதமேந்தி நிற்கிறார்கள். முழு உலகுமே வியக்கும் வகையில் அபாரமான அர்ப்பணிப்புகளைச் செய்துவருகிறார்கள். விடுதலைப் புலிகளின் மகளிர் படைப்பிரிவின் தோற்றமும், வளர்ச்சியும் எழுச்சியும் எமது இயக்கம் படைத்த மாபெரும் சாதனைகளில் ஒன்று என்பதை நான் பெருமிதத்துடன் கூறமுடியும். தமிழீழப் பெண்ணினத்தின் விடுதலைப் போராட்ட வரலாற்றில் இது ஒரு புரட்சிகர மான திருப்பத்தைக் குறித்துநிற்கிறது.

ஒரு விடுதலை இயக்கத்துடன் அணி சேர்ந்து கொள்வதன்மூலமே பெண்ணினம் தனது விடுதலைநோக்கிய இலட்சியப் பாதையில் வெற்றிபெறமுடியும். வீரமும், தியாகமும், துணிவும், தன்னம்பிக்கையும் கொண்ட புரட்சிப்பெண்களாக மாறமுடியும். பெண்விடுதலைக்குக் களம் அமைத்துக் கொடுத்திருக்கும் எமது புரட்சி இயக்கத்துடன் பெண்ணினம் அணிசேரும்பொழுது தான் எமது போராட்டமும் முழுமை பெறும்.

எமது சமுதாய அமைப்பில் நிலவிவரும் ஒடுக்குமுறை அழுத்தங்களிலிருந்தும் பெண்ணினம் விடுதலை வேண்டிநிற்கிறது. நீண்ட நெடுங்காலமாக எமது சமூகத்தில் வேரூன்றி வளர்ந்த மூடநம்பிக்கைகளும், இந்த மூட நம்பிக்கைகளிலிருந்து தோற்றம் கொண்ட சமூக வழக்குகளும், சம்பிரதாயங் களும் எமது பெண்களின் வாழ்க்கையைச் சீரழித்து வருகிறது ஆணாதிக்க அடக்குமுறையாலும், வன்முறையாலும் சாதியம், சீதனம் என்ற கொடுமைகளாலும் தமிழீழப் பெண்ணினம் விபரிக்கமுடியாத துன்பங்களை அனுபவித்து வருகிறது.

இந்த ஒடுக்குமுறைச்சிறையிலிருந்து விடுதலை பெறுவதானால் பெண்ணினம் முதலில் தனக்கு எதிராக ஏவப்பட்டுவரும் ஒடுக்குமுறையின் தன்மைகளைப் புரிந்துகொள்ள வேண்டும். தனது சீரழிந்த வாழ்க்கை நிலையைச் சீரமைத்துக்கொள்வதனால் பெண்ணினம் தனது இழிநிலைபற்றி விழிப்புக் கொள்ளவேண்டும். தலைவிதி என்றும், கர்மவினை என்றும்,தனக்காக விதிக்கப் பட்ட மனுநீதி என்றும், பழைமை என்றும், பண்பாட்டுக்கோலம் என்றும், காலம் காலமாக மனவுலக இருளுக்குள் முடங்கிக்கிடந்த பெண்ணினம் விழித்தெழவேண்டும்.

விழிப்புத்தான் விடுதலைக்கு முதற்படி.

விழிப்படைந்து எழுச்சிகொள்ளும் பெண்ணினமே ஒரு போராட்ட சக்தியாக உருப்பெறமுடியும். அந்தப் போராட்ட சக்தியால்தான் ஒடுக்குமுறை விலங்குகளை உடைத்தெறிய முடியும்.

ஆணாதிக்க ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டம் என்பது ஆண்களுக்கு எதிரான போராட்டம் அல்ல. இது ஆணாதிக்க அறியாமைக்கு எதிரான கருத்துப் போராட்டமாகும். இந்தச் சித்தாந்தப் போராட்டம் ஆண்களின் மனவுலக மாற்றத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கவேண்டும்.

மனித உறவுகளில் அடிப்படையானது ஆண் - பெண் உறவு. இந்த உறவு சாதாரண சமூகஉறவு அல்ல. இது மனிதஉயிர் இயக்கத்திற்கும், மனித இன விருத்திக்கும் மூலமானது. மனிதஇனத்தின் வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் ஆதாரமானது.

ஆண் - பெண் உறவில் எழும் அபசுரங் களாகவே இன்று பெண்ணினம் எதிர்கொள் ளும் பல அவலங்கள் தோற்றம் கொள் கின்றன.

ஆணும் பெண்ணும் ஒத்திசைவாக ஒருவர் ஒருவரின் சுதந்திரத்தையும், சமத்துவத்தை யும்,கௌரவத்தையும் மதித்து,குடும்ப வாழ் வின் பொறுப்புகளைப் 'பகிர்ந்து, சமூகத் தின் மேம்பாட்டிற்கு உழைத்து, பரஸ்பர புரிந்துணர்வுடன் பற்றுக்கொண்டு வாழ்ந் தால் இந்தப் பால்வேறுபாட்டால் எழும் பல்வேறு முரண்பாடுகள் நீங்கும். இந்த அன்புறவின் ஆழமான அர்த்தத்தையும் முக்கியத்துவத்தையும் ஆணினம் புரிந்து கொள்ளும்போதுதான் ஆணாதிக்கமும் அத னால் எழும் அதிகார அடக்குமுறைகளும் அகன்றுவிட வாய்ப்புண்டு.

உலகப் பெண்ணினத்தின் எழுச்சிநாளை முன்னிட்டு விடுதலைப் புலிகளின் மகளிர் முன்னணி இன்று நடாத்தும் தமிழீழப் பெண்கள் மாநாட்டிற்கு எனது நல்லாசி யைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# 'ஒரு சத்திய யுத்தத்தில் தர்மமே வெற்றி கொள்ளும்'

குறிப்பு:

**19-04-1992** அன்று, அன்னை பூபதி நினைவுநாளை முன்னிட்டுத் தலைவர் விடுத்த அறிக்கையை இங்கு தருகிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
19-4-1992

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

மனிதவரலாற்றில் என்றுமே நிகழ்ந்திராத, எவருமே சாதித்திராத, மகத்தான மனித அர்ப்பணிப்புக்களைக் கொண்டதாக எமது விடுதலைப் போராட்டம் புகழீட்டி நிற்கிறது. இந்த அற்புதமான தியாக வரலாற்றில் அன்னை பூபதி ஒரு உன்னதமான, தனித்துவமான இடத்தைப் பெற்றுள்ளார்.

சத்தியத்திற்காகச் சாகத்துணிந்துவிட்டால் ஒரு சாதாரண மனிதப்பிறவியும் சரித்திரத்தைப் படைக்கமுடியும். இதற்கு அன்னை பூபதியின் தியாகம் ஒரு சிறப்பான எடுத்துக்காட்டு. சத்தியத்திற்காக, தர்மத்திற்காக அவர் சாவை அரவணைத்துக் கொண்டார். இந்த ஒப்பற்ற ஈகையால் ஒரு சாதாரண தாயான அவர், அசாதாரண சாதனையைப் புரிந்து தேசியத்தாய் என்ற அந்தஸ்திற்கு உயர்ந்தார்.

அறப்போரிலும்சரி, ஆயுதப்போரிலும் சரி எமது விடுதலைப் போர் உலக சாதனைகளைப் படைத்து வருகிறது; மனித ஈகையின் சிகரத்தை எட்டியிருக்கிறது.

அகிம்சையின் அறத்தையும், ஆன்மீக தர்மத்தையும் போதித்துவந்த பாரதநாடு ஆக்கிரமிப்புப் பூதமாக அன்றொருநாள் எம் மண்மீது கால் மிதித்தது. அப்பொழுது எமது போராளி ஒருவன் பாரதத்தின் ஆன்மீக மரபில் அறப்போரைத் தொடுத்தான். காந்தி அடிகளின் சாத்வீக தத்துவத்தை பாரத நாட்டிற்கு புகட்டிக் காட்டவிரும்பினான். ஆன்மீக உறுதிப்பாட்டில் அவனது உயிர்த்தியாகம் அமைந்தது. திலீபனின் தியா

கம் காந்தியின் அறக்கோட்பாட்டிற்கு ஒரு மகோன்னதமான செயற்பாட்டு வடிவம் கொடுத்தது.

பாரதத்தின் மடிந்து போன ஆன்மீகம் தமிழீழத்தில் புதுப்பொலிவுடன் புரட்சி வடிவத்தில் மறுபிறப்பு எடுத்தது.

திலீபனின் தியாகம் இந்திய மாயையைக் கலைத்தது. தமிழீழ தேசிய உணர்வைத் தட்டி எழுப்பியது. இந்த தேசிய எழுச்சியின் வெகுசன வடிவமாக அன்னையின் அறப்போர் அமைந்தது.

அந்த வயோதிபத் தாய் நீதியின் நெருப்பில் தன்னை எரித்துக் கொண்டாள். அந்தத்தீ என்றும் அணையாத சுதந்திர தீபமாக எரிந்து கொண்டு இருக்கிறது.

தேசிய விடுதலையை முன்னெடுக்கும் புரட்சிகர இயக்கம் என்ற ரீதியில் புலிகள் இயக்கமானது காலத்திற்குக் காலம் வரலாற்றுத் தேவைகளுக்கு ஏற்ப புதிய போராட்ட உத்திகளை அறிமுகம் செய்திருக்கிறது. அத்துடன் அந்தப் போராட்ட முறைக்கு முன்னுதாரணமாகவும், இலக்கணமாகவும் திகழ்ந்து அற்புதமான அர்ப்பணிப்புக்களையும் செய்துள்ளது. இன்று எமது விடுதலைப் போராட்டம் ஒடுக்கப்படும் உலகிற்கு ஒரு முன்மாதிரியாக, வழிகாட்டியாக திகழ்வதற்கும் இந்த தனித்துவமான பண்புகள்தான் காரணம்.

போர்முறையில் நாம் காட்டும் தீவிர அக்கறை போன்றுதான் சமாதான வழிமுறையிலும் நாம் நேர்மையான அணுகுமுறையைக் கடைப்பிடித்தோம். பல தடவைகள் போர்நிறுத்தம் செய்து சமாதானப் பேச்சுக்களில் பங்கு கொண்டோம். இன்றும் சமாதானத்தின் கதவுகளை அகலத் திறந்துவிட்டிருக்கிறோம்.

எனினும், தமிழ் மக்களின் தேசியப் பிரச்சினைக்குச் சமாதான வழியில் தீர்வு காண்பதற்கு சிங்களப் பேரினவாதிகள் தயார்ராக இல்லை. மனித தர்மத்தின் அடிப்படையில் தமிழருக்கு நீதியும் நியாயமும் வழங்க சிங்கள தேசம் தயாராக இல்லை. ஆயுதபலம் மூலம் இராணுவ மேலாதிக்கத்தை நிலைநாட்ட வேண்டும், தமிழினத்தைத் துப்பாக்கிமுனையில் பணிய வைக்க வேண்டும் என்ற பழைய அடக்குமுறைப் பார்தையை சிங்கள ஆளும் வர்க்கம் கைவிட்டதாகத் தெரியவில்லை. தமிழரின் பிரச்சினை குறித்து சிங்கள அரசியல் உலகில் எவ்வித அடிப்படையான மனமாற்றமும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. இரத்தமும் கண்ணீரும் தோய்ந்த ஒரு நீண்ட முடிவில்லாத சோக வரலாற்றைத்தழுவி நிற்கும் எமது மக்களின் துயரநிலைபற்றி சிங்கள இனவாதிகள் கவலை கொண்டதாகத் தெரியவில்லை. முப்பதினாயிரம் அப்பாவித் தமிழரின் பிணக்குவியல்கள்மீது மேடையமைத்துச் சிங்களப் பேரினவாதம் மிகவும் அதர்மமான, அநாகரிகமான அரசியலை நடத்திவருகிறது.

ஒருபுறம் யுத்தத்தைத் தீவிரப்படுத்திக் கொண்டு, மறுபுறம் சமாதானப் பேச்சுக்களை நடாத்தி, புலிகள்மீது நெருக்குதல் போட்டு ஒரு தீர்வைத் திணித்துவிடலாம் என சிங்களஅரசு எண்ணுகிறது. போரும், பேச்சும் என்ற இந்த இரட்டைவேட அணுகுமுறையை எமது விடுதலை இயக்கம் ஒரு பொழுதும் ஏற்றுக்கொள்ளப் போவதில்லை. தமிழீழ மண்மீது பெரும் ஆக்கிரமிப்பு நடத்தப்பட்டு, தமிழ்மக்கள் பெருந்தொகையில் கொன்று குவிக்கப்பட்டால் நாம் திறந்து வைத்திருக்கும் சமாதானக்கதவு மூடப்பட்டுவிடும் என்பதைத் தெட்டத்தெளிவாகக்கூற விரும்புகிறேன்

நாம் சமாதான மார்க்கத்திற்கு விரோதிகள் அல்லர். ஆனால் சமாதான அணுகுமுறை என்பது எமது மக்களின் உரிமைகளையும், நலன்களையும் விட்டுக்கொடுக்கும் விவகாரம் அல்ல. எனினும் எமது மக்களின் உரிமையை வென்றெடுக்கமுடியுமானால் எமது மக்களின் நலன்களைப் பேணிப்பாது

காக்க முடியுமானால் சமாதான வழி முறையை நாம் தழுவிக்கொள்ளத்தயார். ஆனால் எமது எதிரியோ சமாதான அணுகு முறையை ஒரு அரசியல் பொறியாகக் கையாள விரும்புகிறான். எனவே எதிரியின் தந்திரோபாயத்தையிட்டு நாம் மிகவும் விழிப்பாக இருக்கவேண்டும்.

இன்று நாம் மிகவும் நெருக்கடியான வரலாற்றுத் திருப்புமுனையைச் சந்தித்து நிற்கிறோம். எதிரி எம்மீது படைகொண்டு தாக்கலாம். புதிய ஆக்கிரமிப்பு யுத்தத்தைத் தொடரலாம். எது நிகழ்ந்தாலும் எதற்கும் அஞ்சாத துணிவும், உறுதியும் எம்மிடமுள்ளவரை எந்த சக்தியாலும் எம்மை வென்றுவிடமுடியாது. ஒரு சத்திய யுத்தத்தில் தர்மமே வெற்றிகொள்ளும் என்பது வரலாற்று உண்மை.

இன்றைய இப் புனிதநாளில் அந்நிய ஆக்கிரமிப்பை எதிர்த்துப்போராடி உயிர் நீத்த எமது தியாகிகளையும், மக்களையும் நினைவில் நிறுத்தி அவர்களுக்கு வீரவணக்கம் செலுத்துவோமாக.

'' புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் ''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

13980.

# புயலாக எழும் அடக்குமுறையை மலையாகத் தாங்கும் மக்கள்

குறிப்பு:

**1-5-1992** அன்று, உலகப் பாட்டாளி வர்க்கத்தின் எழுச்சி நாளை முன்னிட்டு தலைவர் விடுத்த அறிக்கையை இங்கு வெளியிடுகிறோம்.

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே,

இன்று தொழிலாளர் நாள். உலகப் பாட்டாளிகளின் எழுச்சி நாள். உழைக்கும் மக்களின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் புரட்சி நாள்.

உழைக்கும் மக்களின் உழைப்புச் சக்தியே ஒரு தேசத்தின் ஜீவாதார சக்தி. உழைப்பவனே பொருளுலகத்தைப் படைக்கிறான். மனித வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்கிறான். உழைக்கும் கரங்களே மனித வாழ்க்கையை இயக்கும் கரங்கள்.

இந்த உழைக்கும் மனிதர்களுக்கு நாம் இன்று விழா எடுக்கிறோம். ஒரு யுத்த சூழ்நிலையில் எதிரியின் படையெடுப்புகளுக்கு மத்தியில் பெரியதொரு பொருளாதாரச் சுமையின் அழுத்தங்களைத் தாங்கி நின்று, நாம் பாட்டாளிகள் தினத்தைக் கொண்டாடுகிறோம்.

தமிழீழப் பாட்டாளி வர்க்கமானது என்றுமில்லாத பெரும் நெருக்கடியைச் சந்தித்து நிற்கிறது. இனவாத அரசின் ஈவிரக்கமற்ற கொள்கையால் உழைத்து வாழும் எமது மக்கள் ஒரு ஜீவமரணப் போராட்டத்தை எதிர்கொண்டு நிற்கிறார்கள். எமது மக்களின் உழைக்கும் கரங்களைத் துண்டித்து விட்டு, அவர்களின் நாளாந்த வாழ்க்கையை நரகமாக்கிவிட எதிரியான வன் கங்கணம் கட்டி நிற்கிறான். எமது பாட்டாளி வர்க்கம் மீது மிகவும் கொடூரமான பொருளாதார யுத்தம் ஏவிவிடப் பட்டிருக்கிறது.

ஒரு மக்கள் சமுதாயத்தின் பொருளா தார வாழ்விற்கு மூலாதாரமான உழைப்புச் சக்தியை முடக்கி விட்டால், அந்த மக்க ளின் மனவுறுதியை, ஆன்மதிடத்தை, போராட்ட உறுதியை உடைத்தெறிந்து விடலாம் என்பது சிங்கள ஆளும் வர்க் கத்தின் தந்திரோபாயம். இது எல்லாக் காலத்திலும், எல்லாச் சமூகங்களிலும், எல்லா அடக்கு முறையாளர்களாலும் கையாளப்படும் ஒரு ஒடுக்குமுறை யுக்தி. எமது எதிரியும் நீண்டகாலமாகவே இந்த அணுகுமுறையைக் கடைப்பிடித்து வருகி றான். இதன் ஒட்டு மொத்த விளைவாக உழைத்து வாழும் எமது மக்கள் சந்தித்த சோகம் நிறைந்த வரலாற்றைச் சொற்க ளால் விபரிக்க முடியாது.

போராட்டப்பளுவை ஒரு தோளிலும் பொருளாதாரப்பளுவை மறுதோளிலு மாக, உறுதி தளராது சுமந்துநிற்கும் தமிழ்ப்பாட்டாளி வர்க்கத்தை நான் பாராட்டுகிறேன்.

புயலாகச் சீண்டும் எதிரியின் அடக்கு முறை அழுத்தங்களை எல்லாம் மலையா கத் தாங்கிநிற்கும் எமது மக்களை நான் பாராட்டுகிறேன்.

சாவுக்கும் அழிவுக்கும் அப்பால், பசிக் கும் பஞ்சத்திற்கும் அப்பால், சுயநலவாழ் வின் சுகபோகங்களுக்கும் அப்பால், ஒரு சுதந்திரமான, கௌரவமான வாழ்வில் காதல் கொண்டு நிற்கும் எமது மக்களின் இலட்சியப்பற்றை நான் பாராட்டுகிறேன்.

கல்லும், முள்ளும், ஏற்றமும், இறக்க மும் நிறைந்த, மிகவும் கடினமான பாதை யூடாக எமது விடுதலைப்பயணம் தொடர் கிறது. எதிரியானவன் இந்தப் பாதை வழியே மேலும் முட்டுக்கட்டைகளைப் போடலாம். எமது பயணத்தில் சோர்வை யும், களைப்பையும் ஏற்படுத்த இடையூறு களை விளைவிக்கலாம். எத்தனை தடை கள் ஏற்பட்டபோதும், எத்தனை துன்பங் கள் ஏற்பட்டபோதும், கொண்ட கொள்கை யில் நம்பிக்கையும் அந்த நம்பிக்கையின் அத்திவாரத்தில் கட்டப்பட்ட உறுதியும், அந்த உறுதியின் நெருப்பாக எரியும் விடு தலை வேட்கையும் எம்மிடம் உள்ளவரை எமது இலட்சியப்பயணம் வெற்றியில் முடி யும் என்பது நிச்சயம்.

ஒரு விடுதலைப் போராட்டத்தில் பாட் டாளி வர்க்கத்தின் பங்கு பிரதானமானது. தமிழீழப் பாட்டாளி வர்க்கமானது, ஒரு புறம் முதலாளித்துவ சுரண்டல் முறையை யும் மறுபுறம் இனவாத ஒடுக்குமுறையை யும் சந்தித்து நிற்கிறது. இந்த இருதலைப் பட்ச முரண்பாட்டில் இனவாத ஒடுக்கு முறையே பிரதானமானது.

இன ஒடுக்குமுறையைத் தனது பிரதான எதிரியாகச் சந்தித்து நிற்கும் தமிழீழப் பாட் டாளி வர்க்கம். அந்த இன ஒடுக்கு முறைக்கு எதிராகப்போராடுவதையே தனது முதன்மை யான பணியாகக் கொள்ளவேண்டும். ஏனென்றால், இன ஒடுக்குமுறையானது தமிழ்ப்பாட்டாளி வர்க்கத்தின் வாழ்க்கை யையே சீரழிக்க எத்தனிக்கிறது. எனவே இன ஒடுக்குமுறைக்கு எதிராகப் போராடு வது தவிர்க்க முடியாத வரலாற்று நிர்ப் பந்தமாக எழுந்துள்ளது. இந்தப் போராட்ட மானது வர்க்கப்போராட்ட வரம்புகளுக்கு அப்பால் ஒரு தேசியப் போராட்டமாக, தேசிய மக்களின் போராட்டமாக, தேசிய வர்க்கங்களின் ஒன்றிணைந்த போராட்ட மாக உயர்வடிவம் பெறுகிறது. ஒரு தேசிய விடுதலை இயக்கத்துடன் அணிசேர்ந்து கொள்வதன் மூலமே தமிழீழத் தொழிலா ளர் வர்க்கம் தேசிய போராட்டத்திற்கு உருப்படியான முறையில் பங்களிக்க முடி யும். இதுவே எமது உழைக்கும் மக்களின் விடிவிற்கும் விமோசனத்திற்கும் வழி கோலும்.

சிங்களப் பாட்டாளி வர்க்கத்திற்கு நாம் எமது நேசக்கரத்தை நீட்டி நிற்கி றோம். சிங்கள ஆளும்வர்க்கத்தால் ஒடுக் கப்பட்டு, நசுக்கப்பட்டு, சுரண்டப்பட்டு வரும் சிங்களப் பாட்டாளி மக்களை நாம் ஒரு நேச சக்தியாகவே கருதுகிறோம்.

தமிழ் சிங்களப் பாட்டாளிகள் மத்தியில் வர்க்க ஒருமைப்பாடு ஏற்படுவதானால் தமிழரின் தன்னாட்சி உரிமையை சிங்களத் தொழிலாளர் வர்க்கம் அங்கீகரிக்க வேண்டும். தமிழரின் தேசியவிடுதலைப் போராட்டத்தை ஆதரிக்கவேண்டும். ஆனால் அதே சமயம் தென்னிலங்கைப் பாட்டாளி வர்க்கமானது சிங்கள பௌத்த பேரினவாத ஆட்சியமைப்பிற்கு முண்டுகொடுத்து நிற்கும் வரை தமிழ் - சிங்கள வர்க்க ஒருமைப்பாடு சாத்தியமாகப் போவதில்லை.

பேரினவாத சித்தாந்தப் பிடியில் இருந்து விடுதலை பெற்று விழிப்புணர்வு அடையும் பொழுதுதான் தமிழரின் சுதந்திரப் போராட்டத்தின் புரட்சிகரத் தன்மையைச் சிங்கள மக்கள் புரிந்துகொள்வார்கள். தமிழரின் விடுதலையில்தான் தமக்கும் விமோசனம் உண்டு என்ற உண்மையை உணர்ந்து கொள்வார்கள்.

பாட்டாளி வர்க்கத்தின் எழுச்சி தினமாகிய இன்று நாம் ஒரு விதி செய்து கொள்வோம்.

எந்தவித சவால்களை எதிர்கொண்ட போதும் எமது இலட்சியப் பயணத்தில் உறுதிதளர மாட்டோம் என ஒரு வீரசபதம் செய்வோம்.

'' புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம் ''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY

பொதுசன நூலகம்
யாழ்ப்பாணம்.

# எமது கலையும் பண்பாடும் எமது தேசியத்தின் ஆன்மா



குறிப்பு:

**15-07-1992** அன்று, விடுதலைப் புலிகள் கலை, பண்பாட்டுக் கழகத்தினரால் வெளியிடப்பட்ட முத்தமிழ் விழா மலருக்கு தலைவரால் வழங்கப்பட்ட ஆசிச் செய்தியை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
15-07-1992

எமது மொழியும், கலையும், பண்பாடும் எமது நீண்ட வரலாற்றின் விழுதுகளாக எமது மண்ணில் ஆழமாக வேரூன்றி நிற்பவை; எமது தேசிய வாழ்விற்கு ஆதாரமாக நிற்பவை. எமது பண்பாடுதான் எமது தேசத்தின் உயிர். எமது இனத்தின் ஆன்மா. எமது உடல்கள் அழிந்தாலும், உடமைகள் அழிந்தாலும், எமது இனத்தின் இதயமாக இயங்கும் பண்பாட்டு வாழ்வை எவராலும் அழித்துவிட முடியாது.

எமது மொழியில், எமது கலைகளில், எமது பண்பாட்டில், எமது மண்ணில் நாம் கொள்ளும் பாசமும் நேசமும் தேசியப் பற்றுணர்வாக பரிணாமம் பெறுகிறது. இந்தத் தேசாபிமான உணர்வானது மக்களை ஆழமாகப் பற்றிக்கொள்ளும் பொழுதுதான் ஒரு தேசம் தனக்கே உரித்தான தனித்துவமான ஆளுமையைப் பெறுகிறது. இந்தத் தேசிய ஆளுமையைக் கொண்ட மக்கள் இனம்தான் ஒரு அரசை அமைத்துக் கொள்ளும் தகுதியைப் பெறுகிறது.

ஒரு திடமான, தனித்துவமான தேசிய ஆளுமையைக் கொண்ட மக்களாக தமிழீழ மக்கள் வளர்ச்சியும் முதிர்ச்சியும் கண்டிருக்கிறார்கள். இரத்தப் புரட்சியாகக் கட்டவிழ்ந்த நீண்ட, கடினமான போராட்ட வரலாறும், அதனால் உருவான நிலைதளரா இலட்சிய உறுதியும், நாட்டுப் பற்றும் எமது மக்களை தேசிய ஆளுமை கொண்ட மக்கள் இனமாக மாற்றியமைத்திருக்கிறது. இதனால் எமது மக்கள் தன்னாட்சி உரிமைக்கு உரித்தானவர்களாக, தனியரசு அமைக்கும் தகுதி பெற்றவர்களாக விளங்குகிறார்கள்.

உலகெங்கும் தமிழினம் பரந்து வாழ்ந்தாலும் தமிழீழத்திலேதான் தேசிய ஆன்மா விழிப்புப் பெற்றிருக்கின்றது. தமிழீழத்திலேதான் தேசிய ஆளுமை பிறந்திருக்கிறது. தமிழீழத்திலேதான் தனியரசு உருவாகும் வரலாற்றுப் புறநிலை தோன்றியிருக்கிறது.

தமிழீழத்தில் பிறந்து, வளர்ந்து, நிமிர்ந்து நிற்கும் தமிழனின் தேசிய ஆளுமையைக் கொன்றுவிட எமது பகைவர்கள் திடசங்கற்பம் பூண்டு நிற்கிறார்கள். எமது வரலாற்று எதிரியான சிங்கள அரசு ஒரு புறமும், இந்திய வல்லரசு மறுபுறமுமாக எமக்குப் பெரும் சவால்களாக எம்மை அச்சுறுத்தி நிற்கின்றன.

அனைத்துலக தமிழ்ப் பண்பாட்டின் மையமாக, தன்னாட்சி உரிமைக்குத் தகுதி பெற்றதாக, அரசியல் ஆளுமை பெற்று வளர்ந்துள்ள தமிழீழத் தேசியம் இந்திய உபகண்ட தேசிய எழுச்சிப் போராட்டங்களுக்கு உந்து சக்தியாக அமைந்து விடுமென இந்தியா அஞ்சுகிறது. குறிப்பாக தமிழ்நாட்டில் செத்துக் கொண்டிருக்கும் திராவிடப் பண்பாட்டு இயக்கத்திற்கு புத்துயிரளித்துத் தூங்கிக்கிடக்கும் தமிழகத் தமிழனைத் தட்டி எழுப்பிவிடலாமென பாரதம் பயப்படுகிறது. இந்தியாவிலும் உலகளாவிய ரீதியிலும் தமிழ்ப் பண்பாட்டு மறுமலர்ச்சிக்கும் தமிழ்த் தேசிய எழுச்சிக்கும் ஊக்க சக்தியாக உருவாக்கம் பெற்று வரும் தமிழீழத் தேசியத்தை ஆரம்பத்திலேயே சிதைத்துவிட வேண்டுமென டில்லி ஆட்சிபீடம் திட்டம் தீட்டியது. இந்த நோக்கிலேதான் இந்திய ஆளும்வர்க்கமானது சிங்களப் பேரினவாதிகளுடன்கூட்

டுச் சேர்ந்து, ஒப்பந்தம் செய்து எமது மண்ணில் தனது ஆக்கிரமிப்புப் பாதங்களைப் பதித்தது. தமிழீழ தேசியத்தின் புரட்சிவடிவமான புலிகள் இயக்கத்தை அழித்துவிட முனைந்தது. இந்திய தலையீடும், அதனால் எமது தாயகத்தில் நிகழ்ந்த மனிதக் கொலைகளும் அழிப்புகளும் தமிழ்த் தேசியத்தை நசுக்கிவிட முடியவில்லை. பதிலாக, எமது போராளிகளதும் பொதுமக்களதும் உறுதிமிக்க எதிர்ப்பியக்கம் தேசியப் பற்றுணர்வை மேலும் வலுப்படுத்தியது என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்திய ஆட்சியாளரதும், சிங்களப் பேரினவாதிகளதும் நெருக்குதல்கள் இன்னும் ஓய்ந்தபாடில்லை. விடுதலைப் புலிகள் இயக்கத்தைத் தடைசெய்து தமிழீழ தேசிய எழுச்சியை 'பிரிவினைவாதம்' என்றும் 'பயங்கரவாதம்' என்றும் உலகிற்குத் திரித்துக்காட்டுவதில் இந்தியா முனைப்பாக நிற்கிறது. தமிழரின் தேசிய கட்டமைப்பிற்கு ஆதாரமாக விளங்கும் தமிழரின் வரலாற்றுப் பூமியை ஆக்கிரமிப்பால் அபகரித்துக்கொள்ள சிங்களப் பேரினவாதம் பகீரத முயற்சிகளைச் செய்கிறது. இதனால் எமது தேசிய விடுதலைப்போராட்டம் என்றுமில்லாத ஒரு பெரிய சவாலைச் சந்தித்து நிற்கிறது.

இந்தச் சவாலை நாம் வெற்றிகரமாக எதிர்கொண்டு முறியடிப்பதாயின் ஒரு திடமான, வலுவான தேசிய எதிர்ப்பியக்கத்தை நாம் கட்டி எழுப்பவேண்டும். போர்க்குணம் மிக்க ஒரு புரட்சிகர சமுதாயமாக எமது தேசத்தை உருவாக்கம் செய்யவேண்டும்.

ஒரு விடுதலை இயக்கம் தனித்துநின்று போராடி விடுதலையை வென்றெடுத்ததாக வரலாறு இல்லை. ஒரு விடுதலை இயக்கத்தின் பின்னால் மக்கள்சக்தி அணிதிரண்டு எழுச்சிகொள்ளும் பொழுதுதான் அது மக்கள் போராட்டமாக, தேசிய போராட்டமாக முழுமையும், முதிர்ச்சியும் பெறுகிறது. அப்பொழுதுதான் விடுதலையும் சாத்தியமாகிறது.

எமது விடுதலைப் போராட்டத்தை மக்கள் மயமாக்கி மக்கள் போராட்டமாக முழுமைப்படுத்தி, மக்கள் அரங்கிலிருந்து ஒரு பலமான, உறுதிமிக்க தேசிய எதிர்ப்பியக்கத்தைக் கட்டிஎழுப்பும் பணி இன்றைய வரலாற்றுத் தேவையாக எழுந்திருக்கிறது. இந்தத் தேவையைப் பூர்த்திசெய்வதில் எமது கலை இலக்கியப் படைப்பாளிகளின் பங்கு முக்கியமானது.

எமது போராட்ட வாழ்வின் உண்மைகளை கலை, இலக்கியப் படைப்புகள் தரிசித்து நிற்கவேண்டும். எமது சமூக வாழ்வியக்கத்தின் சகல பரிமாணங்களிலும் ஆழமாக ஊடுருவிநிற்கும் இன ஒடுக்குமுறையின் கொடூரத்தினை சிருஷ்டி கர்த்தாக்கள் சித்திரித்துக்காட்டவேண்டும். மக்களிடையே விழிப்புணர்வையும், எதிர்ப்புணர்வையும், விடுதலையுணர்வையும் தூண்டிவிடும் கலை, இலக்கிய ஆக்கங்களே எமது இலட்சியப் போருக்கு உரமேற்றுவதாக அமையும். இத்தகைய கலை, இலக்கியப் படைப்புகளே தேசிய எதிர்ப்பியக்கத்திற்கு உயிரூட்டுவதாகவும் அமையும்.

போர்க்காலக் கலை, இலக்கிய மறுமலர்ச்சிக்கு களமாகத் திகழ்ந்துவரும் கலை, பண்பாட்டுக் கழகத்தினர் ஒழுங்கு செய்துள்ள முத்தமிழ் விழாவுக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்

# துன்பப்படும் மக்களுக்கு சேவை புரிவதே அரசியல்



குறிப்பு:

**22-07-1992** அன்று, அரசியல் பயிற்சிப் பள்ளியில், அரசியல் வேலைசெய்யும் போராளிகள் மத்தியில் தலைவர் ஆற்றிய உரையின் முக்கிய பகுதி களை இங்கு தருகிறோம்.

"அரசியல் என்பது மக்கள்மீது ஆட்சியை நடாத்தும் அல்லது அதிகாரத் தைச் செலுத்தும் விவகாரம் அல்ல. அரசி யல் என்பது மக்களுக்குச் சேவைபுரியும் பணி. மக்களின் நல்வாழ்விற்கு ஆற்றப் படும் தொண்டு. எனவே, அரசியல் வேலை செய்யும் எமது போராளிகள் மக்களுக்குச் சேவை ஆற்றுவதையே இலட்சியமாகக் கொண்டு மக்களின் தொண்டர்களாகப் பணிபுரியவேண்டும்.

எமது இயக்கம் ஒரு விடுதலை இயக் கம். மக்களின் விடிவிற்காகவும் விடுதலைக் காகவும் போராடும் ஒரு புரட்சிகர இயக் கம். நாம் மக்களுக்காகவே எமது உயிரை அர்ப்பணித்துப் போராடுகிறோம். எனவே, நாம் எமது மக்களை நேசிக்கவேண்டும். எமது மக்களைக் கௌரவிக்கவேண்டும். அவர்களுடன் அன்புறவை வளர்த்து அவர் களின் நன்மதிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

நாம் அரசியல்வாதிகள் அல்லர். நாம் புரட்சிவாதிகள். நாம் பழைய அரசியல் வாதிகள் போல மக்களை அணுகக்கூடாது. மாலைகள் அணிந்து, மேடைகள்மீது முழங்கி, மக்களின் உணர்ச்சிகளைக் கிளறி விட்டு, மக்களுக்குப் பொய்சொல்லி, மக் களை ஏமாற்றி அந்தக் காலத்து அரசியல் வாதிகள் நாடகமாடினார்கள். நாம் மக் களை வித்தியாசமாக அணுகவேண்டும். மக்களுக்கு உண்மைநிலையை விளக்க வேண்டும். பொய்யான, நடைமுறைச்சாத் தியமற்ற வாக்குறுதிகளை நாம் மக்களுக்கு வழங்கக்கூடாது. நாம் எதற்காகப் போரா டுகிறோம். எந்தக் கொள்கையின் அடிப் படையில் போராடுகிறோம். நாம் எதிர் கொள்ளும் பிரச்சினைகள் என்ன என் பதையெல்லாம் நாம் மக்களுக்கு எடுத்து விளக்கவேண்டும். உண்மைநிலையை எடுத்து விளக்கும்பொழுதுதான் மக்கள் எம்மீது நம் பிக்கை கொள்வார்கள்.

நாம் மக்களை எங்களிடம் வரவழைக் காமல் நாம் மக்களிடம் செல்லவேண்டும். மக்கள் வாழும் சமூக உலகத்தில் நுழைய வேண்டும். கிராமங்களுக்குள் இறங்கி வேலைசெய்யவேண்டும். மக்களுடன் பழகி, மக்களின் பிரச்சினைகளை இனம்கண்டு கொள்ளவேண்டும். அவர்களின் துன்ப துய ரங்களைப் பகிர்ந்துகொள்ளவேண்டும். கஷ் டப்படும் மக்களுக்கு எம்மாலான உதவி களைச் செய்யவேண்டும். மக்களின் துன்பங் களில் நாம் பங்கெடுத்துக்கொள்ளும் பொழுதுதான் மக்கள் எம்முடன் இணைந்துகொள்வார்கள். எமது போராட்டமானது மக்களின் விடிவை நோக்காகக் கொண்டது என்பதை உண ரும்பொழுதுதான் மக்கள் எமது போராட் டத்திற்கு பங்களிக்க முன்வருவார்கள்.

சாதாரண ஏழை மக்களின் சமூக வாழ் விற்குள் பிரவேசிக்கும்பொழுது அங்கு ஏராளமான பிரச்சினைகள் இருக்கின்றன என்பதைக் கண்டுகொள்வீர்கள். மக்கள் தமது பிரச்சினைகளை எடுத்துச்சொல் வார்கள். அந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வை யும் எதிர்பார்ப்பார்கள். நாம் ஒரு அரசு அல்ல. எம்மிடம் பெரிய அளவில் பொரு ளாதார வளங்களும் இல்லை. மக்களின் பிரச்சினைகள் எல்லாவற்றையும் தீர்த்து விடும் வல்லமை எம்மிடமில்லை. ஆயினும் எமது வசதிக்கும் வல்லமைக்கும் உட்பட்ட வகையில் நாம் மக்களுக்கு உதவச் சகல முயற்சிகளையும் எடுக்கவேண்டும். மக்க ளின் அவசியத் தேவைகளைப் பூர்த்திசெய் யும் வகையில் சிறிய வேலைத் திட்டங் களை அமைத்து, மக்களின் ஒத்துழைப்பு டன் அவற்றை நாம் செயற்படுத்தவேண் டும். மக்கள் மத்தியில் கூட்டு வாழ்வை யும், கூட்டுறவு முயற்சிகளையும் ஊக்குவிக் கும் வகையில் இந்த வேலைத் திட்டங்கள் அமைவது சிறப்பானதாகும். இப்படியான பல வேலைத் திட்டங்களை எமது இயக் கம் ஏற்கனவே செயற்படுத்திவருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

பூரணமான அரசியல் தெளிவும் விழிப் புணர்வும் ஒரு போராளிக்கு அவசிய மானது. அரசியல் விழிப்புணர்வு மூலம் தான் சுதந்திரப் போராட்ட உணர்வே எழுகிறது. அரசியல் தெளிவும் சுதந்திர

உணர்வும் உள்ளவர்களே விடுதலைப் போராளிகள் என்ற தகைமையைப் பெறுகிறார்கள். அரசியல் வேலைசெய்யும் போராளிகளுக்குப் பூரணமான அரசியல் தெளிவு அவசியம். அப்படியான தெளிவு இருந்தால்தான் மக்கள் மத்தியில் அரசியல் பிரச்சார வேலைகள்செய்ய முடியும். நாம் எதற்காகப் போராடுகிறோம், எமது அரசியல் இலட்சியம் என்ன என்பதை எல்லாம் எமது மக்களுக்கு எடுத்து விளக்குவதற்கு ஆழமான அரசியல் அறிவு அத்தியாவசியமானது.

அரசியல்வேலை என்பது வெறும் பிரச்சாரமாக மட்டும் அமைத்துவிடக் கூடாது. ஏனெனில், பெரும்பாலான எமது மக்கள் போராட்டம்பற்றி தெளிவு உள்ளவர்களாகவே இருக்கிறார்கள். முன்பொரு காலம் போராட்டம்பற்றித் தெளிவில்லாத மக்கள் இருந்திருக்கலாம். ஆனால் இன்றைய நிலை வேறு, இன்று எமது மக்கள் போராட்டத்தின் அவசியம்பற்றி நன்கு உணர்ந்திருக்கிறார்கள். எனினும் போராட்டத்தின் விளைவுகள் அவர்களை நேரடியாகப்பாதிக்கின்றன. போராட்டத்தின்நிமித்தம் அவர்கள் கஷ்டப்படுகிறார்கள். பெரும் துன்பத்தைச் சுமந்துவருகிறார்கள். அவர்களை இந்தத் துன்பங்களிலிருந்து மீளச்செய்வதற்கு நாம் முயற்சிக்கவேண்டும். இந்த நோக்கிலேதான் எமது வேலைத்திட்டங்கள் அமையவேண்டும்.

ஒரு விடுதலைப் போராட்டத்தில் சாவும் அழிவும், துன்பமும் துயரமும் தவிர்க்கமுடியாதவை. பெரிய தியாகங்கள் அர்ப்பணிப்புகள் புரிந்துதான் நாம் எமது விடுதலையை வென்றெடுக்கவேண்டும். சுதந்திரம்பெற்ற மக்களின் வரலாறும் இதுதான். எத்தனை துன்பங்களை எதிர்கொண்டபோதும் எமது மக்களின் மனவுறுதி தளர்ந்துவிடக்கூடாது. நம்பிக்கையீனம் தோன்றிவிடக்கூடாது. மக்களுக்கு உறுதியும் நம்பிக்கையும் ஊட்டும் வகையில் எமது பிரச்சாரங்கள் அமையவேண்டும்.

நாம் ஒருதேசியப் போராட்டத்தை முன்னெடுத்துவருகிறோம். நாம்வர்க்கப்போராட்டத்தை முன்நடத்தவில்லை. தேசியப் போராட்டம் என்றால் எல்லா வர்க்கத்தினரையும் ஒரே அணியில், ஒரே இலட்சியத்தில் ஒன்றிணைத்து தேசிய விடுதலைக்காகப் போராடுவது என்பதுதான் அர்த்தம்.

எமது மக்கள் சமுதாயத்தை மூன்று வர்க்கப் பிரிவினராக வகுக்கலாம். ஒன்று வசதிபடைத்த மேற்தட்டு வர்க்கம், இரண்டாவது நடுத்தர வர்க்கம். மூன்றாவது சமூகத்தின் அடிமட்டத்திலுள்ள ஏழைப் பாட்டாளி வர்க்கம்.

தேசியப் போராட்டத்தின் நிமித்தம் எல்லாச் சமூகப் பிரிவினரும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது உண்மையே. மேற்தட்டு வர்க்கத்தினரும், நடுத்தரவர்க்கத்தினரும்வெவ்வேறு விதமான பிரச்சினைகளை எதிர்கொள்கிறார்கள். எனினும் சமூகத்தின் கீழ்மட்டத்திலுள்ள ஏழைமக்களே பெரிய அளவிலான பாதிப்பிற்குஇலக்காகியுள்ளார்கள். வேலையில்லாப் பிரச்சினை இம் மக்கள் மத்தியில் பூதாகாரமாக எழுந்துள்ளது. இம் மக்களின் நாளாந்த வாழ்க்கை ஒரு ஜீவமரணப் போராட்டமாக மாறியுள்ளது, நாம் சகல சமூக மட்டங்களிலுமுள்ள எமது மக்களோடு இணைந்து, அவர்களுக்கு உதவி செய்து அனைவரையும் அணைத்துச்செல்லும் அதேவேளை ஏழை மக்களின் துயரங்களைத் துடைப்பதில் எம்மாலான முழு முயற்சிகளையும் செய்யவேண்டும். வேலையற்று, வறுமைக்கோட்டில் நின்று அல்லல் படும் இம் மக்களுக்கு வேலைவாய்ப்பளித்து, அவர்களின் கூட்டு உழைப்பை ஊக்குவிக்கும் வகையில், எமது வளத்திற்கும் சக்திக்கும் ஏற்ற வகையில் வேலைத் திட்டங்களை அமைத்துக்கொடுக்கவேண்டும்.

மக்களின் துன்ப துயரங்களில் பங்குகொண்டு, அவர்களின் சுமைகளை நாமும் தாங்கி, அவர்களின் கஷ்டங்களைபோக்குவதற்குத் திட்டமிட்டுச் செயலாற்றுவது தான் உண்மையான அரசியல் வேலை. இந்தப் புரிந்துணர்வுடன்தான் நாம் மக்கள் களத்தில் இறங்கி வேலைசெய்யவேண்டும்.

□□□

# நான் ஒரு கனவு காண்கிறேன் அது நனவாக வேண்டும்

குறிப்பு:

**19-09-1992** அன்று, தமிழீழ படைத் துறைப் பள்ளியின் முதலாண்டு நிறைவு தினத்தை முன்னிட்டு வெளியாகிய ஆண்டு மலருக்கு தலைவர் வழங்கிய வாழ்த்துச்செய்தியை இங்கு தருகிறோம்.

*தலைமைச் செயலகம்,*
*தமிழீழ விடுதலைப் புலிகள்,*
*தமிழீழம்.*
*19-09-1992*

நான் ஒரு கனவு காண்கிறேன். அந்தக் கனவு நனவாகி, நடைமுறை உண்மையாகவேண்டும் என்பது எனது அவா.

எனது தேசத்தின் எதிர்காலச் சிற்பிகளாக ஒரு புதிய இளம் பரம்பரை தோற்றம்கொள்ளவேண்டும். ஆற்றல்மிகுந்தவர்களாக, அறிவுஜீவிகளாக, தேசப் பற்றாளர்களாக, போர்க்கலையில் வல்லுனர்களாக, நேர்மையும் கண்ணியமும் மிக்கவர்களாக ஒரு புதிய, புரட்சிகரமான பரம்பரை தோன்றவேண்டும். இந்தப் பரம்பரையே எமது தேசத்தின் நிர்மாணிகளாக, நிர்வாகிகளாக, ஆட்சியாளர்களாக உருப்பெறவேண்டும்.

இது ஒரு பெரிய ஆசை; அலாதியான கனவு. எனினும் நான் முயற்சிக்கிறேன். முயற்சி ஆக்கம் தரும் என்பதில் எனக்கு ஆழமான நம்பிக்கை உண்டு.

தமிழீழப் படைத்துறைப் பள்ளி எனது முயற்சிகளில் ஒன்று. இந்தப் படைத்துறைப் பள்ளி ஆரம்பிக்கப்பட்டு இன்றுடன் ஓராண்டு பூர்த்தியாகிறது.

தமிழினத்தின் நீண்ட பெருமைமிக்க வரலாற்றில் புதைந்துபோன ஒரு வீரமரபு மீண்டும் புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. இன்றைய காலத்தின் வளர்ச்சிப்போக்கிற்கு அமைய நவீன போர்க்கலை அறிவும், எமது இயக்கத்தின் சொந்தப் போராட்டப் பட்டறிவும், ஏனைய துறைசார் கல்வியும் ஒன்றிணைந்து ஒரு புதிய பாடத்திட்டத்தில் எமது இளம் போராளிகள் இங்கு பயிற்சி பெறுகின்றனர்.

இந்த ஓராண்டில் பிரமிக்கத்தக்க வகையில் படைத்துறைப் பள்ளி வளர்ச்சி கண்டுள்ளதையிட்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்த அபாரமான முன்னேற்றத்திற்காக அயராது உழைத்த படைத்துறைப் பள்ளிப் பொறுப்பாளருக்கும், ஆசிரியர்களுக்கும் ஏனையோருக்கும் எனது பாராட்டுக்கள்.

தமிழீழப் படைத்துறைப் பள்ளியின் ஓராண்டு நிறைவை முன்னிட்டு வெளியாகும் ஆண்டு மலருக்கு எனது ஆசிகள்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# எமது சுதந்திர இயக்கத்தின் தூண்களாக நிற்கும் மாவீரர்கள்



குறிப்பு:

**27-11-1992** அன்று, மாவீரர் தினத்தை முன்னிட்டு தலைவர் பிரபாகரனால் வெளியிடப்பட்ட அறிக்கையை இங்கு தருகிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
27-11-1992

எனது அன்பிற்கும் மதிப்பிற்குமுரிய தமிழீழ மக்களே!

இன்று மாவீரர் தினம்.

எமது விடுதலைப் போராட்டத்தை ஒப்பற்ற வீரகாவியமாக உலக வரலாற்றில் பொறித்துச் சென்ற உன்னதமானவர்களை நாம் நினைவில் நிறுத்திப் பூசிக்கும் புனித நாள்.

மாவீரர்கள் மகத்தான இலட்சியவாதிகள். தாம் தழுவிக்கொண்ட இலட்சியத்தைத் தமது உயிரிலும் மேலாக நேசித்தவர்கள். மக்களின் விடுதலையை தமது மானசிக இலட்சியமாக, வாழ்வின் உயரிய குறிக்கோளாக வரித்துக்கொண்டவர்கள்; அந்த இலட்சியத்திற்காகவே மடிந்தவர்கள்.

மனித வாழ்வில் சுதந்திரம் உன்னதமானது; மனித நற்பண்புகளில் தலைசிறந்தது. மனித வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் ஆதாரமானது. சுதந்திரம்தான் மனித வாழ்விற்கு அர்த்தத்தைக் கொடுக்கிறது; முழுமையைக் கொடுக்கிறது.

மனித ஆன்மாவின் ஆழமான அபிலாசையாகவே மனிதனிடம் சுதந்திர தாகம் பிறக்கிறது.

நாகரிகம் தோன்றிய காலந்தொட்டு, யுகம் யுகமாக மனித குலம் சுதந்திரம் வேண்டிப் போராடி வருகிறது. அடிமைத் தளைகளிலிருந்து, அடக்குமுறையிலிருந்து விடுதலைபெற விழைந்து வருகிறது. காலம் காலமாக இந்தப் பூமியில் நிகழ்ந்த போராட்டங்கள், புரட்சிகள், யுத்தங்கள் எல்லாம் மனித விடுதலை எழுச்சியின் வெளிப்பாடுகளன்றி வேறொன்றுமல்ல.

மனிதனை மனிதன் அடிமைகொள்கிறான். அழிக்க முயல்கிறான். மனிதனை மனிதன் சுரண்டி வாழ்கிறான். அன்று தொட்டு இன்றுவரை மனிதனே மனிதனின் முதன்மையான எதிரியாக விளங்கி வருகிறான். ஒருவனது சுதந்திரத்தை இன்னொருவன் விழுங்கிவிட எத்தனிக்கும்போது தர்மம் செத்துவிடுகிறது. உலகில் அதர்மமும், அநீதியும் பிறக்கிறது. சாதி என்றும், வர்க்கம் என்றும், இனம் என்றும் பிளவுகள் எழுந்து மனிதரிடையே முரண்பாடு தோன்றுகிறது. மோதல்கள் வெடிக்கிறது. இந்த உலகில் அநீதியும் அடிமைத்தனமும் இருக்கும்வரை சுதந்திரத்தை இழந்துவாழும் மக்கள் இருக்கும்வரை, விடுதலைப் போராட்டங்களும் இருக்கத்தான் செய்யும். இது தவிர்க்கமுடியாத வரலாற்று நியதி. ஏனெனில் சுதந்திர எழுச்சியின் உந்துதலால்தான் மனித வரலாற்றுச் சக்கரமும் சுழல்கிறது.

ஒடுக்கப்படும் உலக மக்களில் ஒரு பிரிவினராக நாமும் சுதந்திரம்வேண்டிப் போராடி வருகிறோம். எல்லா விடுதலைப் போராட்டங்களையும்விட எமது போர்க்குரல் இன்று உலகரங்கில் மிகப் பெரிதாக ஒலிக்கிறது. எமது சுதந்திரப்போர் ஏனைய விடுதலைப் போராட்டங்களைவிட சாராம்சத்தில் வித்தியாசமானது; தனக்கே உரித்தான தனித்துவத்தைக் கொண்டது; ஒப்பற்ற சிறப்பம்சங்களைக்கொண்டது.

உலக வரலாற்றில் எங்கும், எப்பொழுதும் நிகழாத அற்புதமான தியாகங்களும், அதிசயமான அர்ப்பணிப்புகளும் இங்கு, எமது தாயக மண்ணில் நிகழ்ந்திருக்கிறது. சாவுக்கும் அஞ்சாத வீரத்திற்கும், ஈகத்திற்

கும், இலட்சியப்பற்றிற்கும் எமது மாவீரருக்கு நிகர் எவருமேயில்லை என நான் பெருமிதத்துடன் கூறுவேன். இப்படியான தொரு மகிமையும், மேன்மையும் வாய்ந்த ஒரு மகத்தான வீரகாவியத்தை எமது மாவீரர்கள் படைத்துச் சென்றிருக்கிறார்கள். எமது மாவீரர்களின் இந்த ஒப்பற்ற சாதனைகளால் ஒடுக்கப்படும் உலகிற்கு எமது போராட்டம் ஒரு உந்துசக்தியாக, ஒரு முன்னுதாரணமாக, ஒரு வழிகாட்டியாகத் திகழ்கிறது.

எமது போராட்டத்தின் வலிமை எமது போராளிகளின் நெஞ்சுரத்திலிருந்தே பிறக்கிறது. சாவுக்கு அஞ்சாத அவர்களது துணிவும் உறுதிப்பாடுமே எமது போராட்டத்தின் பலமும் வளமுமாகும். எமது எதிரிக்கு உலகம் ஆயுதத்தையும் பணத்தையும் வாரி வழங்குகிறது. நாம் உலகத்திடம் கைநீட்டி நிற்கவில்லை. எவரிடமும் தங்கி நிற்கவில்லை. நாம் எமது சொந்த மண்ணில், எமது சொந்த மக்களில், எமது சொந்தக் கால்களில் தங்கி நிற்கிறோம். எமது சொந்தக்கைகளால் போராடுகிறோம். இதுவே எமது தனித்துவத்தின் தனிச்சிறப்பாகும். எமது சொந்தப் பலத்தில், நாம் வேரூன்றி நிலையாக நிற்பதால் மற்றவர்களின் அழுத்தங்களுக்குப் பணிந்து கொடாமல் எம்மால் தலைநிமிர்ந்து நிற்க முடிகிறது.

புதிய சவால்களும், புதிய நெருக்கடிகளும் நிறைந்ததாக இன்று எமது தேசிய விடுதலைப் போராட்டம் மிகவும் சிக்கலான வரலாற்றுச் சூழ்நிலையை எதிர்கொண்டு நிற்கிறது.

சமாதானத்தின் கதவுகளை இறுக மூடி விட்டுப் போரை விரிவாக்கம் செய்வதில் எதிரி தீவிர அக்கறைகாட்டி வருகிறான். தமிழரின் தேசியப் பிரச்சினைக்கு எந்த உருப்படியான தீர்வுத் திட்டத்தையும் முன் வைக்க அரசு தயாராக இல்லை.

இவ்வாண்டு என்றுமில்லாத வகையில் யுத்தம் முனைப்புற்று உக்கிரமடைந்தது. எதிரியின் படையெடுப்புத் திட்டங்களை முறியடிக்கும் வகையில் நாம் புதிய போர்த் தந்திரோபாயங்களை வகுத்து தாக்குதல் களைத் தீவிரப்படுத்தினோம். இதனால் என்றுமில்லாதவாறு எதிரி களத்தில் இரத்தம் சிந்தினான். வரலாற்றில் நிகழாத பாரிய இழப்புக்களைச் சந்தித்தான். ஆக்கிரமிப்பாளர்களின் சுவடுகளை இந்த மண் ஒருபொழுதும் சுமந்துகொள்ளாது என்பதை எதிரிக்கு நாம் நன்கு உணர்த்திக் காட்டினோம்.

போர்முனையில் பெரும் நெருக்கடிகளை எதிர்கொண்டபோதும், போரின் விளைவால் பொருளாதாரம் சீர்குலைந்த போதும், போரில் புலிகளை வெற்றி கொள்ள முடியாது என உணர்ந்து கொண்டபோதும் போர் அணுகுமுறையைக் கைவிட சிங்கள அரசு தயாராக இல்லை. ஆயுதப் படைகளைப் பலப் படுத்தி, ஆக்கிரமிப்பு யுத்தத்தை தீவிரப் படுத்தி, இராணுவத் தீர்வை முன்னெடுப் பதிலேயே அரசாங்கம் கண்ணும் கருத்துமாக இருக்கிறது.

இதிலிருந்து நாம் ஒன்றைத் தெட்டத் தெளிவாகப் புரிந்துகொள்ளவேண்டும். அதாவது, ஆயுத பலத்தால் தமிழினத்தை அடக்கி ஆளவேண்டுமென்ற சிங்கள-பௌத்த பேரினவாதத்தின் ஆதிக்க மனோ நிலையில் சிறிதளவேனும் மாற்றம் எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. இனத்துவேச அரசியல் சேற்றில் சிங்கள தேசம் மூழ்கிக் கிடக்கும்வரை தமிழரின் தேசிய அபிலாசைகளைப் பூர்த்திசெய்யும் வகையில் ஒரு நீதியான, நியாயமான அரசியல் தீர்வை நாம் சிங்கள ஆளும்வர்க்கத்திடமிருந்து எதிர்பார்க்க முடியாது. இந்தக் கசப்பான உண்மையை எமது மக்கள் உணர்ந்து கொள்ளவேண்டும்.

நீண்டதாக, மிகவும் கடினமானதாக, நெருக்கடிகளும் சோதனைகளும் நிறைந்ததாக, எமது விடுதலைப் பயணம் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தொடர்கிறது. காந்தீய மென்வழிப் போராட்டத்திலிருந்து ஆயுத எதிர்ப்பு இயக்கம்வரை, இத்தனை காலமாக எத்தனையோ வழிகளில், நீதி கேட்டு நியாயம்கோரி நாம் எழுப்பிய உரிமைக்குரல் சிங்கள தேசத்தின் மனச்சாட்சியைத் தொட்டதாகத் தெரியவில்லை.

காலம் காலமாக எமது மக்கள் அனுபவித்த அவலங்கள், சாவும் அழிவுமாக அவர்கள் சந்தித்த அனர்த்தங்கள், சோகத்தின் சுமையால் அவர்கள் சிந்திய இரத்தக்கண்ணீர் – இவை எல்லாம் பௌத்த தேசத்தின் காருண்ணியத்தைத் தொட்டதாகத் தெரியவில்லை.

எதிரி ஈவிரக்கமற்றவன். போர்வெறி கொண்டவன். எமது தாயகத்தைச் சிதைத்து, எமது இனத்தை அழித்துவிடுவதையே இலட்சியமாகக் கொண்டவன். அவனது இதயக் கதவுகள் திறந்து எமக்கு நீதி கிடைக்குமென நாம் எதிர்பார்க்க முடியாது.

இந்தச் சூழ்நிலையில் நாம் என்ன செய்வது?

நாம் தொடர்ந்து போராடுவதைத் தவிர, தொடர்ந்து எமது போராட்டத்தைத் தீவிரமாக்குவதைத் தவிர எமக்கு வேறு வழி இல்லை.

நாம் வன்முறைமீது மோகங்கொண்ட போர் வெறியர்கள் அல்லர். நாம் உண்மையில், ஆன்மீக ரீதியாக, சமாதானத்தையே விரும்புகிறோம். ஒரு நிரந்தரமான, நிம்மதியான, கௌரவமான சமாதானத்தையே விரும்புகிறோம். அதனால்தான் இந்தக் கொடூரமான போரின் மத்தியிலும் சமாதானத்தின் கதவுகளை நாம் திறந்து வைத்திருக்கிறோம். சமாதானத்தின் பாதையை நாம் மூடிவிடவில்லை. அப்படி மூடிவிடும் நோக்கமும் எமக்கில்லை. ஏனென்றால் சமாதானத்தை அடைவதற்காகவே நாம் போராடுகிறோம். என்றோ ஒருநாள் எதிரியானவன் எமது சமாதானக் கதவுகளை தட்டுவானாக இருந்தால் நாம் எமது நேசக்கரங்களை நீட்டத் தயாராக இருக்கிறோம்.

ஆனால் எமது எதிரியோ வன்முறை மீது காதல்கொண்டவன். அதனால் அன்றிலிருந்து இன்றுவரை ஒரு அநியாயமான யுத்தத்தை எம்மீது திணித்து வருகிறான். இன்று எதிரியின் படையணிகள் எமது வாசல்வரை வந்து போர்முரசு கொட்டுகின்றன. எம்மை அழித்துவிடுவதற்கும் எமது மண்ணை விழுங்கிவிடுவதற்கும் கங்கணம்கட்டி நிற்கின்றன. இந்த இன அழிப்பு யுத்தத்திற்காக எந்த அளவிற்கும் இரத்தம் சிந்த எதிரி தயாராக இருக்கிறான்.

இந்த இக்கட்டான, நெருக்கடியான சூழ்நிலையில் நாம் என்ன செய்வது? போராடி எமது மக்களையும், எமது மண்ணையும் பாதுகாத்துக்கொள்வதைத் தவிர எமக்கு வேறு வழி எதுவும் உண்டா?

நாம் போராடித்தான் எமதுசுதந்திரத்தை நிலைநாட்டிக்கொள்ளவேண்டும். சுதந்திரம் என்பது பேரம்பேசிப் பெற்றுக்கொள்ளும் ஒரு வியாபாரப் பண்டம் அல்ல. அது இரத்தம் சிந்தி வென்றுகொள்ளப்படும் ஒரு புனிதமான உரிமை.

நாம் தொடர்ந்து போராடுவோம். எத்தனை இடர் வரினும், எத்தனை துயர் வரினும், நாம் எமது விடுதலை

நோக்கிய பயணத்தைத் தொடருவோம். எமது மக்கள் சிந்திய இரத்தமும், எமது மாவீரர் புரிந்த தியாகமும் வீண் போகாதிருக்க நாம் உறுதி தளராது போராடுவோம். எமது இலட்சியப் பயணத்தில் எத்தனையோ சவால்களை, எத்தனையோ ஆபத்துக்களை, எத்தனையோ நெருக்கடிகளை நாம் சந்தித்துவிட்டோம். இனி எம்மை எதுவும், எவரும் அச்சுறுத்தமுடியாது. நாம் துணிந்து போராடுவோம். வரலாறு எமக்கு வழிகாட்டியாக நிற்கிறது. சத்தியம் எமக்குச் சாட்சியாக நிற்கிறது.

எமது சுதந்திர இயக்கத்தின் தூண்களாய் நிற்கும் மாவீரர்களே!

உங்கள் இரத்தத்தால் எங்கள் விடுதலை வரலாறு மகத்துவம் பெறுகிறது.

உங்கள் இலட்சிய நெருப்பால் எங்கள் போராட்டம் புனிதம் பெறுகிறது.

உங்கள் தியாகத்தால் எங்கள் தேசியம் உருவாக்கம் பெறுகிறது.

உங்கள் நினைவுகளால் எங்கள் உறுதி வைரம் பெறுகிறது.

எங்கள் தேச சுதந்திர சிற்பிகளாகிய உங்களை நாம் சிரந்தாழ்த்தி வணங்குகிறோம்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**

தலைவர்,

தமிழீழ விடுதலைப் புலிகள்.

# நேர்மை, ஒழுக்கம், கட்டுப்பாடு நீதி பரிபாலனத்திற்கு அவசியம்



குறிப்பு:

**25-01-1993** அன்று, தமிழீழ சட்டக் கல்லூரியில் தலைவர் பிரபாகரன் ஆற்றிய உரையின் முக்கிய பகுதிகளை இங்கு பிரசுரிக்கிறோம்.

“பூரணமான சுயாட்சி அதிகாரங்களைக்கொண்ட தனியரசை நாம் இன்னும் உருவாக்கவில்லை. எனினும், நீண்டகால விடுதலைப் போரின் பெறுபேறாக எமது தாயகத்தின் பெருமளவு நிலப்பரப்பு மீட்கப்பட்டு எமது நிர்வாகக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரப்பட்டிருக்கிறது. எமது கட்டுப்பாட்டிலுள்ள பிரதேசங்களை நாம் நிர்வகித்தபோதும் ஓர் அரசுபோல் முழுமையாக பரிபாலனம் செய்யும் அளவிற்கு எமது அமைப்பு வளர்ச்சியும், முதிர்ச்சியும் அடையவில்லை. இந்தக்குறைபாட்டிற்கு ஒரு காரணமும் இருக்கத்தான் செய்கிறது. அதாவது நீண்டகாலமாக, எமது இயக்கம் எதிரியின் தாக்குதல்களுக்கு முகம்கொடுத்து போரிட்டுக்கொண்டிருந்ததால் எமது முழுக் கவனமும், சக்தியும் யுத்த நடவடிக்கைகளிலேயே திரும்பி இருந்தது. ஆயினும், காலக்கிரமத்தில் பல பகுதிகள் மீட்கப்பட்டு இன்று நாம் மீட்கப்பட்ட பிரதேசங்களை நிர்வகிக்கவேண்டிய சூழ்நிலையை எதிர்கொண்டுநிற்கிறோம். இன்று ஒருபுறம் யுத்தத்தை நடாத்திக்கொண்டு மறுபுறம் நிர்வாகத்தையும் நடாத்த வேண்டிய நிர்ப்பந்தம் எமக்கு ஏற்பட்டிருக்கிறது.

தமிழீழத் தனியரசு என்ற இலக்கை நோக்கி நாம் நகர்ந்துகொண்டிருக்கிறோம். அந்தத் தனியரசுக்கான அத்திவாரங்களை நாம் இப்போதிருந்தே கட்டிஎழுப்பவேண்டும். சிவில் நிர்வாகத்துறையில் நாம் இப்பொழுதிருந்தே பயிற்சியும், தேர்ச்சியும் பெறாதுபோனால் மலரப்போகும் தமிழீழத்தில் அரச நிர்வாகத்துறையில் நாம் நிறைய சிக்கல்களை எதிர்நோக்கவேண்டியிருக்கும். நீதித்துறை அரச நிர்வாக இயந்திரத்தில் முக்கிய பங்கைவகிக்கும் ஒரு நிறுவனம் என்பதால் இப்பொழுதிருந்தே இத்துறை சம்பந்தமாக எமது போராளிகளாகிய உங்களுக்குச் சிறந்த பயிற்சி அளிக்கப்படுகிறது.

சமத்துவமும், நீதியும், மனிதாபிமானமும் தழைத்தோங்கும் ஒரு புதிய சமுதாயமாக தமிழீழத்தைக் கட்டிஎழுப்பவேண்டும் என்பதே எமது இலட்சியம். இந்த இலட்சிய நோக்கை அடைவதற்காக எமது போராளிகள் ஒப்பற்ற தியாகங்களை, அர்ப்பணிப்புகளை செய்திருக்கிறார்கள். இந்தப் புனித இலட்சியத்துடன் உருவாக்கம்பெறும் ஒரு சமூக அமைப்பில் நேர்மையும், ஒழுக்கமும் இல்லாத மனிதர்கள் நிர்வாகத் துறையில் புகுந்து சமூகத்தைச் சீரழிக்க நாம் அனுமதிக்கமுடியாது. நாம் இரத்தம் சிந்திப் போராடும் இலட்சியத்தையே இது மாசுபடுத்திவிடும்.

சமூக நிர்வாகத்தில் நீதித்துறை பிரதானமானது. நேர்மை, ஒழுக்கம், கண்ணியம், கட்டுப்பாடு ஆகிய பண்புகளைக் கொண்டவர்களே நீதிபரிபாலனத்தைக் கையாளவேண்டும் முன்பு நீதிபரிபாலனத்திற்கென நாம் உருவாக்கிய இணக்க மன்றுகள் என்ற அமைப்பில் பல தவறுகள் நிகழ்ந்ததை நீங்கள் அறிவீர்கள். இந்த இணக்க மன்றுகளால் வழங்கப்பட்ட தீர்ப்புகளும் மக்களின் விமர்சனத்திற்கும் கண்டனத்திற்கும் இலக்காகின. சுயநலமற்ற முறையில் பாரபட்சமற்ற முறையில், நீதி வழுவாது தீர்ப்புகள் வழங்கப்படவில்லை. எனவேதான் ஒழுக்கமும், கட்டுப்பாடுமுடைய எமது இயக்கத்தைச்சேர்ந்த போராளிகளை நீதி நிர்வாகத்துறையில் பயிற்ற வேண்டுமென நான் விரும்பினேன்.

ஒரு பிரச்சினையை ஆராய்வதற்கும் தீர்ப்பு வழங்குவதற்கும் பிரத்தியேகமான மனப்பக்குவம் அவசியம். சுயநலமற்ற, சொந்த விருப்பு வெறுப்புக்கள் அற்ற, தனிப்பட்ட உணர்வுகளுக்கும், பந்த பாசங்களுக்கும் இடமளிக்காத ஒரு நேர்மையான பார்வை அவசியம். நீதியான தீர்ப்புக்களை வழங்குவதற்கு இப்படியான விசேட மனப்பண்புகள் இன்றியமையாதவை. மற்றவர்களது வெளித்தோற்றங்களிலோ, பேச்சு வன்மையிலோ ஏமாந்துபோகாமல் உண்மையைத் தேடிக்கண்டுகொள்ளும் ஆற்றலை நீங்கள் வளர்த்துக் கொள்ளவேண்டும். ‘‘கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரித்தறிவதே மெய்’’ என்ற முதுமொழிக்கமைய உண்மை

யைக் கண்டறிந்து, நீதியான தீர்ப்பு வழங்கப்படுவது அவசியம்.

ஒரு சமுதாயத்தில் குற்றச்செயல்களையும் அராஜகத்தையும் தடுத்து நிறுத்தி, சமுதாயத்தில் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் நிலைநாட்டவே நீதித்துறை தோற்றம் கொண்டது. எமது சமுதாயத்திலும் ஒழுங்கும் கட்டுப்பாடும், சமூக தர்மமும் வளர்ந்தோங்க எமது நீதி நிர்வாகம் செம்மையான முறையில் சீரமைக்கப்படவேண்டும். எமது தாயகத்தில் தனியரசை நிறுவும் போராட்டத்தின் அடுத்த கட்ட வளர்ச்சியை நோக்கி நகர்ந்துகொண்டிருக்கும் நாம் ஒரு தரமான நீதிநிர்வாக கட்டமைப்பை இப்பொழுதிருந்தே உருவாக்க முயற்சி செய்வோம்.

இன்றைய உலக ஒழுங்கை பலம்தான் நிர்ணயிக்கிறது. வலுமிக்க வல்லரசுகள், தாம் விரும்பியவாறு சர்வதேச உறவுகளையும், சர்வதேச சட்டத்தையும் ஒழுங்கையும் உலகம்மீது திணித்துவருகின்றன. இந்த வகையில் பார்க்கப்போனால் மனு நீதி என்பதும் வல்லாதிக்கத்தின் அதிகார வீச்சுக்கு உட்பட்டதாகவே இருக்கிறது. அன்றொரு காலம் ரோம வல்லாதிக்கம் நீதியையும் ஒழுங்கையும் உலகம்மீது திணித்துவிட முயன்றது. நெப்போலியன் யுகத்திலும் அப்படித்தான் நடந்தது. தான் படையெடுத்த நாடுகள்மீது தான் நெறித்த சட்டங்களையும் நீதிபரிபாலன முறையையும் நெப்போலியன் திணித்துவிட முயன்றான். மேற்கத்தைய காலனித்துவ வல்லரசுகளும் அப்படியே செய்தன. இன்று அமெரிக்காவும் ஏனைய வல்லரசுகளும் தமது பலத்தைக்கொண்டு தமது நலன்களைப்பேணும் வகையில் ஒரு புதிய உலக ஒழுங்கை உருவாக்க முயல்கின்றன. இந்திய வல்லரசு எமது தாயகத்தை ஆக்கிரமித்தபோது உள்நாட்டு நீதிமுறையை அலட்சியம்செய்து, தான் விரும்பியபடி சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்ட முயன்றது. இப்படியாக பலத்தையும் தேசிய சுயநலனையும் அடிப்படையாகக்கொண்டு உலகவல்லரசுகளிடமிருந்து எழும் அதிகாரப் போட்டிகளும் ஆக்கிரமிப்புகளும் மனிதநீதியை மாசுபடுத்தி வருகின்றன. இப்படியான இன்றைய உலகத்தின் நடப்பியலை நாம் நன்கு படித்தறிந்துகொள்ளவேண்டும். எமது நாட்டிற்கு ஏற்ப, எமது மக்களின் நல்வாழ்விற்கு ஏற்ப, எமது சமூகத்தின் உயர்ச்சிக்கு ஏற்ப ஒரு தனித்துவமான தனிச்சிறப்புடைய நீதி பரிபாலன முறையை நாம் உருவாக்க வேண்டும்.

நாமும் ஒரு பலமான அரசைக் கட்டி எழுப்பவேண்டும். நமது நாடு பலம்மிக்கதாக இருந்தால்தான் வலுமிக்க அந்நிய ஆதிக்கங்களின் ஊடுருவல்களையும், தலையீடுகளையும், அழுத்தங்களையும் நாம் எதிர்கொள்ள முடியும்; எமது தனித்துவத்தை நாம் பேணமுடியும். ஒரு பலமான அரசுக்கு ஆதாரமாக நிற்கும் உறுதியான அரச நிறுவனங்களை நாம் இப்பொழுதிருந்தே கட்டி எழுப்பவேண்டும். நீதி நிர்வாகமானது ஒரு வலுவான அரசிற்கும், கட்டுப்பாடான சமூக அமைப்பிற்கும் ஆணிவேரானது. சமூக நீதி சரிவரப் பேணப்பட்டால்தான் சமுதாயம் ஒரு உன்னத நிலைக்கு வளரும்''.

□□□

# போராட்டம் கல்விக்கு கவசம்; கல்வி போராட்டத்திற்கு காப்பரண்

குறிப்பு:

தமிழீழக் கல்வி மேம்பாட்டுப்பேரவை நடத்திய தமிழீழப் பொதுக்கல்வித் தேர்வில் சித்தி எய்திய மாண வர்களைப் பாராட்டித் தலைவர் பிரபாகரன், 13-02-1993 அன்று, வெளியிட்ட அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம். தலைவரின் இந்த அறிக்கையில் விடுதலைப் புலிகள் இயக் கத்தின் கல்விக்கொள்கைக்குத் தெளிவான விளக்கம் அளிக்கப்பட்டிருக்கிறது. போராட்டத்தின் முக்கியத்துவத் தையும், கல்வியின் அவசியத்தையும் வலியுறுத்தும்தலைவர் போராட்டம் கல்விக்கு கவசமாகவும், கல்வி போராட் டத்திற்கு காப்பரணாகவும் அமையவேண்டுமென எடுத்து விளக்கியுள்ளார்.

மனித வளர்ச்சிக்கும் சமூக மேம் பாட்டிற்கும் கல்வி ஆதாரமானது; ஆணி வேர் போன்றது.

கல்வி பெறும் உரிமை மனித சுதந்திரங் களில் அடிப்படையானது. அறியாமையிலி ருந்து விழிப்புற்று, தனது வாழ்க்கை பற்றி யும் தான் வாழும் உலகம் பற்றியும் அறிந்து கொள்வதற்கு ஒவ்வொரு தனிமனிதப் பிறவிக்கும் உரிமையுண்டு. தனது ஆற்றல் களை வளர்த்து, தனது ஆளுமையை மேம்படுத்தி, சுதந்திரமாகச் சிந்தித்துச் செயற்படும் உரிமை ஒவ்வொருவருக்கும் உரித்தானது.

இந்த மூலாதார உரிமையைப் பறித் தெடுத்து தமிழீழத்தின் கல்வித்துறையைச் சிதைத்துவிட சிங்களப் பேரினவாதம் நீண்ட காலமாகவே முயன்று வருகிறது. இதன் விளைவால் எமது சமூகத்தின் கல்வி வாழ்வு பாரதூரமான அளவிற்கு பாதிக்கப்பட்டிருக்கிறது.

கல்வியும், மொழியும், பண்பாடும், நில மும் எமது இனக் கட்டமைப்பைத் தாங்கி நிற்கும் தூண்கள். இந்தத் தூண்களைத் தகர்த்து விட எதிரி முனைகிறான். இனத் தனித்துவத்தை அழிப்பது அவனது நோக்கம்.

நாம் எமக்கு உரித்தான உரிமைகளை வென்றெடுக்கப் போராடுகிறோம். அதே வேளை, சமூகவாழ்விற்கு ஆதாரமான அமைப்புகள் அழிந்து போகாது பாதுகாக்கவும் நாம் போராட வேண்டி யிருக்கிறது. ஆகவே இரு முனைகளில், ஒரே வேளையில் போராட வேண்டியவர் களாக நாம் நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளோம். இது தவிர்க்க முடியாத ஒரு வரலாற்று நிர்ப்பந்தம்.

தமிழீழ மக்களின் விடுதலை இயக்கம் என்ற ரீதியில் இந்த இருமுனைப் போராட் டத்தை முன்னெடுப்பதில் நாம் தெளி வோடு, உறுதியோடு, தீர்க்கமாக உழைத்து வருகிறோம். இந்த இருமுனைகளுக்கும் இடையில் வெடிக்கும் முரண்பாடுகளைக் களைந்து விடுவதிலும் நாம் நிதானமாகச் செயற்படுகிறோம்.

உரிமைகளுக்காக நாம் தொடுத்த போராட்டம் இன்று உயிர் வாழ்வதற் கான போராட்டமாக விரிவாக்கம் பெற் றிருக்கிறது. அன்றொரு காலம் நாம் அமைதி வழியில் உரிமை கேட்டோம். இன்று நாம் இரத்தம் சிந்திப் போராட வேண்டியிருக்கிறது. உயிர்ப்பலி கொடுத்து உயிர் வாழவேண்டியிருக்கிறது.

இன அழிவைத்தடுத்து எமது மண்ணை யும், மக்களையும் பாதுகாப்பது இன்று எமது விடுதலை இயக்கத்தின் முதன்மை யான கடனாக உள்ளது. இதற்குப் போரா டியே ஆகவேண்டும். போராடி வாழ்வ தைத்தவிர எமக்கு வேறுவழியில்லை.

போராடுவதற்கு போராளிகள் வேண் டும். எதிரியுடன் போர் நடத்த ஒரு படை வேண்டும். இந்த விடுதலைப்படை இல் லாதுபோனால் எமது இனத்தின் அழிவைத் தடுத்து நிறுத்தமுடியாது. இந்தப் போராளி களை, இந்த இளம்புலி வீரர்களை, நாம் எமது மக்கள் சமுதாயத்திலிருந்தே அணி திரட்ட வேண்டியுள்ளது. நாம் வலுக் கட் டாயமாக ஆட்சேர்ப்பதில்லை. இது ஒரு தேசிய விடுதலைப்போர் என்பதால் சுய விருப்பிலேயே இளம் போராளிகள் எமது இயக்கத்தில் இணைந்து கொள்கிறார்கள். தமது சுயத்தைத்துறந்து, தமது சொந்த வாழ்வின் சுகபோகங்களைத்துறந்து, பந் தத்தின் பற்றுறவுகளைத்துறந்து, தமது மண்ணையும், மக்களையும் நேசிக்கும் விடு தலைப் பற்றாளர்கள் எம்முடன் இணை கிறார்கள். இந்தப் போராளிகளின் இலட் சிய வாழ்க்கையையும், அர்ப்பணிப்பையும் நாம் போற்றவேண்டும்; கௌரவிக்க வேண் டும்.

தாயக விடுதலைக்குத் தம்மை அர்ப் பணிக்கும் தெரிவிற்கும், கல்வி கற்கும் உரி மைக்கும் இடையில் நாம் என்றுமே முரண் பாட்டைக் கற்பிக்க முயலவில்லை. இரண் டுமே எமது சமூகத்தின் வாழ்வியக்கத்திற்கு இன்றியமையாதவை. போரும், கல்வியும்

இணைந்த ஒரு வாழ்வு இன்று எமது வரலாற்றுத் தேவையாக உள்ளது. எமது போராட்டம் கல்விக்கு கவசமாக இருப்பது போல கல்வியும் எமது போராட்டத்திற்கு காப்பரணாக நிற்கவேண்டும். எமது விடுதலைப் போராட்டத்தின் உன்னதத்தை உணர்ந்துகொள்ளும் வகையில் மாணவ சமூகத்திற்கு விழிப்புணர்வை ஊட்டுவது எமது கல்விமான்களின் தேசிய கடமைப் பாடாகும்.

எமது இயக்கம் விடுதலைப்போரை முன்னெடுத்துவரும் அதேவேளை கல்வித் துறையின் மேம்பாட்டிற்காக ஆக்கபூர்வமான முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது. அதற்கான அமைப்புக்களையும் கட்டியெழுப்பி வருகிறது.

எமது தேசிய வாழ்வையும் வளத்தையும் மேம்படுத்தும் இலக்கில் எமது கல்வித்துறை சீரமைக்கப்படவேண்டும். காலனித்துவ சுரண்டலின் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், சிங்களப்பேரினவாதத்தின் கருத்தாதிக்கத்தைத் திணிக்கவும் உருவாக்கப்பட்ட கல்வியமைப்பு மாற்றப்படவேண்டும். எமது தேசியப் போராட்டம், எமது பண்பாட்டு வாழ்வு, எமது தேசிய பொருண்மிய வளம், எமது தேசிய இனத்தின் வரலாறு ஆகியவற்றின் உண்மை நிலையும் பெறுமானமும் உணரப்படும் வகையில் பாடத்திட்டங்கள் வகுக்கப்படவேண்டும். இன்றைய அறிவியல் தொழில்நுட்பத்துறைகளின் வளர்ச்சியையும் அதன் ஆக்க பிரயோகங்களையும் கற்றறியும் வாய்ப்பும் எமது இளம் பரம்பரைக்கு கிட்டுவதற்கு வழிசெய்யவேண்டும். ஒட்டுமொத்தத்தில் எமது தேசியநலன் பேணப்படும் வகையில் கல்விச் சீர்திருத்தம் இடம்பெற வேண்டும். இந்த இலக்குகளை அடையும்வகையில் எமது அமைப்பான தமிழீழக் கல்விக் கழகம் ஆக்கபூர்வமான பணிகளை மேற்கொண்டு வருவதையிட்டு நான் மகிழ்ச்சியடைகிறேன்.

இன்று தமிழீழத்தில் கல்வித்துறை சீரழிந்தநிலையில் உள்ளது. தமிழரின் கல்வியைத் திட்டமிட்டவகையில் அரசு புறக்கணித்துவருகிறது. சிங்கள ஆயுதப்படைகளின் போர் நடவடிக்கைகளும் பொருளாதார நெருக்குதல்களும் நிலைமையை மேலும் மோசமாக்கிவருகிறது. எத்தனையோ நெருக்கடிகள் இடர்ப்பாடுகளை எதிர்கொண்டு எமது மாணவ சமூகம் கல்வியைக் கற்கவேண்டியிருக்கிறது. தமது ஆர்வத்தினாலும், திறமையினாலும் கடும் உழைப்பினாலும் கல்வி கற்று பொதுத்தேர்வுக்குத் தயாரானாலும் உரியகாலத்தில் அவை நடைபெறுவதில்லை. தேர்வு நடைபெறும் காலங்களிலும் அரசபடைகள் அமைதியைக் குலைத்து விடுகின்றன. இத்தனை தடைகளையும்தாண்டித்தான் எமது மாணவர்கள்தேர்வுகளுக்கு முகம்கொடுக்க வேண்டியிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில் க. பொ. த சாதாரண தர தேர்வுக்கு ஈடாக, முதல் தடவையாக தமிழீழப் பொதுக்கல்வித் தேர்வை தமிழீழக்கல்வி மேம்பாட்டுப் பேரவை சிறப்புறநடாத்தி முடித்திருக்கிறது. இந்த முயற்சியை நான் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறேன். அத்துடன் இத்தேர்வில் தோற்றிய, தேர்ச்சிபெற்ற அனைத்து மாணவர்களுக்கும் எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

□□□

# கிட்டு ஒரு தனிமனித சரித்திரம்: அற்புதமான இலட்சியவாதி



**குறிப்பு:**

இந்திய அரசின் சதிச்செயலால் வங்கக் கடலில் வீரச்சாவடைந்த விடுதலைப் புலிகள் இயக்கத்தின் மூத்த தளபதியும், மத்தியகுழு உறுப்பினருமாகிய கேணல் கிட்டுவை நினைவுகூர்ந்து, 16-02-1993 அன்று, தலைவர் பிரபாகரன் வெளியிட்ட இரங்கல் செய்தியை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
16-02-1993

மனதின் ஆழத்து உள்ளுணர்வுகளை வார்த்தைகளில் சித்திரிப்பது கடினம். அதுவும் ஆன்மாவை உலுப்பி விடும் ஓர் உணர்வுப் பூகம்பத்தை மனித மொழியில் விபரிக்க முடியாது. எனது அன்புத் தம்பி கிட்டுவின் இழப்பும் அப்படித்தான். அவனது மறைவு எனது ஆன்மாவைப் பிழிந்த ஒரு சோக நிகழ்வு. அதனைச் சொற்களால் வார்த்துவிட முடியாது.

நான் கிட்டுவை ஆழமாக நேசித்தேன். தம்பியாக, தளபதியாக, எனது சுமைகளைத் தாங்கும் இலட்சியத் தோழனாக நான் அவனை நேசித்தேன். இது சாதாரண மனித பாசத்திற்கு அப்பாலானது. ஒரே இலட்சியப் பற்றுணர்வில், ஒன்றித்த போராட்ட வாழ்வில் நாம் பகிர்ந்து கொண்ட அனுபவத்தில், ஒருவரை ஒருவர் ஆழமாக இனம் கண்ட புரிந்துணர்வில், வேரூன்றி வளர்ந்த நேயம் அது.

அவனுள் ஓர் அபூர்வம் இருந்ததை நான் ஆரம்பத்திலிருந்தே கண்டுகொண்டேன். அது அவனது அழகான ஆளுமையாக வளர்ந்தது. ஒரு சுதந்திர வீரனுக்குரிய அனைத்துச் சிறப்பியல்புகளும் அவனிடமிருந்தன. அதனால் அவன் ஓர் அற்புதமான இலட்சியவாதியாக வாழ்ந்தான்; போராடினான்; அனைத்து மக்களது இதயங்களையும் கவர்ந்தான். போர்க்களத்தில் வீரனாகவும், பொது மக்களின் தோழனாகவும். எங்கும் எல்லாவற்றிலும் எல்லோரிடமும் அவனது ஆளுமையின் வீச்சு நிறைந்திருந்தது.

PUBLIC LIBRARY JAFFNA
CHUNDIKULI BRANCH LIBRARY



கிட்டு, ஒரு தனிமனித சரித்திரம். நீண்ட, ஓய்வில்லாத புயலாக வீசும் எமது விடுதலை வரலாற்றில் ஒரு காலத்தின் பதிவு.

வங்கக் கடலில் பூகம்பமாக அவனது ஆன்மா பிளந்தது. அதன் அதிர்வலையால் எமது தேசமே விழித்துக்கொண்டது.

கிட்டு, நீ சாகவில்லை;

ஒரு புதிய மூச்சாகப் பிறந்திருக்கிறாய்!

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# சமாதானத் தீர்வுக்கு வழி என்ன?

# பி. பி. ஸிக்கு தலைவர் விளக்கம்



**குறிப்பு:**

தலைவர் பிரபாகரன் பி. பி. ஸி. உலக சேவைக்கும், தமிழோசைக்கும் அளித்த பேட்டியை இங்கு பிரசுரிக்கிறோம். பி. பி. ஸி. செய்தியாளர் ஆனந்தி சிவப்பிரகாசத்திற்கு தலைவர் அளித்த பேட்டி 02-03-1993 அன்று தமிழோசையிலும், உலக சேவையிலும் ஒலிபரப்பாகியது.

13980

கேள்வி:

இன்றைய அரசியல் இராணுவ நிலை பற்றி விளக்குவீர்களா?

பதில்:

தற்போதைய அரசியல் இராணுவ நிலைமையைப் பொறுத்தவரை குறிப்பிடத்தக்கதாக எதையுமே சொல்ல முடியாது.

அரசியல் சூழ்நிலையைப் பொறுத்தவரை, வழக்கம்போல ஒரு மந்தநிலைதான் நிலவுகிறது. தமிழர் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு எவ்வித சமாதான முயற்சிகளும் எடுக்கப்படுவதாகத் தெரியவில்லை. இவ்விடயத்தில், புதிதாக எந்தவித நகர்வுகளும் மேற்கொள்ளப்படவில்லை. பாராளுமன்றத் தெரிவுக் குழுவின் இறுதி அறிக்கையில் சிறீலங்கா அரசாங்கம் பெரிதாக நம்பிக்கை வைத்திருப்பதுபோல தெரிகிறது. ஆனால் பாராளுமன்றத் தெரிவுக்குழு தமது பிரச்சினைக்கு ஒரு நியாயமான தீர்வை முன்வைக்கும் எனத் தமிழ் மக்கள் நம்பவில்லை. ஏனென்றால், தெரிவுக்குழுவில் அங்கம் வகிக்கும் பிரதான சிங்களக் கட்சிகள் தமிழரின் அடிப்படைக் கோரிக்கைகள் எதையுமே ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை.

இராணுவத்தைப் பொறுத்தவரை பெரிய படையெடுப்புகளுக்கு தன்னைத் தயார்செய்து வருகிறது. சென்ற ஆண்டு எதிர்கொண்ட பெரிய பின்னடைவுகளைத் தொடர்ந்து ஆயுதப் படைகளை நவீனமயப்படுத்தி, பலப்படுத்த சிறீலங்கா அரசாங்கம் தீவிர முயற்சிகளை எடுத்துவருகிறது. யுத்த அரங்கில் நவீன ஆயுதங்களைப் பிரயோகித்து புலிகளை தோற்கடிக்கலாம் என சிறீலங்கா அரசாங்கம் தப்புக்கணக்கு போடுகிறது.

ஒட்டுமொத்தத்தில், தமிழர் தேசியப் பிரச்சினை சம்பந்தமாக சிறீலங்கா அரசாங்கத்தின் நிலைப்பாட்டில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

## போரை நீடிப்பது சிறீலங்கா அரசு

கேள்வி:

வடபுலத்தில் உணவு, மருந்து, எரிபொருள் ஆகியவற்றின்மீது அரசு விடுத்துள்ள தடையின் விளைவாக மக்கள் பெரும் இன்னல்களுக்கு ஆளாகியுள்ளனர். இப்படிப்பட்ட சூழ்நிலையில் இன்னும் எவ்வளவுகாலம் போர் நீடிக்கப் போகிறது?

பதில்:

போரை நீடிப்பதும், நிறுத்துவதும், சமாதான வழியில் தீர்வுகாண்பதும் — எல்லாமே, சிறீலங்கா அரசாங்கத்தின் முடிவில்தான் தங்கியிருக்கிறது.

இந்தப்போரைத் தொடங்கியதும், இந்தப்போரை நீடித்துச் செல்வதும் சிறீலங்கா அரசாங்கமே. தமிழர் பிரச்சினைக்கு இராணுவத் தீர்வில் நம்பிக்கை கொண்டிருப்பதும் சிறீலங்கா அரசாங்கமே.

இந்தப் போருக்கு ஒரு முடிவைக் கொண்டுவந்து, சமாதான வழியில் பிரச்சினையை தீர்த்துவைக்குமாறு, நாம் பல தடவைகள் கோரிக்கைகளை விடுத்தும் சிறீலங்கா அரசாங்கம் அதற்குச் செவிசாய்ப்பதாகத் தெரியவில்லை. பதிலாக, போரைத் தீவிரப்படுத்துவதிலும், மக்கள் மீது பொருளாதார நெருக்குதலை அதிகரிப்பதிலுமே சிறீலங்கா அரசாங்கம் முனைப்புடன் செயற்படுகிறது.

இந்தப் போர் தமிழ் மக்களுக்கு எதிராகவே ஏவப்படுகிறது. தமிழ் மக்களை அழிவிற்கும் துன்பத்திற்கும் ஆளாக்கி, அவர்களது மனவுறுதியை உடைத்து, அவர்களது போராட்ட உணர்வை மழுங்கடித்து, அவர்களை அடிமைகொள்வதே சிங்களப் பேரினவாதிகளின் நோக்கம்.

இந்த இனஅழிப்பு யுத்தத்திற்கு மேற்குலகம் மறைமுகமாக உதவிசெய்து வருகி

றது. மேற்குலக கடனுதவியை ஆதாரமா மாகக் கொண்டே சிறீலங்கா அரசு இந்தப் போரைத் தொடர்கிறது. பணமாகவும், ஆயுதங்களாகவும் மேற்குலகம் வழங்கிவரும் உதவிகள் நிறுத்தப்பட்டால் இந்த யுத்தத்தை அரசாங்கத்தால் தொடரமுடியாது. அதன் பின்னரே சமாதானத்திற்கான சூழ்நிலை பிறக்கும்.

## போரின் வெற்றியைத் தீர்மானிப்பது என்ன?

**கேள்வி**

**அரச தரப்பு படைகளின் எண்ணிக்கை 80,000. உங்களின் பலம் 10,000 எனக் கணிப்பிடப்படுகிறது. இந்தச் சமபலமற்ற நிலையில் போரில் வெற்றியீட்ட முடியும் என்ற நம்பிக்கை உங்களுக்கு உண்டா?**

பதில்:

ஒரு போரின் வெற்றியைத் தீர்மானிப்பது ஆட்பலமோ ஆயுத பலமோ அல்ல, உலக விடுதலைப் போராட்ட வரலாறுகள் இதற்கு சான்று பகரும்.

பாரிய ஆட்பலமும், ஆயுத பலமும் கொண்ட உலக வல்லரசுகள் வியட்னாமிலும் ஆப்கானிஸ்தானிலும் தோல்வியைச் சந்திக்கவில்லையா?

அசைக்க முடியாத மனவுறுதியும், வீரமும், விடுதலைப் பற்றுமே வெற்றியை நிர்ணயிக்கும் குணாம்சங்கள். இந்த குணாம்சங்கள் எமது போராளிகளிடமும், பொதுமக்களிடமும் நிறையவுண்டு.

**கேள்வி:**

**இலங்கைப் படையினர் பல நவீன ஆயுதங்களை வாங்கியுள்ளதாக கூறப்படுகிறது. இதற்கு ஈடுகொடுக்க உங்களால் முடியுமா?**

பதில்:

சிங்கள ஆயுதப் படைகள் காலத்திற்குக் காலம் நவீன ஆயுதங்களை அறிமுகம் செய்துவருகின்றன. புதிய ஆயுத தளபாடங்களைப் புகுத்தும்பொழுதெல்லாம் வெற்றிகளை அடைந்துவிடலாம் என அரசாங்கம்எண்ணிக்கொள்ளுகிறது. மாசெட்டி விமானங்களை வாங்கியபொழுதும், பின்னர் டாங்கிகளை வாங்கியபொழுதும் இப்படியாகத்தான் எண்ணினார்கள். இப்பொழுதும் புதிதாக ஆயுத தளபாடங்களை வாங்கிக் குவிக்கிறார்கள். ஆனால் ஆயுதங்கள் வெற்றியைத் தீர்மானிப்பவை அல்ல. எழுச்சிகொண்ட மக்களை ஆயுத சக்தியால் அழித்துவிடமுடியாது.

## எதிரிப் படையிடமிருந்தே ஆயுதங்களைப் பெறுகிறோம்

**கேள்வி**

**ஆயுதங்கள் உங்களுக்கு எங்கிருந்து கிடைக்கின்றன?**

பதில்:

ஆயுதங்களை நாம் எதிரிப்படையிடமிருந்தே பறித்தெடுக்கிறோம். எதிரியிடம் பறித்தெடுத்த ஆயுதங்களைக் கொண்டே நாம் எதிரியுடன் போராடி வருகிறோம்.

உதாரணமாக, சென்ற ஆண்டு யுத்தத்தில் ஏராளமான ஆயுதங்களை நாம் எதிரியிடமிருந்து கைப்பற்றினோம்.

சென்ற ஆண்டில், 1172 தானியங்கித் துப்பாக்கிகள், 106 இலகு இயந்திரத் துப்பாக்கிகள், 4, 50 கலிபர் கனரக இயந்திரத் துப்பாக்கிகள், 23 டாங்கி எதிர்ப்பு எறிகணை செலுத்திகள், 30 எறிகுண்டு செலுத்தும் துப்பாக்கிகள், 25 எறிகணை செலுத்திகள், 1 பின்னுதைப்பற்ற பீரங்கி, 1622 எறிகணைகள், 30 தொலைத் தொடர்பு சாதனங்கள், 7 லட்சம் ரவைகள் இப்படியாகப் பெருந்தொகையான ஆயுதங்களை சிறீலங்கா இராணுவத்திடமிருந்து நாம் கைப்பற்றியிருக்கிறோம்.

## பூநகரிப் பாதையும் ஐ. நா. தூதரகமும்

**கேள்வி:**

**கிளாலிப்பாதை தடைசெய்யப்பட்டிருப்பதால் மக்கள் யாழ்ப்பாணத்திற்குச் செல்லவோ அங்கிருந்து வரவோ முடியாத ஓர் அவலநிலை ஏற்பட்டுள்ளது. இந்த விடயத்தில் புலிகளும், இலங்கை அரசும் ஓர் இணக்கத்திற்கு வந்தால் மக்கள் பயமின்றி பயணம் செய்ய முடியும். சங்குப்பிட்டி - கேரதீவுப் பாதையைத் திறந்து விடுவதற்காக அகதிகளுக்கான ஐ. நா. சபையின் அகதிகள் நலன் காக்கும் அமைப்பு எடுத்துவரும் முயற்சிகள் பற்றி உங்கள் நிலைப்பாடு என்ன?**

**பதில்:**

கேரதீவு-சங்குப்பிட்டிப்பாதை போக்குவரத்திற்கு திறந்துவிடப்படவேண்டும் என்பதே எமது நிலைப்பாடுமாகும். இராணுவ கெடுபிடிகள் இல்லாமல் மக்கள் சுதந்திரமாக இப்பாதையைப் பயன்படுத்த வேண்டும். அதற்கு இப்பாதையில் இராணுவக் காவல்நிலைகள், சோதனைச் சாவடிகள் இருக்கக்கூடாது. அப்படியானால் இராணுவம் இப்பாதையிலிருந்து சிறிதுதூரம் விலகிநிற்கவேண்டும். இதனை நாம் வலியுறுத்தினோம். ஆனால் இராணுவம் சிறிது தூரமாவது விலகிநிற்கத் தயாராக இல்லை. இப்பாதையூடாகப் பயணம்செய்யும் அனைவரையும் சோதனைக்கு உட்படுத்த இராணுவம் விரும்புகிறது. இது மக்களுக்கு, குறிப்பாக எமது ஆதரவாளர்கள் அனுதாபிகளுக்குப் பெரும் ஆபத்தை விளைவிக்கும்.

இவ்விடயத்தில் இராணுவம் பிடிவாதமாக இருப்பதால் இப்பாதையைத் திறக்க அகதிகளுக்கான ஐ. நா. தூதரக அதிகாரிகள் எடுத்த முயற்சி தோல்விகண்டிருக்கிறது. எனவேதான், கிளாலி கடல்பரப்பு மீது விதிக்கப்பட்ட தடையையாவது நீக்கி விடுமாறு நாம் யோசனை கூறியிருக்கிறோம். மனிதாபிமான அடிப்படையில் இதையாவது செய்யுமாறு ஐ. நா. தூதரகம் சிறீலங்கா அரசுமீது அழுத்தம் பிரயோகிக்கலாம் அல்லவா?

## தமிழர் தாயகமும் சமஷ்டி முறையும்

**கேள்வி:**

**தமிழர் பிரச்சினைக்கு தீர்வுகாணும் வழிமுறைகள் பற்றி ஆராய்வதற்கென நியமிக்கப்பட்ட பாராளுமன்ற சிறப்புக் குழு, தனிமாகாண அடிப்படையிலான சமஷ்டி அமைப்புத் திட்டமொன்றை முன்வைக்கப்போவதாக நம்பப்படுகிறது. அப்படியானதோர் சமஷ்டி அமைப்பை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா?**

**பதில்:**

தனிமாகாண சமஷ்டி அமைப்புத் திட்டத்திற்கு கொழும்பிலுள்ள அரசாங்க சார்பான தமிழ்க்குழுக்களே கடும் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளன.

பிரேமதாசா அரசின் மூத்த அமைச்சரான திரு. தொண்டமான் அவர்களும் இத்திட்டத்தை நிராகரித்திருக்கிறார். தமிழர் தாயகத்தைத் துண்டாடும் சூழ்ச்சியாகவே இச் சமஷ்டித்திட்டம் உருவாக்கப்பட்டிருப்பதாகத் திரு. தொண்டமான் எனக்குச் சமீபத்தில் எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

எனவே, இப்படியான ஒரு திட்டத்தை, அதாவது, தமிழர் தாயகத்தைக் கூறுபோடும் திட்டத்தை நாம் எப்படி ஏற்றுக் கொள்வது?

**கேள்வி:**

**வடபுலமும் கிழக்கு மாகாணமும் இணைக்கப்பட்டதோர் சமஷ்டி அமைப்புத் திட்டமொன்று முன்வைக்கப்பட்டால் அத் திட்டத்தை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா?**

பதில்:

தமிழர் தாயகத்தின் பூகோள முழுமை அங்கீகரிக்கப்பட்ட சமஷ்டி அமைப்பு முறை முன்வைக்கப்பட்டால் அதனை பரிசிலனைசெய்ய நாம் தயார். சமஷ்டி ஆட்சி முறை பல வடிவங்களில் உள்ளன.

இவற்றில் அதிகாரப் பரவலாக்கமும் வெவ்வேறு பரிமாணங்களில் அமையப் பெற்றுள்ளன. தமிழ் மக்களின் அரசியல் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும்வகையில், தன்னாட்சி அதிகாரங்கள் அமையப்பெற்ற ஒரு சமஷ்டி ஆட்சித்திட்டம் முன்வைக்கப் பட்டால் அதனை நாம் பரிசிலனை செய்வோம்.

## முஸ்லிம் மக்கள்பற்றிய புலிகளின் நிலைப்பாடு

கேள்வி:

முஸ்லிம் மக்கள் குறித்து உங்கள் நிலைப்பாடு என்ன?

பதில்:

முஸ்லிம் மக்கள் தனித்துவப் பண்பாடுடைய ஒரு இனக்குழு என்ற வகையில் அவர்களது பிரச்சினை அணுகப் படவேண்டும். முஸ்லிம் மக்களின் தனித்துவம், நில உரிமைப்பாடு பேணப்படும் அதே வேளை, அவர்கள் தமிழ்மக்களுடன் ஒன்றிணைந்து வாழ்வதே அவர்களது சமூக, அரசியல் பொருளாதார வாழ்வை சிறப்பிக்கும் என நாம் கருதுகிறோம்.

சிங்களப் பேரினவாதிகளும், சுயநலம் கொண்ட முஸ்லிம் அரசியல்வாதிகளும் தமிழ்-முஸ்லிம் மக்களிடையே வேற்றுமையையும் விரோதத்தையும் வளர்த்துவிட முயற்சிக்கிறார்கள். இந்தச் சூழ்ச்சிகளுக்கு முஸ்லிம் மக்கள் பலிக்கடா ஆகக்கூடாது.

கேள்வி:

யாழ்ப்பாணத்திலிருந்து முஸ்லிம் மக்களை ஏன் வெளியேற்றினீர்கள். அவர்களும் யாழ்ப்பாண மக்கள்தானே?

பதில்:

90ஆம் ஆண்டு அம்பாறை மாவட்டத்தில் இனக்கலவரம் வெடித்து, பெரும் தொகையில் தமிழ்மக்கள் கொல்லப்பட்ட பொழுது யாழ்ப்பாணத்திலும் கலவரம் பரவும் ஆபத்து எழுந்தது. அந்தவேளையில் முஸ்லிம் மக்களின் பாதுகாப்பைக் கருதி நாம் அவர்களை யாழ்ப்பாணத்திலிருந்து தற்காலிகமாக வெளியேறுமாறு கேட்டுக் கொண்டோம். ஆயினும் யுத்தம் முடிவடைந்து, சமாதான சூழ்நிலை ஏற்படும் பட்சத்தில் அவர்களை மீண்டும் யாழ்ப்பாணத்தில் குடியமர அனுமதிப்போம்.

கேள்வி:

வட புலத்திலும் கிழக்கு மாகாணத்திலும் சிங்கள மக்கள் வந்து குடியேறுவதை நீங்கள் எதிர்க்கிறீர்கள். நாட்டின் எந்தப்பகுதியிலும் சென்றுவாழ தமிழ் மக்களுக்குள்ள உரிமை சிங்கள மக்களுக்கும் உண்டல்லவா?

பதில்:

சிங்கள மக்கள் தமிழ்ப் பகுதிகளில் குடியமர்வதை நாம் எதிர்க்கவில்லை. தமிழ்ப் பகுதிகளில் திட்டமிடப்பட்ட சிங்கள குடியேற்றத்தையே நாம் எதிர்க்கிறோம்.

தமிழ்க் கிராமங்களிலிருந்து தமிழ் மக்கள் விரட்டப்பட்டு அங்கு சிங்கள குடியேற்றம் இடம்பெறுகிறது. தமிழர் தாயகத்தை துண்டாடி, சிதைத்துவிடும் நோக்கில் இக்குடியேற்றங்கள் இடம் பெறுகின்றன. இத்தகைய திட்டமிடப்பட்ட குடியேற்றங்களையே நாம் எதிர்க்கிறோம்.

## இந்திய அரசின் அர்த்தமற்ற அச்சம்

கேள்வி:

இந்தியா புலிப்படையினருக்கு எதிராக எடுத்துவரும் கடுமையான நடவடிக்கைகள் பற்றி உங்கள் கருத்து என்ன?

பதில்:

தமிழரின் விடுதலைப் போராட்டம் சம்பந்தமான ஒரு தவறான, மிகைப் படுத்தப்பட்ட அச்சத்தின் காரணமாகவே இந்தியா எம்மீது கடுமையான போக்கைக் கடைப்பிடிக்கிறது.

எமது சுதந்திரப் போராட்டம் தமிழ் நாட்டில் பிரிவினைவாதத்தை தூண்டி விடும் என்றும், இந்திய தேசிய போராட்டங்களுக்கு ஊக்க சக்தியாக அமைந்து விடும் என்றும் இந்தியா அஞ்சுகிறது. இந்த தேவையற்ற மிகைப்படுத்தப்பட்ட பயத்தின் காரணமாக, கடந்த பத்து ஆண்டுகளாக, இந்திய அரசுஎமது போராட்டத்தில் பல்வேறு வழிகளில் குறுக்கிட்டும் தலையிட்டும் வருகிறது. தமிழரின் விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்துவரும் எமது இயக்கத்தை அழித்துவிடவும் கங்கணம் கட்டி நிற்கிறது.

இனப்படுகொலையை எதிர்த்துநிற்கும் ஒரு நியாயபூர்வமான போராட்டத்தை தவறாகப் புரிந்து, இந்திய அரசு எடுத்து வரும் அநீதியான நடவடிக்கைகளால் நாம் பெரிதும் பாதிப்படைந்துள்ளோம். எமது மக்களின் நிலையும் மோசமாகிவருகிறது. இந்தியாவின் விரோதமான அணுகுமுறை காரணமாக சிங்கள அரசு ஊக்கம்பெற்று தயவு தாட்சண்யமின்றி இனக்கொலையை தீவிரப்படுத்தி வருகிறது.

கேள்வி:

புலிப்படைக்குள் கருத்துவேற்றுமைகள், பதவி நீக்கங்கள் எழுந்துள்ளதாக ஊகங்கள் எழுந்துள்ளன. உண்மையா?

பதில்:

இது உண்மையல்ல. எமது இயக்கத்தில் கருத்து வேற்றுமைகள் தோன்றி விடவில்லை. எமது அமைப்பில் சில மாற்றங்கள் கொண்டுவரப்பட்டுள்ளன. சில மூத்த உறுப்பினர்களின் பொறுப்புகள் மாற்றப்பட்டுள்ளன. இதனைத் தவறாகப் புரிந்து சில ஊகங்கள் எழுந்திருக்கலாம்.

## தளபதி கிட்டுவின் சமாதானப் பயணம்

கேள்வி:

கிட்டு யாழ்ப்பாணப் பயணம் மேற்கொண்டதற்கு காரணம் என்ன?

பதில்:

தமிழீழத்தில் ஒரு சமாதான சூழ்நிலையை உருவாக்கி, தமிழர் பிரச்சினை சம்பந்தமாகப் பேச்சுக்களை ஆரம்பிக்கும் மேற்குலக நாடுகளின் சமாதானத் திட்டத்துடன் அவர் யாழ்ப்பாணப் பயணத்தை மேற்கொண்டார். இத்திட்டம் பற்றி எம்முடன் கலந்தாலோசனை நடத்தவே அவர் இங்குவர முயற்சித்தார். அவரது பயணத்தின் நோக்கத்தை குவேக்கர்ஸ் சமாதான நிறுவனம் ஊர்ஜிதம் செய்திருக்கிறது.

கேள்வி:

கிட்டுவின் மரணம்பற்றி உங்கள் உணர்வலைகள் என்ன?

பதில்:

என்னை ஆழமாகப் பாதித்த உணர் வலைகளை வார்த்தையில் விபரிக்க முடியாது.

கிட்டு ஒரு தலைசிறந்த தளபதி. ஆற்றல்கள் நிறைந்த ஓர் இலட்சியப் போராளி. ஒரு மகத்தான செயல்வீரன். கிட்டுவின் மறைவு, எமது இயக்கத்திற்கு மட்டுமன்றி எமது தேசத்திற்கே ஒரு பேரிழப்பாகும்.

## பேரினவாதிகளின் மனமாற்றம் தேவை

**கேள்வி:**

**கடந்த 10 ஆண்டு காலமாக நீண்டு கொண்டிருக்கும் இந்தப்போருக்கு சமாதான வழிமுறைகள் மூலம் தீர்வு ஏற்படும் என நம்புகிறீர்களா?**

பதில்:

எமது பிரச்சினைக்கு சமாதான வழி மூலம் தீர்வு ஏற்படுவதாயின் சிங்களப் பேரினவாத ஆட்சியாளரின் மனோநிலையிலும் அணுகுமுறையிலும் ஒரு அடிப்படையான மாற்றம் ஏற்படவேண்டும். அப்படியான மாற்றம் நிகழுமானால் சமாதான வழிமுறையில் எமது பிரச்சினைக்குத் தீர்வு ஏற்படுமென நம்புகிறேன்.

**கேள்வி:**

**பிரபாகரன் அவர்களே! சமாதான முயற்சிகளில் ஆத்மபூர்வமாக இறங்க நீங்கள் தயாரா? இதற்கு உங்கள் நிபந்தனைகள் என்ன?**

பதில்:

சமாதானத்தை நான் ஆத்மபூர்வமாக விரும்புகிறேன். எனது மக்கள் நிம்மதியாக, சமாதானமாக, சுதந்திரமாக, கௌரவமாக வாழவேண்டும் என்பதே எனது ஆன்மீக இலட்சியம்.

சமாதானத்திற்கு நாம் எவ்வித நிபந்தனைகளையும் விதிக்கவில்லை.

சிங்கள அரசுதான் சமாதானத்திற்கும், பேச்சுவார்த்தைகளுக்கும் நிபந்தனைகளை விதித்துக்கொண்டிருக்கிறது.

□□□

# பெண்களின் விடுதலைப் போராட்டம்: இயக்கத்தின் அக்கினிக் குழந்தை



குறிப்பு:

**08-03-1993** அன்று, அனைத்துலக மகளிர் நாளை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்,
08-03-1993.

இன்று அனைத்துலக மகளிர் தினம். உலகப் பெண்ணினத்தின் எழுச்சி தினமாகிய இப் புரட்சிநாள் தமிழீழம் எங்கும் கொண்டாடப்படுவதையிட்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

எமது சமூகம் மாறிக்கொண்டிருக்கிறது. விடுதலைப் போராக வீசிக்கொண்டிருக்கும் வரலாற்றுப் புயல் எமது மண்ணில் காலம் காலமாக நிலைத்திருந்தபழைமைவாதவிருட்சங்களைவேரோடுபிடுங்கி வீழ்த்திவருகிறது. எமது மனக்குகையில் குடியிருந்த மூடநம்பிக்கைப் பேய்கள் விரட்டப்பட்டு வருகின்றன. எமது சமூகக்கருத்துலகில் புதிய பார்வை மலர்கிறது. புதிய விழிப்புணர்வு தோன்றிவருகிறது. சமூக உறவுகளில் புரட்சிகரமான மாற்றம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

எமது போராட்டத்தினுள் ஒரு போராட்டமாக பெண் விடுதலைப் போர் இன்று முனைப்புற்று வருகிறது. பெண் விடுதலை என்ற இலட்சியப் போராட்டமானது எமது விடுதலை இயக்கத்தின் மடியில் பிறந்த அக்கினிக் குழந்தை. அதன் வளர்ச்சியும், எழுச்சியும் ஒப்பில்லாத ஒரு தனிச் சரித்திரம். மண்ணின் விடிவிற்காகவும் பெண்ணின் விமோசனத்திற்காகவும் இன்று தமிழீழப் புரட்சிப்பெண் புலியாக மாறிவிட்டாள். அநீதிக்கு எதிரான ஆவேச நெருப்பாக அவள் இன்று ஆயுதமேந்தி நிற்கிறாள். இந்த வரலாற்றுத் திருப்பத்திற்கு எமது இயக்கமே வழி சமைத்துக்கொடுத்தது.

சமத்துவத்தை நோக்கிய பயணமாகப் பெண்உரிமைப் போராட்டம் தொடர்கிறது. பாலியல் வேறுபாட்டின் அடிப்படையில் சமத்துவமற்ற சமூக உறவுகள் உருவாக்கம் பெற்றுள்ளன. எல்லாக் காலங்களிலும், எல்லாச் சமூகங்களிலும், எல்லாப் பண்பாட்டு வடிவங்களிலும் இந்த சமத்துவமற்ற மனிதஉறவு நிலவிவருகிறது. பெண்ணைத் தாழ்ந்த நிலைக்கு தள்ளிவிட்டிருக்கும் இந்த சமூகஅநீதியை எதிர்த்து இன்று உலகப் பெண்ணினம் போர்க்கொடி உயர்த்தி நிற்கிறது.

பால் ரீதியான உடற்கூற்று வேறுபாடு என்பது இயற்கையின் திருவிளையாடலாக இனவிருத்திக்கு அளிக்கப்பட்ட கொடை. உயிர்ப்படைப்பிற்காக சிருஷ்டிக்கப்பட்ட உடற்கூற்றின் அடிப்படையில் ஆணையும் பெண்ணையும் வேறுபடுத்தி சமத்துவமற்ற உறவுகளை சமூகம் பின்னிவிட்டிருக்கிறது. பாலியல் வேறுபாடும், அதன் அடிப்படையில் தோன்றிய பண்பாட்டு நியமங்களும், அவை பெண்மீது பதித்துவிட்ட படிமங்களும் - பார்வைகளும், ஆண் - பெண் சமத்துவத்திற்கு முட்டுக்கட்டைகளாக நிற்கின்றன.

மனித ஆளுமை பாலியல் வேறுபாட்டிற்கு அப்பாலானது. ஆண்மைக்கும் பெண்மைக்கும் அப்பால் மனிதம் இருக்கிறது. அது மனிதப்பிறவிகளுக்குப் பொதுவானது.

இந்த மனிதத்தின் ஆற்றல்களை உடற்கூறு நிர்ணயிப்பதல்ல.

பெண்ணிடமும் மனிதம் இருக்கிறது. அதன் அற்புதமான ஆற்றல்களையும், அலாதியான பண்புகளையும் பாலியல் அளவுகோலால் நிர்ணயிக்கமுடியாது. எதையும் பெண்ணால் சாதித்துவிடமுடியும் என்பதற்கு எமது போராட்டம் ஒரு உன்னத உதாரணமாகத் திகழ்கிறது.

பாலியல் வேறுபாட்டிற்குப் புறம்பாக, ஆண்மைக்கும் பெண்மைக்கும் அப்பாலான, இந்த மனிதத்தை இனம்கண்டு கௌரவிக்குமாறு பெண்ணினம் ஆணினத்திடம் அன்புக்கரம் நீட்டுகிறது. ஆழமான புரிந்துணர்வுடன் ஆணினம் இந்த அன்புக்கரத்தைப் பற்றிக்கொள்ளும்பொழுதுதான் ஆண் - பெண் சமத்துவம் சாத்தியமாகும்.

அனைத்துலக மகளிர் தினத்தை முன்னிட்டு விடுதலைப் புலிகளின் மகளிர் அமைப்பு இன்று நடாத்தும் தமிழீழப் பெண்கள் எழுச்சி வைபவத்திற்கு எனது நல்லாசியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# வாழ்வு முழுமைபெற பொது அறிவு அவசியம்

குறிப்பு:

**19-04-1993** அன்று, அன்னை பூபதியின் நினைவாக நடைபெற்ற பொதுஅறிவுத் தேர்வில் சிறப்புத் தேர்ச்சிபெற்ற மாணவர்களைப் பாராட்டித் தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

*தலைமைச் செயலகம்,*
*தமிழீழ விடுதலைப் புலிகள்,*
*தமிழீழம்.*
*19-04-1993*

கல்வி என்பது அறிவு சார்ந்தது. ஒருவன் தன்னைப்பற்றியும், தனது சமூக வாழ்வு பற்றியும், தான் வாழும் உலகம் பற்றியும் அறிந்து கொள்வதற்கு கல்வி அத்தியாவசியமானது.

கல்வியறிவு ஒருவனது ஆளுமையை சிறப்பிக்கிறது. அவனது வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கொடுக்கிறது, அவனை முழுமனிதன் ஆக்கிவிடுகிறது.

இன்றைய அறிவியல் உலகம் விரைந்து, பரந்து, வளர்ந்து வருகிறது. இந்த அறிவியல் அசைவியக்கத்தால் உலகத்தில் பிரமிக்கத் தக்க மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. மனித வாழ்வும் புரட்சிகரமாக மாறி வருகிறது.

இந்த அறிவுசார் நவயுகத்தில், வரையறுக்கப்பட்ட, துறைசார்ந்த படிப்புகள் ஒரு பரந்த உலகப் பார்வையையும் விரிந்த வாழ்வனுபவத்தையும் கொடுக்கப் போவதில்லை. எனவே, துறைசார்ந்த பள்ளி, கல்லூரிப்படிப்புகளோடு பொது அறிவுத்திறனையும் எமது இளம் பரம்பரையினர் வளர்த்துக்கொள்வது இன்றியமையாதது. இது இன்றைய காலத்தின் தேவையும் கூட.

நாம் கற்கின்ற அல்லது செயற்படுகின்ற துறை என்ற வரம்பிற்குள் மட்டும் நாம் ஒதுங்கி நின்றுவிடக் கூடாது. அதுவும் ஏட்டுக்கல்வியோடு நின்று விட்டால் வாழ்வின் முழுமையை நாம் தரிசித்துக் கொள்ள முடியாது. முழுமையான சமூக

மனிதர்களாக வாழமுடியாது. அன்றாட வாழ்விற்கும் தேவைகளுக்கும் பயன்படும் வகையில், நாட்டின் நடப்பியல்புகளையும் உலகத்தின் போக்குகளையும் புரிந்து கொள்ளும்வகையில் நாம் எமது பொது அறிவை வளர்த்துக் கொள்வது அவசியம். அதுவே எம்மைச் சமூகத்திற்கு பயனுள்ள மனிதர்களாக ஆக்கிவிடுகிறது.

இன்று, எத்தனையோ நெருக்கடிகள், இடர்ப்பாடுகள் மத்தியில் எமது மாணவ சமூகம் கல்வியைப் பயின்று வருகின்றது. இம்மாணவர்களுக்கு பொது அறிவில் ஆர்வத்தையும் ஊக்கத்தையும் ஏற்படுத்தும் நோக்கத்தோடு விடுதலைப் புலிகள் மாணவர் அமைப்பினால் நடாத்தப்படுகின்ற அன்னைபூபதி பொது அறிவுத்தேர்வானது மிகவும் ஆக்க பூர்வமான முயற்சி என நான் கருதுகின்றேன்.

எமது மாணவர்கள் தமது பொது அறிவை பெற்றுக்கொள்வதற்கான பாடத் திட்டங்கள், கற்பித்தல்கள் இல்லாத நிலையிலும் பொது அறிவைத் தாமாகவே பெற்றுக்கொள்வதற்கான ஊடகங்கள் அருகிவிட்ட இன்றைய சூழ்நிலையிலும், 35 ஆயிரத்திற்கு மேற்பட்ட மாணவர்கள் இம்முறை இந்தப் பொதுத்தேர்வில் தோற்றியிருப்பதும், பல மாணவர்கள் மிகச்சிறந்த வகையில் தமது ஆற்றல்களை வெளிப்படுத்தியிருப்பதும் பாராட்டத்தக்க விடயமாகும்.

அந்நியனால் எமது தேசம் ஆக்கிரமிக்கப்பட்ட மிக நெருக்கடியான காலகட்டத்தில், எமது விடுதலைப் போராட்டத்தை வீறுபெறச்செய்த தற்கொடையாளி அன்னைபூபதியின் நினைவாக பொது அறிவுத்தேர்வை ஆண்டுதோறும் நடாத்தி வரும் விடுதலைப் புலிகள் மாணவர் அமைப்பு, அந்தத் தாயின் நினைவு நாளில், அந்த அன்னையின் பேரில் அமைந்த கலையரங்கத்தில், சிறப்புத் தேர்ச்சிபெற்ற மாணவர்களை கௌரவிப்பது சாலப் பொருத்தமானதாகும்.

தமிழீழ மாணவர்களின் கல்வி மேம்பாட்டிற்காக விடுதலைப் புலிகளின் மாணவர் அமைப்பு மேற்கொண்டுவரும் இந்த நன்முயற்சி தொடர வேண்டும். இப்பொதுத்தேர்விலே பங்குகொண்ட அனைத்து மாணவர்களையும் பாராட்டுவதோடு தேர்ச்சி பெற்ற மாணவர்களுக்கும் எனது வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வியக்கத்தக்க முறையில் தனது திறனாற்றலை வெளிக்காட்டிய 4 ஆம் ஆண்டு மாணவன் செல்வன் வி. கோகுலனின் ஆற்றலை மெச்சுகிறேன். கோகுலனுக்கு எனது சார்பில் சிறப்புப் பரிசை வழங்குவதில் பெருமையும், மகிழ்ச்சியும் அடைகிறேன்.

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்.**

*தலைவர்,*

*தமிழீழ விடுதலைப் புலிகள்.*

# இலட்சியத்தில் இரும்பு மனிதர்கள்: கரும்புலிகளுக்கு தலைவர் அஞ்சலி



குறிப்பு:

**05-07-1993** அன்று, கரும்புலிகள் தினத்தை முன்னிட்டு தலைவர் பிரபாகரன் விடுத்த அறிக்கையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
05-07-1993

எனது அன்புக்குரியவர்களே!

கரும்புலிகள் நாளாகிய இன்றைய தினத்தில், கரும்புலி வீரர்களாகிய உங்கள் மத்தியில், கரும்புலிகள் பற்றிப் பேசுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததையிட்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

ஆறு ஆண்டுகளுக்கு முன்பு, இன்றைய தினத்தில், முழு இலங்கைத் தீவையும் அதிரவைத்த ஒரு சம்பவம் நிகழ்ந்தது. எமது விடுதலை இயக்கத்தின் முதலாவது கரும்புலி வீரன் கப்டன் மில்லர் ஓர் ஒப்பற்ற சாதனையை நிலை நாட்டினான். எமது விடுதலை வரலாற்றில் என்றுமே நிகழாத ஓர் அதிசயம் அன்று நிகழ்ந்தது. எதிரியின் அசைக்க முடியாத கோட்டையாகத் திகழ்ந்த ஓர் இராணுவ முகாமை இந்த இளம்புலி வீரன், தனித்த ஒருவனாகச் சென்று தகர்த்தெறிந்தான். ஒரு பெரிய படையணியாலும் செய்ய முடியாத பாரிய இராணுவ சாதனையை ஒரு தனிமனிதனாகச் சென்று இவன் சாதித்து முடித்தான். எரிமலையைச் சுமந்து சென்று எதிரியின் பாசறைக்குள் வெடிக்கவைத்தான்.

இந்தப் பூகம்பமான தாக்குதல் நிகழ்வு அன்றைய வரலாற்றுச் சூழ்நிலையையே மாற்றியமைத்தது. எதிரியின் சைனியங்கள் நிலைகுலைந்து பின்வாங்கின. ஒரு பெரிய படையெடுப்பின் பேரழிவிலிருந்து யாழ்ப் பாணம் தப்பிக்கொண்டது. தனிமனிதனாக, எமது போராளி ஒருவன் தன்னை அழித்து தனது தேசத்தை பேரழிவிலிருந்து காப்பாற்றினான்.

முதன் முதலாக, எமது போராட்ட வரலாறு தியாகத்தின் அதியுன்னதமான ஒரு அற்புதத்தைப் பதிவு செய்து கொண்டது. அன்றிலிருந்து எமது போராட்ட மரபில் ஒரு புதிய அத்தியாயம் திறக்கப்பட்டது. என்றுமில்லாத வகையில் ஒரு புதிய போர்வடிவம் அறிமுகப்படுத்தப்பட்டது.

கப்டன் மில்லருடன் கரும்புலிகளின் சகாப்தம் ஆரம்பமாகியது. என்றுமே உலகம் கண்டிராத, எண்ணிப்பார்க்கவும் முடியாத, தியாகப் படையணி ஒன்று தமிழீழத்தில் உதயமாகியது.

கரும்புலி வீரர்களின் தோற்றமும், தற்கொடைப் படையாக அவர்களின் வளர்ச்சியும் எழுச்சியும், மிகவும் நுட்பமான அவர்களின் போர்ச் சாதனைகளும் எமது போராட்டத்தின் ஒரு வரலாற்றுத் தேவையாகவே எழுந்தது.

நாம் இன அழிவை எதிர்கொள்ளும் ஒரு சிறிய தேசிய சமுதாயம். எமக்கு குரல் கொடுக்கவோ, கை கொடுக்கவோ உலகில் எவரும் இல்லை. நாம் தனித்து நிற்கிறோம். எமது சொந்தக் கால்களில் நிலைத்து நிற்கிறோம். பலம் வாய்ந்த எதிரிகள் எம்மைச் சூழ்ந்து நிற்கிறார்கள். எம்மை ஒழித்துக்கட்ட உறுதிபூண்டு நிற்கிறார்கள். முழு உலகமுமே ஒன்று திரண்டு எமது எதிரிகளுக்கு முண்டுகொடுத்து வருகிறது. இந்த இக்கட்டான, ஆபத்தான சூழ்நிலையில் நிர்க்கதியாக நிற்கும் ஒரு மக்கள் சமூகம் என்ற ரீதியில், நாம் எம்மாலான சகல வழிகளையும் கையாண்டு, எமது சக்திகள் அனைத்தையும் பிரயோகித்து ஒரு தற்காப்புப் போரை நிகழ்த்தவேண்டும். இந்தத் தேவையை, நிர்ப்பந்தத்தை நாம் அசட்டைசெய்ய முடியாது. அல்லாத பட்சத்தில் நாம் இனவாரியாக அழிந்துபோவதைத் தவிர்க்க முடியாது.

பலவீனமான எமது மக்களின் மிகவும் பலம்வாய்ந்த ஆயுதமாகவே கரும்புலி களை நான் உருவாக்கினேன். கரும்புலிகள் எமது இனத்தின் தற்காப்புக் கவசங்கள், எமது போராட்டப் பாதையின் தடைநீக்கி கள். எதிரியின் படைபலத்தை மனபலத் தால் உடைத்தெறியும் நெருப்பு மனிதர் கள்.

கரும்புலிகள் வித்தியாசமானவர்கள். அபூர்வமான பிறவிகள். இரும்பு போன்ற உறுதியும் பஞ்சுபோன்ற நெஞ்சமும் கொண் டவர்கள். தங்களது அழிவில் மக்களது ஆக் கத்தைக் காணும் ஆழமான மக்கள் நேயம் படைத்தவர்கள்.

இந்த உலகில் வாழும் மனிதன் ஒவ் வொருவனும் எல்லாவற்றிற்கும் மேலாக தன்னையே காதலிக்கிறான். தனது உயி ரையே நேசிக்கிறான். உயிர் வாழவேண் டும் என்று துடிக்கிறான். மனிதன் உயிரை நேசிப்பதால், உயிர்வாழ விரும்புவதால், உயிர் அற்றுப்போகும் சாவு என்ற இல் லாமை நிலைக்கு பயப்படுகிறான். இது மனித இயல்பு; இயற்கையின் நியதி.

ஆனால் ஒரு கரும்புலிவீரன் தன்னை விட தனது இலட்சியத்தையே காதலிக்கி றான். தனது உயிரைவிட தான் வரித்துக் கொண்ட குறிக்கோளையே நேசிக்கிறான். அந்தக் குறிக்கோளை அடைவதற்கு தன்னை அழிக்கவும் அவன் தயாராக இருக்கிறான். அந்தக் குறிக்கோள் அவனது சுயத்திற்கு அப்பால் நிற்கும் மற்றவர்களின் நலன்பற்றி யது; நல்வாழ்வு பற்றியது. மற்றவர்கள் இன்புற்று இருக்கவேண்டும் என்பதற்காக தன்னை இல்லாதொழிக்கத் துணிவது தெய்வீகத் துறவறம். அந்தத் தெய்வீகப் பிறவிகள்தான் கரும்புலிகள்.

தேசிய விடுதலை என்ற உயரிய இலட் சியத்தைத் தழுவிக்கொள்ளும் ஒவ்வொரு வனும் முதலில் தன்னை விடுதலை செய்து கொள்ள வேண்டும். தனது மனவுலக ஆசை களிலிருந்தும், அச்சங்களிலிருந்தும் தன்னை விடுதலை செய்துகொள்பவன்தான் உண் மையில் விடுதலைவீரன் என்ற தகைமை யைப் பெறமுடியும். மனமானது பயங்களி லிருந்து விடுதலை பெறும்போதுதான் வீரம் தோன்றுகிறது; துணிவு பிறக்கிறது. இந்த மனவியல் உண்மையை நான் ஆரம் பத்திலிருந்தே எமது போராளிகளுக்கு எடுத்துரைத்து வருகிறேன்.

பயம் என்பது பலவீனத்தின் வெளிப் பாடு; கோழைத்தனத்தின் தோழன்; உறு திக்கு எதிரி. மனித பயங்களுக்கு எல்லாம் மூலமானது மரணபயம். இந்த மரணபயத் தைக் கொன்றுவிடுபவன்தான் தன்னை வென்று விடுகிறான்; அவன்தான் தனது மனச்சிறையிலிருந்து விடுதலை பெறுகி றான்.

கரும்புலிகள் பயத்தின் வேர்களைப் பிடுங்கி எறிந்தவர்கள். சாவு அவர்களிடம் சரணடைந்துவிடுகிறது. மரணத்தின் நாளை அவர்கள் எதிர்பார்த்துக் காத்திருப்பார் கள். சாவு பற்றி அவர்கள் சிந்திப்பதில்லை. தம்மை அழிக்கும் அந்த இறுதிக் கணத்தி லும் தமது இலக்கை அழிக்கும் நோக்கி லேயே அவர்கள் கண்ணும் கருத்துமாக இருப்பர். இலட்சிய உறுதியில் அவர்கள் இரும்பு மனிதர்கள்.

'கரும்புலி' என்ற சொற்பதத்தில் கரு மையை மனோதிடத்திற்கும் உறுதிப்பாட் டிற்குமே நாம் குறிப்பிடுகிறோம். இன் னொரு அர்த்த பரிமாணத்தில் இருளையும் அது குறியீடு செய்யும், பார்வைக்குப் புலப் படாத, பூடகமான, இரகசியமான தன்மை யையும் செயற்பாட்டையும் அது குறித்து நிற்கும். எனவே 'கரும்புலி' என்ற சொல் பல அர்த்தங்களைக் குறிக்கும் ஆழமான படிவமாக அமையப்பெற்றிருக்கிறது.

இந்த இரகசியத்தன்மை கரும்புலி களின் செயற்பாட்டு வெற்றிக்கு மூலாதார மானது. ஆளுக்கும் பெயருக்கும் அப்பால், அந்த தனிமனித தனித்துவத்திற்கு அப் பால், செயற்பாடே இங்கு முதன்மை பெறு கிறது. மனிதர்களின் இருப்பைவிட மனிதர் களின் செயற்பாடே ஒரு போராட்ட வர லாற்றின் சக்கரத்தைச் சுழற்றுகிறது. பல கரும்புலி வீரர்கள் இன்று பெயர் குறிப் பிடாத கல்லறைகளில் அநாமதேயமாக உறங்கியபோதும் அவர்களது அற்புத

மான சாதனைகள் வரலாற்றுக் காவியங் களாக என்றும் அழியாப் புகழ்பெற்று வாழும்.

முகத்தை மறைத்து, பெயரையும் புகழையும் வெறுத்து, இலட்சிய மூச்சாக தமிழீழ விடுதலைக் காற்றுடன் கலந்து விட்ட இந்த சரித்திரநாயகர்களை நான் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

மனித தியாகத்தின் இமயத்தை தொட்டுவிட்ட இந்த இனிமையானவர் களை நான் அறிவேன். அவர்களது நெஞ் சத்தின் பசுமையில் ஊற்றெடுத்த உணர்வு களையும் நான் புரிவேன். ஏதோ ஒன்று மனித வடிவை நோக்கி நகரும் உந்துசக்தி யாக அவர்களை ஆட்கொண்டிருந்தது. அந்த விடுதலையின் தாகத்தைத் தீர்க்க எதையும் செய்வதற்கு அவர்கள் தயாராக இருந்தார்கள். அவர்களை அரவணைத்து விடையளிக்கும்போது இனம் புரியாத உணர்வுகளால் எனது ஆன்மா நடுங்கும்.

ஒரு புனித யாத்திரையில் அவர்கள் போனார்கள் கண்ணீர் வடித்து நிற்கும் எமது மக்களுக்கு ஒரு புதிய வாழ்வு பிறக் கும் என்ற அசையாத நம்பிக்கையில் அந் தத் தியாகப் பயணத்தைத் தொடர்ந்தார் கள். அந்தப் புனிதர்களை எண்ணும் பொழு தெல்லாம் எனது நெஞ்சு புல்லரிக்கும்.

கரும்புலி வீரர்கள் பற்றி இன்று முழு உலகமும் பேசுகிறது. அவர்களது மகத் தான தியாகத்தைக் கண்டு மலைத்துப் போய் நிற்கிறது. பூகம்ப அதிர்வாகக் குமு றும் எமது போராட்டத்தின் உக்கிரத்தை உலக சமுதாயத்திற்கு உணர்த்தியவர்கள் கரும்புலிகளே,

அன்றொரு காலம் அமைதி வழியில் உரிமை கேட்டு ஆர்ப்பரித்த தமிழினத்தை அடக்கு முறையாளனின் இரும்புக்கரங் கள் நசுக்கி விட்டன. இன்று நீதிகேட்டு நெருப்பாக எரியும் தமிழரின் ஆவேச எழுச்சியை எந்தச் சக்திகளாலும் நசுக்கிவிட முடியாது.

இது கரும்புலிகளின் சகாப்தம்!

இடியும் மின்னலுமாகப் புலிகள் போர்க் கோலம் கொண்டு விட்ட காலம்.

இந்தப் புதிய யுகத்தில் எமது போராட் டம் புதிய பரிமாணங்களில் விரியும். சாவுக்கு விலங்கிட்ட மறவர்கள் புதிய சரித்திரம் படைப்பார்கள்; எமது சந்ததியின் விடிவுக்கு விளக்கேற்றி வைப்பார்கள்.

கரும்புலிகளின் புனித தினமாகிய இன் றைய நாளில், வரைபடாத சித்திரங்களாக வும், எழுதப்படாத சரித்திரங்களாகவும், எமது வாழ்வுக்காக தமது வாழ்வை துறந்த அந்த அற்புதமான தியாகிகளை எமது நெஞ்சில் நிறுத்திப் பூசிப்போமாக,

''புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்''

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்

99097

# போர்க்கால இலக்கியத்திற்கு புதுமை படைத்த கவிஞன்



குறிப்பு:

கவிஞர் புதுவை இரத்தினதுரையின் ‘நினைவழியா நாட்கள்’ என்ற கவிதைத் தொகுப்பிற்கு தலைவர் பிரபாகரன் வழங்கிய வாழ்த்துரையை இங்கு பிரசுரிக்கிறோம்.

தலைமைச் செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்.
*05-08-1993*

காலத்தின் மூச்சாக வாழ்வியக்கம் அசைகிறது அந்தக் காலத்தையும், அந்தக் காலமாக விரியும் வாழ்வையும், அந்த வாழ்வாக அவிழும் மனித இன்னல்களையும், விளைச்சல்களையும் நுட்பமாக சித்திரிக்கும் கலை இலக்கியங்கள் உன்னதமானவை.

தான் பிறந்த மண், தான் வளர்ந்த சூழல், தான் உறவுகொள்ளும் சமூகம், தான் வாழும் காலம் என்ற ரீதியில் வாழ்க்கையே ஒரு கலைஞனது படைப்புத் தளமாக அமைகிறது. வாழ்வின் புறநிலை உண்மைகளை மூலப்பொருளாக எடுத்து கலைப்பொருள் படைப்பவனே சிறந்த கலைஞன்.

புதுவை அண்ணா என நாம் அன்பாக அழைக்கும் புதுவை இரத்தினதுரை ஒரு சிறந்த கலைஞர்.

அவர் இந்த மண்ணைக் காதலிப்பவர். இந்த மண்ணின் மக்களை நேசிப்பவர். இந்த மண்ணின் விடுதலையை இலட்சியமாக வரித்துக்கொண்டவர். மண், மக்கள், விடுதலை என்ற முப்பொருளை மூலப்பொருளாக எடுத்து கலைப்பொருள் படைப்பவர். கவிதை அவரது கலைப்பொருள். அந்தக் கலையில் அவருக்கு இங்கு எவரும் நிகரில்லை.

புதுவை இரத்தினதுரையின் கவிதையில் ஒரு புதுமை இருக்கிறது; அழகும் ஆழமும் இருக்கிறது; ஒரு இசை இருக்கிறது; ஒரு ஈர்ப்புச் சக்தி இருக்கிறது.

இந்த தேசத்தின் பண்பாட்டு மரபில் ஆழவேரோடி நிற்பதால் அவரது கவிதைக்கு அலாதியான வீச்சும் வலிமையும் உண்டு. சதையும் இரத்தமுமாக இந்த மண்ணின் பண்பாட்டுப் படிமங்கள் அவரது கவிதைக்கு உயிர் வடிவம் கொடுக்கும்.

மனித அவலங்களையும், ஏக்கங்களையும் படிமக் காட்சிகளாக சித்திரித்து, இனவாதக் கொடூரத்தின் அராஜகத்தை, அழுத்தமாக உணர்த்திக்காட்டுவதுடன் ஒடுக்குமுறைக்கு எதிரான ஆவேசமிக்க கொதிப்புணர்வையும் அவரது கவிதை தட்டி எழுப்புகிறது.

புதுவை இரத்தினதுரையின் படைப்பிலக்கியம் தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு ஒரு உந்து சக்தியாக இருக்கிறது. கவிதை உலகில், போர்க்கால இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்துக் கொடுத்த பெருமை அவரைச் சாரும். அவரது இலக்கியப் பணியின் முக்கியத்துவமும் இதிலேதான் தங்கியிருக்கிறது.

எமது தேசத்தின் போராட்ட வாழ்வையும், வரலாற்றையும் தமிழீழ இலக்கிய இயக்கத்திற்குள் முதன்மைப்படுத்தி, தமிழ்த் தேசிய பிரக்ஞையை விழிப்புறச் செய்ததில் அவரது பங்கு கணிசமானது. விடுதலைக்காக ஏங்கும் தமிழினத்தின் ஆன்ம தாகமாக வெளிப்பாடு காணும் அவரது கவிதை போர்க்கால இலக்கியத்திற்கு புதுமையும் செழுமையும் கொடுக்கிறது.

புதுவை இரத்தினதுரை இலக்கியப் படைப்பாளியாக மட்டுமன்றி, ஒரு இலட்சியப் போராளியாகவும் எமது விடுதலை இயக்கத்தில் இணைந்து நிற்பவர். இலக்கியப் படைப்பிலும், இலட்சியப் பயணத்திலும் அவரது பணி சிறப்புடன் தொடர எனது நல்லாசிகள்.

**புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்**

**வே. பிரபாகரன்**
தலைவர்,
தமிழீழ விடுதலைப் புலிகள்.

# சத்தியத்தின் அடிப்படையில் சமூகநீதி மலர வேண்டும்



குறிப்பு:

**19-08-1993** அன்று, தமிழீழ நீதித்துறையின் நீதியாளர், சட்டவாளர் ஆகியோரின் சத்தியப்பிரமாண வைபவத்தில் தலைவர் பிரபாகரன் ஆற்றிய சொற்பொழிவிலிருந்து சில முக்கிய பகுதிகளை இங்கு தருகிறோம்.

13980

PUBLIC LIBRARY, JAFFNA.
CHUNDIKULI BRANCH LIBRARY

"தனிப்பட்ட உணர்வுகளுக்கும், பந்த பாச உறவுகளுக்கும் இடமளியாது, நேர்மையுடன் பிரச்சினைகளை அணுகி, சத்தியத்தின் அடிப்படையில் மக்களுக்கு நீதி வழங்கப்பட வேண்டும். இலட்சியப் போராளிகளாகிய உங்களிடமிருந்து தமக்கு நீதியும் நியாயமும் கிடைக்குமென மக்கள் எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள். எமது மக்களின் அபிலாசைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் நீங்கள் நேர்மையுடனும் கண்ணியத்துடனும் செயற்பட்டு சமூக நீதியை நிலைநாட்ட வேண்டும்.

இன்றையதினம் எமது இயக்கத்தின் போராட்ட வரலாற்றில் ஒரு முக்கிய தினமாகும். இன்றைய தினத்தில் தமிழீழ நீதித் துறைக்கு அத்திவாரமிடப்பட்ட ஒரு முக்கிய வரலாற்று நிகழ்வாக இந்த சத்தியப் பிரமாண வைபவம் நடைபெற்றிருக்கிறது. முன்பு பஞ்சாயத்து முறையில் கிராமிய இணக்கசபைகளை நிறுவி மக்களின் பிணக்குகளைத் தீர்த்துவைக்க எமது இயக்கம் முயன்றது. இன்று நீதித்துறையில் பயிற்சி பெற்ற போராளிகள் நீதியாளர்களாகவும், சட்டவாளர்களாகவும் உருவாக்கப்பட்டு செம்மையான முறையில் நீதி நிர்வாகத் துறை கட்டி எழுப்பப்படுகிறது. ஒரு சுதந்திரம்பெற்ற, இறைமையுடைய நாட்டின் அரச நிர்வாக அலகு போல எமது நீதித் துறை உருவாக்கப்படுகிறது. இது எமது போராட்டத்தின் பாரிய வளர்ச்சியை எடுத்துக்காட்டுகிறது.

நீங்கள் போராளிகளாக இருந்து நீதியாளர்களாக மாறியிருக்கிறீர்கள். எந்த இலட்சியப் பற்றுடன் இயக்கத்தில் இணைந்து செயற்பட்டீர்களோ அதே போன்ற தியாக உணர்வுடன், பொறுப்புணர்வுடன், பயம் கலந்த எச்சரிக்கை உணர்வுடன் நீங்கள் உங்களது கடமையைச் செய்ய வேண்டும். "கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு" என்பார்கள். இந்த உண்மையின் அடிப்படையில் நீங்கள் உலக அனுபவத்திலிருந்து நிறையக் கற்றுக்கொள்ள முயலவேண்டும். அனுபவம் மூலமாகவே நீங்கள் நிறைந்த அறிவைப் பெற்றுக்கொள்ளலாம்.

போராளிகள் நீதியாளர்களாகவும், சட்டவாளர்களாகவும் பொறுப்பை ஏற்றால் தமது பிரச்சினைகளை நேர்மையாக அணுகி, சரியான முறையில் நீதி வழங்குவார்கள் என எமது மக்கள் எதிர்பார்க்கிறார்கள். போராளிகள் ஒரு உன்னத குறிக்கோளுக்காக தமது உயிரையும் துறக்கத் தயாராகவுள்ள இலட்சியவாதிகள் என்பதை எமது மக்கள் அறிவார்கள். எனவே போராளிகளாகிய நீங்கள் நீதிநிர்வாகத்தை பொறுப்பேற்கும் பொழுது மக்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். மக்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றும் வகையில் நீங்கள் நேர்மையுடனும், பொறுப்புணர்வுடனும் செயலாற்றுவீர்கள் என நம்புகிறேன்.

மக்களின் நாளாந்த பிரச்சினைகள், மனித உறவுப் பிரச்சினைகள், முரண்பாடுகள் ஆகியன உங்களுக்கு சிறிய பிரச்சினைகள்போன்று அர்த்தமற்றதாகத் தெரியும். ஆனால் மக்களுக்கு அவர்களது பிரச்சினைகள் பூதாகரமாகத் தென்படும். ஆகவே மக்களின் உணர்வுகளைப் புரிந்து அவர்களின் முரண்பாடுகளைக்களைந்து அவர்களுக்கு நீதி வழங்குவதை உங்கள் கடமையாகக் கொள்ளவேண்டும். நேர்மையாகவும், உண்மையாகவும் செயற்படுவதில் பல சிக்கல்கள் இருக்கத்தான் செய்யும். சில சமயங்களில் விமர்சனங்களுக்கும், சர்ச்சைகளுக்கும் ஆளாகவேண்டியும் ஏற்படலாம். ஆனால் எப்பொழுதும் நேர்மை தவறாது, சத்தியத்தின் வழியில் நீங்களும் உங்களது கடமையைச் செய்ய வேண்டும். அதற்கான உறுதியும், துணிவும் உங்களிடம் இருக்கவேண்டும்."

99097

□□□

"இயற்கை எனது நண்பன்
வாழ்க்கை எனது தத்துவாசிரியன்
வரலாறு எனது வழிகாட்டி"

——தலைவர். திரு.வே.பிரபாகரன்